# மருந்து



# செய்முறைகள்




தெ. லலிதா

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | — | Marundhu chei muraigal |
| Editor | — | Selvi. T. Lalitha, M.A.,B.Ed., Research Assistant, International Institute of Tamil Studies, T.T.T.I., Taramani, Madras—600 113. |
| Publisher | — | International Institute of Tamil Studies, T.T.T.I., Taramani, Madras—600 113. |
| Publication Number | — | 118 |
| Language | — | Tamil |
| Date of Publication | — | October, 1985 |
| Edition | — | First |
| Paper used | — | 14.2 kg .D/Dy white Printing |
| Size of the book | — | 21 × 14 Cms |
| Printing types used | — | 10 point |
| Number of copies | — | 1200 |
| Number of pages | — | 8+60+456=524 |
| Price | — | Rs. 45/- (Rupees Forty five only) |
| Printers | — | Novel Art Printers, Madras-14. |
| Binding | — | Pulb Board |
| Artist | — | A.S. Veluchamy |
| Subject | — | Some of the preparation methods of Tamil Medicine. Edited from the Tamil palm leaf Manuscripts in the Oriental Research Institute and Manuscripts Library, University of Kerala, Trivandrum. |

# நன்றியுரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வாயிலாகத் தமிழ் மருத்துவச் சுவடிகளைத் தொகுத்து வெளியிட்டு வரும் பணியில் என்னையும் ஈடுபடுத்தி, இந்நூலினை உருவாக்குமாறு பணித்த நிறுவன இயக்குநர், பேராசிரியர், டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், எம். ஏ., பி.எச். டி., அவர்களுக்கு முதற்கண் என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுப் பணியில் என்னை நெறிப்படுத்தி வரும் நிறுவன இணைப் பேராசிரியர், டாக்டர். மிருதுலகுமாரி அன்னிதாமசு, எம். ஏ., பி.எச். டி., அவர்களுக்கு இந்நிலையில் என் நன்றி பெரிதும் உரித்தாகும்.

சுவடிகளிலுள்ள மருத்துவச் செய்திகளை முறைப்படி தொகுக்கவும், ஐயங்களைக் களைந்து, நூலை முழுமையாக்கிச் செம்மைப்படுத்தவும் உறுதுணையாய் நின்ற ஆசிரியப் பெருந்தகையும் சுவடியியல் ஆராய்ச்சியாளருமாகிய திரு வே. இரா. மாதவன் பி. எஸ்ஸி., எம். ஏ., பி.எட்., அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகத்திலுள்ள 'மருந்து செய்முறைகள்' தொடர்பான சுவடிகளைப் பார்வையிடவும், படியெடுக்கவும் இசைவு தந்து உதவிய நூலகக் காப்பாட்சியாளர் டாக்டர் டி. பாஸ்கரன், அவர்களுக்கும், சுவடிகள் சிலவற்றை உடனிருந்து படியெடுத்துதவிய செல்வி. இரா. நிர்மலாதேவி, எம். ஏ., அவர்களுக்கும், நூலகப் பணியாளர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கான நல்லதொரு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள சித்த மருத்துவப் பேராசிரியர் டாக்டர் இரா. தியாகராசன் அவர்களுக்கு மிக்க நன்றியுடையேன்.

நூலை நல்ல முறையில் அச்சிட்டு உதவிய 'நாவல் ஆர்ட்' அச்சகத்தார்க்கும் எனது நன்றி உரியது.

தி. லலிதா

# உள்ளே

# பதிப்புரை

தமிழ்ச் சுவடிகள் உலகின் பல இடங்களிலும் பரவிக் கிடக்கின்றன. நாடு, இனம், மொழி, சமயம் என்ற வேறுபாடுகளைக் கடந்த நிலையில் தமிழ்ச்சுவடிகள் பல இடங்களிலும் பாதுகாக்கப் பெற்று வருகின்றன. இவற்றுள் இலக்கணம், இலக்கியம், பல்கலைச் செய்திகள் எனப்பல செய்திகள் இடம் பெற்றிருப்பினும், எண்ணிலடங்கா ஏட்டுச் சுவடிகள் தமிழ் மருத்துவம் பற்றி விளக்கி நிற்பது அனைவரும் அறியத்தக்கதாகும். தமிழ் மருத்துவத்தின் தொன்மை, வளர்ச்சி, சிறப்பு ஆகியவற்றை அறிவதற்கும், பலருக்கும் தெளிவுறுத்துவதற்கும் இம்மருத்துவச் சுவடிகள் பெருந்துணையாகும். ஆயின், இப்பொழுது கிடைக்கும் மருத்துவ ஏடுகளில் ஒருசில மட்டுமே பதிப்பிக்கப் பெற்றுள்ளன. பல இன்னும் பதிப்பிக்கப் பெறாமல் ஓலைச் சுவடி வடிவிலேயே உள்ளன. இத்தகைய பதிப்புகள் பல வெளிவரும் பொழுது தமிழ் மருத்துவத்தின் சிறப்பு நன்கு புலனாகும்.

இந்நிலையில் கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த் திசைச்சுவடிகள் நூலகத்திலுள்ள மருத்துவ சுவடிகளிற் சில இவண் பதிப்பிக்கப் பெறுகின்றன.

## தமிழும் கேரளமும்

தற்போதைய தமிழகத்தின் தென்மேற்கு எல்லைப் புறத்தை யொட்டி அமைந்துள்ள கேரளம் பழந்தமிழகத்தோடு உட்பட்டிருந்த ஒரு பகுதியே ஆகும். தமிழ் வளர்த்த மூவேந்தர்களில் சேரமன்னர்கள் ஆண்ட நாடு சேரநாடு எனும் சிறப்புடையது. பல நூற்றாண்டுகள் தமிழோடுமிக நெருக்கமான உறவு கொண்டது இந்நாடு. கி.பி.14ஆம் நூற்றாண்டுத் துவக்கத்தில் தனி நாடாகப் பிரிக்கப்பட்டாலும், தமிழகத்திலிருந்து பிரிந்த ஒரு பகுதியே கேரளம் என்பதால் அது தமிழகத்தோடும், தமிழ் மொழியோடும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதை அறிகிறோம். மேலும், தமிழிலிருந்து பிரிந்த திராவிட மொழிகளில் ஒன்றே மலையாளம். எனவே, கேரள நாடும் மொழியும் தமிழோடு பல்லாண்டுகள் இணைந்திருந்த பழஞ்சிறப்பு வாய்ந்ததென்பதும் எண்ணத்தக்கது.

## கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

தமிழ் நாட்டைத் தவிர, கேரள மாநிலம், ஆந்திர மாநிலம், மேற்கு வங்கம் போன்ற பல்வேறு மாநிலங்களிலும் தமிழ்ச் சுவடிகள் இடம் பெற்றுத் தமிழின் தொன்மைச் சிறப்பைப் பறைசாற்றி வருகின்றன. தமிழோடு இணைந்த பெருமை கொண்ட மலையாளம் இன்றும் தமிழைத் தனித்து விடாமல் தன்னகத்தே காத்து வருகின்றமைக்குக் கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகளே சான்றாகும். சுவடிகளைப் பாதுகாத்து வரும் பெருஞ்சிறப்பு வாய்ந்த நூலகங்களுள் ஒன்றாக இதுவும் திகழ்கின்றது. இந்நூலகத்தில் சுமார் 60,000க்கும் மேற்பட்ட பழஞ்சுவடிகள் பாதுகாக்கப் பெற்று வருகின்றன.

### இருப்பிடம்

திருவனந்தபுரத்திலிருந்து 15 கிலோமீட்டர் தொலைவில் கொல்லம் செல்லும் நெடுஞ்சாலையை ஒட்டி அமைந்துள்ள காரிய வட்டம் என்னும் இடத்தில், கேரள அரண்மனைக் கோயில் அமைப்புடன் கட்டப்பட்ட ஒரு புதிய கட்டிடத்தில் இந்நூலகம் செயல்பட்டு வருகின்றது. கேரள மாநிலத்தின் மிகையான தட்ப வெட்ப நிலையினால் சுவடிகள் சிதைவு பெறாமல் காக்க, குளிர் சாதனம் செய்யப் பெற்றுள்ள ஒரு நீண்ட, பெரிய அறையில் இச்சுவடிகள் பாதுகாத்து வரப் பெறுகின்றன.

### மொழி

கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகத்திலுள்ள 60,000க்கும் மேற்பட்ட சுவடிகளில் சமஸ்கிருத, மலையாளச் சுவடிகளே மிகுதியாக உள்ளன. அத்துடன் தமிழ், தெலுங்கு, கன்னடம், மராட்டி, உருது, இந்தோனேஷியன், பர்மியன் ஆகிய மொழிகளில் எழுதிப்பட்டுள்ள சுவடிகளும் உள்ளன. தேவநாகரி, கோலெழுத்து வட்டெழுத்து, கிரந்தம், ஆங்கிலம் முதலிய எழுத்துக்களைக் கொண்ட ஏடுகளும் இங்குள்ளன. தோல், துணி, பூர்ஜமரப் பட்டை, செப்பேடுகள், நாணயங்கள் என்பவற்றில் எழுதப்பட்டவைகளையும் இங்குத் தொகுத்து வைத்துள்ளனர்.

### தமிழ்ச் சுவடிகள்

இந்நூலகத்தில் சமஸ்கிருத, மலையாளச் சுவடிகளுக்கு அடுத்த நிலையில் தமிழ்ச் சுவடிகள் உள்ளன. இங்கு 3341

ஓலைச் சுவடிகள் தமிழில் இருப்பதாகத் தெரிய வருகின்றது. காகிதச் சுவடிகள் இருப்பது பற்றி அறிய வருகிறதே தவிர அவற்றைப் பற்றிய அட்டவணை ஒன்றும் அறிய இயலவில்லை.

இங்குள்ள தமிழ்ச் சுவடிகளில் ஓலைச் சுவடிகள், காகிதச் சுவடிகளுக்கென முழுமையான அட்டவணைகள் ஏதும் இதுவரைத் தொகுக்கப் பெறாமலிருந்தது. இந்நூலகத்திலுள்ள சுவடிகளைப் பற்றித் தமிழுலகோர் அறிய வேண்டும் எனும் நன் நோக்கில், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அங்குள்ள தமிழ்ச் சுவடிகளுக்கு அட்டவணை செய்ய ஏற்பாடு செய்தது. அதன் பயனாக வெளிவந்த முதல் தொகுதி நூலே (திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழக) தமிழ்ச் சுவடிகள் அட்டவணை என்னும் நூலாகும். இதனையடுத்து 3341 தமிழ்ச் சுவடிகளுக்கான அட்டவணையைத் தமிழ்ச் சுவடிப் பெயர்கள் எனும் தலைப்பில், திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் வெளியிட்டுள்ளது.

## பொருள் நிலை

இங்குள்ள தமிழ்ச்சுவடிகள், பொருளடிப்படையில் துதி நூல்கள், மருத்துவநூல்கள், சமயநூல்கள், கதைப்பாடல்கள், புராணங்கள், இலக்கியங்கள், இலக்கணங்கள், நிகண்டுகள், தத்துவ நூல்கள் என்ற அடிப்படையின் கீழ் அடங்குவனவாக உள்ளன. துதிநூல்களுக்கு அடுத்த நிலையில் மருத்துவச் சுவடிகளே எண்ணிக்கையில் மிகுதியான அளவு இடம் பெற்றுள்ளன.

தமிழரின் சித்த மருத்துவம் பற்றி, அகத்தியர், பிரம்மமுனி, தட்சிணாமூர்த்தி, மச்சமுனி, சட்டைமுனி முதலான சித்தர்கள் பெயரிலமைந்த மருத்துவச் சுவடிகள் சுமார் நானூறுக்கும் மேற்பட்டுள்ளன. அவை, இரசவாதம், கற்பமுறை, யோகம், ஞானம், மருத்துவம், கர்ப்ப நூல்கள், மருந்து செய்முறைகள், பலபிணி மருந்துகள், பிள்ளைப் பிணி மருத்துவம், இரத்தினச் சுருக்கம், என இவ்வாறு பல பெயர்களின் கீழ் அடங்கும் மருத்துவத் தொகுப்புக்களாக உள்ளன.

## அச்சில் வர வேண்டியவை

இந்நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகளில் பல வெளிவராத சுவடிகளே. எண்ணிக்கையில் குறிப்பிடத் தக்க இடம் வகிக்கும் மருத்துவச் சுவடிகள் பெரும் பான்மையும் வெளிவராதன என்பது குறிப்பிடத்தக்கது.

நிறுவனத்தின், தமிழில் சித்த மருத்துவச்சுவடிகள் (ஆங்கிலம்), தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகத்தின் தமிழ்ச்சுவடிப் பெயர்கள் என்ற நூல்களின் வழி இங்குள்ள மருத்துவச் சுவடிகள் பற்றி அறிந்த போது, அவற்றில் கண்டுள்ளபடி மருந்து செய் முறைகள் என்ற தலைப்பின் கீழ்ச் சுமார் இருபத்தி ஒன்பது சுவடிகள் இங்குள்ளமை அறியப் பெற்றன. இவற்றிலுள்ள மருத்துவச் செய்திகள் மக்களுக்குப் பயன்படும் எனும் நோக்கில் பதிப்பிற்காக இவை எடுத்துக்கொள்ளப் பெற்றன.

## பதிப்பிற்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற சுவடிகளின் விவரம்

| வரிசைஎண் | தலைப்பு | | நூலகச்சுவடிஎண் |
|---|---|---|---|
| 1. | மருந்து செய்யும் முறையும் பத்தியமும் | — | 3948 |
| 2. | மருந்து தயாரிக்கும் முறை | — | 4075 |
| 3. | மருந்து யோகங்கள் | — | 11204-சி |
| 4. | மருந்து செய்யும் முறை | — | 3212-ஏ |
| 5. | மருந்து வகைகள் | — | 3790 |
| 6. | மருந்து முறை | — | 3242 |
| 7. | மருந்துகள் | — | 8892 |
| 8. | மருந்து முறை | — | 8876-ஏ |
| 9. | மருந்து செய்யும் முறை | — | 3791 |
| 10. | மருந்துகள் | — | 3275 |
| 11. | மருந்துகள் | — | 8875 |
| 12. | மருந்து முறை | — | 3276 |
| 13. | மருந்து முறை | — | 4077 |
| 14. | மருந்து முறை | — | 8880-பி |
| 15. | மருந்து வகை | — | 8244 |
| 16. | மருந்துகளும் மந்திரங்களும் | — | 11159-ஏ |
| 17. | மருந்து யோகங்கள் | — | 6692-ஏ |
| 18. | மருந்து செய்யும் முறை | — | 3969-ஏ |
| 19. | மருந்து யோகங்கள் | — | 3229-பி |
| 20. | மருந்து செய்யும் முறை | — | 3929 |
| 21. | மருந்து தயாரிக்கும் முறை | — | 2612 |
| 22. | மருந்து தயாரிக்கும் முறை | — | 5634 |
| 23. | மருந்து செய்யும் முறை | — | 3904-பி |
| 24. | மருந்து முறை | — | 8870 |
| 25. | மருந்து யோகங்கள் | — | 626[illegible] |

| | | | |
|---|---|---|---|
| 26. | மருந்து யோகங்கள் | — | 6744 |
| 27. | ,, ,, | — | 6691-ஏ |
| 28. | ,, ,, | — | 7932 |
| 29. | ,, ,, | — | 3880 |

(இந்நூற் பதிப்பில் சுவடி வரிசை எண்கள் மட்டுமே சுவடி எண் எனக் குறிக்கப் பெற்றுள்ளன. காண்க.)

## சுவடிப் பெயர்கள்

படியெடுக்கப் பெற்ற சுவடிகளின் பெயர்கள், சில சுவடிகளில் முதல் ஏட்டிலேயே குறிக்கப் பெற்றுள்ளன. ஒன்றிரண்டு சுவடிகளில், ஒவ்வொரு ஏட்டின் இடதுபுற ஓரத்திலும் சுவடித் தலைப்பைக் குறித்துச் செல்லும் முறையை காணமுடிகிறது. பல சுவடிகளின் பெயர்கள், அதிலுள்ள மருத்துவச் செய்திகளைக் கொண்டு ஏட்டினை வரிசைப் படுத்தியவர்களால் இடப்பெற்ற பெயராகவும் தெரிய வருகின்றது[1]

## சுவடிகளின் பொதுவான நிலை

பதிப்பிற்காகப் படியெடுக்கப்பட்ட சுவடிகள் பல அழியும் நிலையிலுள்ளன. முழுமையானச் செய்திகளைக் கொண்ட நல்ல நிலையிலுள்ள சுவடிகள் மிகச்சிலவே. பல ஏடுகள் முனைகள் முறிவு சிதலத்தின் தாக்கம், ஏடுகள் மாற்றம், கலப்பு போன்ற நிலையில் உள்ளன. பல மருத்துவ ஏடுகளில் மருத்துவச் செய்திகளோடு, யோகம், ஞானம், கற்பம் போன்ற பிற செய்திகளும் கலந்து எழுதப் பட்டுள்ளன. சில சுவடிகள் உதிர்ந்த சில மருத்துவ ஏடுகளின் தொகுப்புச் சுவடிகளாகவும் காணப்படுகின்றன. சிதைந்தவை போக, நல்ல நிலையிலுள்ள சில சுவடிகளும், ஏடுகள் மாற்றம், ஏடுகளில் எண்கள் மாற்றம், செய்திகள்மாற்றம் என்ற

---

1. சுவடி குறிப்பிட்ட ஒரு பொருண்மையைக் குறித்த திரட்டாக, தொகுப்பாக (சோதிடம், மருத்துவம் போன்றவை) இருந்தாலும், பெரும்பாலும் தலைப்பு காணப்படுவதில்லை. இத்தகு காரணங்களால் தலைப்புக் காணப்படாத பொழுது பொருண்மையின் முழுமையை அடிப்படையாக வைத்துத் (வைத்தியத்திரட்டு, சோதிடத்திரட்டு, பலபிணிமருந்துகள், மருந்து முறை, மருந்துயோகங்கள், பல சாஸ்திரம் என இவ்வாறு) தலைப்புத் தரப் பட்டுள்ளது,
—தமிழ்ச்சுவடிகள் அட்டவணை—இரா. நிர்மலாதேவி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 113, 1983, ப.VIII,

நிலையிலும் உள்ளன. இதனால் செய்தித் தொடர்ச்சியை முழுமையாகக் காண இயலவில்லை, மற்றும் சில ஏடுகளில் தேவையான சில மருத்துவக் குறிப்புக்களைச் சிலர் தமக்கென எழுதி வைக்கப் பெற்றவையாகவும் தெரிகிறது.

பதிப்பிற்காக எடுத்துக் கொள்ளப் பெற்றசுவடிகளனைத்தும் ஒரே அளவுடையன அல்ல. சில நீளமான ஏடுகளாகவும், சில குட்டையான ஏடுகளாகவும் உள்ளன. அனைத்தும் ஒழுங்கு படுத்தப்பட்ட பனை ஓலைகளில் எழுதப் பட்டுள்ளன. மேலும்,

சுவடிகளனைத்தும் ஒரே எழுத்தமைப்பைக் கொண்டவை அல்ல.

சில சுவடிகளில் எழுத்துக்கள் தெளிவாகவும், அழகாகவும், ஒழுங்காகவும் எழுதப்பட்டுள்ளன.

சில சுவடிகளில் எழுத்துக்கள் மிகவும் தெளிவின்றி என்ன மருந்து கூறப்படுகிறது என்பதையே அறிய இயலாதவாறும் எழுதப்பட்டுள்ளன.

சில சுவடிகளில் தொடர்ச்சியாக உரைநடை போல இரு பக்கங்களிலும் எழுதப்பட்டுள்ளன.

சிலவற்றில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதப்பட்டுள்ளன.

சுவடி மிக நீளமாக இருப்பின் ஒரு பக்கத்தை மூன்று பகுதிகளாகவோ, இரு பகுதிகளாகவோ பிரித்துக் கொண்டும் எழுதப்பட்டுள்ளன.

அனைத்தும் ஒரே வரி அமைப்பினைக் கொண்டவை அல்ல.

சில சுவடிகள், முழுவதும் பாடலாகவும், சில சுவடிகள் முழுவதும் உரை நடையாகவும், சில உரைநடை, பாடல் எனக் கலந்த நிலையிலும் எழுதப் பட்டுள்ளன.

மருந்தின் பெயர், மருந்துகள், அளவுகள் என்று ஒன்றன் கீழ் ஒன்றாக எழுதப் பட்டுள்ள முறையும் காணப் படுகிறது.

சிலவற்றில், பாடல்களில் மருந்து செய்முறைகளும் நோய்க் குரிய மருந்துகளும் தொடர்ந்து சொல்லப்படுகின்றன.

மருந்தின் அளவினைக் குறிக்க, பலம், வராகன், கழஞ்சு, வீசம் என இவற்றிற்குப் பெரும்பான்மையாகச் சுருக்கக் குறியீடுகளே பயன்படுத்தப்பட்டுள்ளன.

சில சுவடிகளில், மருத்துவச் செய்திகளோடு ஞானம், யோகம் மந்திரம் பற்றிய செய்திகளும் கூறப் படுகின்றன.

சில சுவடிகளில், மருந்து செய்திகளை அடுத்து, அதே செய்திகளைக் கிரந்தத்திலும் எழுதி வைத்துள்ள முறை காணப் படுகிறது.

சிலவற்றில், எழுதியுள்ளச் செய்திகளே மீண்டும் மீண்டும் கூறப்படுவதால் அது எதை நோக்கமாகக் கொண்டு எழுதப் பெற்றது என்பதை அறிய இயலவில்லை. அவை, கவனக் குறைவால், எழுதியவற்றையே திரும்ப எழுதி நம்மை குழப்ப வைக்கும் நிலையில் உள்ளன.

தவறாக எழுதிய எழுத்துக்கள், தொடர்கள் அடிக்கப்பட்டு இடையில் சேர்க்க வேண்டியதைச் சேர்க்கும் முறையும் சில ஏடுகளில் காண முடிகின்றது.

ஏடுகளுக்கும் பாடல்களுக்கும் எண்களிடும் வழக்கம் உள்ளது.

சுவடிகளில் ஏடுகளின் பக்க எண்களும், பாடல் எண்களும், சில மருந்து அளவு முறைகளும் தமிழ் எண்களில் எழுதப்பட்டுள்ளன.

ஏட்டின் பக்க எண்கள், ஒவ்வொரு பக்கத்தின் இடதுபுற ஓரத்தில் காணப்படுகின்றன. அவற்றின் தொடர்ச்சியில் சிலவற்றில், ஒழுங்கின்மை தெரிவதால்; செய்திகள் தொடர்ந்து கிடைப்பதிலும் தடை ஏற்படுகிறது.

பாடல் எண்கள், ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் குறிக்கப் பட்டுள்ளன. அவை, சிலவற்றில் தொடர் எண்களாகவும், சிலவற்றில் இடையிடையே புதிய எண்களைத் தொடங்கு வதாகவும் உள்ளன. இதனால் பாடல் எண்களின் தொடர்ச்சி யிலும் ஒழுங்கின்மை காணப்படுகிறது. ஒரு செய்தி முடியும் வரை கூட சில சுவடிகளில் தொடர் எண்களில்லை.

சுவடிகளின் இடதுபுற ஓரத்தில் அப்பக்கத்தில் கூறப்படும் மருந்து செய்திகளுக்கான தலைப்புகளிடப்பட்டுள்ளன.

1. நோய்களின் பெயர்கள் (இருமல், குட்டம், சன்னி, சூலை)
2. மருந்துகளின் பெயர்கள் (தாளகபற்பம், சூதசெந்தூரம்)
3. இன்ன நோய்க்கு (செவிப்புத்திற்கு, மாலைக் கண்ணிற்கு, கிரந்திக்கு)

என்ற முறையில் அப்பக்கத்தில் கூறப்படும் செய்திகளுக்கு ஏற்ற வாறு சிறு தலைப்புகள் எழுதப்பட்டுள்ளன. இச்சிறு தலைப்பு களின் உதவியால் அதன் தொடர்பான செய்திகளை உணர முடி கின்றது.

## எழுத்தமைதி

பெரும்பாலான சுவடிகளில் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி இடப்பெறவில்லை. ெ, ே, ா, ர இவற்றிற்கான வேறுபாடுகளும் அறிய முடியவில்லை. பல சுவடிகளும், க, த; க, த; ப, ம; ய, ப் போன்ற எழுத்துக்கள் ஒன்றற்கொன்று மயங்கும் படியான நிலை யிலேயே எழுதப்பட்டுள்ளன.

மெய்யெழுத்துக்களை அடுத்து வரும் எழுத்துக்கள் (க்க, ச்ச, ட்ட, த்த, ப்ப போன்றவை) இணைந்து கூட்டெழுத்துக்களாகவே எழுதப்பட்டுள்ளன. இவற்றை இடத்திற்கேற்பப் பொருளு ணர்ந்தே அறிய முடிகின்றது.

## யாப்பமைதி

பெரும்பாலான சுவடிகளில் உள்ள மருத்துவச் செய்திகள் செய்யுள் நடையிலும், சில உரைநடையிலும் எழுதப்பட்டுள்ளன. சிலவற்றில், பாடலும் உரைநடையும் கலந்த நிலையும் காணப் படுகின்றது.

எண்சீர், ஆறுசீர் உள்ள விருத்தப்பா வகைப் பாடல்களே மிகுதியாக உள்ளன. பல பாடல்கள் அந்தாதித் தொடையிலேயே அமைந்துள்ளன. மருந்து செய்முறைகளைத் தொடர்ச்சியாகக் கூறுவதற்கு இது மிகவும் பயனுள்ளதாக இருப்பதால் இதுவே பல சுவடிகளிலும் பின்பற்றப் பட்டுள்ளது.

## பாடல் அமைப்பு

சுவடியிலுள்ள பாடல்கள் அசை, சீர், வரி என்ற வேறுபாடுகள் இல்லாமல் உரைநடை போலவே தொடர்ச்சியாக எழுதப் பட்டுள்ளன. பதிப்பில் அவை பாடல் அமைப்புக் கேற்றவாறு சீர், வரி பிரித்து அமைக்கப் பட்டுள்ளன.

பெரும்பாலான பாடல்கள் நான்கு அடிகள் கொண்டதாகக் காணப்படுகின்றன. சில பாடல்கள் ஓரடி குறைந்தும், சில பாடல்கள் ஓரடி மிகுந்தும் இருக்கின்றன. சில பாடல்களில் சீர் குறைந்தும், மிகுந்தும், சிலவற்றில் சீர், வரி ஒழுங்கில்லாமலும் இருக்கின்றன.

இவை யாவும் ஏடு எழுதியோர் செய்த பிழை என்றே கொள்ளலாம். படியெடுப்போரின் கவனக் குறைவும், இடைச் செருகல்களும் கூட இவற்றிற்குக் காரணங்களாகும்.[1]

இப் பாடல்களுக்கான பொருள் அடிப்படையைக் கருத்தில் கொண்டு, இயன்றவரை திருத்தியும், பிற உள்ளவை உள்ள வாறும் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

## பொருளமைதி

பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற மருந்து செய் முறைகள் தொடர்பான இருபத்தி ஒன்பது சுவடிகளில் பெரும் பாலும் சித்த மருத்துவம் பற்றிய செய்திகளே மிகுதியாக உள்ளன. அவை, மருந்து செய்முறைகள், நோயும் மருந்தும் என்ற தலைப்பின் பொருளில் அடங்குவனவாக உள்ளன. இடை யிடையே யோகம், ஞானம், மந்திரம், மாந்திரீகம் பற்றிய பல துறைச் செய்திகளும் கூறப்பட்டுள்ளன. அவை இந்நூலின் தலைப் பிற்குத் தேவையின்மை கருதி நீக்கப் பெற்று, பெரும்பான்மை கருதியும், பயன் கருதியும் மருந்து செய்முறைகளும், நோயும் மருந்தும் என்ற தலைப்பிலடங்கும் செய்திகள் மட்டுமே இந் நூலில் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

## காலம்

இச்சுவடிகள் எவற்றிலும் அதன் காலம் பற்றியச் செய்திகள் ஒன்றும் குறிக்கப் பெறவில்லை. அதிலுள்ள சில குறியீடுகள், வழக்காற்றுச் சொற்கள், மொழி நடை இவற்றைக் கொண்டே அவற்றின் காலத்தை நாம் ஓரளவு அறியலாம்.

## பதிப்பில் நிகழ்ந்தவை

மேற்கூறப்பட்ட வகையிலமைந்த சுவடிகளனைத்தும் நூலகத் திலுள்ள எண்களின் முறைப்படி தனித்தனியே படியெடுக்கப் பெற்றன. மேலும்,

---

1. அடிகுறைந்துள்ளபாடல்கள் : பக். எண் : 20, 53, 67, 100, 114, 134, 198, 199, 208, 249
அடி மிகுந்துள்ள பாடல்கள் : பக் எண் : 11, 46, 136, 147, 194, 196, 198
சீர் மிகுந்துள்ள பாடல்கள் : பக். எண் : 56
சீர் குறைந்துள்ள பாடல்கள் : பக். எண் : 3, 33, 66, 132, 149, 214, 244, 254

1. சுவடிகளனைத்தும் முழுமையான, நல்ல நிலையிலுள்ளவை அல்ல என்பதால் கிடைத்த ஏடுகள் அனைத்தும் அதிலுள்ள வாறே படியெடுக்கப் பெற்றன.
2. சில நல்ல ஏடுகள் முழுமையாக படி எடுக்கப் பெற்றன.
3. உதிர்ந்த சில ஏடுகளிலுள்ள முழுமையான செய்திகள் மட்டும் எடுத்துக் கொள்ளப் பெற்றன.
4. மருத்துவப் பாடற்பகுதிகளில் கூறப்பெறும் செய்திகளின் தொடக்கமோ முடிவோ குறையாக, சிதைந்திருப்பின் அவை தொகுப்பின் போது பெரும்பாலும் சேர்க்கப் பெறவில்லை.
5. சில சுவடிகளில், ஏடு எண்கள் மாற்றம், இரு சுவடிகள் கலப்பு நிலையில், ஒவ்வொரு ஏட்டின் செய்திகளையும் தனித்தனி யாக முதலில் படியெடுக்கப்பெற்றுப் பின், ஏட்டின் தொடர்ச்சி எண்கள், செய்தித் தொடர்பினைக் கொண்டு, சிதறிக் கிடந்த செய்திகள் தொகுக்கப் பெற்றன.
6. இவ்வாறு படியெடுத்த பொழுது மருந்து செய்முறைகள், நோயும் மருந்தும் என்ற தலைப்புக்களில் பல செய்திகள் கிடைத்தன.
7. பிரித்தெடுக்கப் பட்ட அச்செய்திகள் மருந்து செய்முறைகள், நோயும் மருந்தும் என்ற தலைப்புக்களின் கீழ் இரு பகுதி களாக இவண் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.
8. செய்திகள் பாடல்களாயின் அவை நான்கு அடிகளாகவும், சீர் பிரிக்கப் பெற்றும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.
9. ஒரே சுவடியில் பல செய்திகளும், பல சுவடிகளில் ஒரே செய்தி யும் என இவ்வாறு மாறி மாறிச் செய்திகள் அமைந்துள்ளன. இவற்றையெல்லாம் ஒழுங்காக முறைப்படுத்தி அறியும் நோக்கில் சில பதிப்பு முறைகள் மேற்கொள்ளப் பெற்றன.
10. தற்காலத்தில் அனைவருக்கும் பயன்படும் வகையில் மருந்து செய்முறைகளில், சில குறிப்பிட்ட நோய்களுக்கான மருந்து செய்முறைகள் பற்றிய செய்திகள் மட்டும் தொகுக்கப் பெற்றுள்ளன. மருந்து யோகங்கள் என்னும் தலைப்பிலுள்ள சுவடிகளிலுள்ள செய்திகள் பலவும் இப்பதிப்பில் சேர்க்கப் படவில்லை.

## நூலமைப்பு

மருந்து செய்முறைகள் என்னும் முதற் பகுதியில் தைலம், எண்ணெய், நெய், கிருதம், குழம்பு, குளிகை, செந்தூரம் பற்பம்,

சுண்ணம், சூரணம், பதங்கம், கடுகு, இலேகியம் என இவ்வாறு தனித்தனி தலைப்புகளில் கிடைக்கும் பாடல்கள், உரைநடைச் செய்திகளைப் பிரித்தெடுத்து, அந்தந்த தலைப்புக்களின் கீழே சேர்க்கப் பெற்றுள்ளன.

நோயும் மருந்தும் என்னும் இரண்டாம் பகுதியில் கண் நோய்கள், தோல் நோய்கள், சுரம், சன்னி, குன்மம், குட்டம், வாய்வு, வாதம் போன்ற பொதுவின நோய்கள் பற்றிக் கிடைக்கும் பாடல்கள், உரைநடைச் செய்திகளை அந்தந்த தலைப்பில், சுவடிகளில் உள்ளவாறே எடுத்துச் சேர்க்கப் பெற்றுள்ளன.

பாடல்கள், உரைநடைகள் என மாறி மாறி சுவடிகளில் செய்திகள் அமைகின்றன. அவற்றைப் பதிப்பிக்குமிடத்து அந்தந்த தலைப்புக்களில், பாடல்களை முதலிலும், உரைநடைகளை அடுத்த பகுதியெனவும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

பாடல்களுக்கான உரை விளக்கங்கள் சுவடிகளில் இல்லாத நிலையில், அவற்றைச் செய்முறை, அளவு, துணைமருந்து, தீரும் நோய்கள், பத்தியம் என ஒவ்வொரு பகுதியின் கீழே விளக்கங்கள் தனித்தனியே எழுதிச் சேர்க்கப் பட்டுள்ளன. இம்முறை முதற் பகுதி முழுவதிலும் அமைகின்றது.

பகுதி இரண்டில் பாடற் பகுதிகளுக்கு மட்டுமே இத்தகைய உரைவிளக்கங்கள் எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளன. எஞ்சியுள்ள சுவடிகளின் உரைநடைப் பகுதிகள் தெளிவாக விளங்குவதால் மேலும் உரை விளக்கங்கள் எழுதிச் சேர்க்கப் பெறவில்லை.

தற்கால அளவு முறைப்படி, சுவடிகளில் உள்ள அளவுகளுக்குச் சரியான அளவைகளும் அங்கங்கே விளக்கங்களில் குறிக்கப் பெற்றுள்ளன.

சுவடிகளில் விட்டுப் போனவை, முற்றுப் பெறாதவை, குறையான பகுதிகள் போன்றவை பதிப்பில் எடுத்துக் கொள்ளப் பெறவில்லை.

பாடல்களின் முதலிலோ இறுதியிலோ குறிக்கப் பெற்றுள்ள புள்ளிகள் பாடல்களின் தொடர்ச்சியைக் குறிப்பன. குறிப்பிட்ட தலைப்பிற்கான பாடற் பகுதிகள் மட்டுமே தொகுக்கப் பெற்றதால், பொருளளவில் குழப்பம் ஏற்படுவதைத் தவிர்க்கவே இவ்வாறு அமைக்க வேண்டியதாயிற்று.

மருந்துப் பொருள்களின் பெயர்கள் அனைத்தும் சுவடியில் உள்ளவாறே கொடுக்கப் பெற்றுள்ளன. ஒரே பொருளுக்குப் பல பெயர்கள் இருப்பதும் இடத்திற்கேற்பபெயர்மாறுபடுவதும் கூடும்'

எ.டு. பலாசு என்பதற்கு, பலாசம், பலாமரம், முருக்கமரம், புரசு, ஒருவகைக் கற்பமூலி எனவும்,

சிவன் விந்து என்பதற்கு, வழலை, வன்னிமரம், இரசம், சிவனார் வேம்பு, தலைப் பிண்ட முளை *எனவும், மூவிலை என் பதற்கு நரிப்பயறு, குப்பைமேனி, வில்வம்எனவும் அகராதிகள் கூறுகின்றன. ஆகையால், மருந்துப் பொருள்களின் பெயர்கள் சுவடியில் உள்ளது உள்ளவாறே பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

## சுவடி எண்கள்

ஒரே சுவடியில் வெவ்வேறு செய்திகள் தொடர்ச்சியாக இருப்பினும், எளிமையைக் கருதியும் தனித்தனி தலைப்புக்கள் விளக்க முறவேண்டும் எனக் கருதியும் பாடல்களும் உரைநடைப் பகுதிகளும்வெவ்வேறிடங்களிலிருந்தும்பிரித்தெடுத்துத்தொகுக்கப் பெற்றுள்ளன. இதைக் குறிக்கும் வகையில் ஒவ்வொரு செய்தியின் இறுதியிலும், செய்தி எந்தச் சுவடியிலிருந்து எடுக்கப்பட்டது என்பதற்கு அச்சுவடியின் வரிசை எண்ணும் அச்சுவடியின் பாடல் எண்ணும் அங்கேயே கொடுக்கப் பெற்றுள்ளன. இதனால், பாடற் பகுதிகளுக்கென தனியே பாடல் எண் ஏதும் கொடுக்கப் பெற வில்லை.

## நூல் தலைப்பு

மருந்து செய்யும் முறை (6 சுவடிகள்), மருந்து தயாரிக்கும் முறை (3 சுவடிகள்), மருந்து முறை (6 சுவடிகள்), மருந்துகள் (3 சுவடிகள்), மருந்து வகைகள் (2 சுவடிகள்) போன்ற தலைப்புக் களில் சுவடிகள் கிடைப்பதனாலும், மருந்து செய்முறைகளைப் பற்றிய செய்திகளே அனைத்துச் சுவடிகளிலும் கூறப்படுவதாலும் 'மருந்து செய்முறைகள்' என்ற தலைப்பேபொருத்தமும் பொருளு முடையதாக இருக்கும் எனக் கருதி நூல் முழுமைக்கும் இப்பெயர் இடப் பெற்றுள்ளது.

ஒரே மருந்து பல நோய்களை நீக்கப் பயன்படுவது போலவே ஒரே நோய்க்குப் பல மருந்துகள் கூறப் பெறுவதையும் இப்பதிப்பின் மூலம் அறிய முடிகின்றது. எனவே, நோய்ப்பெயர்-மருந்துப்

பெயர் என்ற வகையில் அட்டவணை ஒன்றும் இப்பதிப்பில் தொகுக்கப் பெற்றுள்ளது. அதன்வழி ஒவ்வொரு நோய்க்குமான மருந்து செய்முறைகளை அந்தந்த பக்கங்களில் பார்த்தறியலாம்.

மருந்துப் பொருள் அளவுகள் மிகுதியாக இருப்பின், தேவைக் கேற்ப, அவற்றின் முறைப்படி செய்து கொள்ளலாம், இவையாவும் அவரவர் தேவைக்கேற்பவும், நோய் மற்றும் நோயாளிக் கேற்பவும் அமையும் என்பதை அறிதல் தேவை.

மருந்துப் பொருள்களில் பல இன்றும் கிடைப்பன. சில அருமையாய்க் கிடைப்பன. இம் மருந்துகள் பெரும் பாலும் அனுபவ முறைப்படி செய்யப் பெற்றவையாக உள்ளன. நோயின் நிலையறிந்து அளவுடன் தருதல் போன்ற பொது விதிகளைக் கடைபிடிக்கும் பொழுது நல்ல பயன்களைப் பெறலாம்.

செய்முறை என்பது சுருக்கமாகவே எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளது. மேலும் விளக்கமாக அறியச் சுவடிப் பகுதிகளை தெளிவாகப் படித்தறிவதுடன், பொதுவான செய்முறைகளையும் அறிந்திருத்தல் வேண்டும்.

மேலும், மருந்து செய்முறைகளுக்கான விளக்கங்கள் சுவடிகளில் விரிவாகக் கூறப் பெறாத நிலையில், இதுவரை வெளிவந்துள்ள ஒரு சில தமிழ் மருத்துவ நூல்களையே நாம் துணையாகக் கொள்ள வேண்டியுள்ளோம். அத்தகைய செய்திகள் யாவும், 'சித்த மருந்து செய்முறைகள்' என்னும் பின்வரும் தலைப்பின் கீழ்க் காணலாம்.

திருவனந்தபுரம், கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள, இதுவரைப் பலரின் கண்களிலும் படாமலிருந்த தமிழ் மருத்துவச் சுவடிகள் சிலவற்றைப் பதிப்பிக்கும் நோக்குடன் இந்நூல் அமைகிறது. அங்குச் சிதைந்தும் சிதறியும், உதிர்ந்தும், பொடிந்தும், உரு மாறியும் வரும் சுவடிச் செய்திகள் இயன்றவரை ஒழுங்கு படுத்திப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இதே பாடல்களும், உரை நடைப் பகுதிகளும் மேலும் கிடைக்குமானால் இவை மேலும் தெளிவுறக் கூடும்.

# சித்த மருந்து செய்முறைகள்

மக்களிற் பலரும் அடைய விரும்பும் இறையனுபவ நிலையை அரிதின் முயன்று பெற்றவர் சித்தர் எனப்படுவோராவர். இவர்கள் காலம், இடம், சாதி, சமயங்களையெல்லாம்கடந்தவர்கள். திடம்பட மெய்ஞ்ஞானம் பெறவேண்டி உடலையும் உயிரையும் அழியாது காக்க உதவும் வாத, வைத்திய, யோக முறைகளை மேற்கொண்டொழுகிய அருளாளர்கள் இவர்கள். உடல், உயிர், உலகம் என்னும் மூன்றுக்குமுள்ள உறவை உணர்ந்தும் உணர்த்தவும் வல்லவர்கள் சித்தராவர். உலகில் வாழும் உயிர்களுக்கு உடலில் ஏற்படும் நோய்களுக்கான காரணம், மருந்து போன்றவற்றையும் சித்தர்கள் எடுத்துரைக்கின்றனர். இத்தகைய சித்தரின் வாக்குகளே தமிழ் மருத்துவத்தின் அடிப்படையாகவும் அமைகின்றது.

## நோயும் மருந்தும்

நோய் என்பது துன்பம், வருத்தம், வியாதி, குற்றம், அச்சம், துக்கம், நோவு என்னும் பல பொருள்களிலும் வழங்கப் படுவதிலிருந்து இச் சொல்லின் பொருள் புலனாகும்.[1]

## தொல்காப்பியர் கருத்து

உடல் மற்றும் உள்ளத்தை வருத்துவது 'பையுள்' எனவும், துன்பத்துடன் கூடிய உள நோயைச் 'சிறுமை' எனவும் தொல்காப்பியர் சுட்டுகின்றார்.[2]

---

1. Tamil Lexicon, Vol. IV. Part. 1. Page. 2372, 2373
2. "பையுளும் சிறுமையும் நோயின் பொருள"—தொல். சொல். உரி.45.

'நோய்' அல்லது 'துன்பம்' என்பது பிறரால் எடுத்துக் காட்ட இயலாதப் பொருட்களுள் ஒன்றென்பதும், நோயென்பது எங்கும் எவ்விடத்தும் இலங்குவது என்பதும் காப்பியர்தம் கொள்கையாகும்.[1]

மனிதனுடைய உடலையும் உள்ளத்தையும் தாக்குவதே நோய் என்னும் அடிப்படை உண்மையையும் இவர் கூறுவர்.[2]

## இலக்கியங்களில்

தமிழ் இலக்கியங்களில் 'நோய்' என்னும் சொல் துன்பம் என்னும் பொருளிலேயே பலவிடங்களிலும் வழங்கப் படுவதைக் காணலாம்.

கலித்தொகை, நற்றிணை போன்ற சங்க நூல்களில் இச் சொல் பல பொருட்களில் வழங்கப்படுகின்றது.

ஆற்றல் நோய், அவல நோய், அருநோய், இன்னா நோய், உள் நோய், கரந்த நோய், காமும் நோய், தணியா நோய், துன்ப நோய், துஞ்சாநோய், தொடர்நோய், படர் மணி நோய், பசப்பு நோய், பாயல் நோய், பிரிதல் நோய், பைதல் நோய், மருளறு நோய், மயங்கு நோய், விளியா நோய், வெப்பநோய் என்பன குறிப்பிடத் தக்கன.[3]

இச் சொல்லை, துன்பம் என்ற பொருளிலேயே வள்ளுவரும் பல விடங்களில் குறிப்பிடுகின்றார்.[4]

நோயற்ற வாழ்வே வாழ்க்கையின் அடிப்படையாக அமைகின்றது.

'நோய்கிடங்கொடேல்', 'நோய்கொண்டார் பேய்கொண்டார்' 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' போன்ற முதுமொழி களும் இவ்வுண்மையைத் தெளிவுறுத்துகின்றன.

---

1. ''ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
சாயலும் நாணும் மடனும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வருஉங் கிளவி எல்லாம்
நாட்டியல் மரபின் நெஞ்சுகொளின் அல்லது
காட்ட லாகாப் பொருள் என்ப''—தொல். பொருள். பொருளியல்.51
2. இமையோர் தேளத்தும் எறிகடல் வரைப்பினும் அவையில் காலம் இன்மை யான-தொல். பொருள். பொருளியல்.52
3. வே. இரா. மாதவன்-கண்மருத்துவம் .ப.51
4. திருக்குறள்-315, 350, 360.

**மருந்து**

இச்சொல் 'மரு' என்னும் வேரின் அடிப்படையாகப் பிறந்திருக்க வேண்டும். மரு என்னும் சொல் மணம், மருக் கொழுந்து, மலை, வனம், தளிர் போன்ற பொருட்களைக் கொண்டதாகும்.

மலை, காடு போன்ற இடங்களில் கிடைக்கக் கூடிய வெவ்வேறு மணமும் குணமும் உள்ள மூலிகைகளைக் கொண்டு செய்யப்படும் பொருட்கள் நோய்க் கெதிராக உந்துவதினால் 'மருந்து' எனப் பெயர் வழங்கப்பட்டது எனலாம்.[1]

மருந்து என்னும் சொல்லிற்கு ஔஷதம், பரிகாரம், வசிய மருந்து, அமிர்தம், சோறு, இனிமை போன்ற பலபொருள்கள் உள.[2]

இச்சொல் உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரண்டிற்கும் பொருந்தி வரும் ஒரு சொல்லாகும். நோயைப் போக்கி வாழ்விக் கும் காரணத்தால் 'அமிழ்தம்' என்ற பொருளிலும், நோயைக் கொல்லும் தன்மையைப் பெற்றிருப்பதால் 'நச்சு' என்ற பொருளிலும் இச் சொல் வழங்கக் காணலாம்.

உடல் நோயைக் களைந்து, உள நோயைப் போக்கி, நோய் வராமல் காத்து, இறப்பைத் தடுக்கும் திறன் கொண்டதே உண்மையான மருந்தாகும் என்பர் திருமூலர்.[3]

சங்க காலத்தில் சிலரிடமே தொழிலாக இருந்த மருத்துவக் கலை, சங்கம் மருவிய காலத்தில் பலரிடம் தொண்டாக மாறியது. சங்க காலத்தில் தனி மனித நலனுக்காகப் பயன் படுத்தப் பட்ட மருத்துவம் சங்கம் மருவிய காலத்தில் சமூக நலனுக்காகப் பயன் படுத்தப் பட்டது. சங்கம் மருவிய காலம் மருத்துவக் கலைக்கு மாறுதல் காலமாக அமைந்தது எனலாம்.

குறிப்பாக மருத்துவ நோக்கிலுள்ள சில பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் தனிச்சிறப் புடையவை. சிறுபஞ்சமூலம், திரிகடுகம், ஏலாதி போன்ற நூல்கள் மருந்துப் பொருள் பெயரிலேயே அமைந்து நீதிநெறிகளை விளக்கக் காணலாம்.

---

1. வே. இரா. மாதவன், கண்மருத்துவம், ப, 52.
2. Tamil Lexicon-Vol. V. Part 1, Page, 3094
3. திருமூலர் திருமந்திரம் (8000)

## சித்த முறையின் சிறப்பு

மருந்து செய்முறைகளில் உலோகத்தாது வகைகளை ஆயுர்வேத மருத்துவம் கி.பி.7ம் நூற்றாண்டிற்குப் பின்னரே கொண்டது என்றும், ஆனால் தமிழகத்தில் அதற்கும் முன்னதாக உலோகத் தாதுக்களை மருந்தாக்கும் முறைகள் மிகச் சிறப்பான முறையில் நிலவியது என்றும், கட்டு, களங்கு, மெழுகு, சுண்ணம் போன்ற உயர்வகை மருந்து தயாரிப்பு முறைகள் இன்றும் ஆயுர்வேத முறையில் காணப் பெறாமை சித்தமருத்துவத்தின் தனித் தன்மையை உறுதிப் படுத்தும் என்றும் அறிஞர் கூறுவர்.[1]

மேலும், சித்த மருந்துகளின் செய்முறைகள் மிகப் பெரிய வேதியியலாகவே அமைந்துள்ளது. தாவரங்கள் (Vegatable Origin), தாதுப் பொருட்கள் (Mineral Origin), உலோகங்கள் (Metal Origin), நடமாடும் உயிர்ப் பொருட்கள் (Animal Origin) என நான்கு வகை மூலப் பொருட்களிலிருந்து மருந்துகளைத் தயாரித்துள்ளனர்.

உப்புக்கள்-15, உபரசங்கள்-20, பாடாணங்கள்-64, உலோகங்கள் 12, மூலிகைகள் 1008 என அமையும் சித்த மருந்துகளின் தயாரிப்புக்கான மூலப் பொருட்களின் வகைகள் சித்த மருத்துவத்தின் அறிவியல் திறனை உறுதிப் படுத்துகின்றன. இவைகளிலிருந்து 32 வகையான அகமருந்துகளையும், 32 வகையான புறமருந்துகளையும் கண்டறிந்துள்ளனர்.

சித்த மருத்துவ முறையில் புடமிடும் வகையில் உப்பு, சுண்ணம், செந்தூரம், பற்பம் முதலானவற்றைச் சில தலை முறை வரையிலும் மருந்து ஆற்றல் குறையாமல் பயன் படுத்தலாம். சில மருந்துகளை வெவ்வேறு பொருத்தமான துணை மருந்துகளில் கூட்டிக் கொடுக்க வெவ்வேறு நோய்கள் தீர்ப்பதும் சித்த மருத்துவத்தின் சிறப்பாகும்.

இத்தகைய சித்த மருத்துவத்தின் செய்முறைகள் இன்றைய அறிவியலாரையும் வியப்பில் ஆழ்த்துவனவாகும்.

மருந்துப் பொருட்களின் குணமறிந்திருப்பதும் மருந்துகளைக் கையாண்ட முறையும், நோய்க்கேற்ற மருந்துகளைத் தரும்

1. Narayanaswamy, V. Introduction to the Siddha System of Medicine, p. 29-30

மருந்தியலும் சித்த மருத்துவத்தில் காணும் குறிப்பிடத்தக்க அடிப்படை நெறிகளாகும். இவற்றையே பதார்த்த குணம் (pharmacognosy), மருந்தாளுகை (pharmacy), மருந்தியல் (pharmocology)என மூவகையினதாகத் தற்கால மருத்துவத்திலும் பிரித்தறி கின்றனர், பன்னெடுங் காலமாகவே இவற்றைப் பழக்கத்தில் கொண்டிருந்ததைச் சித்த மருந்து செய்முறைகளின் மூலம் நாம் நன்கு அறியலாம்.

## சித்த மருத்துவ நூல்களில் குறிக்கப் பெறும் சிலமருந்து செய்முறைகள்

தமிழ் மருத்துவத்தைப் பொறுத்தவரை நோய்களுக்கான மருந்துகளை வழங்குமிடத்து மாத்திரை, தைலம், நெய், செந்தூரம், பற்பம், சுண்ணம், லேகியம் என உடலுக்குள் செலுத்தும் மருந்துகளும், கட்டு, பற்று, ஒற்றடம், புகை, வேது' மை, போன்ற உடலுக்கு வெளியிலிடும் மருந்துகளும் கூறப் பெறுகின்றன, இவற்றை அகமருந்துகள், புறமருந்துகள் என்ற பெயரிலும் நூல்கள் குறிப்பிடுகின்றன. அவை வகைக்கு முப்பத் திரண்டு என்பது பொதுவழக்கு.[1] அவற்றைப் பின் வருமாறு தொகுத்துக் காணலாம்.

## அகமருந்துகள் முப்பத்திரண்டும் அவற்றின் காலஅளவும்

உள்மருந் தேசுரசஞ் சாறுகுடி நீர்கற்க
முக்களி யடையோர் சாமம்
உயர்சூர ணம்பிட்டு வடகம்வெண் ணெய்நான்கி
னுயிர்மூன்று திங்க ளாகும்
விள்மணப் பாகுநெய் ரசாயன மிளகநால்
மேவுமறு திங்க ளெண்ணெய்
விரவிடு முயர்ந்தமாத் திரைகடுகு பக்குவம்
மிளர்தேனி னூறல் தீநீர்
கொள்ளாறு மோராண்டு மெழுகொடு குழம்பைந்து
கோப்பதங் கம்பத் ததாம்
குருதிபொடி யெழுபானொ டைந்தாண்டு நீறுகட்
டுருக்குக் களங்கு நானூ
றெள்ளிடாச் சுண்ணமைந் நூறுகற் பஞ்சத்து
குருகுளிகை மிக்கா யுளென்
றெவருமகிழ் சித்தர்முப் பத்திரண் டகமருத்
திசைத்தவா யுள்ள ளவரோ.

---

1. சித்த மருத்துவாங்கச் சுருக்கம். பக்.480-509.

(வேறு)

பேசிடு சுரசங் கற்கங் கியாழம் பெலனா மொருசாமம்
பின்திரி வடகம் சூரணம் வர்த்தி பெலனது திரிதிங்கள்
ஆசறு கிருதம் ரசாயன லேகியம் அதன்பலன் அறுதிங்கள்
அவனித னிற்றை லத்தின் பெருமை ஆண்டிற் கதிகமிளை
வீசுறு பற்பம் செந்தூர சுண்ணம் வெகுவித ரத்தினங்கள்
விரவிய நன்மாத் திரையோர் கற்ப மிருந்தா லும்பலனாம்
ஈசுர முன்னாள் நந்திக் குரைசெய் எண்ணான் காண்டமதில்
எழில் பெறு அவுடத பலனிது வென்றே இசைத்தார்
முனிவோர்க்கே.

அகமருந்துகள் 32.

| | |
|---|---|
| 1. அடை | 17. சுரசம் |
| 2. இளகம் (அ) இலேகியம் | 18. சுவைப்பு (இரசாயனம்) |
| 3. உட்களி | 19. சூரணம் |
| 4. உருக்கு | 20. செந்தூரம் |
| 5. எண்ணெய் | 21. தீநீர் |
| 6. கட்டு (மாத்திரைக்கல்) | 22. தேனூறல் |
| 7. கடுகு | 23. நீறு, வெண்ணீறு (அ) பற்பம் |
| 8. களங்கு | 24. நெய் |
| 9. கற்கம் | 25. பக்குவம் |
| 10. கற்பம் | 26. பதங்கம் |
| 11. குடிநீர் | 27. பிட்டு |
| 12. குருகுளிகை | 28. மணப்பாகு |
| 13. குழம்பு | 29. மாத்திரை |
| 14. சத்து | 30. மெழுகு |
| 15. சாறு | 31. வடகம் |
| 16. சுண்ணம் | 32. வெண்ணெய் |

## 1. அடை

அரிசிமாவுடன் சில இலைகளைக் கூட்டி அரைத்து, சட்டியை அடுப்பில் வைத்து அதில் கொஞ்சம் நெய் தடவி, அதில் மேற்படி யரைத்த மாவை அடையாகத் தட்டிவிட்டு, வெந்தபின் எடுத்துக் கொள்வதாம்.

கால அளவு : ஒருசாமம் (மூன்றுமணிநேரம்) வன்மையுள்ளது. அந்தந்த வேளையில் புதிதாய்த் தயார் செய்து 3 மணி நேரத்திற் குள்ளாகக் கையாள வேண்டும்.

## 2. இளகம் (அ) இலேகியம்

சில குடிநீர்வகைகள், சாறுவகைகள் ஆகிய இவைகளைத் தனித்தனியாகவாவது, கலந்தாவது வைத்துக்கொண்டு, அதற்குச் சேர்க்க வேண்டிய அளவு சர்க்கரை கூட்டி, அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து, சாறு வற்றி மணம் வருங் காலத்தில், சூரணஞ் செய்து வைத்துக் கொண்டிருந்த சரக்குப் பொடியை அதில் சிறுகச் சிறுகத்தூவி, விடவேண்டிய நெய்யை முன்னரும், தேனைப் பின்னருமாய் விட்டுக் கிளறி, பக்குவத்தில் எடுத்து வைத்துக் கொள்வதாகும்.

(வேறு)

சர்க்கரையாவது, கரும்புவெல்லமாவது, பனைவெல்ல மாவது (கருப்புக்கட்டி) சேர்க்கவேண்டிய அளவு நிறுத்தெடுத்து, ஒரு மண்சட்டியை அடுப்பிலேற்றி, அதில் விட வேண்டிய அளவு தண்ணீரையாவது, பசுவின் பாலையாவது விட்டு, அதில் மேற்படி வெல்லத்தையிட்டு, அது மணக்குங் காலத்தில் தேனையிட்டு ஒரு பொங்கு வரும்போது சரக்குப் பொடியைச் சிறுகச் சிறுகத் தூவிக் கிளறி, பிறகு தேனையும், நெய்யையும் விட்டுப் பக்குவத்தில் எடுத்து வைத்துக் கொள்வதாகும்.

கால அளவு : ஆறு திங்கள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 3. உட்களி

பச்சரிசியையாவது, புழுங்கலரிசியையாவது வறுத்து மாவரைத்தும், உளுந்தை மாவரைத்தும், விதைகளைப் பொடியாக இடித்தும், அப்பொடிக்குத்தக்க நீர்விட்டுப் பிசைந்தும் அதற்குத் தக்க சர்க்கரையாவது வெல்லத்தையாவது சேர்த்துக் கரைத்து, ஒரு மண் சட்டியில் ஊற்றி அடுப்பேற்றி, களிப் பதம் வருகிற வரைக்கும் வேக விட்டுக் கிளறி, கொஞ்சம் நெய் விட்டுக் கைகளில் ஒட்டாப் பக்குவமாய்ச்செய்து எடுத்துக் கொள்வதாகும்.

கால அளவு : ஒரு சாமம்(மூன்றுமணிநேரம்) வன்மையுள்ளது அவ்வவ் வேளையில் புதிதாய்த் தயார் செய்து 3 மணி நேரத்திற் குள்ளாகக் கையாள வேண்டும்.

## 4. உருக்கு

பாடாணங்களையேனும், உலோகங்களையேனும் நட்புச் சரக்குகளைக் கூட்டியாவது, பகைச் சரக்குகளைக் கூட்டியாவது

மூசையிலிட்டு மேல் மூடி, மண் சீலை செய்து, கட்டைகளின் இயற்கைக் கரியிட்டு ஊதி இளகச் செய்து ஆறவிட்டு எடுப்பது

கால அளவு : 100 ஆண்டுகள் வன்மையுள்ளவை.

## 5. எண்ணெய்

என் + நெய் = எண்ணெய்.

எள்ளிலிருந்து எடுக்கப்படும் நெய்யே எண்ணெயாம்.

இது போலவே வடமொழியில் திலத்தினின்றும் எடுக்கப் படும் நெய் தைலம் என்றாயிற்று. திலம் என்றால் எள். திலசம் பந்தம் தைலம்.

விதை, கொடி, பட்டை, கிழங்கு ஆகிய இவற்றினின்றும் பசு முதலியவற்றின்றும் உட்கிடையாயுள்ள நெய்ப்புப் பொருளே நெய் என்று சொல்லப் படுவதாகும்.

இப்படிப் பெயர் வைக்குமிடத்து அவை தனிச்சரக்குப் பெயராகவும், இரண்டுமுதல் கலந்தபெயராகவும், சிறப்புச் சரக்குப் பெயராகவும், தொகைச் சரக்குப் பெயராகவும், நோய்ப்பெயரா கவும் செய்யும் பண்பின் பெயராகவும் இருக்கலாம் என்பர்.

1. வல்லாரை நெய் : இது தனிச்சரக்கினாலும் நெய்யாலும் பெயர் பெற்றது. தூதுளைநெய், பிரமிநெய் இதைப் போன்றதே.

2. சிவனார் வேம்புக் குழிநெய் : இது சிறப்புச் சரக்கினாலும் செய்கைப் பொறியினாலும் தன்னுள் உள்ள நெய்ப்பசை வெளிப் படுத்தப் பட்டதாகலான், சிறப்புப் பெயர் ஒன்றினாலேயே பெயர் பெற்றது.

3. கந்தகச் சுடர்நெய் : இது சிறப்புச் சரக்காலும், அதில் விடும் நெய்யாலும், செய்கைப் பெரும் பொருளாகிய சுடராலும் பெயர் பெற்றது.

4. ஓணாண் சுடர் நெய் : இது சிறப்புச் சரக்காலும், வேப்ப முத்து நெய்யாலும் செய்கைப் பெரும் பொருளாகிய சுடரினாலும் பெயர் பெற்றது.

5. மேக நெய் : மேகம் என்னும் நோயின் பெயரும், அதில் சேர்க்கப்படும் நெய்யும் சேர்ந்து பெயர் பெற்றது.

6. பெருநோய் நெய் : பெருநோய் என்னும் நோய்ப்பெயரும் அதில் சேர்க்கப் படும் நெய்யும் சேர்ந்து பெயர் பெற்றது.

7. ஐங்கூட்டு நெய் : ஐந்து நெய்களைச் சேர்த்து, அதில் சில சரக்குகளைக் கூட்டிக் காய்ச்சப்படுவது. ஆகையால் இது ஐந்தென்னும் தொகைப் பெயர் பெற்றது.

எனவே, என் நெய் சேர்க்கப்பட்டவற்றை எண்ணெய் எனவும் மற்றவை சேர்க்கப் பட்டவற்றை நெய் என்றும் இயம்புவது மிகவும் நலமாம்.

## இதன் பிறப்பு வகை

1. கொதி நெய் : ஆமணக்கு முத்து முதலியவற்றை வறுத்திடித்துத் தண்ணீரில் கலந்து, அடுப்பேற்றிக் கொதிக்க வைப்பதினின்றும் பிறப்பது.

2. உருக்கு நெய் : வெண் நெய், கோழிமுட்டைக்கரு முதலிய பொருள்களை உருக்குவதால் உண்டாவது.

3. புடநெய் அல்லது குழிப்புட நெய் : அடியில் சிறுசிறு துளைகளிட்ட ஒரு குடத்தில், சேங்கொட்டை, சிவனார் வேம்பு முதலியவற்றைச் செய்யவேண்டிய மாதிரி செய்து நிரப்பி, மேல் மூடி, வாய்க்கு மண்சீலை செய்து, ஒருகுழி தோண்டி, அடியில் ஒரு சிறு பீங்கானையாவது சட்டியையாவது வைத்து, மேலே சரக்குப் போட்ட குடத்தை வைத்துப் புடம் போடுவதால், அடியிலிருக்கும் சட்டியில் இறங்கியிருப்பதாம்.

4. தீநீர் நெய் : சந்தனக் கட்டை முதலிய மணமுள்ள பொருள்களைத் தூளாக்கி, பானையிற் போட்டு தண்ணீர் விட்டு, பட்டி கட்டி இறக்குகிற தீநீரினாற் பிறப்பது.

5. சூரிய புடநெய் அல்லது ஆதவ நெய் : எள்ளுடன் சில சரக்குகளைச் சேர்த்தரைத்த கற்க மருந்தை, சூரியனது வன்மையுள்ள வெய்யிலில் வைக்க, அச்சூட்டால் வெளிப்படுவது.

6. மண் நெய் : ஓதமில்லாத பூமிக்குள்ளிருந்து கொப்புளித்துத் தானே வெளித் தோன்றுவது.

7. மரநெய் : மரத்தில் வெட்டப்படும் இடத்தினின்றும் உண்டாவது.

8. சிலை நெய் : உயர்ந்த மலைகளிலிருந்து வழிவது.

9. நீர் நெய் : புழுகுச் சட்டம் முதலியவைகள் நன்றாய் நசுக்கித் தண்ணீரில் ஊறவைப்பதினால் பிறப்பது.

10. ஆவிநெய் : மட்டுப்பால், சாம்பிராணி முதலிய சரக்குகளை நெருப்பிற் காய்ந்த மட்சட்டியிற் போட்டு அதன்மேல் தண்ணீர் நிறைந்த தட்டு ஒன்றை வைக்க, அந்தப் புகையால் பிறப்பது.

11. சுடர் நெய் : கந்தகம் முதலிய சரக்குகளை எந்த நெய்யாற் செய்யச் சொல்லப் பட்டிருக்கிறதோ, அதனால் அரைத்து, ஒரு புதுத் துணித்துண்டைத் தண்ணீரில் நனைத்துக் கசக்கி, அதிலிருக்கும் கஞ்சியைப் போக்கி உலர்த்தி, அந்த துணியில் தடவி, இருப்புக் கதிரில் சுற்றிக்கட்டி, ஒரு முனையிற் கொளுத்திப் பிடிக்கச் சுடருடன் இறங்குவது.

12. பொறி நெய் அல்லது இயந்திர நெய் : எள் முதலிய விதைகளிலிருந்து காணம் (செக்கு) முதலிய கருவிகளால் எடுக்கப் பெறுவது

மேற்கண்ட பன்னிரண்டு வகை நெய்களையும் 1. முடிநெய், 2. குடிநெய், 3. பிடிநெய், 4. தொளை நெய், 5. சிலைநெய் என்பவற்றுள் அடக்கலாம்.

1. முடிநெய் : தலைக்கிடும் எண்ணெயாகும்.

2. குடிநெய் : குடிக்கின்ற நெய், இது எண்ணெய், ஆமணக்கு நெய், நெய் ஆக மூவகையாகும்.

3. பிடிநெய் : உடல்மீது தடவிப் பிடிக்கின்ற நெய்யாகும்.

4. தொளை நெய் : உடலிலுள்ள ஒன்பது தொளைகளின் வழியாய்ச் செலுத்துகின்ற நெய்யாகும்.

5. சிலைநெய் : புரைகளின் வழியாய்க் குருதி, சீ முதலியவைகளை ஒழுகப் பண்ணுகின்ற கெட்ட இரணங்களுக்கு இடும் நெய்யாகும்.

கால அளவு : இவை ஓராண்டு வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 6. கட்டு (மாத்திரைக்கல்)

பாடாணங்களைத் தனித்தனியாயேனும், இரண்டு முதற் கலந்தேனும், சில சரக்குகளைச் சேர்த்திறக்கப்பட்ட புகை நீராலாவது, செயநீராலாவது, இலைச் சாறுகளாலாவது, குடிநீர்களாலாவது, தேனினாலாவது, முலைப்பாலாலாவது, சில சரக்குகள் சேர்ந்த குழிப்புட நெய்யாலாவது, தனிச்சரக்குக் குழிப்புட நெய்யாலாவது சுருக்குக் கொடுத்துக் கட்டிக் கொள்வது.

இது தவிர, சில சரக்குகளைத் தனியேயாவது, பற்ப செந்தூரங்களாய்ச் செய்தாவது கூட்டிச் சாறுகளிலேனும், முலைப் பாலிலேனும் அரைத்து உருட்டிக் கொள்வதாகும்.

காலஅளவு : 100 ஆண்டுகள் வன்மையுள்ளது.

## 7. கடுகு

ல மருந்துச் சரக்குகளை நெய் முதலிய தைலப் பொருள்களால் சேர்த்துக் காய்ச்சி, அச்சரக்குகள் திரண்டு வரும் பக்குவத்தில் எடுத்து, அக்கடுகை உள்ளுக்குச் சாப்பிட்டுத் தைலத்தை மேலே பூசுவது.

காலஅளவு : ஓராண்டு வன்மையுள்ளது.

## 8. களங்கு

பாதரசம் முதலிய சரக்குகளை, இலைகளின் சாறுகளாலாவது, செயநீர்களாலாவது, புகை நீர்களாலாவது, சுருக்குக் கொடுத்துப் புடம் போட்டு, கட்டிக்கரியிலிட்டு ஊதி, மணியாக்கி உருக்கி, தங்கம் நாகம் கூட்டி ஆறவைத்து எடுத்துக் கொள்வது.

காலஅளவு : 100 ஆண்டுகள் வன்மையுள்ளது.

## 9. கற்கம்

தூய்மை செய்த இரும்புத்தூள், இரும்புச் சிட்டத்தூள் என்னும் இவற்றுள் ஏதாவதொன்றுடன், ஈரமாயுள்ள சரக்குகளையாவது, உலர்ந்த சரக்குகளையாவது, சில இலைகளோடாவது சேர்த்துக் கல்லொடு கல்லாய் ஒட்ட அரைத்துக் கெட்டியாய் எடுத்துக் கொள்வதாகும்.

காலஅளவு : ஒரு சாமம் (மூன்று மணிநேரம்) வன்மையுள்ளது. இதனை அந்தந்த வேளையில் புதிதாய்த் தயார் செய்து 3 மணி நேரத்திற்குள்ளாகக் கையாள வேண்டும்.

## 10. கற்பம்

சில இலைகளையாவது, வேர்களையாவது, சரக்குகளையாவது, உப்பு, உலோகம், உபரச சத்துக்களையாவது அவ்வவற்றிற்குச் சொல்லப்பட்டுள்ள பத்தியப் படியும், நாளளவுப் படியும் ஏற்றியும், இறக்கியும் உண்டுவரச் செய்வது.

இது நாள்தோறும் தயார் செய்து சாப்பிடுவதும், முன்னர் முடித்து வைத்திருந்து உண்பதுமென இரண்டு வகைப்படும்,

அவற்றுள் நாள்தோறும் தயார்செய்வது, இலை, வேர், சரக்கு முதலியன.

முன்னர் முடித்து வைத்திருந்து உண்பது. உலோகச்சத்து உபரச சத்து முதலியன.

மூலிகைக் கற்பற்களாவன 'தேரர் யமக வெண்பாவிலும், மற்றச் சித்தர் நூல்களிலும் சொல்லப்படும் மூலிகைகளாகும். முன்னர் முடித்து வைத்திருக்கும் சத்துக்களாவன, அகத்தியர் செந்தூர முந்நூறு முதலிய நூல்களில் சொல்லப்படுவன.

காலஅளவு : பல ஆண்டுகள் வன்மையுள்ளது.

## 11. குடிநீர்

இது மருந்து நீர், உண்ணீர், வாய்க்குடித்திடும் புனல் என்னும் பேர்களாலும் சொல்லப்படும். இதை, ஆயுர்வேத மருத்துவர்கள் கசாயம் என்பர்.

இது உலர்ந்த சரக்குகளையாவது, ஈரமாயுள்ள சரக்குகளை யாவது, வேறு பொருள்களையாவதுஇடித்து, அதற்குச் சொல்லப் பட்டுள்ள அளவின் படி தண்ணீர் விட்டு, இரண்டுக்கு ஒன்றாக வாவது, நான்குக் கொன்றாகவாவது, ஆறுக் கொன்றாகவாவது எட்டுக் கொன்றாகவாவது, பதினாறுக் கொன்றாகவாவது, இருபத்து நான்குக் கொன்றாகவாவது காய்ச்சி வடிகட்டி எடுத்துக் கொள்வதாகும்.

காலஅளவு : மூன்று மணிநேரம் வன்மையுள்ளது.

## 12. குருகுளிகை

இது வாலை ரசத்தைச் சில சரக்குகளால் கட்டி மணிமணி யாய்ச் செய்து கோர்த்துக் கொள்வது.

காலஅளவு : பல ஆண்டுகள் வன்மையுள்ளது.

## 13. குழம்பு

சில சாறுகளைக் கலந்தாவது, தனிச் சாறாகவாவது, ஒரு சட்டியிலிட்டு, சர்க்கரை கூட்டிச் சில சரக்குகளைப் பொடி செய்து துணியில் வடிகட்டி அதில் போட்டுக் குழம்புப் பக்குவத்தில் காய்ச்சி வடித்து எடுத்துக் கொள்வதாகும்.

உதாரணம் கேசரிக்காய் (எலுமிச்சை) குழம்பு. இதுவன்றி, சில சரக்குகளைச் சேர்த்து நெய்ப் பசையுள்ள பொருள்களைக் கொண்டு அரைத்துக் குழம்புப் பக்குவத்திலெடுப்பது குழம்பாகும்.

காலஅளவு : ஐந்தாண்டுகள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன்படுத்தக் கூடாது.

## 14. சத்து

காந்தம், இரும்புத்தூள், மற்ற உபரசம் முதலியவற்றோடு சில பாடாணாதிகளைச் சேர்த்து, வெண்கருச் செயநீரினால் அரைத்துலர்த்தி, மூசையிலிட்டுச் சீலை செய்து, மூன்று முறை ஊதி எடுக்க வரும் சத்துக்களோடு, தங்கம், ரசம், கந்தகம் சேர்த்து அரைத்துக் குப்பியிலிட்டு எரித்துச் செந்தூரம் ஆக்கிக் கொள்வது.

காலஅளவு : பல ஆண்டுகள் வன்மையுள்ளது.

## 15. சாறு

இலை, வேர், பட்டை, பூ, காய் முதலிய ஐந்துறுப்புகளில் ஏதாவதொன்றையாவது, ஐந்தையுமாவது இடித்துப் பிழிந்தாவது, இடித்துப் பிட்டவித்துப் பிழிந்தாவது, அரைத்துப் பிழிந்தாவது எடுத்துக் கொள்வதாம்.

காலஅளவு : ஒருசாமம் (மூன்று மணிநேரம்) வன்மையுள்ளது. இதனை அந்தந்த வேளையில் புதிதாய்த் தயார் செய்து 3 மணி நேரத்திற்குள்ளாகக் கையாள வேண்டும்.

## 16. சுண்ணம்

இது பாதரசத்தை, பாடாணங்களை, லோகங்களைத் தனித் தனியாகவேனும், கலந்தேனும், கல்வத்திலிட்டு சில சாறுகள், செயநீர்கள், புகைநீர்கள் இவற்றில் ஏதாவதொன்றில் அரைத்துருட்டி, உலர்த்தி, மூசையிலிட்டுச் சீலை செய்துலர்த்தி கரி நெருப்பிலிட்டு ஊதி எடுத்து, ஆறவைத்துப் பூத்தபின் எடுத்துக் கொள்வது. இது மஞ்சளுக்குச் சிவக்கும்.

காலஅளவு : 500 ஆண்டுகள் வன்மையுள்ளது.

## 17. சுரசம்

இது இலை, வேர், பட்டை, பூ, காய், இஞ்சி, இஞ்சியைப் போன்ற சரக்குகள் ஆகிய இவற்றில் ஒன்றை இடித்தேனும், கல்லிலிட்டரைத்தேனும், துணியிலிட்டுப் பிழிந்தேனும் வந்த சாற்றையாவது, சுக்கைப் போன்ற உலர்ந்த சரக்குகளை இடித்துப் பொடித்துத் தண்ணீர் விட்டரைத்துப் பிழிந்த நீரையாவது, ஒரு மட்பாண்டத்திலிட்டுக் கொதிக்க வைத்து, அதை முரித்து எடுத்துக் கொள்வதாகும்,

காலஅளவு : ஒரு சாமம் (மூன்று மணிநேரம்) வன்மையுள்ளது. இதனை அந்தந்த வேளையில் புதிதாய்த் தயார் செய்து 3 மணி நேரத்திற்குள்ளாகக் கையாள வேண்டும்.

## 18. சுவைப்பு (இரசாயனம்)

இது சரக்குகளைச் சூரணஞ்செய்து, சர்க்கரை, நெய், எடைப் படிச் சேர்த்து, இளகலாகப் பிசைந்து எடுத்துக் கொள்வதாகும். இதைக் குழம்பாகச் செய்து கொள்வதும் ஒரு வகை.

காலஅளவு : ஆறு திங்கள் வன்மையுள்ளவை. அதற்கு மேல் பயன் தராது.

## 19. சூரணம்

இது உலர்ந்த சரக்கானால் அப்படியே எடுத்தும், ஈரச் சரக்கானால் உலர்த்தியும், தூய்மையாகவும், புதியனவாகவும், வறுக்க வேண்டியவைகளை வறுத்தும், வறுக்க வேண்டாதவைகளை உள்ளது போலவும், தனித்தனி இடித்துத் துணியில் வடிகட்டி எடை எடுத்துக் கலந்து கொள்வதாகும். இவ்வாறு செய்யப்படும் ஒவ்வொரு சூரணமும், தூய்மை செய்யப்பட வேண்டுமென்பது முன்னோர்கள் கொள்கை. ஆகையால் எந்தச் சூரணங்களைக் கையாள வேண்டியிருந்தாலும், அவற்றை லேகியமாகச் செய்து கொள்ள வேண்டியிருந்தாலும், முன்னர் அச்சூரணங்களைத் தூய்மை செய்தேயாக வேண்டும்.

சூரணத் தூய்மை : சூரணங்களுக்கு வேண்டிய சரக்குகளை எடுத்து, தனித்தனி உலர்த்தித் தனித்தனி இடித்து, துணியில் வடிகட்டி, தனித்தனி எடைப்படி நிறுத்துக் கலந்து, பிறகு அச் சூரணத்தைக் கொஞ்சம் பசும்பால் விட்டுப் பிசைந்து, ஒரு மண் குடைவு சட்டியில் பசுவின் பாலும் நல்ல தண்ணீரும் சரியளவாய்க் கலந்து ஊற்றி, அச்சட்டியின் வாயில் ஒரு தூய்மையான துணியைச் சிறிது பள்ளமிருக்குமாறு கட்டி, அதில் மேற்படி சூரணத்தைப் பிட்டுமா வைப்பது போல வைத்து, மேல் சட்டி மூடி, சந்து வாய்க்கு ஆவி போய் விடாதபடி துணிசுற்றி, அடுப்பின் மேல் வைத்து, பால் சுண்டஎரித்தெடுத்து, அப்பிட்டை வெயிலுலர்த்தி, மறுபடியும் இடித்துப் பிட்டுத் துணியில் வடிகட்டி எடுத்துக் கொள்வதாகும்.

கால அளவு : மூன்று திங்கள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 20. செந்தூரம்

இது உலோகங்களையேனும், பாடாணாதிகளையேனும் சில இலைச்சாறுகளாலாவது, உப்புப்புகை நீரிலாவது, செயநீரிலாவது அரைத்துப் புடம் போட்டாவது, எரித்தாவது, வறுத்தாவது, அரைத்து வெய்யிலில் வைத்தாவது, சிவக்குமாறுச் செய்து எடுத்துக் கொள்வதாகும்.

1. எரித்துச் சிவக்கச் செய்வது—பூரண சந்திரோதயம் போன்ற மருந்துகள்.
2. வறுத்துச் சிவக்கச் செய்வது—அயவீரசெந்தூரம் போன்ற மருந்துகள்.
3. அரைத்துச் சிவக்கச் செய்வது—சண்டமாருத செந்தூரம் போன்ற மருந்துகள்.
4. அரைத்து வெய்யிலில் வைத்து எடுப்பது—சுயமாக்கினி செந்தூரம் போன்றவை.
5 மற்றவை, வழக்கத்திலிருக்கும் அயச்செந்தூரம், காந்த செந்தூரம், அப்பிரக செந்தூரம் போன்றவையாகும்.

காலஅளவு : 75 ஆண்டுகள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 21. தீநீர்

இது இரண்டு வகைப்படும்.

1. சரக்குகளைச் சேர்த்து வாலையிலிட்டுத் தண்ணீர் சேர்த்து, அடுப்பேற்றி எரித்து இறக்குவது ஒன்று. இது தீநீர் எனப்படும்.
2. உப்பு வகைகளை வாலையிட்டு எரித்து இறக்குவது மற்றொன்று. இது புகைநீர் எனவும், திராவகம் எனவும் சொல்லப் படும்.

இவ்விரண்டிற்கும் "சத்திநீர்" எனவும் வழங்குவதுண்டு.

கால அளவு : ஓராண்டு வன்மையுள்ளது. அதற்குமேல் பயன் தராது.

## 22. தேனூறல்

இது இஞ்சி, நெல்லிக்காய், கடுக்காய் முதலியவற்றைத் தண்ணீரில் ஊற வைத்து, மேலில் ஊசியாலாவது, முள்ளினாலாவது பல துளைகள் குத்தி, தண்ணீரையாற்றிச் சர்க்கரைப் பாகில் போட்டாவது, தேனில் ஊறப் போட்டாவது வைத்துக்கொள்வது.

காலஅளவு : ஓராண்டு வன்மையுள்ளது. அதற்குமேல் பயன் தராது.

## 23. நீறு வெண்ணீறு அல்லது பற்பம்

இது உலோகங்களையேனும், பாடாணங்களையேனும், உபரசங்களையேனும், சில இலைச் சாறுகளினாலாவது, உப்புப் புகை நீரினாலாவது, செயநீரினாலாவது, அரைத்துப் புடமிட்டேனும், வறுத்தேனும், எரித்தேனும், ஊதியேனும் வெளுக்கும்படி செய்து எடுத்துக் கொள்வது.

காலஅளவு : 100 ஆண்டுகள் வன்மையுள்ளவை.

## 24. நெய்

இது, பசுநெய்யுடன் தனி இலைச்சாறு அல்லது தனிக்கிழங்குச் சாறு சேர்த்தாவது, பல இலைகளின் சாறு அல்லது பல கிழங்குகளின் சாறு அல்லது இரண்டு வகைகளின் சாறும், கற்கங்களும் சேர்த்தாவது, அல்லது சில சரக்குகளின் குடிநீராவது சில பச்சிலைகளின் குடிநீராவது, சாறுகளாவது சேர்த்தாவது ஒரு மண் சட்டியில் ஊற்றி, அடுப்பேற்றி எரித்து, நெய்ப்பக்குவத்தில் காய்ச்சி இறக்கி, வடிகட்டி வைத்துக் கொள்வதாகும்.

காலஅளவு : ஆறுதிங்கள் வன்மையுள்ளவை. அதற்குமேல் பயன் தராது.

## 25. பக்குவம்

1. இது பக்குவம் செய்ய வேண்டிய கடுக்காய் போன்றதை, பச்சரிசி கழுநீரிலாவது, நீரிலாவது ஊறப்போட்டு, அது மெலிந்த பின் மோர், எலுமிச்சம் பழச்சாறு, இஞ்சிச்சாறு, சில இலைகளின் சாறு முதலியவற்றில் கடைச்சரக்குகளின் பொடியைக் கூட்டிப் பக்குவம் செய்வதொன்று.

2. எலுமிச்சங்காய் போன்றவைகளை ஐந்துப்பு முதலியவை சேர்த்து வேக வைத்துப் பக்குவஞ் செய்வது மற்றொன்று.

காலஅளவு : ஓராண்டு வன்மையுள்ளது. அதற்குமேல் பயன் தராது.

## 26. பதங்கம்

இது இரசத்தை மாத்திரம் தனியாகவாவது, அதனுடன் இரசக் கலப்புள்ள மருந்துகளையாவது ஒரு மண் சட்டியில் உப்பு,

செங்கல் மாத்தூளும் போட்டு, அதன் மேல் மேற்கூறியதை அப்படியேயாவது, ஒரு மூசையில் போட்டாவது வைத்து, மேலே உப்புமுடி, மேல் சட்டி மூடிச் சீலை மண் செய்து, அடுப்பேற்றி அதற்குச் சொல்லப் பட்டிருக்கிற நாழிகையளவாகவும், சொல்லப் பட்டிருக்கிற தீயினளவாகவும் எரித்து, அசையாமல் கீழிறக்கிப் பிரித்து மேற்சட்டியில் ஏறியிருக்கும் மருந்துகளைப் பக்குவமாய் வழித்தெடுத்து வைத்துக் கொள்வதாகும்.

அன்றி, சிலபாடாணங்களைச்சில இலைச்சாறுகளால் அரைத்து மூசையும் நடுவில் துளை வைத்த மேல் மூடியும் செய்து, அம் மூசைக்குள் இரசம் விட்டு, ஒரு சட்டியில் போட வேண்டிய அளவு உப்பிட்டு, அதன்மேல் அம்மூசையை வைத்து மேல் சட்டிமூடி, மண்சீலை நாள் ஒன்றுக்கு ஒரு சீலையாய் ஏழு நாளைக்கு ஏழு சீலை செய்து எரிப்புக்குச் சொல்லியிருக்கிற சாமம் வரையும் அதற்குச் சொல்லப்பட்டிருக்கிற தீயளவாய் எரித்து, சிறிது ஆறின பின் அதை அசையாமல் எடுத்து, மெதுவாய்ப் பிரித்து மேற் சட்டியில் ஏறியிருக்கிற மருந்தைத் துடைத்து எடுத்து வைத்துக் கொள்வதாகும்.

காலஅளவு : 10 ஆண்டுகள் வன்மையுள்ளது. அதற்குமேல் பயன் தராது.

## 27. பிட்டு

இது சரக்குகளைத் தனித்தனி இடித்துக் கலந்து தூய்மை செய்யப்பட்ட பொடியை ஒரு குடைவு மண்சட்டியில் பசுவின் பாலும் தண்ணீரும் சரியளவு கலந்து விட்டு, மேலே துணிகட்டி, அதன்மேல் மேற்படி பொடியில் பசுவின் பால்விட்டுப் பிசைந்து, பிட்டுச் சுடுவதற்கு மாவைப்பது போல் வைத்து, மேல் ஒரு சட்டி மூடி, ஓர் ஆவி வெளிக்கிளம்பு மட்டும் எரித்து, அப்பிட்டை ஒரு மட்பாண்டத்திலிட்டு, நாட்டுச் சர்க்கரையாவது, வெல்லமாவது சேர்த்துப் பிசைந்து எடுத்துக் கொள்வதாகும்.

கால அளவு : மூன்று திங்கள் வன்மையுள்ளது, அதற்குமேல் பயன் தராது.

## 28, மணப்பாகு

இது சில சரக்குகளையாவது, வேர்களையாவது, பூக்களை யாவது, பழங்களையாவது, கொடிகளையாவது தனித்தனிக் குடி நீர் செய்து, சில பழங்களிலிருந்தெடுக்கும் சாறுகளையாவது

ஒரு மண்சட்டியில் விட்டு, அதற்குத் தகுந்த கற்கண்டாவது, வெள்ளைச் சர்க்கரையாவது எடைப்படி சேர்த்தெரித்து, மணம் வரும் பக்குவத்தில் இறக்கி, ஆற்றி வைத்துக் கொள்வதும், அப் பக்குவ காலத்தில் சில சரக்குப் பொடிகளைத் தூவிக் கிளறி இறக்கி, ஆற்றி எடுத்து வைத்துக் கொள்வதாம்.

காலஅளவு : ஆறுதிங்கள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 29. மாத்திரை

இது சில சரக்குகளைச் சேர்த்தும் சில இலைச்சாறுகளா லாவது, இஞ்சிச்சாறு போன்றவைகளாலாவது, குடிநீர்களா லாவது, முலைப்பாலாலாவது அரைத்துப் பல அளவுகளாய் உருட்டி உலர்த்தி எடுத்து வைத்து கொள்வதாகும்.

இதற்கு மாத்திரை, உருண்டை, குளிகை என்னும் பெயர்கள் உண்டு.

மாத்திரை என்றால் அளவு. எந்த அளவினால் இம்மருந்து கொடுக்க வேண்டுமோ, அந்த அளவிலேயே செய்யப்படுவதால் இதற்கு அப்பெயர் வாய்த்தது. உருண்டை வடிவத்தால் உருண்டை ஆயிற்று.

காலஅளவு : ஓராண்டு வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 30. மெழுகு

இது இரண்டு வகைப்படும். அவை 1. அரைப்பு மெழுகு, 2. சுருக்கு மெழுகு என்பன.

1. அரைப்பு மெழுகு : இது சில ரசக்கலப்புள்ள சரக்குகளைத் தனியாக அல்லது, இவற்றுடன் சில கடைச்சரக்குகளைச் சேர்த் தாவது, உப்புகளைத் தனியாக அல்லது அவற்றுடன் கடைச் சரக்குகளைச் சேர்த்தாவது, சில சாறுகளாலேனும், தேனினா லேனும் அரைத்து மெழுகுப் பக்குவமாய்ச் செய்து கொள்வது.

2. சுருக்குமெழுகு : சில ரசக்கலப்புள்ள சரக்குகளையாவது பாடாணங்களையாவது, பலவகை மூலிகைகளின் சாற்றினா லேனும் சில நெய்ப்புப் பசையுள்ள தைலங்களினாலேனும் சுருக்குக் கொடுத்து, அவை இளகி மெழுகு பதமாகும்போது எடுத்து, குழிக் கல்லிலிட்டுப் பக்குவமாய் அரைத்து எடுத்து வைத்துக்கொள்வது.

காலஅளவு : ஐந்தாண்டுகள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன்படுத்தக் கூடாது.

## 31. வடகம்

இது சரக்குகளைத் தனித்தனி யிடித்துத் துணியில் வடிகட்டிச் சேர்க்க வேண்டிய எடை எடுத்துக் கலந்து, அத்துடன் நாட்டுச் சர்க்கரையாவது, வெல்லமாவது கலந்து வைத்துக் கொண்டு, ஒரு குடைவு மண் சட்டியில் பசுவின் பாலும், தண்ணீரும் சரியளவு கலந்து ஊற்றி, சட்டி வாய்க்குத் துணிகட்டி, அத்துணியின்மேல் மேற்படி பொடியைப் பிட்டுமா வைப்பது போல வைத்து, மேற் சட்டிமூடி அடுப்பேற்றி, பால் வரளும் வரை எரித்தெடுத்துப் பிரித்து, மேற்படி பிட்டை சூடாறுவதற்கு முன்பு உரலிலிட்டு இடித்து, வேண்டியளவு உருட்டி உலர்த்திக் கொள்வதாகும்.

காலஅளவு : மூன்று திங்கள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

## 32. வெண்ணெய்

இது சரக்கை அல்லது சரக்குகளை அளவுப்படி எடுத்து நன்றாய்ப் பொடி செய்து, ஓர் இருப்புக் கரண்டியில் போட்டுச் சரக்கெடைக்கு இரண்டு பங்கு பசுநெய் சேர்த்து, அடுப்பிலிட்டு எரித்து, அந்தச் சரக்குகள் நன்றாய் உருகி நெய்யுடன் கலந்த பொழுது, அதை தண்ணீர் வைத்திருக்கும் வேறொரு மண்சட்டியில் ஊற்றி, மத்திட்டுக் கடைந்தெடுத்து வைத்துக் கொள்வதாம்.

காலஅளவு : மூன்று திங்கள் வன்மையுள்ளது. அதற்கு மேல் பயன் தராது.

### புறமருந்துகள் முப்பத்திரண்டும் அவற்றுள் சிலவற்றின் கால அளவும்

வெளிமருந் தேகட்டு பற்றொற்ற டம்பூச்சு
வேது பொட்டணந் தொக்கணம்
மென்புகைமை பொடிதிமிர் தல்கலிக்க நசியமுதல்
மேவுநா சிகாப ரணமும்
களிம்பு சீலைநீர்வர்த்தி சுட்டிகை சலாகைபசை
களிபொடி முறிச்சல் கீறல்
காரமட் டையறுவை கொம்புறிஞ் சல்குருதி
கண்டு வாங்குதல் பீச்சிவை

வெளிமருத் துவமுப் பத்திரண் டென்றனர்
விண்ணுலவு சித்த ராமால்
மேலவற் றிற்பசை பீச்சுமை நசியமும்
மென்கலிக் கங்க ளோராண்
டொளிவர்த்தி பொடியுநீர் நாசிகா பரணமிவை
யொருமூன்று திங்க ளாகும்
உயர்சீலை களிம்பிவைக ளறுதிங்க ளாகுமென்
றோதினா ராயு ளுமரோ.

## புறமருந்துகள் 32

அவை

| | | | |
|---|---|---|---|
| 1. | அட்டைவிடல் | 17. | தொக்கணம் |
| 2. | அறுவை | 18. | நசியம் |
| 3. | உறிஞ்சல் | 19. | நாசிகாபரணம் |
| 4. | ஊதல் | 20. | நீர் |
| 5. | ஒற்றடம் | 21. | பசை |
| 6. | கட்டுதல் | 22. | பற்று |
| 7. | கலிக்கம் | 23. | பீச்சு |
| 8. | களி | 24. | புகை |
| 9. | களிம்பு | 25. | பூச்சு |
| 10. | காரம் | 26. | பொட்டணம் |
| 11. | கீறல் | 27. | பொடி |
| 12. | குருதிவாங்கல் | 28. | பொடிதிமிர்தல் |
| 13. | கொம்புகட்டல் | 29. | முறிச்சல் |
| 14. | சலாகை | 30. | மை |
| 15. | சீலை | 31. | வர்த்தி |
| 16. | சுட்டிகை | 32. | வேது ✓ |

### 1. அட்டை விடல்

இது நோயுள்ள வீங்கின இடத்தில் குருதியை வாங்கிவிட வேண்டியிருந்தால், அக்காலத்தில் அட்டையை அவ்விடத்தில் பற்றும்படி விடுவர். அதுகடித்து உள்ளிருக்கிற தீய இரத்தத்தை யெல்லாம் குடித்து விழுந்துவிடும். வீக்கமும் வாங்கிவிடும். இதுவே அட்டை விடலென்பதாம்.

### 2. அறுவை

இது அறுத்துச் செம்மைப்படுத்த வேண்டிய இடங்களில் அறுக்கும் கருவிகளைக் கொண்டறுத்து, கெடுதிகளையெல்லாம் நீக்கி விட்டுத் தைத்துவிடல்.

3. உறிஞ்சல்

இது இரணங்களிலுள்ள சீழ், குருதி முதலியன வெளியாகா விட்டால், அவைகளை வெளிபடுத்த கருவிகளை வாயில் வைத்து உறிஞ்சி எடுத்தலாகும்.

4. ஊதல்

சில இலைகள், உப்புச் சரக்குகள் முதலியவற்றில் எதையாவ தொன்றை வாயிலிட்டுமென்று காது முதலியவற்றில் செலுத்த ஊதுவது.

5. ஒற்றடம்

சுண்ணாம்புக்காரை, தவிடு, செங்கற்பொடி, கொள்ளுமா, ஓமம், மணல், சில இலைகள் முதலியவற்றுள் ஏதாவதொன்றை வறுத்து, துணித்துண்டில்முடிந்து நோயுள்ள இடங்களில்ஒற்றுதல்.

6. கட்டுதல்

இலைகளையாவது, பட்டைகளையாவது, சில பறவைகளை யாவது நையஇடித்தோ, அரைத்தோ, வதக்கியோ, புளித்தநீர் முதலியவற்றில் வேகவைத்தோ கட்டுதல். இவைகளல்லாமல் பாடாணம் முதலியவற்றைக் கட்டுதலுமுண்டு.

இவற்றுள் ஏதாவதொன்றை சன்னிக்குத் தலையிலும், கண்ணோய்க்குக் கண்ணிலும், கைகாலெரிவுக்கு உள்ளங்கை உள்ளங்காலிலும், கடுவனுக்கும் கால் வீக்கத்திற்கும் காலிலும், விதை வீக்கத்திற்கு விதையிலும், அரையாப்புக்கு அரையிலும் கட்டுதலாம்.

7. கலிக்கம்

இது சில சரக்குகளை சில சாறுகளால் அரைத்து உருட்டி மாத்திரையாக்கி தேனிலாவது, முலைப்பாலிலாவது, வேறு சாற்றிலாவது உரைத்துக் கண்ணில்போடுவது,

8. களி

இது ஆளிவிதை போன்ற சிலவிதைகளை, அரிசிமாவுடன் கூட்டிப் பசுவின்பால் அல்லது நீர்விட்டரைத்து, கரண்டியிலிட்டுக் கிளறிக் கட்டுவதற்குக் களிபோல் செய்து கொள்வது.

9. களிம்பு

சில பாடாணங்களைத் துவர்ப்புள்ள காய்ச்சுக்கட்டி, கடுக்காய்ப்பூ, மாசிக்காய் போன்ற சரக்குகளுடன் பொடியாக்கிப் பசுவெண்ணெய் சேர்த்து நன்றாய் அரைத்து வைத்துக் கொள்வது.

### 10. காரம்

இது இரணநோய்களுக்குச் சில நஞ்சுள்ள மருந்துகளைக் கூட்டி இரணத்தை ஆற்றுதற்கேனும் ஆக்குதற்கேனும் வைக்கப் படும் மருந்து.

### 11. கீறல்

இது கட்டி, பரு, கொப்புளம் முதலியவற்றில் ஏதாவ தொன்றில் சீயாவது, குருதியாவது, நீராவது.கோர்த்துக் குத்தல் முதலிய துன்பங்கள் நேரிட்டால், எளிதாக மேற்படி சீழ் முதலிய வற்றை வெளிப்படுத்தி அவ்வருத்தத்தை நீக்குவதற்குச் செய்யப் படும் ஒரு தொழில்.

### 12. குருதி வாங்கல்

இது நோயாளியின் உடம்பில் மிக்க இரத்தமிருக்குமானால், அதை குறைப்பதற்குக் கார் இரத்தக்குழாயைக் கீறி, இரத்தத்தை வெளிப்படுத்துதலாம்.

### 13. கொம்பு கட்டல்

இது நோயாளியின் உடலில் எவ்வுறுப்பு உடைந்து போகிறதோ, அவ்வுறுப்பை இணைத்து மீண்டும் ஒட்டிக்கொள் ளும்படி செய்வதற்காக அவ்வுறுப்புகளில் கொம்பு வைத்துக் கட்டுதலாகும்.

### 14. சலாகை

இது ஒரு சிறிய மெல்லிய கருவி, இது சதையாலாவது, கல்லாலாவது வேறு வாயு முதலியவைகளாலாவது, நீர்த் துளையை மூடி, நீரை வரவொட்டாமல் தடுக்குங்கால், அந்நோய் களுக்குக் கையாள்வது.

இது ஒரு வகை முருக்கனிலைக் காம்பைப் போன்று முனை மழுக்கமாயிருக்கும். இதனைக் கொண்டு புரையோடும் புண்களின் ஆழத்தை அறியலாம்.

### 15. சீலை

இது சில நச்சுச்சரக்குகளைத்தண்ணீரிலாவது,சாறுகளிலாவது அரைத்துக் குழம்பாக்கி, அதில் துணித் துண்டைத் தோய்த்து விரணங்களுக்கு உபயோகிப்பது.

## 16. சுட்டிகை

இது சுடுகை என்பதன் வழக்கு. சிட்டிகை எனவுங் கூறுவர் இதுவே சூடுபோடுதலாம். மண், மரம், ஊசி முதலியவற்றைக் கொளுத்திச் சூடேற்றி, நோயுள்ள இடங்களில் இழுப்பது.

## 17. தொக்கணம்

வாத முதலிய முக்குற்றப் பிணிக்கலப்பால் உண்டாகும் உடல் வலியை நீக்க உடலைப் பிடிப்பது. இது வெறுங்கையால் பிடிப்பதும், தைலங்களைத் தடவிப் பிடிப்பதும் என இருவகைப் படும்.

## 18. நசியம்

சில சரக்குகளைச் சாறுகளால் அரைத்து மாத்திரையாக்கி வேண்டும் போது அதை துணியில் முடிந்து, முலைப்பாலிலேனும், வேறெந்தச் சாற்றிலேனும் ஊறவைத்தும், தனிஇலைகளையாவது பூக்களையாவது, கசக்கியும் மூக்கில் பிழிவதும், தைலம் முதலியவைகளை மூக்கில் விடுவதுமாகும்.

## 19. நாசிகாபரணம்

சில சரக்குகளையாவது, வேர்களையாவது தனியாகவேனும் சில சாறுகளிலாவது, பால்களிலாவது ஊற வைத்தேனும் நிழலில் உலர்த்தி இடித்துத் துணியில் வடிகட்டி மூக்கில் போடுவது.

## 20. நீர்

இது விரணங்களைக் கழுவுவதற்காகச் சில சரக்குகளை நீரில் ஊறவைத்தாவது, குடிநீராய்க் காய்ச்சியாவது, சில நச்சுச் சரக்கு களை மிக்க நீரில் அரைத்துக் கலந்தாவது நீர் மயமாய் வைத்துக் கொள்வது.

## 21. பசை

இது குங்கிலியம் முதலியவைகளை மெழுகுடன் சேர்த்து அல்லது சிற்றாமணக்கு நெய்யுடன் சேர்த்து உருக்கி பசையாக வைத்துக் கொள்வது. இதை உருக்கித் துணித் துண்டில் தடவிப் புண்மேல் போடலாம்.

## 22. பற்று

இலை, பட்டை, வேர் இவற்றின் சாற்றையாவது, சில சரக்கு களை அரைத்தாவது, சுடவைத்தாவது, சுடவைக்காமலாவது நோயுள்ள இடங்களில் திண்மையாய் அப்புதல்.

23. பீச்சு

இது கீழ்வாயினின்றும் மலம் வெளிப்படாமல் வருந்துங் காலத்தில், மலத்தை வெளிப்படுத்தக் குழாய் வழியாய்த் தண்ணீரையாவது, வழுவழுப்பான தண்ணீர் போன்ற பொருள் களையாவது பீச்சுதல்.

24. புகை

இது மயிலிறகு, சீரகம் முதலியவற்றைத் துணித் துண்டில் வைத்துத் திரிகொளுத்தியாவது, விலங்குகளின் குளம்புச்சீவல் மாடு, எருமை இவைகளின் கொம்புச்சீவல், நல்லபாம்புச்சட்டை, பன்றிப்புட்டை முதலியவைகளை இடித்து நெருப்பிலிட்டாவது உண்டாக்குவது. இவைகளல்லாமல், அகத்தியர் குழம்பு, கௌசிகர்மை போன்றவைகளைத் துணியில் தடவித் திரியாகத் திரித்து அதைச் சிற்றாமணக்கு நெய்யில் தோய்த்துக் கொளுத்தியும் உண்டாக்குவது.

25. பூச்சு

சிலஇலைச்சாறுகளைக் கொதிக்க வைத்தாகிலும் தைலத்தையாகிலும் நோயுள்ள இடங்களில் பூசுவது.

26. பொட்டணம்

சிலசரக்குகளைஇடித்துச்சிறுமுடிச்சுக்கட்டி,வேப்பெண்ணெய் அல்லது வேறு நெய்யைச் சுடவைத்து, அம்முட்டையை அதில் நனைத்து நோயுள்ள இடங்களில் ஒற்றடம் போடுவதாம்.

ஈதன்றிப் பெண்களுக்குப் பேறுகாலத்தில் பெருங்காயத்தைத் துணித் துண்டில் முடிந்து காதிலும், மூக்கு நோயுள்ளவர்களுக்குச் சில மருந்தின் பொடிகளைத் துணியில் முடிந்து மூக்கிலும், ஆசன நோயுள்ளவர்களுக்கு ஆசனத்திலும், வங்குவாசல் தளர்ச்சிக்குத் துவர்ப்பு பொடிகளைத் துணித்துண்டில் முடிந்து யோனியிலும் வைப்பதற்குப் பொட்டணம் எனப்படும்.

27. பொடி

இது வெங்காரப் பொடி அல்லது சில துவர்ப்புள்ள சரக்குகளின் பொடிகளை இரணத்தின் மீது தூவு பொடியாய்ப் பயன்படுத்துவதாம்.

28. பொடி திமிர்தல்

இது கொள்ளுமா, மஞ்சள்பொடி இவைகளைச் சூட்டோடு சேர்த்தாவது, தனியாகவாவது சில இலைகளை அரைத்தாவது உடம்பில் தேய்த்து உருட்டி உதிர்த்தல்.

### 29. முறிச்சல்

இது கைகால் முதலிய உறுப்புகளில் ஏதாவது பிறழ்ந்து சரியான நிலையில்லாமல் மாறியிருந்தால், அதைச் சரியாகத் தள்ளுவதற்குத் தெரிந்து செய்யும் ஒரு தொழில்.

### 30. மை

சில சரக்குகளை அஞ்சனக்கல் (நீலாஞ்சனம்) முதலியவற்றோடு சேர்த்து, இலைச்சாறுகள் விட்டு உலர உலர அரைத்துலர்த்தி, பிறகு தேன் விட்டு மைபோல் அரைத்துக் கொள்வதும், சில சரக்குகளைக் கருக்கித் தேனிலரைத்துக் கொள்வதும், சில குடிநீர்களில் சில சரக்குகளையும் களாப்பூச் சாறு முதலியவைகளையும் சேர்த்துத் தேன்விட்டுக் காய்ச்சிக் கொள்வதுமாம்.

### 31. வர்த்தி

இதுசில நச்சுச் சரக்குகளைப் பொடிசெய்து சில சாறுகளால் அரைத்துக் குழம்பாக்கி, சீலையை அதில் நனைத்தாவது, சில சரக்குப் பொடிகளைத் துணித் துண்டில் வைத்தாவது திரித்து, ஆராத இரணங்கட்கும் புரையோடும் இரணங்கட்கும் வைப்பது.

### 32. வேது

சில சரக்குகளைத்தூளாக இடித்து, துணித்துண்டில் வைத்துத் திரித்து, ஒரு மண் அகலில் வேப்ப நெய்விட்டு அந்தத் திரியை அதிலிட்டுக் கொளுத்தி முக்காடிட்டு அப்புகையை உள்ளே வாங்கி வேர்வை உண்டாக்கிக் கொள்வதும், வெந்நீரிலாவது, நொச்சித் தழை, மஞ்சள் பொடி முதலியவற்றை இட்டுக் காய்ச்சிய குடிநீரிலாவது செங்கல்லைச் சிவக்கக்காய்ச்சி அதிலிட்டு, அதனின் றெழும் ஆவியைப் பிடிப்பது.

மேற்கண்ட புறமருந்துகளில் நாசிகாபரணம், நீர், வர்த்தி, பொடி இவைகள் மூன்று திங்கள் வன்மையுள்ளன.

களிம்பு, சீலை இவைகள் ஆறு திங்கள் வன்மையுள்ளன.

மை, கலிக்கம், நசியம், பசை, பீச்சு இவைகள் ஓராண்டு வன்மையுள்ளன.

## சித்த மருந்து செய்முறை விதிகள் சில

தமிழ் மருத்துவ முறைப்படி மருந்து செய்முறைகளுக்குப் பல விதிமுறைகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. இவை பெரும்பாலும்

ஒவ்வொரு செய்முறையின் போதும் கூறப்படுவதில்லை. மருத்துவர்கள் தாமாகவே இவற்றை அறிந்திருந்த நிலையில், இம்முறைகளைப் பின்பற்றி வந்துள்ளனர். தேரையர் தைலவர்க்கம், பதார்த்த குண சிந்தாமணி, யூகிவாத காவியம் போன்ற நூல்களில் இதுபோன்ற செய்முறை விதிகளும் பலவாறு சுட்டப்பெறுகின்றன. இம்முறைகளைக் கைக்கொண்டு மருந்துகளைச் செய்யுமிடத்து அவை நல்ல பலனைத்தரும் என்பதும் தெளிவாகும். இவற்றை மருந்துறையுள் என்ற தலைப்பில் சித்த மருத்துவாங்கச் சுருக்கம் விளக்கக் காணலாம்.[1]

பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற இருபத்தொன்பது சுவடிகளில் இத்தகைய விதிகள்ஏதும் விளக்கப்படவில்லை. மருந்து செய்முறை என்னும் போது, இவ்விதிகளும் உடன் அறிதல் தேவை என்ற நோக்கில் அவற்றைப் பின் வருமாறு அறியலாம்.

இவற்றுள், மருந்தியற்றுவான் திறம், மருத்துவச் சாலைவிதி மட்கலத்தின் இலக்கணம், சட்டிகளின் இலக்கணம், பாத்திரம் பழக்கும் விதி, புரியணைவகை, குந்தணை இலக்கணம், உரல் வகை, உலக்கைவகை, அம்மிவகை, குழவிவகை, அகப்பை, சில்லியடை, விசிறி போன்ற கருவிகள், வடிகருவிகள், கல்வம், கல்வச் சுரண்டி, சீலை, விறகு வகைகள், எரு, தீ, புடம் போன்ற செய்திகள் அடங்கும். அவை வருமாறு:

## மருந்தியற்றுவான் திறம்

பிணியுற்றார்களிடத்திலிருந்து மருந்து பக்குவஞ் செய்கின்றவர்கள் அவர்களுக்கு, உரிமையுள்ளவர்களும், மிகுந்த நன்மை புரியும் நண்பர்களும், மருத்துவர் மனத்தை ஒத்தவர்களுமாய் இருத்தல் வேண்டும். அத்தகையர் வாய்க்காத போது மற்றப் பணியாளர்களுள், உடல் வன்மையும், பிணியாளர்களுடைய ஆயுள் பெருக்கத்தை விரும்புதலும், புத்தி நுட்பமும் மெய்ம்மையும், உள்ளும் புறமும் தூய்மை என்னும் நற்குணமும் ஆகிய இவற்றை உள்ளவர்களைத் தேர்ந்தெடுத்து மருந்தியற்ற அமைத்துக் கொள்ள வேண்டும் என்பர்.

சுருங்கக் கூறின் (1) நோயினன் மாட்டன்புடைமை, (2) மனம் மொழி மெய்கள் தூயவாதல் (3) மருத்துவன் சொற்படி செய்தலில் வன்மை (4) அறிவுடைமை ஆகிய இந்நான்குமே மருந்தியற்றுவானது சிறந்த குணங்களாகும்.

1. சித்த மருத்துவாங்கச் சுருக்கம் பக், 509-538,

பிணியர்க் குரியர் பிடக்குளத்தை யொப்பர்
அணியிற் சிறந்தநட்ப ராம்பற்-பணியர்க்குட்
டுப்புறை யுண்மைமிகு தூய்மையிவை யார்ந்தாரை
யொப்புறையை யாடற் குவந்து. (தே வை.வ)

என்பது பாடல்.

## மருத்துவச் சாலை விதி

பூமி : மருத்துவச் சாலைக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பூமியின் வடக்கு முகமாக நின்று கொண்டு, ஒரு சதுரப்பூமியின் நடுவில் ஒரு முழ ஆழமும், சதுரத்திற்குச் சதுரம் ஒரு முழ அகல நீளமுள்ள ஒரு குழியை வெட்டி, வெட்டிய மண்ணை அந்தக் குழியில் நிரப்ப அது அதிகமானாலும், அந்நிலமே தெற்கும் மேற்கும் உயர்ந்திருந்தாலும், அந்த மண்ணை நாவிலிட இனித்தாலும், அந்நிலத்தைத் தென் பாரிசத்திலிருந்து கொத்திச் சோதிக்குமிடத்தில் நற்சகுனங்களாகிய பொன், தானியம், இரத்தினம், செங்கல், தவளை, பசு மாட்டுக் கொம்பு, அரணை, நண்டு, நன்னீர் ஊற்று ஆகிய இவ்வொன்பது வகைகளுள் ஏதேனும் ஒன்று தோன்றினாலும் அது நல்ல பூமியாகும்.

அறை : அவ்விடத்தில் சிற்பநூல் விதிப்படி இல்லம் அமைத்து அதில் வாயு திக்கில் மருத்துவத்திற்கு முதல் கருத்தாவாகிய வைத்திய நாதர்க்கிடமும், கரும சாந்திச் சாலையும், வேள்விச் சாலையும் அமைத்தல் வேண்டும்.

அடுத்து, 1. இந்திரத்திக்கில் -நீராடுதற்கும், உப்புவைப்பதற்கும், 2. இயமதிக்கில்- உண்பதற்கும் 3. நிருதி திக்கில்-பல பல சாத்திரம் வைப்பதற்கும், பிரசவத்திற்கும். 4. வருணதிக்கில்-உறங்குவதற்கும், ஆசான் வசிப்பதற்கும், 5. குபேரதிக்கில்-மருத்துவன் இருப்பதற்கும், சிகிச்சை செய்வதற்கும், பசுத்தொழுவங் கட்டுவதற்கும் 6. ஈசான திக்கில் தவஞ்செய்வதற்கும்,நவதானியங்கள் வைப்பதற்கும் வீடுகளமைத்து 7 அக்கினி திக்கில் தெளிவு நீர்க்கேணியும், அலமாரியும் கட்டி, பலகணி வாசல்களும், கண்ணாடி பதித்த புகைக்கூண்டும் அமைத்து மருத்துவச் சாலையை கட்டுதல் வேண்டும்.

சாலைகள் : சுத்தி செய்கிற சாலை, உலைச்சாலை, புடச்சாலை, மூவிதமாகிய பூப்புடச்சாலை, நெற்புடச்சாலை, உமிப்புடச்சாலை, சீலைப்புடச்சாலை, கரிப்புடச்சாலை, மயனப்புடச்சாலை, தீபப்புடச்சாலை, சூரியப்புடச்சாலை, சந்திரப்புடச்

சாலை, காற்றுலவுஞ்சாலை, காற்றுலவாச்சாலை, கூடச்சாலை, நறுக்கல், பிளத்தல்முதலிய தொழிற்குரிய ஆயுதச்சாலை, நிறுக்கிற துலைச்சாலை, உரற்சாலை, எந்திரச்சாலை, நன்னிக்கல் அம்மிச் சாலை, முறம் முதலிய வற்றல்கொழிக்கிற சாலை, வடிக்கட்டுகிற சாலை, என்னும் இவையும், மாத்திரை, வடகம், சுண்ணம், பற்பம் செந்தூரம், குடிநீர், திராவகம், தீநீர், படங்கு, ரசாயனம் லேகியம் இவைகளை விளைவிக்கின்ற அடுப்புச்சாலைகளும் அமைத்தல்வேண்டும் என்பர்.

மருத்துவச் சாலையினுடைய அக்கினி திக்கில் அமைத்த பாகசாலைக்குள் கிழக்கு முகமாக சிறிய சுவரொன்று எழுப்பி' அந்தச் சுவர்க்குக் கீழ்புறத்தில் தீமூட்டுவதற்கு வழியும், மேற்புறத்தில் பாண்டம் வைப்பதற்கு வட்டவடிவமான வாயையுடைய அடுப்பும், அதற்குத் தென்புறத்தில் புகை போக்குதற்கு ஒரு குழாயும், அதன் மேற்புறத்தில் பண்டிதன் உட்காருவதற்கு அலங்காரத் திண்ணையும், அதற்கு வலப்புறத்தில் தண்ணீர் நிரப்பி வைப்பதற்கு ஒது சதுக்கமும், புரியணை மேல் தைலம் வடிப்பதற்குப் பாத்திரத்தை வைக்கின்ற வடிச்சதுக்கமும், விநாயக பீடம், நந்திபீடம் இவற்றையும் அமைத்தல் வேண்டும் என்பர்.

இச்செய்திகளை கீழ்க்காணும் தேரையர் தைலவர்க்க நூல் பாடல் தெரிவிக்கின்றது.

குழிபடுமண் டெற்குமேற் குயர்வினிப்புத் தென்பாற்
கூழ்முதலொன் பானலமிக் குறியெழுநன் னிலத்தில்
வழிபடுவதை வதங்குருபண் டிதன்சிகிச்சை களுக்கா
மானமொடீ ரைம்பொருத்தம் வைத்துயர்வாத
தெழுங்காற்

செழிபடுநன் மரங்கருஞ்சாந் திட்டிகைசுண் ணத்தாற்
சிற்பமுண ரக்குயிற்றத் திருவளர்மந் திரத்திற்
பழிபடுமுற் கருமசாந் திச்சாலை வேள்வி
பணிவைத்திய நாதர்பவ னம்பவனப் பாலே.

பாற்கரியோன் றிகைநீருப் பியமனுணர் சுனகன்
பலகலையீன் றற்றுயிலா சான்குடக்கு வடக்கி
னூற்கரிகொள் பிடக்குறைபற் சிகிச்சைநிரை யரன்பா
னோற்றனவ தானியங்கட் கேற்றநிவே சனஞ்செய்

மாற்கரியோ னுதல்விழிப்பாற் கீட்டிகையிற் றெளிநீர்
மரப்பேழைப் பித்திகைப்பல் கணிமுகுரக் ககனம்
மேற்கரிய நிறத்தூமம் போக்கிமுத லமைய
மேலையியல் கொடுபலவாஞ் சாலைகளும் புரியே.

புரிபுனித வுலைபுடமுப் பூப்புடநெல் லுமிவெண்
புடைவையிருந் தைமயனப் புடமுதற் சாலைகளு
மெரிசுடரோ டிருசுடர்கா லுறையுறைவிற் கூட
மெற்றறட்டற் போழல்வினைக் கெஃநிறை கோல்கள்
வரிகறையெந் திரவலரை சிலைகுமிழ்ப்பு வடித்தல்
மணிவடகஞ் சுதைபொடிசிந் தூரவைப்பு குடிநீர்
விரிதிரவ நீர்படங்கு சாயனலே காதி
விளைச்சுலிச்சா லைகள்பலுறைச் சாலைகளும் விதியே.

விதித்தவடுப் பினிலனந்த பேதமவற் றுள்ளோர்
விகற்பமறை குதுந்தைல கிருதவகைக் கெல்லாந்
திதித்த விலிற் றென்கிழக்கிற் குறுஞ்சுவரோன் றியற்றித்
தீக்கப்பா னெறியிப்பால் வட்டணைவாய் மணவை
கதித்தவெடி யெழிற்குருசு நீணாள முழுதுங்
கற்றானுக் கலங்காரக் குறடுதகத் திண்ணை
பதித்தகீழ்க் கடம் பொருந்தும் வடிச்சதுக்கஞ் சுருதி
பரவுவிநா யகபீட முதலுறையப் பண்ணே.

என்பது பாடல். (தே. தை. வ)

## மட்கலத்தின் இலக்கணம்

உப்பும், சவரும் இல்லாத நன்னீரையுடைய இடத்தில் வசிக்கும் குயவன் பாண்டங்கள் செய்யும் போது, அவன் கையிலுள்ள மண்ணையுருவி எடுத்துச் சேர்த்து, அதில் நானகில் ஒரு பங்கு மணலைக் கலந்தரைத்து, துவர் ஏற்றிப் புளிக்க வைத்து 15 நாட்கள் மிதித்து, அந்த மண்ணில் அடிகனமுள்ளதாய் தேவை யான மட்பாண்டங்களை செய்யச் சொல்லி சுட்டு எடுத்துக் கொள்ளவேண்டும்.

குடிநீர், தீநீர் பானைகட்கு அகட்டினது குறுக்களவின் அங்குலம் 24 ஆகவும், உயரம் 27 அங்குலமும், வாயின் அகலம் 8 அங்குலமாகவும் இருக்குமாறுச் செய்தல் வேண்டும்.

நெய், எண்ணெய், மெழுகுத்தைலம், திராவகம் முதலிய மருந்துகளைச் செய்யும் பாத்திரத்தின் வாய்குறுகலாக இருக்க

வேண்டும். அன்றியும், சிந்தாமல் எடுத்து ஊற்றுகின்ற பொருள்களைத் தாங்குகிற பாத்திரங்களுக்கெல்லாம் அவைகளின் வயிற்றைப் பார்க்கிலும் வாயை விரிவாய்ச் செய்வது விதியாகும்.

உவர்சவரு மற்றநீர் நிலக்குடிச்சக் கிரிகை
யுருவிவழித் திடுமணில்வா லுகமளவி யிழைத்துத்
துவர் மருவப் புளிப்பேற்றி யொருபக்கந் துவைத்துத்
தூருகனத் தோடேயெத் தொழிற்கும்பா சனஞ்செய்
அவிரஙலேற் றிடுகுடிநீர் தைலமா திகட்கென்
றமைப்பதில்வெண் பருமணலை யடிக்கடியிற் பொதிந்தே
சுவரடருஞ் சுள்ளைநடுக் கண்ணுறச்சுட் டெடுத்துச்
சொற்படிக்குண் மேலளவைக் குறியிலக்க மெழுதே.

எழுதிடநேர் விரலறுநான் கிருபதிற்றே ழாயி
னியற்றுவா யெட்டிலக்கா யெந்தவெந்நீர்க் கடமும்
முழுதுமண நெய்மயனம் படங்குபூப் புடங்குய்
முகர்குடுவைப் பறியுறிபான் மோரெண்ணெ யுதகந்
தொழுதுபெறு தைவதைமங் களமிசையா திகளாய்ச்
சொல்லும் வகைக் கடங்களின்வாய் சுருங்கலிலக்
கணங்காண்
பழுதுறா தெடுத்தூற்றத் தாங்குகல மெல்லாம்
பண்டியினும் வாயகலப் பண்ணுவது முறையே.

என்பது பாடல். (தே. தை. வ)

## சட்டிகளின் இலக்கணம்

கலத்தைப் போலச் சுற்றிலும் வரம்புள்ளதாயிருக்கில், அது வறுக்கின்ற பொருளுக்குதவுஞ் சட்டியாம். மல்லையைப் போல் (கப்பரை) ஆழமுள்ளதாயிருந்தால், அது அருந்துகின்ற சிறு குடிநீர், சுரசம் முதலியவைகளுக்கு உதவும் சட்டியாம்.

முடிநீர், தைலம், நெய் முதலியவைகளைக் காய்ச்ச மட்கலங்களே சிறந்ததாகும். வளி, அழல், ஐய வேறுபாடுகளினாற் ஏற்படும் முக்குற்ற நோய்களுக்குத் தங்கம், செம்பு, வெண்கலம் போன்ற பாத்திரங்களில் காய்ச்சலாமென்று கூறுவர். அவ்வ மூவகை உடலினர்க்கும் மருந்தூட்டுங் கலங்களேயல்லாமல், காய்ச்சு வகைக்கு ஆகாது. ஆகையால் மண்கலமே சாலச் சிறந்ததாகும்.

கல்லையொத்தவ் வெல்லைமுற்றுங் காவ றனைப்பூணின்
மல்லையொத்துக் கம்பீரம் வாய்ந்திருக்கி-னொல்லை
வறலுச்காஞ் சட்டியது மாந்துங் குவாத
வறலுக்காஞ் சட்டி யறி.

எக்குவா தந்தைலங் கிருத மாதி
யெரிக்குங்கா னவலோகங் கடங்க ளொவ்வா
வொக்குமெனிற் பகைக் கஞ்சா வன்மை வேண்டு
முலோகமஃ தின்றென்னி லதைப்புக் காகு
மிக்குறைகா ரனக்கனந்த மாமா றற்கே
மிலேச்சமைக்காங் கலங்களெனப் புலம்பு வார்க
ளக்குயில்முப் பிணிக்கருத்துங் கலங்க ளேயா
மறைந்தவைகட் கெவ்விதத்துந் திறந்தான் மண்ணே.

என்பது பாடல். (தே. தை. வ)

ஒரு தைல பாத்திரம் மற்றொரு தைலத்திற்காகாது. ஒரு தைலங் காய்ச்சிய பாத்திரத்தில் மற்றொரு தைலத்தைக் காய்ச்சினால் தைலத்தினது நற்குணங்கள் கெடுவதோடு மட்டுமல்லாமல் நோயாளியின் உடலும், மருத்துவன் புகழும், மருத்துவ நூலின் உண்மையும் கெட்டு விடும் என்பர்.

ஒருதைலப் பாண்டத் தொருதைலங் காய்ச்சி
னொருதைலப் பண்புகெட லொன்றோ-கருது
மளவிலுற்றான் மெய்யுந்தீர்ப் பான்புகழுஞ் சான்றோர்
கிளவியுநூன் மெய்யுங் கெடும். (தே. தை. வ)

## பாத்திரம் பழக்கும் விதி

எந்த வகைத் தைலங்களுச்கும் பழகிய பாத்திரமிராது. ஆகையால் எந்தவித தைலம் காய்ச்சுகிறோமோ அந்த நெய்யில் நனைத்து அதில் தண்ணீர் விட்டு விட்டுக் காய்ச்சி ஊற்றிவிட்டு கருமையான நிறம் அடியில் பிடிக்கா வண்ணம் அதை அப்போதைக்கப்போது கழுவி அது கையிலொட்டாமல் அப்பாத்திரத்தை மாத்திரம் கறுக்கச் செய்யும் நேரத்தை அறிந்து எடுத்துக் கழுவி காயவைத்து அதில் விடுகின்ற நெய் வகைகளைக் குடிக்க வொட்டாமல் பழகிக் கொள்ள வேண்டும்.

பழக்கிக் கொண்ட பாத்திரத்தின் மேல் கழுத்திலிருந்து அடிவரைக்கும் இரும்புத் தந்தியை (பூரணகும்பத்திற்கு நூல் சுற்றுவது போலச் சுற்றி) இறுக்கிச் சுற்றி, அதின்மேல் புற்று மண்ணும்,

சாணமும் அரைத்துப் பூசி, நிழலிற் காயவைத்துப் புனிதப்படுத்தி, குடிநீர்ப் பாத்திரத்திற்குச் சொல்லிய விதியை முடித்து, இதில் நெய்களை விட்டுக் காய்ச்சக் குற்றம் வராது என்பர்.

எவ்வகைநெய்க் குங்கடமே தேற்கும் புதுக்கடத்தை
யவ்வகை நெய் யானனைத்தம் பட்டியம்மை-கவ்விப்
பிடிக்கவொட்டா மற்கழுவிப் பின்புணக்கி நெய்யைக்
குடிக்கவொட்டா மற்பழக்கிக் கொள்.

கொள்ளுகட மீதடியிற் கூர்தந் திரிகை சுற்றித்
தெள்ளுமண்ணுங் கோவிட்டுஞ் சேர்த்தப்பி-யுள்ளுறவே
காயவிட்டுத் தீநீர்க் கடவிதிசெய் தீதினெய்யை
யேயவிட்டுக் காய்ச்சுவடு வில்.

என்பது பாடல். (தே. தை. வ)

## புரியணை வகை

தூய்மையான ஆண் தருப்பை,பச்சைக்கொடி, தேங்காய் நார், வாழைநார், பிரப்பங்கோரை, தாழை விழுது, ஆலம் விழுது முதலியவைகளால் வட்டமாகச் செய்து அடித்தூரைச் சுமக்கவும். இதைப் பூமியிற்படாமல் செய்யவுமான புரியணையைச் செய்வார்கள்.

''தூத்திரக் கூர்ச்சம்பை யோடதி மூவட்சித் தொக்கரம்பை
வேத்திரச் சாய்கண்டற் பூதக் குயங்கள்வை வேய்பிரம்பாம்
பூத்திர ளாதிக ளாலாழி போற்பொருந் தப்பொருந்தாப்
பாத்திரத் தூரு சுமக்கும் புரியணை பண்ணுவரே.
(தே. தை. வை)

## குந்தணை இலக்கணம்

உயரமுள்ள அடுப்பில் தைலநெய்கள் காய்ச்சும் போது, பாகம் வந்ததும், வாராததுமாய் இருக்கிற தருணத்தில் அப்பாத்திரத்தில் பழுது நேருமாயின், அதைக் குந்தணையிற் சேர்த்துப் பக்குவம் வருமளவுங் காத்துத் துழாவிப் பதத்தில் சேகரிப்பார்கள்.

தைல பாத்திரம் வயிறு மட்டுங் கொள்ளும் அகலமும் உயரமும் இணக்கமும் உள்ளதாய், அடியில் கரிநெருப்பின் புகையானது வெளிப்படும்படியான துவாரங்களைப் பொருந்தி, உள்ளில் ஆகாயம் நிறைந்த வட்டவடிவான பாதமுள்ள ஒரு அண்டாவைப் போல இரும்பினாற் செய்வது குந்தணையாம்.

பணையடுப்பிற் றயிலாதி பருவமுற்
றுறாமுனடிப் பழுது றிற்குந்
தணையிருத்திப் பதத்தெடுப்ப ரக்கருவி
யெக்கலமீ தகடு மட்டு
மிணையநீக் கறத்தகடுங் கொளக்கீழ்த்தீ
மிச்சிலெரிக் கிடப்பத் தப்பாற்
கணைமருவச் சாளரவா யிலுமமையக்
கரும்பொன்னாற் கலஞ்செய் யீதே. (தே. தை. வ)

## உரல்வகையும் உலக்கைவகையும்

கருங்கல், இரும்பு, வெண்கலம் இவற்றால் தனித்தனியே உரல்களும், ஒருமுனை பலாமுட்களைப் போலப் பற்களையுடைய தாகவும், ஒரு முனை சமமாகவுமுள்ள இருப்புலக்கையும், இடித்த சரக்குகளைக்கிளற, வழிக்க ஒரு முனை கொழுவைப் போலும், ஒரு முனை அகப்பையைப் போலும் அமைத்த சிறிய கடப்பாரையும், வயிரம் பொருந்திய மரத்தினால் உலக்கையும் செய்யப்படுதல் வேண்டும் என்பர்.

கல்லிருப் பொண் கஞ்சங் கறையா முனையிரண்டிற்
பல்லிருப் பொன் றொன்றுசமன் பாரைகளாங் - கல்ல
வழிக்கக் கொழுமுழி வைகைக் கடைப்பாரை
செழிக்கவமை சேகுமாஞ் செய். (தே. தை. வ.)

என்பது பாடல்.

## சில்லியடை இலக்கணம்

தேக்குமரம், வெள்ளி, பித்தளை என்னும் இவற்றுள் ஏதேனும் ஒன்றால், தம்பட்ட உருவமாகவும், மூடுங்கால் இரண்டினது ஆகாயமும் ஒன்று படுவதாகவும் (உள்ளிலும் வெளியிலும் பிதுக்கமின்றி அழகுறப் பொருந்துவதாகவும்) கீழ்மேல் என்கிற அடையாளந் தோன்றுவதாகவுமுள்ள இரண்டு கருவிகள் அமைத்து (இவற்றுள் கீழ்க் கருவியின் உட்புற வரம்பில் $\frac{1}{8}$ அங்குல ஆழமும், $\frac{1}{2}$ அங்குல அகலமுமாய்ச் சுற்றிலும்) தடுத்து (மட்டசுத்தஞ் செய்து தடுத்த பள்ளத்தின் உயர்வும், உள்வெளியில் பிதுக்கமும், வெளியில் தூக்குவதற்காக அதன் இரண்டு பக்கங்களிலும் இரண்டு மோதிர வளையமும் அமைத்துள்ள வெள்ளியிலாவது பொன்னாலாவது செய்த) ஒரு வளையம் பதித்து, அதன் உட்புற வரம்பைச் சுற்றிலும் அணுப் போன்ற சிறுசிறு துவாரங்களிட்டு, அத்துவாரங்கள் தோறும் நார்பட்டு நூலால் முறுக்கிய

இழைகளையாவது, பொன், வெள்ளி இவைகளின் கம்பிகளை யாவது நுழைத்து, நெருங்கப் பின்னி, முன் கூறிய மேற்கருவியைக் கவிழ்த்து மூடி, அது திறக்கவும் மூடவுமாய்க் கீல்களமைத்துச் செய்தல் வேண்டும். இதுவே சில்லியடை என்கிற சல்லடையாம்.

சாதிவங்க மிரதிகளாற் படகமிரண்
டகமிணையுந் தகைமைத் தாய்க்கீழ்
பாதியிலுட் புறவரம்பிற் றடுத்தாழி
வலையமொன்று பதித்துட் பாங்கர்
மீதிலணுத் தமர்களமைத் தவையுழிநார்
தந்துதந்தி மிடையப் பின்னி
யோதியமுன் னோமூடத் திறக்கவிழை
சில்லியடை யுருவ மீதே.

என்பது பாடல். (தே. தை. வ.)

## அம்மிவகை, குழவிவகை

நீர்ப் பெருக்குள்ள பொருள்களையும், நீரையே விட்டு அஃது அலையும்படி ஆட்டுகின்ற மருந்துகளையும் பொடியாகவாவது, கற்க வடிவமாகவாவது செய்யப்படும் பொருள்களையும், கல்வம் என்று சொல்லப்படுகிற குழியம்மியில் அரைக்க வேண்டும். கொடுக்கும் பொருள்களை உள்ளிழுக்கும் படியான ஆட்டு அம்மி யானது, பிசின் போன்ற பசையுள்ள பொருள்களை மசியப் பண்ணும். ஒருதலைக் குழவியம்மி, உயர்ந்த மருந்து வகைகளை இழைப்பதற்காகும். இருபக்கம் தலையுள்ள குழவி அம்மி எல்லா வகையான கற்கவகைக்கும் உதவும். எனவே மருந்துகள் செய்ய குழியம்மி, ஆட்டு அம்மி, ஒருதலைக் குழவியம்மி, இருதலைக் குழவியம்மி இவை தேவையாகின்றன.

பொருதலைப் புனன்ம ருந்தும்
பொடியரை குழியம் மிக்குட்
டருதலைப் பருகாட் டம்மி
தனிப்பசை யுறைம சிக்கு
மொருதலைக் குழவி யம்மி
யுயர்மருந் திழைத்தற் கொவ்வு
மிருதலைக் குழவி யம்மி
யெக்கற்க வகைக்கு மேற்கும்.

என்பது பாடல். (தே. தை. வ.)

## மூழி (அகப்பை) இலக்கணமும் வகையும்

தைலம் முதலியவைகளைச் செய்கின்ற வாயகன்ற பற்பல தாழிகட்கும், உயரமுள்ள பானைகட்கும் அகப்பைகள் அமைத்தல் வேண்டும். தாழிகளின் உயர்வுக்குச் சரியாய் ஒரு கோலையளந் தெடுத்து, அவ்வளவுகோலை நான்கு பங்காகப் பகுக்கவும். (பாத்திரத்தில் தைல முதலியவை காயும்போது புகை கம்முவதினால், இவ்வளவு இருக்கிறதென்று கண்களால் பார்த்தறிவதற்குக் கூடாமையின், மூழியினால் அளவை யறிய வேண்டுவதற்காக அதன் காம்பை நான்கு பகுப்பாகப் பகுத்தல் வேண்டும்). துழாவும் போது கையில் சுடுகை ஏறாமலிருப்பதற்கு அந்த நான்கு பகுப்பின் மேல் இரண்டு பங்கை அக்கோலின் அளவுடன் சேர்த்து, அந்த அளவின்படி நீளமும் சிறிது முன் வளைவுமுள்ளதாகிய காம்பைப் பாண்டங்களின் வாய்க்குப் பொருந்தியவாறே செய்த தெங்கினது ஓடுகளிலும், இருப்புக் கிண்ணங்களிலும், நுழைத்துக் கொள்ளல் வேண்டும். பானைகளுக்கெனில் அவ்விதமே நான்கு பங்காக்கி, அந்தக் கோலின்மேல் இன்னும் $1\frac{1}{2}$ பங்கு கூட்டி அந்த அளவின் படிக்குத் தாளிட்டுக் கொள்ளவும். வில்லை ஒத்த முனை வளைவையுடைய சில அகப்பைகளின் வாயை, கூர்மை யாக்கிக் கொள்ள வேண்டும்.

### அகப்பை வகைகள் :

1. தகட்டகப்பை : தட்டை வடிவமாகிய மண்மடக்குப் போல வட்டமாகவும், பரந்த பள்ளத்தையுடையதாகவும் இருப்பது.
2. சில்லியகப்பை : அந்த உருவம் போன்று சல்லடைக் கண்களைப்போற் சிறுசிறு துளைகளையுடையது.
3. துளைக் கிட்டியகப்பை : துளைகள் நிறைந்துள்ள இரண்டு இருப்புக்கிண்ணங்களைத் தடையிற் பதித்த கொல்லன் கைக் குறடு போல விரிக்கவும் குவிக்கவுமாய் இருப்பது.
4. குவையகப்பை : கூன் போல் குழியையுடையது.
5. முட்டையகப்பை : கோழிமுட்டைப் பதியும் பள்ளமுள்ளது.
6. திரியக்கு அகப்பை : குறுக்காக நீண்டிருப்பது.
7. கச்சகப்பை : மரக்காலென்னும் அளவுக் கருவிபோல, வடிவமும் நீண்ட தாளுமுள்ளது.

இவையல்லாமல் துடுப்பு, மத்து, சலாக்கு போன்றவையும் தேவை. இவற்றுள் இருப்பகப்பையைப் பரிமளத்தைலம், இனிப்

புள்ள மருந்து, நெய்கள், பால், தயிர், பழம் இவைகளில் செய்கின்ற குடிநீர், பூக்கள் சேர்ந்த இரசாயனம், பாகு முதலியவைகளுக்கும், இரசம், பாடாணம், தாவர நஞ்சு ஆகியவற்றைக் கூட்டியரைத்த கற்கஞ்சேர்ந்த தைலம் முதலியவற்றிற்கும் பயன்படுத்தல் கூடாதென்பர்.

பல்லாய தாழிகட்கவ் வுயர்வைநாற் பகுப்பாப்
பகுத்ததன்மே லிருபகுப்புப் பானைகளுக் கிந்தச்
சொல்லாய பகுப்பின்மிசை மூவரையாம் பகுப்புந்
தோன்றுமள வாய்த்தாளைத் துந்திவைத்துத் துறுத்துப்
புல்லாய மரக்கனியோ டிருப்பினுமைழக் கேற்பப்
புகறயிலா திகட்கெல்லாம் புரிமூழி யிவற்றுள்
வில்லாய வாய்வாய்ச்சி வாயஞ்சு வமைப்பாய்
விண்டவற்று ளுளதுசில விகற்பமினி யுரைப்பாம்.
(தே. தை. வ.)

உரைத்தவெலனை மடக்குவட்டத் தகட்டகப்பை யந்த
வுருவமொத்துச் சில்லியடை மூழிகீழ் மேலும்
நிரைத்ததுளைக் கிட்டிகுவை முட்டைதிரி யக்கு
நீடுகச்சங் கசிதமத்த நேரலகா திகளாம்
விரைத்தைல முனிப்புறநெய் பாறயிர்காய் குடிநீர்
வீயிரசா யனம்பாகிவ் விதங்களுக்கு மிரத
மரைத்தபா டாணகற்க மரவிடஞ்சேர் தைல
மாதிகட்கு மிருப்பகப்பை யிருப்பையகற் றுவரே.

என்பது பாடல். (தே. தை. வ.)

## மருந்துகள் செய்யும் போது அடுப்பின் பக்கங்களிலிருக்க வேண்டிய கருவிகள்.

தைலம், மருந்து, நெய்கள் ஆகியவை காய்ச்சும் போது அடுப்பின் பக்கங்களில் முக்கியமாய் இருக்க வேண்டிய கருவிகள்.

1. கொதிப்படக்குவதற்கு விசிறி,

2. தைலத்தில் தீப்பிடித்தால் அணைப்பதற்கு அந்தத்தாழி வாய்க்குச் சரியான ஒரு சட்டி,

3. அகப்பைக்குள் பற்றிக் கொள்கிற சுடுகையுள்ள கற்கம் வழிப்பதற்கு இரு புறமுங் கூர்மையுள்ள சிறிய கத்தி,

4. பதிவிளக்கு,

5. அடியிற் சுடுகையுள்ள குந்தணை,

6. துழாவுகின்ற அகப்பை வைத்தற்கு ஒரு சட்டி,

7. அடுப்பிலிருக்கிற பாண்டத்திற்கு அபாயம் நேரிடுங்கால் மாற்றுவதற்கு மற்றொரு பாண்டம்,

8. விளக்குமாறு முதலியனவாம்.

கொதியடக்கச் சிவிறிநெய்த்தீ யணைத்தலுக்கவ்
வாய்ச்சட்டி கோர கைக்குட்
பதிசுடுகற் கம் வழித்தற் கிருவாய்க்கைச்
சுரிகைசுடர் பாதத் துட்டீ
யுதிகரித்த குந்தணைமு ழிக்கடத்தோ
டிணைப்பாண்ட மமைத்த லன்றிப்
பதிமினுக்கி யாதிதுணைக் கருவிகளு
மமைமணவைப் பாங்கிற் றானே. (தே.தை.வ)

## வடி கருவிகள்

குடிநீர் வகைகளையும், கொதிக்கும் தைல முதலிய வகைகளையும், இன்னும் வடிக்க வேண்டிய நீர் வடிவமான பொருள்களையும், கண்களையுடைய புதிய துணி, சம்பளம், கோணி, பறவைகளின்கூடு, பன்னாடை ஆகிய இவைகளைக் கொண்டு வடித்துக் கொள்ள வேண்டும் என்பார்.

கண்ணிருக்கும் புத்தாடை கம்பளநார்ச் சீலைகட்சி
விண்ணிருக்கு நெய்யரியு மேயாகும்-வண்ணக்
குடிநீர் வகையுங் கொதிநெய் வகையும்
வடிநீர் வகையும் வடி. (தே.தை.வ.)

## கல்வங்களின் குணம்

மருந்தரைக்கும் கருவிக்குக் கல்வம் என்று பெயர். இதில் கருங்கல்லினால் செய்யப்பட்ட கல்வங்களில் அரைக்கப்படும் மருந்துகள் உடற்கு இன்பத்தைத்தரும். சிவப்புக்கல் கல்வத்திலரைக்கப்படும் மருந்து தோடங்களை நீக்கும். வெள்ளைக்கல் கல்வத்திலரைக்கப்படும் மருந்துகளுக்கு வீரமும், காரமும் இல்லையாம். நோய்கள் விலகுவதற்கு மஞ்சட்கல் கல்வம் நன்மை தரும்.

கருமை நிறக்கல்லினாலும், செம்மை நிறக்கல்லினாலும் செய்யப்பட்ட கல்வங்கள் முதன்மையானது என்றும், வெள்ளை நிறக்கல் கல்வம் அவ்வளவு சிறப்புடையதாகாது என்றும் கூறுவர்.

கருங்கற்கல் வத்தவுடதங் காணினுடற் கின்பம்
நெருங்கிரத்தக் கல்தோடம் நீக்கும்-ஒருங்குவெள்ளைக்
கன்மருந்தோ வீரமொடு காரமுமில் மஞ்சளம்மி
யின்மருந்தோ நோய்விலக்க வெண். (தே.தை.வ)

## கல்வம் சுரண்டியின் குணம்

இது குழியம்மியிலிட்டு அரைக்கும் மருந்தை வழிக்கும் கருவியாகும்.

1. இரும்பினால் செய்யப்படும் சுரண்டி துருப்பிடிக்கும். இதனால் மருந்தின் குணம் கெடும்.

2. உருக்கு, வெள்ளி இவைகளினால் செய்யப்படும் சுரண்டி மருந்திற்கு மேலான குணத்தை உண்டாக்கும்.

3. மரம், விலங்கின் கோடு இவைகளினால் செய்யப்படும் சுரண்டி மருந்திற்கு இடைநிலைக் குணத்தைக் கொடுக்கும்.

4 பனை ஓலையினால் செய்யப்படும் சுரண்டியே சாலச் சிறந்ததெனக் கருதப்படுகிறது.

இருப்பி னாற்கலு வஞ்சுரண் டியபொரு ளியற்றின்
துருப்பி யான்மருந் தின்குணஞ் சுருங்கிடு முருக்கு
விருப்ப தாகிய வெள்ளியு முத்தமம் விருட்சம்
மருப்பி னாற்புரி கருவியோ மத்திம குணமாம்.

மருந்து செய்யும் போது அகல், குப்பி, மூசை போன்றவையும் பயன்படுத்தப் படுகின்றன.

1. அகல் : என்பது வட்ட வடிவமான மண்தட்டு.

2. குப்பி : என்பது கழுத்து குறுகலாகவும், அடி பரவலாகவும் உள்ள மண்குடுவை. இதைச் சாடிகளிலும், பூநீற்றிலும் சிலர் செய்து உபயோகப் படுத்துகின்றனர்.

3. மூசை : என்பது 'குகை'' என்று சொல்லப்படுவதாம். இதில் மண்மூசை, வச்சிர மூசை என இருவகையுண்டு.

1. மண் மூசை : என்பது களிமண், மணல், கரித்தூள், சாம்பல், தேங்காய் நார் இவைகளைச் சேர்த்துச் செய்வதாம்.

2. வச்சிர மூசை : என்பது களிமண், அயக்கிட்டம், சணல், தார், உமிக்கரி, கரித்தூள், சுண்ணாம்பு இவைகளைச் சேர்த்துச் செய்வதாம்.

## அந்தந்தத் தொழிற்குரிய கருவியும் தைலந் துழாவும் விதியும்

கைப்பாகமாய்க் கடையப் படுந் தொழிற்கு மத்தும், கற்க வடிவத்தை யடைகின்ற களி முதலிய லேகியவகைத் தொழிற்குத் துடுப்பும், பொங்கிக் கொதிக்கின்ற தைலமருந்து, நெய் முதலிய வகைத் தொழிற்கு அகப்பையும் கருவிகளாம். கலுவத்தில் கனத்த மருந்தளாவிய நீரை நிறைத்து, குழவியைக் கொண்டு எப்படி யரைக்க வேண்டுமோ, அவ்வாறு தைலம் முதலியவைகளைத் துழாவுகின்ற பாக விதியாம்.

கடைவகையின் மத்துழலல் கைபாகங் கற்க
மடைவகை நெய்க் குத்துடுப்ப கப்பை-விடைமேற்
சொலுவதென்று ழாவலுறைத் தோயநிறைந் துள்ள
கலுவவரைப் பின் கதியைக் காண். (தே.தை.வ)

## பிடிச்சீலை வகையும் பற்றகற்றியும்

அடுப்பில் கொதிக்கின்ற தைலமுதலிய மருந்துகளின் முடிவில் சுடுகையுள்ள அப்பாத்திரத்தைப் பிடித்திறக்குவதற்கு, ரெட்டும், வெள்ளைத்துகிலும், வலைக் கோணியும் பிடிச் சீலைகளாம். தைலங்கள் காய்ச்சும் போது துழாவுதல் தவறுமாயின், கோசுழ போலும் பந்தமுள்ள கற்க மருந்தானது, கெட்டியாய்ப் பிடித்துத் தடித்து, அவ்விடத்து நெய்பசையை யொழித்து, அந்தப் பாண்டத்தினது அடியைப் பிளவுறுமாறு செய்யும், ஆதலால் அப்பற்றை உடனே அகற்றுவதற்காகப் பற்றகற்றி என்கிற ஒரு கருவியை இரும்பினால், செய்துக் கொள்ளவர். அது சக்கிலியர் ஊளுகின்ற பிறையுருவ முள்ள ஒரு வகைக் கருவியாகும்.

பருந்தந் திரட்டுவெண் படாம் வளைநார்ச் சீலை
மருந்தந்தம் வெங்கலவ கைக்குப்—பொருந்தும்
பிடிச்சீரை பற்றகற்றி பேருரியோ ரெஃகாத்
தடிச்சீரைப் பற்றறச்செய் தான். (தே.தை.வ)

## சீலை

சீலை என்பது ஒரு சுத்தமான அழுத்தத் துணியில் மிருதுவாக அரைத்த புற்று மண்ணையோ, செம்மண்ணையோ ஒருபக்கத்தில் தடவிமருந்து எரியவைக்கும்பாத்திரங்களைச் (குப்பி,அகல், குகை) சந்துதெரியாமல் சந்தின் பேரில் சுற்றி உலர வைப்பதாம்.

புற்று மண்ணிற்குப்பதில் கோதுமை மாவையும், உளுத்த மாவையும், மாக்கல் மாவையும் பயன்படுத்துகின்றனர். சுண்ணாம்பைத் தனியாகவாவது, முட்டையின் வெள்ளைக் கருவைச் சேர்த்தாவதும் பயன்படுத்துகின்றனர். இவற்றை மருந்திற்குத் தக்கவாறே பயன்படுத்த வேண்டும் என்றும் கூறுகின்றனர்.

## விறகின் வகைகள்

1. உடலில் ஏற்படும் வெப்பு நோய்களைக் குணப் படுத்தும் உயர்ந்த தைலங்களுக்கு ஆவாரை, சிற்றாமுட்டி விறகுகள் சிறந்ததாம்.

2. கண், மூக்கு, செவி, பாதம் ஆகிய இடங்களுக்கு இடுகின்ற நெய்களுக்கும், குடிக்கின்ற தைலங்களுக்கும் உசில், இலந்தை விறகுகள் சிறந்ததாம்.

3. தடவிப் பூசுவதாகிய சூடுள்ள பிடித்தைல வகைகளுக்கு இலுப்பை, புளி விறகுகள் சிறந்ததாம்.

4. வாத நோய்களுக்கான குடிநீர், தைலம் இவற்றைக் காய்ச்சுவதற்கு வேம்பு, பூவரசு, அரசு விறகுகள் சிறந்ததாம்.

5. வாத நோய்களுக்கான மருந்துகள் செய்வதற்கு நுணா, வன்னி, மாவிலங்கம் விறகுகள் சிறந்ததாம்.

6. பித்த சம்பந்தமான நோய்களுக்கான மருந்துகள் செய்வதற்கு நெல்லி, வேம்பு, விலா விறகுகள் சிறந்ததாம்.

7. கபசம்பந்தமான நோய்களுக்கான மருந்துகள் செய்வதற்கு உசில், வேல், கொன்றை, வேங்கை விறகுகள் சிறந்ததாம்.

8. இரசம் சேர்ந்த மருந்துகள் செய்வதற்கு பனை, தென்னை வேம்பு விறகுகள் சிறந்ததாம்.

9. இரும்பு சேர்ந்த மருந்துகள் செய்வதற்கு வேல், வேங்கை விறகுகள் சிறந்ததாம். இவைகள் கிடைக்காவிடில், காய்ச்சுகின்ற மருந்துகளின் தன்மைக்கேற்ப ஒரே வகையான விறகினால் எரிப்பது சிறந்ததாகும் என்று மருத்துவ வல்லுநர்கள் குறிப்பிடுகின்றனர்.

## எரு

இது இயற்கை எரு, செயற்கை எரு என இரு வகைப்படும்.

இயற்கை எரு : மருந்துகள் புடம் போடக் காட்டு எருவாகிய இயற்கை எருவே சிறந்ததெனக் கூறப் படுகிறது,

செயற்கை எரு : வீட்டில் தட்டப் படும் வீரட்டியின் அளவு ஆறு அங்குலமும், பருமன் ஓர் விரலளவுமாக இருத்தல் வேண்டும். செயற்கை எருவினால் மருந்தின் வேகம் குறைவதாகவும் கூறப் படுகிறது.

## நாட்டு எரு நான்கு வகைப்படும்

1. பசுச் சாண எரு மருந்து செய்ய சிறப்புடையதாகும்.

2. எருமைச்சாண எரு இரண்டாந்தரமுடையதாகும்.

3. கலப்புச் சாண வரட்டி கீழ்த்தரமாகும்.

4. சாணத்துடன் வைக்கோல், சருகுகள், உமி சேர்த்துச் செய்யப்பட்ட வரட்டி மருந்தின் வேகத்தைக் குறைப்பதாகும்.

ஆட்டுச் சாணத்தினால் செய்யப்பட்ட வரட்டிகள் மருந்திற்கு மிகு வீரியத்தைக் கொடுக்கும் என்றும், அம் மருந்துகள் பிணிகளை விரைவில் நீக்கும் என்றும் கூறுவர். அழுகல் சாணத்தால் வரட்டிகள் செய்து மருந்திற்கு பயன்படுத்தல் கூடாது என்பர்.

## தீயினளவு

மருந்தினை எரித்தெடுக்கும் தீயினளவு நான்கு வகையாகக் கூறப்படுகிறது. அவை 1. தீபாக்கினி, 2, கமலாக்கினி. 3. காடாக்கினி, 4. கதலியாக்கினி.

1. தீபாக்கினி : விளக்கின் சுடரைப் போல் எரியும் தீயைத் தீபாக்கினி என்று கூறுவர். (1 விறகு—விறகின் கனம் இருவிரல்)

2. கமலாக்கினி : மலர்ந்த தாமரைப் பூவைப் போல் எரியும் தீயைக் கமலாக்கினி என்று கூறுவர். (2 விறகு)

3. கதலியாக்கினி : வாழைப் பூவைப்போல் எரியும் தீயைக் கதலியாக்கினி என்பர். (3 விறகு)

4. காடாக்கினி : மேற் கூறப் பெற்ற மூன்றிற்கும் மிகுதிப் பட்ட தீக்குக் காடாக்கினி என்றும் கூறுவர். (4 விறகு)

## புடம்

இது எருவின் உதவியால் எரிக்கப்படும் எரிப்புத்திட்டம். இது ஒன்பது வகையாகக் கூறப் படுகிறது.

1. காடைப் புடம் - 1 எரு

2. கவுதாரிப்புடம் - 3 எரு

3. குக்குடப்புடம் (கோழிப்புடம்) — 10 எரு

4. வராகப்புடம் - 50 எரு
5. மணல் மறைவுப்புடம் - 90 எரு
6. மயிற்புடம் - 100 எரு
7. கனப்புடம் - 800 எரு
8. கசபுடம் — 1000 எரு
9. பூமிப்புடம்—ஆட்டின் எருவின் நான்கு விரற்கடை அளவு.

மேற்கூறப் பெற்ற எரிப்புப் புடங்களன்றி வேறுசில புட முறைகளும் பயன்படுத்தப் பெறுகின்றன. அவை,

1. உமிப்புடம் : மருந்தை உமியிற் புதைத்து வைத்து எடுத்தலும், உமியிற் புடமிட்டெடுத்தலுமாகும்.

2. தானியப் புடம் : முடித்த மருந்தை நெல்லுக்குள் குறிப்பிட்ட நாள் அளவு வைத்திருந்து எடுத்தலைத் தானியப் புடம் என்பர்.

3. சூரியப் புடம் : இது மருந்தை வெய்யிலில் காயவைத்தல்.

4. சந்திரப் புடம் : இது மருந்தை சந்திர வெளிச்சத்தில் வைத்தெடுத்தல்.

5. பருவப் புடம் : இது மருந்தை பௌர்ணமியன்று திறந்த வெளியில் வைத் தெடுத்தல்.

6. அமாவாசைப் புடம் : அமாவாசையன்று இருட்டில் திறந்த வெளியில் மருந்தை வைத்தெடுத்தால்.

7. பனிப் புடம் : இது பனியில் மருந்துகளை வைத்து எடுத்தல்.

8. மரப் புடம் : மரத்தைத் துளைத்து, அதற்குள் மருந்தை வைத்து குறிப்பிட்ட நாள்கழித்து எடுத்தல்.

இவற்றுடன், மருந்துகளைச் செய்த பின் அவற்றை வைத்திருக்க வேண்டிய பாத்திரத்தின் குணங்களும், மருந்துண்ணும் பாத்திரம் பற்றியும், மருந்து அருந்தும் காலம், நோய்களுக்கு ஏற்ப மருந்தருந்தும் கால அளவு, ஆண்டுக்குத் தக்கபடி அருந்தும் மருந்து, மருந்தருந்திய பின் வாயிலிடும் பொருட்கள், தலையிலிடும் அரைப்பு வகைகள் போன்றனவும் குறிப்பிடத் தக்கன. அவைவருமாறு,

## மருந்து வைக்கும் பாத்திரத்தின் குணம்

தெங்கின் குடுக்கை, மூங்கிற்பரணை, தந்தம் இவைகளால் செய்யப்படும் பாத்திரங்களில் வைக்கப்படும் தாழ்ந்த மருந்தும்

உயர்ந்த மருந்தாகும். வெண்கலம், கறுத்த இரும்பு, மரம், மற்ற மிருகங்களின் கொம்பு இவைகளால் செய்யப் படும் பாத்திரங்களில் வைக்கும் மருந்து இரண்டாம் தரமாம்.

வெள்ளி, தங்கம் இவைகளால் செய்த சிமிழில் வைக்கும் மருந்து மேன்மையாகும் என்றும், செம்பு, ஈயம் இவைகளால் செய்த சிமிழில் மருந்துகள் வைத்தால் அவை உண்பதற்கு உதவாது என்றும் கூறுவர்.

இவைகளல்லாமல் இக்காலத்தில் ஒரு வகை வெள்ளைக் களிமண்ணாலும், வெள்ளை மணலாலும் செய்யப்படும் பீங்கான், கண்ணாடியினால் செய்யப்படும் பாத்திரங்கள் ஆகியவற்றுள் மருந்துகள் வைப்பது வழக்கத்திற்கு வந்து விட்டது. அவையும் தவறாகாது என்று கூறுகின்றனர்.

தெங்கின் குடுக்கை திகிரிதந்தப் பாத்திரத்தார்
நன்கிராப் புன்மருந்தும் நன்மருந்தாம்—வெண்கலத்தால்
மையிரும் பாற்கட்டைகளால் மாக்கொம்பால் பாத்திரங்கள்
செய்யினிரண் டாம்பட்சஞ் செப்பு.

என்பது பாடல். (ப.கு சி.)

## மருந்துண்ணும் பாத்திரம்

வாத நோயாளிகளுக்கு வெண்கலப்பாத்திரத்திலும், பித்த நோயாளிகளுக்கு தங்கப் பாத்திரத்திலும், ஐயநோயாளிகளுக்கு தாம்பிரப் பாத்திரத்திலும் மருந்தை இழைத்துண்ணக் கொடுக்க வேண்டும். இவைகள் இல்லையெனில் மண்பாத்திரத்தில் கொடுப்பது மிகவும் நன்மை தருமாம். இது நிறைந்த ஆயுளையும் தருவதாகும்.

வெள்ளிப் பாத்திரத்தில் வைத்துண்ணும் மருந்து மேன்மையாம், ஆயினும், பொன்பாத்திரத்தில் வைத்துண்பது மிகுபலனைத் தருவதாம். வெண்கலப் பாத்திரத்தில் வைத்துண்பது இடைநிலைப் பலனைக் கொடுப்பதாம். மண்பாத்திரத்தில் வைத்துண்பது எல்லாவற்றையும் விட மிகச் சிறந்ததாகக் கருதப் படுகிறது.

வாத முதல் முப்பிணியோர் வைத்துறையுண் பாத்திரத்தின்
பேதமுறை யேகேள் பெருங்கஞ்சம் - சதாகும்பம்
தாம்பரமா மின்றென்னிற் சக்கிரிகைப் பாத்திரந்தான்
ஆம்பரமா யுட்கொடுக்கு மாங்கு. (ப.கு சி.)

என்பது பாடல்.

## மருந்தூட்டுங்காலம்

வாதநோயாளிகளுக்கு உணவு உண்பதற்கு முன்னும், பித்த நோயாளிகளுக்குப் பாதி உணவு உண்ட உடனும், சிலேட்டும நோயாளிகளுக்கு உணவருந்திய பின்னும் மருந்துண்ணக் கொடுத்தால் அவர்கள் அந்நோயினால் இறவாமல் அதிலிருந்து நீங்கப் பெறுவராம்.

அனிலநோ யர்க்கசன மாகாமுன் பித்தத்
துனியர்க்] கசனநடுத் துயை-யெனுநோயர்க்
காகாரப் பின்னு மருத்திலுறை யாப்பிணியாற்
சாகாரப் பின்னுலகிற் றான்.

என்பது பாடல். (ப.கு.சி.)

## நோய்களுக்கு மருந்தருந்துங் காலஅளவு

சுக்கிலக்கேடு, அறிவுக் கெடுதி, இரைப்புநோய், பயித்தியநோய் என்னும் இவைகளுக்கு ஓர் ஆண்டும், நீரடைப்பு நோய், விரண நோய், கல்லடைப்புநோய், நீரிழிவு என்னும் இவைகளுக்குப் பத்து மாதங்களும், உதாவர்த்த நோய்க்கு ஏழு மாதங்களும், விப்புருதி நோய்க்கு ஆறு மாதங்களும் ஆக அவற்றிற்குரிய மருந்துகளை அருந்த வேண்டும். இவ்விதிக்கு மேற்பட்ட காலம் உண்ண வேண்டுவதில்லை. இந்த விதியைக் கொண்டு இதன்படி நடந்தால் நோய்களெல்லாம் கொஞ்சமும் உடலில் நில்லாமல் நீங்கி விடும் என்பர்.

தாது நட்ட மபசுமாதஞ் சுவாச காசம்
தனியுன்மா தம்மிவைக்காண் டுறையா மென்பர்
மோதுகிரிச் சரம்விரணம் கல்ல டைப்பு
முதிர்மேக நீர்க்குமருந் தீரைந் திங்கள்
ஓதுமுதா வர்த்தமர்த் தாங்க மேழென்
றுரைவித்தி ரதிக்குமருந் தரையாண் டன்றி
மீதுவேண் டாவுரைத்த விம்மட் டுண்ணில்
விலகுமவை சேடமற விரும்பிக் காணே. (ப கு சி.)

## ஆண்டுக்குத் தக்கப்படி அருந்தும் மருந்து

ஒருவன் தன்னாயுள் நாட்களில், முப்பது ஆண்டுகள் வரையிலும் எண்ணெய்களையும், நாற்பது ஆண்டுகள் வரையிலும் இலேகியங்களையும், அறுபது ஆண்டுகள் வரையிலும் செந்தூரத்தையும், இருபது வயது முதல் நூறு வயது வரையிலும் பற்பத்தையும் அருந்தலாம் என்கின்றனர் மருத்துவ அறிஞர்கள்.

நோய்களுக்குத் தக்க உண்ணும் மருந்தின் அளவு குறிப்பிடப் பெறவில்லையெனில் சூரணம் மூன்று கழஞ்சும் (அல்லது) மூன்றே முக்கால் வராகனெடையும் உண்ணலாம். நசியம் என்பது ஒரு துளி அளவு என்றும் குறிப்பிடுகின்றனர்.

## மருந்தருந்திய பின்பு வாயிலிடும் பொருட்கள்

பிணியாளர்கள் மருந்தை உண்டபின் கொட்டைப் பாக்குச் சீவல், சிறுநாகப்பூ, தேன், திராட்சைப்பழம், வெற்றிலைக் காம்பு, இலவங்கம், ஒருவருடத்துப் பழைய நெற்பொரி, பச்சைகற் பூரத்தூள் இவற்றில் ஏதாவதொன்றை வாயிலிட்டுக் கொள்ளலாம். இவை உண்ட மருந்தின் தன்மையைக் கெடுக்காத பொருட்களாம்.

சீவல் கணமதுதி ராட்டைதும்பை மூக்குகிராம்
பூவற் சரநெற் பொரிசசித்தூள்-பூவில்
இருந்துண்ட நீர்மைகுன்றா தேற்றுமேன் மக்கள்
மருந்துண்ட வாய்க்கிவையா மால்.

என்பது பாடல். (ப.கு.சி.)

## அரைப்புவகை

விரண உடலினர்க்கு உசிலந் தூளும்; சொறி, சிரங்கு, தினவுடையவர்கட்கு இலுப்பைப் பிண்ணாக்கும்; எண்ணெய் முதலிய தைலங்கட்குப் பொன்னாங்காயும், சிகைக் காயும்; பசுவின் நெய்க்குப் பச்சைப் பயறும்; பன்றி, காக்கை முதலியவற்றின் நெய்கட்குக் காரைச் செடி சமூலப் பொடியும் அரைப்பாகப் பயன் படுத்தலாம் என்பர்.

## பத்தியம்

மருந்து செய்முறைகளும் பத்தியமும் என்ற தலைப்பில் சுவடிகள் கிடைப்பினும், பெரும் பாலான மருந்து செய்முறை பற்றிய சுவடிகளில் பத்தியம் என்பது தனியாக குறிக்கப் பெறவில்லை. ஆயினும், சில செய்முறைகளில் பத்தியங்கள் கூறப்படுகின்றன. பொதுவாக, தமிழ் மருத்துவ முறையில் காணும் மருந்துகளை அருந்தும் போது குறிப்பிட்ட பத்தியம் காத்தல் என்பது மிகவும் தேவையாகும். இவ்வகையில் பல்வேறு பத்தியம் பற்றிய செய்திகளும்,மருந்துண்ணும் காலத்து ஆகும் பொருட்கள், ஆகாத பொருட்கள் எனப் பிரித்தறிவதும் நோய்நீக்கும் வழிகளில் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

பத்தியம் என்பது, கடும்பத்தியம், மிகுகடும்பத்தியம், இச்சாபத்தியம், உப்பில்லாப் பத்தியம் எனப் பலவகைப்படும்.

## கடும்பத்தியம்

கடும் பத்தியத்தில் வறுத்த உப்பைச் சேர்த்துக் கொண்டு, மறுபத்தியத்தில் வறுத்த உப்பு, சுட்டபுளி, கத்தரி, முருங்கைப் பிஞ்சுகளைச் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும் என்பர்.

## மிகுகடும்பத்தியம்

மிகுகடும்பத்தியத்தில், அரிசியைப் புது மட்கலத்தில் உப்பின்றிச் சமைத்துண்ணல் வேண்டும். உப்புநீர், புளியமர நிழல், கடற்காற்று இவை உடலில் படவும் கூடாது. உவர் மண்ணைக் கையினாலும் தொடக் கூடாது என்பர்.

சில தைலங்களைக் கொண்டு தலை முழுகுபவர்கட்கு அவர்தம் நோய்க்குத் தக்கவாறு பத்தியம் விதிப்பதுண்டு அது 'இச்சாபத்தியம்' என்றும் 'உப்பில்லாப்பத்தியம்' என்றும் இருவகைப்படும்.

## இச்சாபத்தியம்

கடுகு, எள்நெய், கலியாணப் பூசனிக்காய், கள், கடலை தேங்காய், மாங்காய், பலா, காயம், உள்ளிப் பூண்டு, கொள் பாகல், அகத்தி, புகையிலை, பெண்கள் சேர்க்கை இவற்றை இச்சாபத்தியத்தில் நீக்குதல் வேண்டும்.

பருத்தவரால், கருங்குறவை, தேளி ஆகிய மீன்களும், உள்ளான், காட்டுப்புறா, காடை, கலைமான், வெள்ளாடு இவற்றின் இறைச்சிகளும், பசம்பால், நெய், மோர், எலுமிச்சம் பழம் ஆகியன இச்சாபத்தியத்தில் ஆகும் பொருட்களாம்.

## உப்பில்லாப் பத்தியம்

தனக்குவமை இல்லாத பாதரசத்திற்கும், அது சேர்ந்த தைலாதி மருந்துகட்கும், உப்பில்லாப் பத்தியம் வைத்த நாட்கள் எத்தனையோ, அத்தனை நாட்கள் மறுபத்தியம் இருந்து, பின்னாளில் உப்பு வறுத்துக் கூட்டி, அதன் பின் நாட்களில் முறையே, ஓமப்பால், பசுவின் நெய் இவற்றைத் தேய்த்து முழுக வேண்டும். அதுவரை உப்பில்லை. அதன் பிறகே உப்புச் சேர்த்து உண்ணலாம். இவ்விதப் பத்தியமே உப்பில்லாப் பத்தியமாம்.

மருந்துண்ணும் போது பத்தியம் கூறாவிட்டாலும், அருந்தக் கூடாத பொருள்களாகிய மா, பலா, வாழை, புகையிலை போன்ற

வைகளை நீக்க வேண்டும். பெண் போகம் கூடாது, நோயினால் வருந்துகின்றவர் உடலுக்குத் தக்க பத்தியம் வைக்க வேண்டும் என்றும் கூறுவர்.

மருந்துண்டு பத்தியமாய் இருப்பவர்கள் பகலில் தூங்கக் கூடாது. அப்படித் தூங்கின் அத்தூக்கத்தால் ஏற்படும் வெப்பம், சூரிய வெப்பம், மருந்தின் வெப்பம், பத்தியத்தின் வெப்பம் இவ்வளவும் உடலில் சேர்ந்து அளவிறந்த நோய்கள் உடலை அணுகும் என்பர்.

## எண்ணெய் தேய்த்தாடியபோது ஆகும் பொருட்கள்

அவரைப் பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு, தூதுளங்காய், மணித் தக்காளி, வற்றல், சுண்டை, பொன்னாங்கண்ணி, கிறுகீரை, கறிவேப்பிலை, துவரை, சிறுபயறு, மிளகு, சீரகம், வெந்தயம், இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம், சாதிக்காய், சருக்கரை, பசுவின்நெய், கௌதாரி, காடை, உடும்பு இவை எண்ணெய் தேய்த்து முழுகிய நாளில் கொள்ளத் தக்கவை. இவற்றுடன் பீர்க்கு, புடல், சூட்டுடம் பினைரைத் தினவுக் குள்ளாக்கும். கத்தரி இவைகளின் பிஞ்சு, நெல்லிக்காய், முளைக்கீரை, பெருங்காயம், உப்பு வறுத்துக் கொட்டிய சட்டியில் ஊற்றி முறித்தமோர், சிறுபுளிப்பு, தாம்பூலம், முயல், ஏரிமீன், அயிரை, தேளி, வெப் பமுள்ள சுறா, கருவாலி, காட்டினெலி, வெள்ளாடு இவை ஆகும் எனக் கூறுவர்.

## தைல முழுக்காடியவர்களுக்கு ஆகாத பொருட்கள்

வெண்பூசனி, பறங்கி, மா, தெங்கு இவற்றின் காய், கீரைத் தண்டு, சேம்பு, அறுகீரை, அகத்தி, பாகல், கத்தரி, கொத்தவரை, கனிவகை, மாப்பண்டம், மொச்சை, எள், கொள், கடலை, உளுந்து, வெங்காயம், கடுகு, புளி, பால், தயிர், கைப்புப் பொருள்கள், புகையிலை, வெல்லம், குளிர்ந்த நீர், பகல்தூக்கம், வெயில், புணர்ச்சி, மிகுகாற்று, நண்டு, மீன், கோழி, ஆடு, பன்றி, கடமான் இவை தைல முழுக்காடியவர்களுக்கு ஆகாதன என்பர்.

நோய்களுக்கேற்ற மருந்துகளின் செய்முறைகளை அறிந்திருப் பதுடன் பத்தியம் பற்றியும் அறிந்து சொல்லுதல் மருத்துவர் கடமையாகும். இவ்வகையில் நோயும் மருந்தும் கூறும் பல சுவடிகளில் பத்தியம் என்ற பகுதியில் ஆகும் பொருட்கள், ஆகாதன என்பனவற்றையும் விளக்கக் காணலாம். இவற்றை நன்கு உணர்ந்து ஏற்றுச் செயல்படின் சித்த மருந்துகளின் நற்பயனை யாவரும் நன்கு அடையமுடியும்.

பகுதி-1

# மருந்து செய்முறைகள்

## தைலம்

### அகிற்கட்டைத் தைலம்

ஆமின்ன மகிற்கட்டைத் தைலங் கேளு
அன்பதுதான் பலம்வாங்கித் தூளாய்ச் செய்து
தாமின்னந் தூணிநீ ரெட்டொன் றாக்கித்
தவறாம லெண்ணெயது நாழி சேர்த்து
போமின்ன மெழுகுபத மான வாறே
புகளாக வடித்துநீ முழுகும் போது
வேமின்னம் நீர்த்தோட மெல்லாந் தீரு
மேகங்கள் தீருமென்று விளம்பி னேனே. (சு.13.பா.135)

செய்முறை : அகிற்கட்டை ஐம்பது பலம் (175 கிராம்) வாங்கி தூளாக்கி, ஒரு தூணி (21.5 லிட்) நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, ஒரு நாழி (1.3 லிட்) எண்ணெய்ச் சேர்த்து, மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

தீரும் நோய்கள் : இதைத் தலையில் தேய்த்து முழுகிவர நீர்த்தோடங்கள், மேகங்கள் தீரும்.

### அஞ்செண்ணெய்த் தைலம்

எண்ணியே வாதமெல்லா மோடிப் போக
இயம்புகிறே னஞ்செண்ணெய்த் தைலங் கேளு
எண்ணவே யெள்ளெண்ணெய் யேரண் டெண்ணெய்
இலுப்பெண்ணெய் புங்கெண்ணெய் வேப்பெண்ணெய்
ஐந்தும்

அண்ணலே வகைக்குரெண்டு படிதான் சொன்னோம்
அளந்துவிட்டுப் பாண்டத்தி லப்பா கேளு
நண்ணவே தழுதாழை காட்டா மணக்கு
நாயுருவி தைவேளை குப்பை மேனி.

மேனியா மாவிலங்கு வேம்பு புங்கு
வெண்ணொச்சி தூதுவளை கண்டங் காரி
கூனியே குருந்து கருவாகை சங்கு
கொடுவேலி நிலக்கடம்பு சடைச்சி யிண்டு
பேணியே அவுரியொடு மெழுக்கு யெருக்குப்
புன்முருங்கை யூர்முருங்கை வெள்ளைச் சாரணையு
மாணியே மருதோணி காட்டு சீமல்லி
மத்தையுத்தை மணியோடு கழக்கொடி தானே.

கோட்டியே மிளகறணை திருகு கள்ளி
குமிழோடு அமுக்கிரா புரம்பு குன்றி
ஈட்டியே பேய்ப்பாலை யிடம்பு சின்னி
இலுப்பைமேல் புல்லுருவி ஆயிலியப் பட்டை
வெட்டிடவே சொன்னதொரு மூலி யெல்லாம்
வேரோடு தூரோடு சமூலங் கொண்டு
அட்டியே பண்ணாதே வெட்டி வந்து
அப்பனே வகை வகைக்குப் பலந்தான் பத்தே,

பத்தாலே யிவையெல்லா மிடித்து நன்றாய்
பெரும்பாண்டத் திட்டுநீ பாகங் கேளு
அத்தாகப் பதினாறு மரக்கால் தண்ணீர்
அளந்துவிட்டு யடுப்பேற்றி யெரிக்கக் கேளு
எத்தாதே ஓர் விறகால் எரியமூட்டு
எட்டொன்றாய் வத்தமிட்டு மெரித்துக் காய்ச்சி
மத்தான கசாயமது படிதான் பத்து
அளந்துவிட்டு யெண்ணெயிலே அறையக் கேளே.

அறையிறேன் திப்பிலியுந் திப்பிலி மூல
மானை திப்பிலி யோம மரத்தைசுக்கு
குறையாத தாளிசையுங் கண்டந் திப்பிலியும்
குரோசாணி கருஞ்சீரங் கிராம்பு குக்கில்

தரையாத சதகுப்பை வசம்பு கல்நார்
சிறுதேக்கு பெருங்காயம் வெள்ளுள்ளி யிஞ்சி
உரையான வெளிச்சைப் பிசினும் நாகப்பூவும்
உத்தமனே சடாமாஞ்சி வொக்கக் கேளே.

கேளேநீ வகைவகைக்கு அரைப்பலமே சொன்னோங்
கெடியான வெள்ளாட்டின் நீரதனா லாட்டி
ஆளேநீ யெண்ணெயிலே யெண்ணெயிலே
அப்பனே மயிற்பீலி அரைப்பலமே போடு
கேளேநீ வாராம லடுப்பி லேற்று
குறிப்பாக யின்னமொரு சூட்சங் கேளு
நாளேநீ யாருந்தான் சொல்லார் கேளு
நந்திக்காய் சாறு நாலுபடி வாரே.

வாரேநீ யடுப்பேற்றி யெரித்துக் காய்ச்சி
வளமான மெழுகுபதம் தன்னைப் பார்த்து
காரேநீ வடிகலசம் தன்னில் கேளு
கத்தூரி வராகன்ரெண்டு சாதிலிங்கம் ரெண்டு
போமேநீ ஆகாசத் தூள்கழஞ்சு ரெண்டு
போட்டுமே யெண்ணெய்தனை வடித்து வாங்கு
வேகாநீ யண்டத்தின் தயிலத் தோடு
வெள்ளுள்ளி முசுறுமுட்டை தயிலந் தானே.

தயிலமென்ன வகைக்கு கால்படிதான் சொன்னோம்
சாத்தரிய முதயிலந் தன்னில் வாரு
தயிலத்தை வேடுகட்டிப் பதனம் பண்ணு
சண்முகர்க்கும் கணபதிக்கும் பூசை பண்ணு
தயிலமிந்த முறைப்படியே யார்தான் செய்வார்
சார்வான வாதிமகன் வயித்தியனே செய்வான்
தயிலமாம் தயிலத்தின் பெருமை சொல்ல
யாராலு முடியாது அறிந்து பாரே.

அறிந்துபார் தயிலத்தில் காசெடைதா னுண்டு
அப்பனே மேலெங்கும் பூசக் கேளு
சேரிவருஞ் சன்னியெங்கே தோட மெங்கே
தீராத வுள்குத்துப் புறவீச் செங்கே

அறிந்துவரும் வாதமே வாய்வு மெங்கே
அடிக்கடி தா னலரும் சன்னி யெங்கே
எரிந்து வரும் பக்கவா தம் பாரிச வாதம்
இளம்பிள்ளை வாதமொடு அண்டவாத மென்னே.

வாதமொடு காக்கைவலி முயல்வ லிப்பு
வருணவலி குதிரைவலி குமரகண்டன் வலியும்
ஓதமென்ற வாதபித்த முகவாத சன்னி
உத்தமனே பித்தநோய் தந்த சன்னி
போதவே கிறுகிறுப்பு மண்டைக் குத்து
பிடரிவலி பீனிசமும் பொல்லா நோயும்
பாதமே சொன்னதொரு நோய்கட் கெல்லாம்
போகுமே தயிலத்தின் பேரு சொல்லே.

சொல்லவே கைப்பொடு புளிப்புத் தள்ளு
சொல்லரிய-சோறு பத்தியத்தைக் கொள்ளு
சொல்லவே உப்பதனை வறுத்துக் கூட்டு
சுகமாக வழுதலங்காய் முருங்கைப் பிஞ்சு
வெல்லவே தூதளங்காய் வற்ற லாகும்
வெள்ளாட்டு வற்றலொடு பசும்பயறு மாகும்
பல்லவே பத்தியந்தான் கண்டு தேரு
பாங்காக யின்னமொன்று பாடுகி றேனே.

(சு.19.பா. 1-11)

செய்முறை : எள்ளெண்ணெய், ஆமணக்கெண்ணெய், இலுப் பெண்ணெய், புங்கெண்ணெய், வேப்பெண்ணெய் இவை வகைக்கு 2 படி (2.6 லிட்), தழுதாளி, காட்டாமணக்கு, நாயுருவி, தை வேளை, குப்பைமேனி, மாவிலங்கு, வேம்பு, புங்கு, வெண்ணொச்சி, தூதுவளை, கண்டங்கத்திரி, குருந்து, கருவாகை, சங்கங்குப்பி, கொடுவேலி, நிலக்கடம்பு, சடாமாஞ்சில், இண்டு, அவுரி, எருக்கு, புன்முருங்கை, ஊர்முருங்கை, வெள்ளைச்சாரணை, மருதோன்றி, காட்டு மல்லி, ஊமத்தை, உத்தாமணி, கழக்கொடி, மிளகறணை, திருகுகள்ளி, குமிழம், அமுக்கிரா, குன்றிமணி, கைப்பாலை, சின்னி, இலுப்பை, புல்லுருவி, ஆயிலியப்பட்டை இவை ஒவ்வொன்றின் சமூலங்கள் வகைக்கு 10 பலம் (350 கிராம்) இவையெல்லாவற்றை யும் நன்றாக இடித்து, 16 மரக்கால் தண்ணீரிவிட்டு, பக்குவமாய்க் காய்ச்சி 10 படியாக (13லிட்) வற்ற இறுத்துக்கொண்டு, திப்பிலி, திப்பிலி மூலம், யானைத் திப்பிலி, ஓமம், அரத்தை, சுக்கு,

தாளிசப்பத்திரி, கண்டந்திப்பிலி, குரோசாணி ஓமம், கருஞ்சீரகம் கிராம்பு, குக்கில், சதகுப்பை, வசம்பு, கல்நார், சிறுதேக்கு, பெருங்காயம், வெள்ளுள்ளி, இஞ்சி, வெலிச்சைப்பிசின், நாகப்பூ, சடாமாஞ்சி இவை வகைக்கு ½ பலம் (17.5கிராம்) எடுத்து வெள்ளாட்டு நீரிலாட்டி எண்ணெயிலிட்டு, மயில்தோகை ½ பலம் (17 5 கிராம்) சேர்த்துக் காய்ச்சவும். அத்துடன் நந்திக்காய்ச்சாறு 4 படி (5.2லிட்) கூட்டிக் காய்ச்சி மெழுகு பதமானவுடன், வடிகலசத்தில் கத்தூரி மஞ்சள், சாதிலிங்கம், ஆகாசத்தூள், இவை வகைக்கு2வராகன்(8.4கிராம்)போட்டுஎண்ணெயை ஊற்றிவடித்து அத்துடன், அண்டத் தைலம், முசுறுமுட்டைத் தைலம் இவை, வகைக்கு கால்படி (.3லிட்) சேர்த்துப் பதமாய் இறுத்துவைக்கவும்.

அளவு : காசெடை (165மி.கி) உள்ளுக்கும், மேலுக்கும்.

தீரும் நோய்கள் : சன்னி, உள்குத்து, புறவீச்சு, வாதம், அலறுசன்னி, பக்கவாதம், பாரிசவாதம், இளம்பிள்ளை வாதம், அண்டவாதம், காக்கைவலி, முயல்வலி, வருணவலி, குதிரைவலி, குமரகண்டன்வலி, வாதபித்தம், முகவாதசன்னி, பித்தசன்னி, கிறுகிறுப்பு, மண்டைக்குத்து, பிடரிவலி, பீனிசம், மற்றுமுள்ள நோய்களெல்லாம் தீரும்.

பத்தியம் : புளி, கைப்பு தள்ளவும். உப்பை வறுத்துக் கூட்டவும். வழுதலங்காய், முருங்கைப் பிஞ்சு, தூதளங்காய் வெள்ளாடுவற்றல், பசும்பயறு ஆகும்.

## அமுக்கிரா வேர்த்தைலம்

அரனெங்கள் சிவன்சொல்ல யாத்தாள் சொன்னாள்
அமுக்கிரா தைலமொன்று யரையக் கேளு
தரங்கொண்டு கிள்ளியது வேர றாமல்
தானிறுப்பாய் பலமதுவும் பத்து வாங்கே.

வாங்கியே யிடித்ததனை பதக்கு நீரில்
வடிகொண்டு யெண்ணெய்படி யதனிற் சேர்த்து
ஓங்கியதோ ரெலுமிச்சம் பழச்சாறு நாழி
ஒக்கவிட்டு மெழுகுபதந் தன்னில் வாங்கித்
தேங்கியே வடிகட்டி வைத்துக் கொண்டு
திறமாக முழுகிவரத் திறத்தைச் சொல்வேன்
பாங்கியே பீனிசங்கள் பறந்து போகும்
பாரிலுள்ள மண்டையிடி பறந்து போமே.

(சு.13.பா. 127, 128)

செய்முறை : அமுக்கிராவேர் பத்துபலம் (350 கிராம்)இடித்து, 1 பதக்கு (10. 7லிட்) நீரில் போட்டு வடித்து, 1 படி (1.3லிட்) எண்ணெயும், எலுமிச்சம் பழச்சாறு 1 நாழியும் (1.3லிட்) சேர்த்து, மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

தீரும் நோய்கள்: இவ்வெண்ணெயை முழுகிவரப் பீனிசங்கள், மண்டையிடி முதலியன தீரும்.

## அறுகின்வேர்த் தைலம்

விளம்பினே னறுகின்வேர் பலந்தான் நூறு
மேலுள்ள பச்சையெல்லாந் தள்ளிப் போட்டுத்
தளம்பவே நன்றாக யிடித்துத் தானுந்
தண்ணீர்தான் நூறுபடி யதிலே வார்த்து
குழம்பாகக் காய்ச்சியே யெட்டொன் றாக்கி
குணமாக வடிகொண்டு யெண்ணெய் நாழி
பழம்போலே மெழுகுபத மான வாறே
பருவமாய் வடித்ததனை முழுகு வாயே.

முழுகியே வரும்போது குணத்தைக் கேளு
முசியாத சூட்டுடனே கபாலச் சூடு
தளுகியே பித்தமெல்லாந் தலைகெட் டோடும்
தன்னுக்குள் வாதமெல்லாந் தவறுண் டேபோம்
அழுகியே வருங்கிரந்தி சூலை நீர்கள்
ஆனதொரு வயிற்றெரிவு நெஞ்சி நோவு
கொளுகியதோர் மேல்வறட்சி நீர்க்க டுப்பு
கோதலித் தயக்கியுந் தான்குளிர்ந்து போமே.

(சு. 13. பா. 136, 137)

செய்முறை : அறுகின்வேர் 100 பலம் (3500 கிராம்) வாங்கி மேலுள்ள பச்சைத் தோலைத் தள்ளி நன்றாக இடித்து, 100 படி (130லிட்) தண்ணீர்விட்டு, குழம்பாகக்காய்ச்சி, எட்டொன்றாக்கிக் கொண்டு, அதனுடன் 1 நாழி (1.3லிட்) எண்ணெயைச் சேர்த்து மெழுகுபதமாக வடித்துக்கொள்ளவும்.

தீரும்நோய்கள் : இவ்வெண்ணெயை முழுகிவர கபாலச்சூடு, பித்தம், வாதம், கிரந்தி, சூலை, வயிற்றெரிவு, நெஞ்சுநோவு, மேல்வறட்சி, நீர்க்கடுப்பு தீரும்.

## இசங்குவேர்த் தைலம்

விதிமான இசங்கின்வேர் தைலங் கேளு
வெட்டிவந்து கால்துலா மிடித்துப் போட்டு
பதமாகத் தூணிசல மெட்டொன் றாக்கி
பாரதிலே யெள்ளெண்ணெய் படிரெண்டு சேர்த்துப்
பதமாக மிளகுபல மரைத்துப் போட்டு
யடுப்பேற்றி மெழுகுபத மான வாறே
சுகமாக வடித்ததனை முழுகும் போது
சொல்வதென்ன குட்டமொடு சொறிசி ரங்கே.

சிரங்குடனே கிரந்தியறு சூலை ரோகஞ்
செங்கரப்பன் வண்டுகடி சில்வி டங்கள்
குரங்குபோல் வலிக்கின்ற சயங்கள் காசங்
குத்திருமல் ரத்தசயங் குடிபோரோ மென்று
... ... ... ... ...

(சு. 13, பா. 125, 126)

செய்முறை: இசங்கிவேர் கால் துலாம் (.9கி.கி.) இடித்து 1 தூணி (21.5 லிட்) நீரில் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி அதனுடன் இரண்டுபடி (2.6 லிட்) எள்ளெண்ணெய்ச் சேர்த்து, ஒருபலம் (35 கிராம்) மிளகையும் அரைத்துப் போட்டு, மெழுகுபத மாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

தீரும் நோய்கள்: இவ்வெண்ணெயை முழுகிவர குட்டம், சொறிசிரங்கு, கிரந்தி, ஆறு வகை சூலை, செங்கரப்பான், வண்டு கடி, சில்விடங்கள், சயங்கள், காசம், குத்திருமல், இரத்தகாசம் தீரும்.

## இஞ்சித் தைலம்

பறப்பதற்கு யின்னமொரு தைலங் கேளு
பச்சையிஞ்சி கால்துலாம் பரிந்தி டித்துச்
சிறப்புடனே பிழிந்துவடி கட்டி விட்டு
தெளிவான யெண்ணையதில் நாழி விட்டு
உறைப்பாக பசுவின்பால் படிதான் சேர்த்து
உறுதியாய் மெழுகுபத மாக வாங்கி
சிறப்புடனே முழுகிவர பருவ மாக
திறமாகத் தீரும்நோய் திறக்கி றேனே.

திறக்கிறேன் மண்டையுறு சூலை வாந்தி
திடங்கொண்ட பீனிசங்கள் பித்த சூலை
திறக்கிறேன் நெஞ்செரிப்பு திமிரு குட்டந்
தீராத பித்தத்தி லெரிவு தீருந்
திறக்கிறேனே யின்னமொரு தயிலஞ் சொல்வேன்
செம்முள்ளி யெண்ணெய்தனை செப்பி றேனே.
(சு. 13. பா. 129. 130)

செய்முறை: பச்சை இஞ்சி கால்துலாம் (0.9கி. கி) இடித்துச் சாறு பிழிந்து வடிகட்டி, எண்ணெய் 1 நாழி (1.3 லிட்) பசுவின் பால் 1 படி (1.3 லிட்) சேர்த்து, மெழுகுபதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

தீரும் நோய்கள்: மண்டைசூலை, வாந்தி, பீனிசங்கள், பித்தசூலை, நெஞ்செரிப்பு, திமிர், குட்டம், பித்தஎரிவு தீரும்.

## அரக்கு மோரெண்ணெய்

பலசுரங்கள் போவதற்கு யின்னமொரு யெண்ணெய்
பகருகிறோ மரக்குமோ ரெண்ணெய் தன்னை
சொலவரிய குறுந்தட்டி வேர்பலமோ வஞ்சு
தூளாக்கி யஞ்சுபடி சலத்தி லிட்டு
நிலவரமா யொன்றாக்கிக் கொம்பரக்குத் தானும்
நிறுத்துவிடு ரெண்டரை யாம்பலத் தையொரு
கலவரமில் லாதசல மூன்றுமுறைப் படியாய்
காச்சடா அமுக்கிரா வேரஞ்சு பலமே.

அஞ்சுபல வேரிடித்துத் தூளா யாக்கி
அதற்குமொரு மூன்றுபடி சலமும் விட்டுப்
பஞ்சறவே யெந்தெந்தக் கசாயம் நீரும்
பாரடா அரைப்படிதான் பழமோர் சேரு
வஞ்சமில்லா தாறுபடி எண்ணெய் நாழி
மருந்துவகைக் கற்கத்தில் வரிசை சொல்ல
தஞ்சமுள்ளி வெட்டிலா மிச்சம் சீந்தி
தனிமுசுட்டை குறுந்தொட்டி வேருங் கூட்டே.

கூட்டடா நன்னாரி புழுக்கை வேரும்
கூரிய சாரணையுஞ் சிறுகீரை வேரும்
நாட்டடா கோட்ட மதிமதுர மிந்துசுக்கு
நல்மஞ்சள் கச்சோல மேல மிலவங்கம்

நாட்டடா சிற்றரத்தை திப்பிலியின் மூலம்
புகழ்சாதிக்காய் தாகம் செவ்வள்ளிக் கொடியும்
ஆட்டடா தேவதார மிலவங்கம் பத்திரி
அப்பனே கழஞ்சொன்றாய் மோரி லாட்டே.

ஆட்டியே கலக்கியோர் தாழி சேர்த்து
அடுப்பேற்றி மூன்று நாள் கொதிக்க வைத்து
தீட்டியே நாலாம்நாள் வற்றக் காய்ச்சி
சீராகும் பதங்கண்டு வடித்தி றுத்து
போட்டியே நாலா நாளிற் கொருக்காற்
பூசியேப் பூசிப்போட வோடு நோய்கேள்
ஊட்டியாய் வந்தபல சுரங்கள் வெட்டை
............ சடல்நுரைத் தயிலங் கேளே.

(சு. 1. பா. 381 –384)

செய்முறை: குறுந்தொட்டிவேர் 5 பலம் (175 கிராம்) தூளாக்கி 5 படி (6.5லிட்) நீர் விட்டுக் காய்ச்சவும். கொம்பரக்கு 2½ பலம் (87.5 கிராம்) மூன்றுபடி நீர் விட்டுக் காய்ச்சவும். அமுக்கிராவேர் 5 பலம் (175 கிராம்) தூளாக்கி மூன்றுபடி (3.9 லிட்) நீர் விட்டுக் காய்ச்சவும். இவற்றை நன்கு காய்ச்சிய கசாய நீருடன் பழையமோர் அரைப்படி (0.6 லிட்), எண்ணெய் ஆறுபடி (7.8 லிட்) சேர்க்கவும். இத்துடன் இலாமிச்சு, சீந்தில், முசுட்டை, குறுந்தொட்டி, நன்னாரி, புழுக்கை, சாரணை, சிறுகீரை இவற்றின் வேரையும், கடைச்சரக்கு கோட்டம், அதிமதுரம், இந்துப்பு, சுக்கு, மஞ்சள், கச்சோலம், ஏலம், இலவங்கம், சிற்றரத்தை, திப்பிலிமூலம், சாதிக்காய், செவ்வள்ளிக் கொடி, தேவதாரம், இலவங்கம், பத்திரி இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1 கிராம்) வாங்கி மோரிலாட்டி மேற்கூறிய எண்ணெயுடன் சேர்த்துக் கலக்கி மூன்று நாள் கொதிக்க வைத்து வற்றக்காய்ச்சி நான்காவது நாள் பதம் பார்த்து வடித்து வைத்துக் கொள்ளவும்.

அளவு: ஒரு கரண்டி மேலுக்குப் பூசவும்.

தீரும் நோய்கள்: பல வகைச்சுரங்கள், வெட்டைதிரும்.

(வேறு)

இன்னமொரு மோரெண்ணெய் மோர்படிதா னாலும்
இயல்பான பழங்காடி படிதா னொன்று
பின்னமில்லா நல்லெண்ணெய் படிதா னொன்று
பேர்பெரிய சிற்றாமுட்டிவேர் பலந்தா னாலு

சன்னமா யிடித்ததற்கு நாலுபடி சலத்தைத்
 தாக்கடா நாலொன் றாய்த்தனித் திறுத்து
சொன்னபடி யிவையொன்றாய்க் கலக்கிக் கற்கஞ்
 சூட்டுகிறேன் வகையாகச் சூட்டுகி றேனே.

சூட்டுகிறேன் குறுந்தொட்டி வேர்த்தோலி நன்னாரி
 சுறுக்குடைய முசுட்டைவேர் முத்தக் காசு
தீட்டியதோர் சீந்திவேர் சாரணை லாமிச்சு
 சிறுக்கீரை வேருடனே அமுக்கிரா வேரும்
மூட்டியதோர் கோட்டமொடு யிந்ததி மதுரம்
 ஓங்குபுகழ் வேர்க்கொம்பு செவ்வெள்ளிக் கொடியும்
நாட்டியதோர் பொன்மெழுகு கச்சோல மேலம்
 நல்லமஞ்ச ளிலவங்கப் பத்திரியும் நாட்டே.

பத்திரியுஞ் சாதிக்காய் சிற்றரத்தைக் கிராம்பு
 பழந்தேவ தாரமொடு திப்பிலி யின்மூலம்
முத்திரியுங் கடல்நுரையும் வகைக்கொரு கழஞ்சு
 முறையோடே மோர்விட்டு யாட்டி வாங்கி
இத்தனையுந் தாழியிலே சலக்கி யப்பா
 இயல்பாக மூன்றுநாள் சிறுகொதி யுமிட்டு
வற்றியது பதம்பார்த்து வடித்து வாங்கி
 வளமாகக் கழுத்துக்கீழ்த் தேய்த்தாறப் போடே.

ஆறப்போட் டரைக்கடிகைக் கப்பால் நீயும்
 அழகான தலைக்குமந்த எண்ணெ யிட்டுத்
தேறப்பா சீயக்கா யரைப்புத் தேய்த்துச்
 சிந்தையில்லா வெந்நீரை முழுகச் சொல்லு
மாறப்பா ஒன்றுமில்லை விடச்சு ரங்கள்
 வாதசுரம் வெட்டை பித்தமொடு காந்தல்
நீறப்பா அத்திசுரங் குளிர்தாக சோகம்
 நெஞ்செரிப்பு அழிசுரங்கள் பலசுரங்கள் போமே.

(சு. 1 பா. 377—380)

செய்முறை: மோர் 4 படி (5 2 லிட்), பழங்காடி 1 படி (1.3 லிட்), நல்லெண்ணெய் 1 படி (1.3 லிட்) இவற்றுடன் சிற்றாமுட்டி 4 பலம் (140 கிராம்) வேரை இடித்து, நான்குபடி நீரில் போட்டு நாலொன்றாய் காய்ச்சி இறுத்து, வடித்துச் சேர்த்துக் கொள்ளவும். இவற்றுடன் குறுந்தொட்டிவேர், தோல், நன்னாரி,

சூண்ணம், சூரணம், பதங்கம், கடுகு, இலேகியம் என இவ்வாறு தனித்தனி தலைப்புகளில் கிடைக்கும் பாடல்கள், உரைநடைச் செய்திகளைப் பிரித்தெடுத்து, அந்தந்த தலைப்புக்களின் கீழே சேர்க்கப் பெற்றுள்ளன.

நோயும் மருந்தும் என்னும் இரண்டாம் பகுதியில் கண் நோய்கள், தோல் நோய்கள், சுரம், சன்னி, குன்மம், குட்டம், வாய்வு, வாதம் போன்ற பொதுவான நோய்கள் பற்றிக் கிடைக்கும் பாடல்கள், உரைநடைச் செய்திகளை அந்தந்த தலைப்பில், சுவடிகளில் உள்ளவாறே எடுத்துச் சேர்க்கப் பெற்றுள்ளன.

பாடல்கள், உரைநடைகள் என மாறி மாறி சுவடிகளில் செய்திகள் அமைகின்றன. அவற்றைப் பதிப்பிக்குமிடத்து அந்தந்த தலைப்புக்களில், பாடல்களை முதலிலும், உரைநடைகளை அடுத்த பகுதியெனவும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

பாடல்களுக்கான உரை விளக்கங்கள் சுவடிகளில் இல்லாத நிலையில், அவற்றைச் செய்முறை, அளவு, துணைமருந்து, தீரும் நோய்கள், பத்தியம் என் ஒவ்வொரு பகுதியின் கீழே விளக்கங்கள் தனித்தனியே எழுதிச் சேர்க்கப் பட்டுள்ளன. இம்முறை முதற் பகுதி முழுவதிலும் அமைகின்றது.

பகுதி இரண்டில் பாடற் பகுதிகளுக்கு மட்டுமே இத்தகைய உரைவிளக்கங்கள் எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளன. எஞ்சியுள்ள சுவடிகளின் உரைநடைப் பகுதிகள் தெளிவாக விளங்குவதால் மேலும் உரை விளக்கங்கள் எழுதிச் சேர்க்கப் பெறவில்லை.

தற்கால அளவு முறைப்படி, சுவடிகளில் உள்ள அளவுகளுக்குச் சரியான அளவைகளும் அங்கங்கே விளக்கங்களில் குறிக்கப் பெற்றுள்ளன.

சுவடிகளில் விட்டுப் போனவை, முற்றுப் பெறாதவை, குறையான பகுதிகள் போன்றவை பதிப்பில் எடுத்துக் கொள்ளப் பெறவில்லை.

பாடல்களின் முதலிலோ இறுதியிலோ குறிக்கப் பெற்றுள்ள புள்ளிகள் பாடல்களின் தொடர்ச்சியைக் குறிப்பன. குறிப்பிட்ட தலைப்பிற்கான பாடற் பகுதிகள் மட்டுமே தொகுக்கப் பெற்றதால், பொருளளவில் குழப்பம் ஏற்படுவதைத் தவிர்க்கவே இவ்வாறு அமைக்க வேண்டியதாயிற்று.

## ஏரண்டத் தெண்ணெய்

துறையேது கிரிச்சினங்க ளாறுந் தீர
சொல்லுகிறேன் யேரண்டத் தெண்ணெ யொன்று
முறையேது தேங்காய்ப்பால் படிதா னொன்று
முதிரெலும் பிச்சம்பழச் சாற தொன்று
குறையேது ஈருள்ளிச் சாற தொன்று
கூட்டடா பசுவின்பால் படிதா னொன்று
நிறையேது கசநெருஞ்சி சாற தொன்று
நீசேர்த்துத் தாழிதனி லடுப்பி லேற்றே.

ஏற்றுவாய் கடாகமது வெந்தயம் சீரகமும்
ஏல மதுரமுடன் மிளகாய் கந்தகஞ்
சேர்த்துவாய் வகையொன்று கழஞ்சு மூன்று
தானரைத்துக் கலக்கதிலே மூன்று நாளில்
போற்றுவாய் மெழுகுபதந் தனிலி றுத்துப்
பொடித்திடுவாய் முப்பூக் கழஞ்சி மூன்று
ஆற்றுவாய் கொண்டிடவே மூல வாய்வு
அரைச்சியுடன் கிரிச்சனமும் அணுகா தென்னே.

(சு. 21. பா. 414-415)

செய்முறை: தேங்காய்ப் பால், எலுமிச்சம் பழச்சாறு, ஈருள்ளிச்சாறு, நெருஞ்சிச்சாறு, பசுவின்பால் இவை வகைக்கு ஒரு படி (1.3 லிட்) சேர்த்து அடுப்பில் வைக்கவும். வெந்தயம், சீரகம், ஏலம், அதிமதுரம், மிளகாய், கந்தகம் இவை வகைக்கு மூன்று கழஞ்சு (15.3 கிராம்) சேர்த்தரைத்து மேற்படிச் சாற்றுடன் கலக்கி மூன்று நாள் கொதிக்கவிட்டு, மெழுகு பதத்தில் இறுத்து முப்பூ மூன்று கழஞ்சு சேர்த்துக் கொள்ளவும்.

அளவு: வேண்டிய அளவு.

தீரும் நோய்கள்; மூலவாய்வு, கிரிச்சனம் தீரும்.

## கடல் நுரைத் தைலம்

கேளப்பா கடல்நுரையும் கோட்ட மஞ்சள்
கெந்தமொடு தேன்மெழுகு லாமிச் சம்வேர்
வாளப்பா சதகுப்பை முத்தக் காசு
மண்சிப்பி யிலுப்பைப்பூ கடுகு ரோகணி
வேளப்பா பிசின்கம்பி பெருங்கு ரும்பை
வெட்டிவே ரிந்துவுடன் வேர்க்கொம்பு தானும்
மாளப்பா ஒவ்வொன்று காசு தூக்கி
ஆட்டுநீ மோரினா லாட்டு ஆட்டே.

ஆட்டியே எண்ணெய்படி ஒன்று விட்டு
ஆறுபடி தண்ணிவிட்டு அடுப்பி லேற்றி
நீட்டியே வடித்திறுத்து உடம்பிற் தேய்க்க
நிலையான சுரந்திருங் காந்தல் தீரும்
வாட்டியதோ ருடல்நோவு பொருத்து நோவு
வாயில்நீ ரூறல் சயவறட்சி போகும்
நாட்டியே வெருகெண்ணெய் சுரத்துக் கெல்லாம்
நல்லபிற யோகமடா நாடிப் பாரே.

(சு. 1. பா. 385-386)

செய்முறை: கடல்நுரை, கோட்டம், மஞ்சள், கெந்தம், தேன் மெழுகு, இலாமிச்சம்வேர், சதகுப்பை, முத்தக்காசு, மண்சிப்பி, இலுப்பைப்பூ, கடுகுரோகணி, கம்பிப்பிசின், பெருங்குரும்பை, வெட்டிவேர், இந்துப்பு, வேர்க்கொம்பு இவை வகைக்கு 1 காசளவு (165 மி. கி) நிறுத்து எடுத்து மோரிவிட்டு ஆட்டவும். இத்துடன் ஒரு படி (1.3லிட்) எண்ணெயும், ஆறுபடி (7.8லிட்) நீரும் விட்டு அடுப்பேற்றி, காய்ச்சி வடித்து உடம்பில் தேய்த்து வரவும்.

தீரும்நோய்கள் : தீராத சுரமும், காந்தல், உடல்நோவு பொருத்துநோவு, வறட்சி, வாயில் நீரூறல் முதலியன தீரும்.

## கரிப்பான் தைலம்

செய்யவே யின்னமொருத் தைலஞ் கேளு
சகத்திலுள்ள கையான்சாறு படிதா னொன்று
வெய்யவே கற்றாழஞ் சாறுபடி யொன்று
விளம்பிறேன் நெல்லிக்காய்ச் சாறுபடி தானொன்றும்
உய்யவே மூணுமொன்றா யளந்து விட்டு
ஊற்றுவாய் நல்லெண்ணெய் படிதா னொன்று
மெய்யான சாதிக்காய் பலந்தா னொன்று
வியனாக யரைத்ததிலே கலந்து போடே.

போட்டதனை மெழுகுபதந் தன்னில் வாங்கிப்
புகழாக வடித்ததனை முழுகும் போது
தாட்டிகமாய் கண்ணோவு தலைநோ வோடு
தளமான செவிநோவு சார்ந்த பித்தம்
ஓட்டவிடு முட்டி ணங்கள் பீனிசங்கள்
ஒழிந்துவிடு மென்றுதனு னுரைத்த வாறு
நாட்டிலுள்ளோர்க் கின்னமொரு தயிலஞ்சொல்வேன்.
(சு. 13. பா. 140-141)

செய்முறை : கையாந்த கரைச்சாறு, கற்றாழஞ்சாறு, நெல்லிக் காய்ச்சாறு. நல்லெண்ணெய் இவை வகைக்கு ஒருபடி (1.3 லிட்) சேர்த்து, சாதிக்காய் ஒருபலம் (35 கிராம்) அரைத்துப் போட்டுக் கலந்து, மெழுகு பதமாக வடித்து முழுகவும்.

தீரும் நோய்கள் : கண்ணோய், தலைநோய், செவிநோய், பித்தம், உட்டிணம், பீனிசங்கள் தீரும்.

## கருடக் கிழங்கு எண்ணெய்

ஓடவே மேகமொடு சூலை போக
உயர்கருடக் கிழங்கெண்ணெய் உரைக்கக் கேளு
போடவே கருடனுட கிழங்குபலம் நூறு
பொடியாக்கி யெண்ணெய்ரெண்டு படிநீர் விட்டு
வாடவே ரெண்டுபடி யாகக் காய்ச்சி
வடித்துவிடு யேரண்டத் தெண்ணெய்படி ரெண்டு
தேடவே ரோகணியுங் கரியசீ ரகமும்
மிளகுவகை யொன்று பலந்தா னொன்றே.

ஒன்றாக அடைத்திட்டு அடுப்பி லேற்றி
உத்தமனே சிறுதீயாய் அனலை மூட்டி
நன்றாக மூன்றா நாள் மெழுகுபத மானால்
நல்லாவின் கோரோசனையுங் குங்கு மப்பூ
குன்றாமல் வகைக்குரெண்டு கழஞ்சு தூக்கி
குப்பிரச கற்பூரங் கழஞ்சு வொன்று
சென்றாடப் பொடித்திட்டுக் கலசந் தன்னில்
சேர்வை யெண்ணெய்தனை வடித்தி டாயே.

வடித்திட்ட யெண்ணெய் ஆழாக்குக் கொள்ள
வாதமென்ற யெண்பதுவுங் கிரந்தி சூலை
பிடித்திட்ட சிலேற்பனங்கள் தொண்ணூற் றாறும்
பேசாதே ஓடுமடா பெருவா யனத்தி

நடித்திட்டப் போலவே பிழிந்த சாறும்
விட்டுபடி யொன்று வடிக்கு முன்பே
கடுத்திட்ட மெழுகுபதத் திறுத்துப் போடு
கனமான பத்தியந்தான் உப்பு மாற்றே.

உப்பைவிட்டு வெந்நீரும் அன்னங் கொள்ளு
உத்தமனே மறுபத்திய மிருக்க வேணும்
அப்பைவிட்டு உப்பங்கே வறுத்துக் கூட்டு
அங்கத்தில் கறுப்புவங்கு அகலும் பாரு
கொப்பைவிட்டுக் குதித்த மந்தி போலவே
யொடுக்குவேன் யெண்ணெய்விட்டுப் புளியைக் கூட்டு
செப்பைவிட்டு பொன்பந்து போல வேதான்
தீராத நோய்களெல்லாந் தீருந் தானே.

(சு. 21. பா. 422-425)

செய்முறை : கருடன் கிழங்கு 100 பலம் (3500கிராம்) பொடியாக்கி நீர் இரண்டு படி (2.6லிட்) சேர்த்துக் காய்ச்சி வடித்துக் கொண்டு, ஆமணக்கெண்ணெய் இரண்டுபடி (2.6லிட்) சேர்த்து கடுகு ரோகணி, கருஞ்சீரகம், மிளகு இவை வகைக்கு ஒரு பலம் (35கிராம்) சேர்த்து அடுப்பேற்றி, சிறுதீயிட்டு மூன்று நாள் காய்ச்சி மெழுகுபதமானவுடன் கோரோசனை, குங்குமப்பூ இவை வகைக்கு இரண்டு கழஞ்சு (10.2கிராம்) ரசகற்பூரம் ஒரு கழஞ்சு (5.1கிராம்) பொடி செய்துச் சேர்த்துவடித்துக் கொள்ளவும்.

அளவு : ஆழாக்கு (168மி.லிட்) உள்ளுக்கு உண்ணவும்.

தீரும் நோய்கள் : எண்பது வகை வாதம், கிரந்தி, சூலை, 96 வகை சிலேற்பனங்கள் தீரும்.

பத்தியம் : உப்பை ஒதுக்கவும். வெந்நீருஞ் சோறும் உண்ணவும்.

மறு பத்தியம் : உப்பை வறுத்துச் சேர்த்து, எண்ணெயை நீக்கி புளியைச் சேர்க்கவும்.

## கீழ்க்காய் நெல்லித் தைலம்

சாற்றயின்னம் வகைகேளு கீழ்க்காய் நெல்லி
சமூலமுடன் கால்துலா மிடித்துப் போட்டு
ஆற்றுநீர் தூணி விட்டு கசாயஞ் செய்து
அப்பனே யெட்டொன்றாய் வடித்து வாங்கி

வார்த்திடுவாய் யெள்ளெண்ணெய் படிதான் ரண்டு
வளமான சர்க்கரைதான் பலந்தா னஞ்சு
ஏற்றியே காய்ச்சிவிடு மெழுக தானால்
இயல்பாக முழுகிவரச் செய்தி கேளே.

கேளடா பித்தமொடு பயித்தி யங்கள்
கிறுகிறுப்பு தலைச் சுழற்றல் வாய்நீ ரூரல்
நாளடா ரத்தபித்தம் வெறிபித் தங்கள்
நலமான யேய்ப்பிளைப்பு பித்த ரோகஞ்
சூழடா மஞ்சள்நீ ரேற்ற மூத்திரஞ்
சழன்றுதடா யுட்டிணங்கள் சூட தெல்லாம்
வேளடா மெய்யெரிவு கைகால் காந்தல்
வெளுத்தசடங் கருப்பாகும் வித்தை பாரே.

(சு.13. பா. 124-125)

செய்முறை : கீழ்க்காய் நெல்லி சமூலம் கால்துலாம் (3.5கி.கிராம்) இடித்து, தூணி (21.5லிட்) ஆற்றுநீர் விட்டு, எட்டொன்றாகக் கசாயஞ் செய்து வடித்து, இரண்டுபடி (2.6லிட்) எள்ளெண்ணெயும், ஐந்து பலம் (175 கிராம்) சர்க்கரையும் சேர்த்துக் காய்ச்சி, மெழுகு பதமாக இறக்கி முழுகி வரவும.

தீரும் நோய்கள்: பித்தம், பயித்தியம், கிறுகிறுப்பு, தலைச் சுழற்றல் வாய்நீரூரல், ரத்தபித்தம், வெறிபித்தங்கள், இளைப்பு, பித்தம், மஞ்சள் நீரேற்றமூத்திரம், உட்டிணங்கள், மெய்யெரிவு, கைகால் காந்தல் முதலியன தீரும். வெளுத்த உடலும் கறுப்பாகும்.

## குறுந்தொட்டி வேர்த் தைலம்

உரைக்கிறேன் குறுந்தொட்டி வேர்தான் கேளு
ஓர்நிரையாங் கால்துலா மிடித்துப் போட்டு
நிரைக்கிறேன் தூணிநீ ரெட்டொன் றாக்கி
நேரான யெண்ணெயிரு நாழி விட்டு
அரைக்கிறேன் குறுந்தொட்டி வேர்தொலி பலமிரண்டு
அடவாகக் கசாயத்தி லரைத்துத் தானுங்
கரைக்கிறேன் மெழுகுபதங் கண்டு வாங்கி
கலரவே முழுகிவரில் வாதம்போம் பாரே.

(சு.13. பா. 106)

செய்முறை : குறுந்தொட்டிவேர் கால் துலாம் (0.9கி.கி) இடித்து,தூணி (21.5லிட்)நீரில் போட்டு,எட்டொன்றாகக்காய்ச்சி, எண்ணெய் இருநாழி (2.6லிட்) விட்டு குறுந்தொட்டிவேரின் தோலி இரண்டு பலம் (70கிராம்) கசாயத்திலரைத்துக் கலக்கி, மெழுகு பதமாகக் காய்ச்சி முழுகி வரவும்.

தீரும் நோய்: வாதம் தீரும்.

## குறுந்தொட்டி வேரெண்ணெய்

... ... ... ... ...

சாற்றினேன் குறுந்தொட்டி வேரெண்ணெய் தன்னைத்
தானென்ற நல்லெண்ணெய் படிகா லுக்குத்
தயவான சிற்றாமுட்டிவேர்த் தோலி பாக்களவே.

பாக்களவு பிரமாணங் கொட்டைப் பாக்கு
பருமிளகு வராகனொன்று வெந்தய மவ்வண்ணம்
பாக்களவு வேருடனே கூட வைத்துப்
பஞ்சுபோல் தட்டியதில் பருமிளகு அஞ்சு
பாக்குப்போல பாந்தசட்டி ஒன்றி லேதான்
பதம்பார்க்க யெண்ணெயுடன் கலந்தடுப் பேற்றி
பாக்குப்போல வேகையிலே நுரையேறி வருதல்
பார்த்துநுரை மாறியபின் மிளகுவெடி பதமே.

பதமிளகு ஒன்றுவெடி கண்டிறக்கிப் பார்த்து
பட்சமாய் நாலுநாட் கொருமுழுக்கு முழுகு
இதங்கண்டு ரெண்டுமுறை முழுக்குக் கப்பால்
இயல்பாகப் பழம்புளியைச் சுத்திசெய்து கூட்டு
கெதம் போலே கண்டதெல்லாங் கூட்ட லாகாக்
கிரமமுடன் முழுகிவரக் கேடொன் றில்லை
குதந்தப்பிச் செய்யாதே கூட்டிரதைக் கூட்டு
குறுந்தொட்டி எண்ணெய் குற்றமில்லைத் தானே

(சு. 1. பா. 92-94)

செய்முறை : சிற்றாமுட்டிவேர் தோலி ஒரு கொட்டைப் பாக்களவு, மிளகு, வெந்தயம் வகைக்கு 1 வராகன் (4.2கிராம்) என இவற்றைத் தட்டிப் போட்டு, நல்லெண்ணெய் ¼ படி (0.3லிட் கலந்து, பருமிளகு ஐந்தையும் போட்டு, அடுப்பில் வைக்கவும். நுரையேறி மாறியபின் மிளகு வெடித்த உடன் பதம் பார்த்திறக்க வும். இதை நான்கு நாட்களுக்கொரு முறை முழுகவும். இரண்டு முழுக்குக்குப் பிறகு பழம்புளியைச் சுத்தி செய்து கூட்டவும் பத்தியம் காக்கவும்.

## கொடுப்பைத் தைலம்

குளிரயின்னம் வகையொன்று சொல்லக் கேளு
　　கொடுப்பைநீர் படியொன்று யெண்ணெய் நாழி
தளிரான கோட்டமதில் பலந்தா னொன்று
　　தன்னுக்குள் பசுவின்பால் விட்டே யாட்டி
எளிதாகக் கரைத்துவிடு மெழுகு போலே
　　இனிதாக வடிதயில மியல்பு கேளு
நளினமாய் முழுகிவர மண்ட லத்தில்
　　நயமாகத் தீரும்நோய் நவிலக் கேளே.

கேளப்பா பித்தமெல்லா கெடிகெட் டோடுங்
　　கிறுகிறுப்பு மண்டையிடி காச நீர்த்தான்
பாளப்பா யுள்சுரங்க ளுட்டிண ரோகம்
　　படுபரவி மேலெரிவு கைகால் காந்தல்
கேளப்பா கண்ணெரிவு சிரசில் சூடு
　　தேகவலி யெரிகுன்ம முதல் தீர்ந்துப் பின்னும்
வாளப்பா கண்ணுக்குத் தெளிவுண் டாகு
　　மகத்தானத் தைலமிது வணங்கிச் செய்யே.

(சு. 13. பா. 138-139)

செய்முறை : கொடுப்பைச் சாறு ஒருபடி (1.3லிட்) எண்ணெய் 1 நாழி (1.3லிட்) சேர்த்து அதனுடன் ஒரு பலம் (35கிராம்) கோட்டத்தைப் பசுவின் பால் விட்டு ஆட்டிச்சேர்த்துக்கரைத்து, மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்து, ஒரு மண்டலம் முழுகி வரவும்.

தீரும் நோய்கள் : பித்தம், கிறுகிறுப்பு. மண்டையிடி, காசநீர் உள்சுரங்கள், உட்டிணநோய், மேலெரிவு, கைகால் காந்தல், கண்ணெரிவு, சிரசில்சூடு, தேகவலி, எரிகுன்மம் முதலியன தீரும். கண்ணும் தெளிவாகும்.

## கொடுவேலிவேர்த் தைலம்

நயமான கொடுவேலி பலந்தான் பத்து
　　நன்றாக யிடித்திட்டுப் பதக்கு நீரில்
செயமாகக் காயவைத்து யெட்டொன் றாக்கிச்
　　செப்பிறேன் நல்லெண்ணெய் நாழி விட்டு
நயமான வெண்ணெய் புன்னைக்கா யளவு
　　நிலையான நற்சீரகம் பலந்தா னொன்று
வயமாக யரைத்ததனை கரைத்துக் கொண்டு
　　வாய்ப்பான மெழுகுபத மான போதே,

ஆனதொரு தயிலமது வடித்து மூழ்கு
    ஆனந்த வாய்வுடனுந் தீரா வாய்வு
வானவறள் வாய்வோடு வாத மெல்லாம்
    வருஞ்சொறிவு தினவுமுதல் சிரங்கு குட்டந்
தானமதி லரையாப்புக் கிரந்தி சூலை
    தனிப்புண்கள் புரைகள்பிளவை வீக்க மெல்லாம்
நானெனவே வந்தநோ யித்தனையுந் தீரும்
    நல்லதொரு தைலமிது நாடிப் பாரே.

(சு. 13. பா. 107- 108)

செய்முறை : கொடுவேலி பத்துபலம் (350கிராம்) இடித்துச் சாறெடுத்து 1 பதக்கு (10.7லிட்) நீர்விட்டுக் காய்ச்சி, எட்டொன் றாக்கி, 1 நாழி (1.. லிட்) நல்லெண்ணெய்விட்டு, 1 புன்னைக் காயளவு வெண்ணெயும், ஒரு பலம் (35கிராம்) நற்சீரகமும் அரைத்துக் கரைத்து, மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக் கொண்டு முழுகி வரவும்.

தீரும் நோய்கள்: ஆனந்த வாய்வு, தீராவாய்வு, வறள்வாய்வு, வாதம், சொறிவு, தினவு, சிரங்கு, குட்டம், அரையாப்பு, கிரந்தி, சூலை, புண் புரைகள், பிளவை, வீக்கம் தீரும்.

## சருவாங்க எண்ணெய்

வைத்தி யத்துக்கே சருவாங்க யெண்ணெய்
    ஆக்கினைத்தூள் அஞ்சனம் உன்னை யொன்று
பைத்தியமே பிடியாது யிந்தெண் ணெய்க்கு
    பால்பதக்கு மோர்பதக்கு எண்ணெய் தூணி
சயித்தியமே யிஞ்சிச்சாறு குறுணி வாரு
    சதாவேரி நெரியரிசி மிளகு கோட்டம்
வைத்தியர்கள் இஞ்சி ஆனைதிப் பிலியும்
    வெந்தயமு மிவை வகைக்குப் பலம்பத் தாமே.

பத்தான தூலாங் கால்தான் தேவதாரம்
    பலம்பத்து சடாமாஞ்சி புனுகு சட்டங்
கொத்தானசாறு குறுணிவிட்டுக் குறுந்தொட்டிச் சாறு
    கொடுப்பைச்சாறு மேனிச்சாறு வேளைச்சாறு
முத்தெருக் கின்செவிச் சாறும் வீழிச் சாறும்
    முருங்கைச்சாறு துளசிச்சாறு சங்கங் குப்பி
சித்தாமணக் கெண்ணெய் குறுணி ஆனை
    செம்பொன் னெரிஞ்சிச் சாறுஞ் சிறுசெருப் படியே.

சாறு விட்டு மருந்திட்டு வகைபலம் பத்துத்
தாக்கிட்டு யெரியிட்டு மெழுகுபதத் திற்பூசை
ஏறிட்டு பலியிட்டுக் கண்ணை மூடி
இறக்கிட்டுக் கோர்பரணி தன்னில் மூட்டிக்
கூறிட்டு மகத்தான வியாதிக் கெல்லாங்
கொடுத்திட்டு முழுகிவரச் சுரமும் போமே.

வியாதியாம் பிளவைபோம் சன்னி தீரும்
விடந்தீரும் பீனிசயங்கள் வெருவி யோடும்
நியாதியாம் கரப்பன் வருஞ்சூலை யோடும்
நீரிழிவு கிரந்திகுட்டம் நீர்த்தூ ளாகுஞ்
சாதியாம் நயந்தகா சங்கள் தீருங் கவுசை
சீருங் கபந்தீரு மண்டை நோய்போம்
பாதியாம் பித்தவெட்டை மேக சூலை
பறக்குமடா பயித்தியமும் வாதம் போமே.

வாதம்போம் சோகை காமாலை போகும்
வயிற்றுவலி மூலம் போம்வறட்சி தீருஞ்
சூதக முண்டாக்கி யிருக்குங்கர்ப்பந் தங்குந்
தூவாலைமுதல் பெரும்பாடும் நிற்கும் பாரு
பாதகமே உடலெறிவு செவிடு மந்தம்
பறக்குமடா யெண்ணெய்கண்ட பொழுதே பாரு
ஏதென்றா லொன்றுமில்லை யுண்டா மென்றா
லேகவைத் தியபாக மிதனைச் செய்யே.

செய்யவே புளியோடு உப்பு மாகா
சிறுபயறு பொன்னாங் காணிக் காகும்
வைய்யவே பலாவேது மாகா தப்பா
மைந்தனே வெள்ளாடு முயலு மாகும்
அய்யனே சற்றுப் பாரே நோய்க்கு
ஆவின்பால் நெய்மோரு ஆரைக் கீரைக்
கைய்யவே யில்லையடா யிந்த யெண்ணெய்
கண்கண்ட பொடியையினிக் காட்டு வேனே.

(சு. 4. பா. 66-71)

செய்முறை : பால், மோர் வகைக்கு ஒரு பதக்கு (10.7லிட்) எண்ணெய் ஒரு தூணி (21.5லிட்), இஞ்சிச்சாறு குறுணி(5.3லிட்) சதாவேரி, நெரியரிசி, மிளகு, கோட்டம், இஞ்சி, யானைத் திப்பிலி, வெந்தயம், தேவதாரம், சடாமாஞ்சி இவை வகைக்கு 10

பலம் (350கிராம்), புனுகுசட்டம் ¼ பலம் (8.7கிராம்), குறுந் தொட்டி, கொடுப்பை, குப்பைமேனி, வேளை, முத்தெருக்கன் செவி, வீழி, முருங்கை, துளசி, சங்கங்குப்பி இவற்றின் சாறுகள், சிற்றாமணக்கெண்ணெய் இவை வகைக்கு 1 குறுணி (5.3லிட்) யானை நெரிஞ்சில் ,சிறுசெருப்படி இவற்றின் சாறு வகைக்கு 10 பலம் (350கிராம்) சேர்த்து அடுப்பேற்றி எரித்து மெழுகுபதமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளவும்.

அளவு : நோய்க்குத் தக்கவாறு கொடுத்து முழுகவும்.

தீரும்நோய்கள் : பிளவை, சன்னி, பீனிசம், கரப்பான், சூலை, நீரிழிவு, கிரந்தி, குட்டம், காசம், கவுசை, கபம், மண்டைநோய், பித்தவெட்டை, மேகசூலை, பயித்தியம், வாதம், சோகை, காமாலை, வயிற்றுவலி, மூலம், வறட்சி, பெரும்பாடு, உடலெறிவு செவிடு, மந்தம் தீரும். கர்ப்பந்தங்கும்.

பத்தியம் : புளி, உப்பு ஆகாது. சிறுபயறு, பொன்னாங்காணி ஆகும். பலா ஆகாது. வெள்ளாடு, முயல், ஆவின்பால், நெய், மோர், ஆரைக்கீரை முதலியன ஆகும்.

## சவரித் தைலம்

... ... ... ... ...

நாட்டிலுள்ளோர்க் கின்னமொரு தைலஞ் சொல்வேன்
நலமான சவரியது பலம்நூறு வாங்கே.

பலநூறுந் தானிடித்து தூணி நீரில்
பருவமாய்க் காய்ச்சிவற்றி யெட்டொன் றாக்கி
சலமதனை வடிகொண்டு யெண்ணெய் நாழி
சிறக்கவே விட்டுரெண்டு மொன்றாய்ச் சேர்த்து
நலமாகச் சீரகந்தான் பலந்தா னொன்று
நாட்டியரைத் ததனுள்ளே கரைத்து விட்டு
பிலமாக மெழுகுபத மான போது
பிசகாமல் வடித்துவைத்து முழுகு வாயே.

வாய்ப்பான வாதமொடு குட்ட மெங்கே
வாதத்தில் வந்ததொரு ...... ......

(சு. 13. பா. 141-143)

செய்முறை : சவரி 100 பலம் (3.5கி.கிராம்) இடித்து, நீர் 1 தூணி (21.5லிட்) இட்டு எட்டொன்றாகக் காய்ச்சி,எண்ணெய் 1 நாழி (1.3லிட்) சேர்த்து, சீரகம் ஒரு பலம் (35கிராம்) அரைத்துக் கரைத்து, மெழுகுபதமாக வடித்து முழுகவும்.

தீரும் நோய்கள் ; வாதம், குட்டம் போன்றன தீரும்.

## சாரணைவேர்த் தைலம்

முழுகவே யின்னமொரு தயிலங் கேளு
மூர்கமாஞ் சாரணைவேர் பலந்தான் பத்து
இறுகவே யிடித்ததனைப் பதக்கு நீரில்
இட்டுவற்றி யெட்டொன்றா யெண்ணெய் நாழி
மறுகவே கொதித்ததனை யிறுத்து வாங்கி
மகத்தான மெழுகுபத மான வாறே
குறுகவே வடித்ததனை முழுகும் போது
குடிபோகும் வாதமொடு வாய்வின் கூறே.

(சு. 13. பா. 133)

செய்முறை : சாரணைவேர் பத்துபலம் (350கிராம்) இடித்து 1 பதக்கு (10.7லிட்) நீரில் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி எண்ணெய் 1 நாழி (1.3லிட்) சேர்த்து, கொதிக்க வைத்து மெழுகு பதமாக வடித்து முழுகி வரவும்.

தீரும் நோய்கள் : வாய்வு, வாதம் தீரும்.

## சிந்தாதி எண்ணெய்

சீர்சிறந்து உடல்தனிலே கவுசை ரோகம்
சிரசுதனில் குடியிருக்கும் பயித்திய ரோகம்
பார்தனிலே விழுந்தெழுந்த சூலை ரோகம்
பம்பரம்போ லாடுகின்ற நீராம்பற் கட்டி
பேரெ ழுந்த நீராம்பற்கட்டி மலத்துக் கட்டு
பெரும்பாடு நாவடைப்பு கிரந்திக் கெல்லாம்
ஊரெழுந்து குடிப்போக சூட்ச மாக
உத்தமனே யெண்ணையொன்று உரைக்கக் கேளு.

கார்சிறந்த காயமோ டுள்ளி வாழும்
காட்டெருமைப் பாலோடு கடுக்கா யிந்துகாரம்
சீர்சிறந்த சீரகமும் திப்பிலியுந் தானுந்
தேங்காயின் பாலெட்டு யெண்ணைீயொன்று
வாரெழுந்த வேலியின்பால் சமனாய்க் கூட்டி
வாகாக யடுப்பேற்றி ரெண்டு சாமம்
வேகமுள்ள விறகதினால் தீயை மூட்டி
வெந்திறக்க பதமொன்று யின்னங் கேளு.

சாகாது யெண்ணையப்பா தொட்டுப் பாரு
தண்ணீர்போ விருக்குமடா யிறுத்துக் கொண்டு
நோகாம லுண்பவர்க்கு நாற்கழஞ்சி யெண்ணெய்
நாட்டுமுன்னே பறக்குமடா மேக ரோகம்
பாகத்து போதுடல் சிரங்கே யானால்
பறக்குமடா தொட்டிட்டால் பிசாசு போகும்
போகுமேக ஓசையெட் டுயிர்மை தானும்
புண்ணியனே காதடைப்புத் தீரப் போகும்.

மருவென்ற பெண்களுக்கு சூதகத்தின் வெட்டை
மாளுமடா நுணாக்கிரந்தி பசளைக் காயும்
அரிதென்னும் புளியில்லாப் போசனமே கூட்டு
ஆத்துமத்திற் கருவூரார் யாத்த நூலை
சரியென்று சித்தரெல்லாம் யிந்தநூலைக் குலாவிப்பாடி
தாரணியில் மனிதருக்கு யாகு மென்று
பெரிதென்று யிந்தநூலை சித்தர் சொன்னார்
பெருமைமிகு சிந்தாதி யெண்ணெ யென்றே. (சு.4)

செய்முறை : பெருங்காயம், உள்ளி, காட்டெருமைப்பால், கடுக்காய், இந்துப்பு, காரம், சீரகம், திப்பிலி, இவை ஓரளவு, தேங்காய்ப்பால், எண்ணெய், வேலியின் பால் சமனளவுச் சேர்த்து அடுப்பேற்றி இரண்டு சாமம் (6 மணிநேரம்) தீயெரித்து எண்ணெய் தண்ணீர் போலிருக்கும் பதத்தில் இறுத்துக் கொள்ளவும்.

அளவு : 4 கழஞ்சு (20.4 கிராம்) எண்ணெய் உள்ளுக்கு கொடுக்கவும்.

தீரும்நோய்கள் : மேகரோகம், காதடைப்பு, சூதகம், வெட்டை, சிரங்கு, கிரந்தி தீரும்.

பத்தியம் : புளி நீக்கவும்.

## சீரகத் தைலம்

பாரப்பா சீரகமோர் படிதா னிரண்டு
பதமாக யிடித்துநீர் பதக்கில் போட்டு
சீரப்பாக யெட்டொன்றாய் காய்ச்சி வாங்கி
சிறப்பாக எண்ணெயதில் நாழி விட்டு
காரப்பா கார்கோல மரிசிபல மிரண்டு
கவீசாய்விட்டு யரைத்ததனை கலக்கிக் கொண்டு
ஏமப்பா மெழுகுபத மாகக் காய்ச்சி
இயல்பாக முழுகிவர குணத்தைக் கேளே,

குணமென்ன குன்மமெட்டும் வாய்வுப் பத்துங்
குட்டமோ தழுகணையும் பத்தும் போகும்
மணமென்ன வாந்திபித்தங் கிறுகி றுப்பு
வாய்வினால் வந்ததொரு சோகை பாண்டு
கணமென்ன உட்டிணமாஞ் சூடுந் தீருங்
கமலத்தில் சூடான கபநீர்த் தீரும்
பணமென்ன செலவுமுண்டோ பாருள் ளோர்க்கு
பண்பாக முளைத்தெழுந்த மூலிகைக்குள் பாரே.

மூலிகைக் குள்வெகு மூலி சஞ்சீவியாய்
முளைத்ததே மலைதோறுங் குவடு தோறுந்
தாலிகையாம் நாட்டுக்குள் வெகுமூலி யுண்டு
தாய்தந்தை யறிவார் கள்சாண மாண்பர்
யாலிகையாம் வைத்தியர் கள்குணத்தைக் காணார்
வயிறுபி ழைப்பதற் கலைவார் மெத்த
சோலிகைக்குள் மனதுவைக்க வேண்டாஞ் சொன்னேன்
சோர்வில்லா திருநூறுந் துரைதான் பாரே.

(சு 13, பா.119-121)

செய்முறை : சீரகம் இரண்டுபடி (2. 6லிட்) 1 பதக்கு (10.7லிட் நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி அதனுடன், நாழி (1.3லிட்) எண்ணெயும் விட்டு, இரண்டு பலம் (70கிராம்) கார் கோலரிசியை அரைத்துக் கலக்கி மெழுகுபதமாகக் காய்ச்சி முழுகி வரவும்.

தீரும்நோய்கள் : எட்டுவகைக் குன்மம், பத்துவாய்வு, குட்டம் வாந்தி, பித்தம், கிறுகிறுப்பு, சோகை. பாண்டு வாய்வு, கணம், உட்டிணம், சூடு, கபநீர் முதலியன தீரும்.

## சூரிய விதைத் தைலம்

நூற்றிலே இன்னமொரு தைலங் கேளு
நுணுக்கமுள்ள சூரியவிதை துலாமுங் கால்தான்
ஊற்றிலே நீர்பதக்கி லிடித்துப் போட்டு
ஒரு விறகாய்க் காய்ச்சியங்கே யெட்டொன் றாக்கி
காற்றினால் வடித்ததனி லெண்ணெய் நாழி
காணவிட்டு கற்கவகை சாற்றக் கேளு
சோற்றிலே யாறுமாத்தை காடி நாழி
சுகத்திலே பலமொன்று யரைத்துச் சூட்டே.

சூட்டதிலே மெழுகுபத மாக வாங்கிச்
சுகமாக முழுகிவர மண்ட லந்தான்
ஓட்டிவிடுங் கிரந்திகுட்ட சூலை குன்மம்
உண்டுவிடுங் கிராணியெல்லா முள்மூ லத்தை
மாட்டியே நீர்களெல்லாம் வாங்கிப் போடு
மடங்காத பீனிசமு மண்டை சூலை
தாட்டிகமாத் தீர்த்துவிடுந் தயிலப் போக்குச்
சஞ்சீவி போலவுந்தான் சாற்றி னேனே.

(சு 13. பா. 122-123

செய்முறை : சூரிய விதை கால்துலாம் (0.875கி). 1 பதக்கு 10.7லிட்) நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி எண்ணெய் 1 நாழி (1.3லிட்) விட்டு காடி 1 பலம் (35 கிராம்) அரைத்துச் சேர்த்து, மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்து ஒரு மண்டலம் முழுகவும்.

தீரும்நோய்கள் : கிரந்தி, குட்டசூலை, குன்மம், கிராணி உள்மூலம், நீர்கள், பீனிசம், மண்டைசூலை முதலியன தீரும்.

## செம்முள்ளித் தைலம்

செப்பிறேன் செம்முள்ளி பலநூ றப்பா
சிறக்கவே சமூலந்தா னிறுத்துப் போட்டு
ஒப்பிறேன் தூணிநீ ரதிலே விட்டு
உறுகவே யெட்டோன்றாய்க் காய்ந்து வற்றி
அப்பிறே னதைவடித்து யெண்ணெய்யிரு நாழி
அதிலேவிட்டு மெழுகுபத மான வாறே
நப்பிறேன் முழுகிவருங் காலந் தள்ளி
நன்றாகத் திரும்நோய் நவிலக் கேளே.

நவிலக்கேள் சயமீளை சயரோ கங்கள்
நாடாது மந்தார காசத் தோடு
கவிலக்கேள் வாதமெல்லாங் காணா தோடுங்
கசைநோவு குறைநோவு கண்ணீர்ப் பாய்ச்சல்
அவிலக்கேள் புண்புரைக ளெல்லாந் தீரும்
அரையாப்பு கிரந்திமுத லண்ட வாத
முவிலக்கேள் வீக்கமொடு விடபாகந் தானும்
ஓடுமடா யித்தைலம் முழுகும் போதே.

(சு.13.பா. 13 13

செய்முறை : செம்முள்ளி சமூலம் 100 பலம் (3.5கி. கிராம்) இடித்து 1 தூணி (21.5லிட்) நீரில் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து, எண்ணெய் இருநாழி (2.6லிட்) சேர்த்து மெழுகு பதமாகக் காய்ச்சி முழுகி வரவும்.

தீரும்நோய்கள் : ஈளை, சயம், மந்தாரகாசம், வாதம், குறை நோவு, கண்ணீர்ப்பாய்ச்சல், புண்புரைகள், அரையாப்பு, கிரந்தி, அண்டவாதம், வீக்கம், விடபாகம் முதலியன தீரும்.

## மதுராதித் தைலம்

சாற்றக்கேள் மதுராதித் தைல மொன்று
தபோதனர்க ளாராய்ந்து சாபந் தீர்த்துச்
சாற்றக்கேள் சிறுகீரை பொன்னாங் காணி
தளிரா வரையிலையுந் தாமரையின் வளையஞ்
சாற்றக்கேள் முடத்தாழை விழுதுங் கூடச்
சமபாக மிடித்ததனைப் பதக்கு நீரில்
சாற்றக்கேள் நாலொன்றாய்க் குறுக்கி வாங்கித்
தயிர்போலப் பிழிந்துவைத்துப் பின்னுங் கேளே.

கேளப்பா வெட்டிவேர் பலமுமஞ் சாகுங்
கெடியாகு மிலாமிச்சம் பலமு மஞ்சாம்
நாளப்பா சந்தனமும் பலந்தா னஞ்சு
நலமான ரண்டுபலஞ் செங்கழு நீர் மூலந்
தாளப்பா யிலையெல்லாஞ் செவ்விளநீர் விட்டுச்
சாதகமாய் மயனம்போ லாட்டி வாங்கி
நீளப்பா முக்குறுணி சலத்திற் சேர்த்து
நெருப்பெரித்து யெட்டொன்றாய் குறுக்கி வாங்கே.

வாங்கியே முந்திவைத்த கசாயத் தூட்டி
மைந்தனே மேல்மருந்தை மாட்டக் கேளு
வாங்கியே யில்வங்க மேலங் கோட்டம்
பருமதுரஞ் சண்பகப் பூ சாதிப் பத்திரி
தாங்கியே மஞ்சிட்டி நாகங் கல்நார்
சாதிக்காய் சடாமாஞ்சி கிராம்பு சீரம்
ஓங்கியே மான்சேகையிங் கூகை நீறு
முத்தமனே வகையொன்று சழஞ்சி யொன்றே.

ஒன்றாக மருந்தெல்லா மாட்டி வாங்கி
யுறுகவே முன்வைத்த கசாயத் தூட்டி
நன்றாக நல்லெண்ணெய் படியு மிட்டு
நாயகற்குப் பூசைசெய்து வடித்துப் பின்பு

குன்றாகுங் கற்பூரம் புனுகு சட்டங்
கோரோசனை யிரண்டு பணந்தான் சேர்த்து
பொன்றாகத் தயிலமிட்டுச் சீயக்காய் தேய்த்துப்
புகழாக முழுகிவரப் புதுமைகேளே.

புதுமையென்ற மேகங்க ளிரண்டு பத்துந் துள்ளிப்
பொறிவீழ்ந்த கருமருந்து போல வேகும்
பதுமையென்ற வுருவம்போல் வாகடங்கள் சொன்னால்
பண்டிதர்க ளறியாமல் பழிகைக் கொண்டார்
கதுமையென்ற தொழிலெல்லாஞ் சூத்திரத்தில் சொன்னேன்
கண்கெட்ட குருடருக்குங் காண லாகுங்
கொதுமையென்ற நாகபூ பதியைக் கேளுங்
கோடான கோடிபிணி தீருந் தானே.

(சு1. பா 650—654)
(சு9. பா 144—148)

செய்முறை: சிறுகீரை, பொன்னாங்காணி, ஆவாரையிலை, தாமரை வளையம். தாழைவிழுது இவற்றை ஒரளவாய் எடுத்து இடித்து 1 பதக்கு (10.7 லிட்) நீரிவிட்டு நாலொன்றாய்க் காய்ச்சி தயிர் போல பிழிந்தெடுத்துக் கொள்ளவும். வெட்டிவேர், இலாமிச்சம்வேர், சந்தனம் இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்) செங்கழுநீர் மூலம் 2 பலம் (70 கிராம்) எடுத்துச் சேர்த்து, செவ்விள நீரில் நன்றாக அரைத்து மூன்று குறுணி (15.9 லிட்) நீர்விட்டுக் காய்ச்சி எட்டிலொன்றாக வடிக்கவும். இதை முன் சொன்ன கசாயத்துடன் சேர்க்கவும். அத்துடன் இலவங்கம், ஏலம்,கோட்டம் மதுரம், சண்பகப்பூ, சாதிப்பத்திரி, மஞ்சிட்டி, பூநாகம், கல்நார், சாதிக்காய், சடாமாஞ்சில், கிராம்பு, சீரகம், கூகை நீறு, இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) கூட்டி நல்லெண்ணெய் 1 படி (1.3 லிட்) சேர்த்து கற்பூரம், புனுகு சட்டம், கோரோசனை இவை வகைக்கு 2 பணவெடை (976 மி.கி) சேர்த்துத் தைலமாக வடித்தெடுக்கவும்.

அளவு: வேண்டிய அளவு தலையில் தேய்ந்து மூழ்கி வரவும்.

தீரும் நோய்கள்: மயக்கங்கள், மேக நோய்களனைத்தும்தீரும்.

## மேகத் தைலம்

ஓடவே மேகத் தைலத்தைக் கேளு
உற்பணமாஞ் சந்தனமு மிலாமிச்சி யோடு
வாடவே ஆவரையின் பட்டை யோடு
வகைபத்துப் பலமாக வாங்கி யேதான்

நாடவே தூணிநீ ரெட்டொன் றாக
நலமாகக் கசாயத்தில் யெண்ணெய் நாழி
பாடவே நறுநன்றி வேருங் கூடப்
பறங்கியுடப் பட்டைபல மரைத்துப் போடே.

அரைத்துவிட்டு காய்ச்சியே யிறக்கும் போது
அரிமருகன் பூசைபண்ணி யிறக்கி முழுகு
உரைத்திட்ட மேகமது யிருப துந்தான்
ஓடிவிடு முழுகையிலே வெந்நீர் மூழ்கு
நரைத்திட்ட மயிர்க்கறுக்குங் கோட்டம் போட்டால்
நல்லசந்த னாதியிதுக் கொவ்வா துண்டோ
விரைத்திட்ட மேகமிட்ட பிணிபே யோடும்.
விரமுமே பித்தமெல்லா மெங்கே போச்சோ.

(சு. 4. பா. 1-2)

செய்முறை: சந்தனம், இலாமிச்சு, ஆவாரம் பட்டை இவை வகைக்கு 10 பலம் (350 கிராம்), ஒரு தூணி (21.5 லிட்) நீரிலிட்டுக் கசாயமாக்கி 1 நாழி (1.3 லிட்) நல்லெண்ணெய்ச் சேர்த்து, நறுநன்றிவேர். பறங்கிப்பட்டை இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்) எடுத்துச் சேர்த்து முறைப்படி காய்ச்சி வடிக்கவும்.

அளவு: வேண்டிய அளவு தலையில் தேய்த்து வெந்நீரில் மூழ்கி வரவும்,

தீரும் நோய்கள்: மேகநோய், பித்தம் தீரும்.

## வில்லைவேர்த் தைலம்

சாந்தகமாம் வில்லைவேர்த் தைலங் கேளுத்
தனிப்பருத்த வில்லைவேர்ப் பலந்தான் பத்துப்
பாந்தமா யிடித்ததனை பதக்கு நீரில்
பருவமாய்க் காய்ச்சியே யெட்டொன் றாக்கிப்
போந்தமா மெண்ணெயது நாழி விட்டுப்
புகழான கசாயத்தில் சந்தனத்தின் கட்டை
ஏந்தமாய்ப் பலமொன்று மைபோ லாட்டி
இட்டுமெழுகு பதத்தில் வடித்து மூழ்கே.

மூழ்கிவரப் பித்தமொடு வறட்சி போகு
முட்டிணமும் பொருமலுன் மத்தம் போகுங்
கீழ்வயிற்றில் கனத்திருந்த கவுசி கெண்டை
கிறுகிறுப்புப் பயித்தியமாஞ் சுரமுந் தீரும்

ஏழ்வகையா மூன்றுவகை மேகம் போகும்
மேன்மேலுங் கண்ணிலுள்ள வியாதி தீருந்
தாழ்வதில்லை வில்லைவேர்த் தயில மூழ்கில்
தணிந்திடுமே வியாதியெல்லாந் தரணி யோர்க்கே.
(சு 13. பா. 108—109)

செய்முறை: பருத்த வில்லைவேர் பத்துபலம் (350 கிராம்) இடித்து 1 பதக்கு (10.7 லிட்) நீரில் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி, 1 நாழி (1.3 லிட்) எண்ணெயும் விட்டு, ஒரு பலம் (35 கிராம்) சந்தனக் கட்டையை மைபோல ஆட்டிச் சேர்த்து. மெழுகுப் பதமாகக் காய்ச்சி முழுகவும்.

தீரும் நோய்கள்: பித்தம், வறட்சி, உட்டிணம், பொருமல், கீழ்வயிற்றில் கனத்திருக்கும் கவுசி, கெண்டை, கிறுகிறுப்பு. பயித்தியசுரம், மூன்று வகை மேகம், கண்ணிலுள்ள நோய்கள் முதலியன தீரும்,

## வில்வாதி எண்ணெய்

ஆமென்ற சுத்தவில் வாதி யெண்ணெய்
அறையிறே னச்சடி சமூலங் கொண்டு
பானென்ற முப்பத்தி ரண்டுபல மிடித்து
பாண்டத்தி லிட்டுயிரு தூணிசலம் வாரு
ஏமென்ற குறுணிசல மாகக் காய்ச்சி
இறுத்ததனை ஐயெண்ணெய் குறுணி வாரு
தானென்ற சந்தனமும் மதுரங் கோட்டம்
சாதிக்காய் கிராம்புபலம் பட்டை பத்திரியே.

பட்டையா மரத்தைசுக்கு அக்கிரா காரம்
பாங்கான தாளிச பத்திரியு மாஞ்சி
திட்டமாம் பெருங்காயங் கடுகு ரோகிணி
திப்பிலிவாய் விளங்கங் கூகை நீறு
கோட்டமாம் வால்மிளகு குரோசாணி ஓமம்
குங்குமப்பூ கருஞ்சீரகங் கடுக்காய் தானி
திட்டமாஞ் சண்பகப்பூக் கொத்த மல்லி
செவ்வியும் வாலுளுவை சிறுநாகப் பூவே

பூவொடு யிவையெல் லாம்வகை வகைக்கும்
பொடிசெய்து போட்டுநீ நாற்கழஞ்சு வீதம்
பாலொடு பழச்சாறு படிதான் வாரு
பசுவின்பால் படிவார்த்து யடுப்பி லேற்று

சேலொடும் கந்தனுக்குங் கணபதிக்கும் பூசைபண்ணு
சிறப்பாக யெரித்ததனை மெழுகு பார்த்து
பூவோடு வடிகலசந் தன்னிற் கேளு
புழுகுகோ ரோசனை கத்தூரி போடே.

போட்டிடுவாய் வகைவகைக்கு கழஞ்சு வீதம்
பாலோடு பழம்போட்டுநீ யெண்ணெய் பதனம்பண்ணு
நாட்டுவாய் உள்ளுக்குக் காசெடை தான் கொள்ளு
நாசியிலும் துளிகுத்தி மேலும் பூசு

திட்டமாய் முகவாத மண்டைச் சூலை
தீர்ந்துவிடும் பித்தமொடு நீல காசம்
எட்டுவகை பீனிசமு வாய்வு சூலை
உடம்பிலுள்ள நோயெல்லா மோடுந் தானே.

ஓடுமே யிந்தவகை நோய்க ளெல்லாம்
உத்தமனே சீயக்காய் பசும்பயறு மிளகு
பாடுமே கைப்பு புளிப்பு மாகா
பாங்கான மறுபத்திய மெல்லாங் கூட்டு
ஓடாத தலைநோய் மண்டைச் சூலை
உத்தமனே நாசிபிடங் கன்னச் சூலை
நாடாத நயனவாத முகவாத சன்னி
நலமான பத்தியந்தான் நன்றாய் பாரே
(சு. 19 .பா. 175—179)

செய்முறை: வில்வம் சமூலம் 32 .பலம் (1.120கி கிராம்) இடித்து இருதூணி (43 லிட்) நீர் விட்டு, குறுணி (5.3 லிட்) அளவாகக் காய்ச்சி இறுத்து, ஐந்து கூட்டு எண்ணெய் குறுணி (5.3 லிட்) சேர்த்து, சந்தனம், அதிமதுரம், கோட்டம், சாதிக்காய், கிராம்பு, இலவங்கப்பட்டை, சாதிபத்திரி, அரத்தை. சுக்கு, அக்கிராகாரம். தாளிச பத்திரி, சடாமாஞ்சில், பெருங்காயம், கடுகுரோகணி, திப்பிலி. வாய்விளங்கம், கூகைநீறு, வால்மிளகு, குரோசாணி ஓமம், குங்குமப்பூ, கருஞ்சீரகம், கடுக்காய், தான்றி, சண்பகப்பூ, கொத்தமல்லி, செவ்வி, வாலுளுவை, சிறுநாகப்பூ இவை வகைக்கு 4 கழஞ்சு (20.4 கிராம்) பொடி செய்துப் போட்டு, பழச்சாறு, பசுவின் பால் 1 படி (1, 3 லிட்) சேர்த்து மெழுகு பதமாகக் காய்ச்சி, வடிகலசத்தில் வடித்து, புழுகு, கோரோசனை, கத்தூரி வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) போட்டு பக்குவமாய் வடித்தெடுத்துக் கொள்ளவும்.

அளவு: காசெடை (165 மி.கி.) உண்டு மூக்கிலும் சிறிது விட்டு, உடம்பிலும் பூசவும்.

தீரும் நோய்கள்: தலைநோய், கன்னச்சூலை, முகவாதசன்னி மண்டைச்சூலை, பித்தம், நீலகாசம், எட்டுவகைப் பீனிசம். வாய்வு, சூலை, உடம்பிலுள்ள நோயனைத்தும் தீரும்.

பத்தியம்: சீயக்காய், பாசிப்பயறு, மிளகு, கைப்பு, புளிப்பு ஆகாது:

## வெட்டிவேர்த் தைலம்

போக்கான செய்தியொன்று சொல்லக் கேளு
புகழான வெட்டிவேர் பலந்தான் பத்து
நோக்காகப் பதக்குநீ ரெட்டொன் றாக்கி
நுணுக்கமாய் வடிகட்டி யெண்ணெய் நாழி
வாக்கான மதுரமது பலந்தா னொன்று
மைந்தனே கசாயத்தில் மைபோ லாட்டி
தாக்கான யெண்ணெய்க்குள் கரைத்துக் கொண்டு
சாதகமாய் மெழுகுபதன் தன்னில் வாங்கே.

வாங்கியே முழுகிவர வரிசை கேளு
மகத்தான தைலமது மண்டை சூலை
ஓங்கியே பித்தமொடு பிறநீர்க் கோர்வை
ஒளிமருளுங் கண்புகைச்சல் காது மந்தம்
ஏங்கியே யேய்ப்பிளைப்பு மேல்கால் நோவு
இசைகெட்ட காதுசெவிக் குத்தல் காந்தல்
நீங்கியே போவதற்கு மண்ட லந்தான்
நேராக யொன்றுவிட்டு யொருநா ளென்னேன்.

(சு. 13. பா. 102—103)

செய்முறை: வெட்டிவேர் பத்துபலம் (350 கிராம்) 1 பதக்கு (10.7 லிட்) நீரில் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி வடிகட்டி எண்ணெய் 1 நாழி (1.3 லிட்) சேர்த்துக் கலந்து மெழுகுபதமாகக் காய்ச்சி முழுகவும்.

தீரும் நோய்கள்: மண்டை சூலை, பித்தம், நீர்க்கோர்வை, கண்புகைச்சல், காதுமந்தம், இளைப்பு, மேல்கால் நோவு, செவிக் குத்தல், காந்தல் முதலியன தீரும். 48நாட்கள் (ஒரு மண்டலம்) ஒரு நாள் விட்டு ஒரு நாள் முழுகவும்.

## வேங்கைத் தைலம்

தரணியுள்ள மானிடர்கள் பிழைக்க வேண்டிச்
சாற்றுறேன் வேங்கையுட தைலந் தன்னை
நிரணியாய்ப் பலம்பத்து வேங்கையுட்பட்டை
நிறத்தூளா யிடித்துவிடு தூணி நீரில்
பரணியென்ற நீரதுதா னெட்டொன் றாக்கிப்
பாரப்பா கசாயத்தி லாமிச் சம்வேர்
அரணியாமல் பலமொன்று யரைத்துப் போட்டு
அழகான மெழுகுபத மான வாறே,

வாறாக முழுகிவர வன்மை கேரு
வாதமொடு சூலைகளு மாண்டுபோகும்
பேராகப் பித்தமது மாண்டுபோகும்
பீனிசமு மண்டையிடி பிரட்டல் சத்தி
வீரான வீக்கமதில் வாங்கிப் போகு
மெய்யெல்லாங் கிரந்தியுண்டாம் விழிரோகம் போகும்
நூறாகு முனஞ்சொன்ன தைலம் போக்கு
நுணுக்கமாய் பற்பத்தின் போக்கு நூறே.

செய்முறை: வேங்கைப்பட்டை 10 பலம் (350 கிராம்) தூளாக இடித்து, 1 தூணி (21.5 லிட்) நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து இலாமிச்சம்வேர் ஒரு பலத்தில் (35 கிராம்) இக்கசாயம் விட்டரைத்துக் கலக்கி எண்ணெய் 1 நாழி (1.3 லிட்) சேர்த்து மெழுகு பதமாகக் காய்ச்சி முழுகவும்.

தீரும் நோய்கள்: வாதம், சூலை, பித்தம், பீனிசம், மண்டையிடி, பிரட்டல், சத்தி, வீக்கம், கிரந்தி, விழிநோய் முதலியன தீரும்.

## வேம்புத் தைலம்

என்னவே இன்னமொரு தைலஞ் சொல்வேன்
இனிதான வேம்பினுட பட்டை வாங்கி
உன்னவது கால்துலா மிடித்துப் போட்டு
ஒருதூணி நீர்விட்டு யூறிக் காய்ந்து
சொன்னதொரு யெட்டொன்றாய்க் காய்ந்து வற்றிச்
சுருதிபெற யெண்ணெயிரு நாழி விட்டு
நன்னயமா மேலமீரு பலந்தா னிரண்டு
நலமான கசாயத்தி லரைத்துப் போடே.

அரைத்துடனே காய்ச்சியே மெழுகுபத மானால்
ஆற்றியே வடித்திறுத்து முழுகும் போது
நிரைத்திட்ட வாதமெல்லா மெங்கே போச்சு
நிசமான சூலையொடு குட்ட ரோக
மரைத்திட்ட தழுதனையு மேல்கடுப்பு
செங்கரப்பான் புண்புரைகள் போகுஞ் சொன்னேன்
உரைத்திட்ட தைலத்தி லுறுதி மெத்த
உத்தமனே தைலமொன்று யுரைக்கி றேனே.

(0.13 பா. 104-105)

செய்முறை : வேம்பின் பட்டை கால் துலாம் (0.9 கி.கி) இடித்து, ஒரு தூணி (21-5 லிட்) நீரில் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து, இருநாழி (2.6லிட்) எண்ணெய் சேர்த்து, இரு பலம் (70 கிராம்) ஏலத்தை மேற்கண்ட கசாயம் விட்டரைத்து, எண்ணெயுடன் கரைத்து, மெழுகுபதமாகக் காய்ச்சி வடித்திறுத்து முழுகவும்.

தீரும்நோய்கள் : வாதம், சூலை, குட்டம், மேல்கடுப்பு, செங் கரப்பான், புண்புரைகள் முதலியன தீரும்.

## தைலம்-பொது

வாய்ப்பான தையிலமொன்று இன்னஞ் சொல்வோ
மைந்தனே வகைகேளு ஏலங்குந் திருக்கம்
வாய்ப்பான கச்சோல மடவி கச்சோல
மருவுசடா மாஞ்சிகொட்ட நறும்பிசின் சந்தனமும்
வாய்ப்பான சாதிக்காய் பழந்தேவ தாரம்
வங்காளப் பச்சையகில் சன்னிநா யகமும்
வாய்ப்பான கருங்காலி இலவங்கப் பட்டை
மாமதுரம் வெந்தைய மிலாமிச்சம் வேரே.

வேர்முதலாய் வகையொன்று கழஞ்சி யொன்று
வித்தேச மில்லாம விடித்த ரைத்து
சாரமுடன் சலமும்ரண்டு படியிற் சேர்த்துத்
தயவாக நல்லெண்ணைய் படிதான் விட்டு
வீரமுடன டுப்பேற்றித் தீயை மூட்டி
விநாயகனைப் பூசித்து ஒருநாள் விட்டு
சீரான பதம்பார்த்து மெழுகுபதந் தன்னில்
சித்திரமாய்ப் புழுகுசட்டங் கற்பூரஞ் சேரே.

# நெய்

## அமுக்கிரா நெய்

பாறுமே சயங்களப்பா கிருதத் துக்குப்
பாடுகிறேன் சுவதைகொதி நெய்யைத் தானும்
வீறுடைய அமுக்கிராத் துலாந்தா னொன்று
மெனச்சாரணை பிரண்டை சிவதை சங்கு
மீறுடைய மிளகுசா ரணையும் வேராய்
மிஞ்சாமல் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
வாறுடைய பெருங்குமி ழும்பெரு வாகை
முன்னைமகத்தான் கூவிளமும் பாதிரியுங் கேளே.

பாதிரியுஞ் சித்தாமல்லி பேரா மல்லி
பண்பான நெல்லியுடன் கண்டங் காரி
நீதிபெறும் வழுதலையோர் பலந்தான் மூன்று
நிறுத்தங்கே யிவையெல்லா மிடித்து மைந்தா
வாதிபெறும் பாண்டத்தி லிட்டுப் பின்பு
வளந்துவிடு யிருதூணி சலந்தா னப்பா
போதியே யெட்டொன்றாய் குறுக்கி வாங்கிப்
புகட்டடா ஆவினெய்யிற் படிதா னொன்றே.

நெய்விட்டு மதுரமொடு சூரிய பத்திரியும்
நேரான தோள்கடையுந் திரிகடுகு மப்பா
மைத்திரி பலையுந் தேவதார மரத்தை
மஞ்சள் மரமஞ்சள் திப்பிலி மூலம்
பைய்யத்த கொடுவேலி பட்ம டக்கிப்
பருந்தகரை வெட்பாலை கடுகு ரோகணி
நெய்யுவகு ரேனுகமு மட்ட சந்த
நேராக யின்னமுண்டு நுணுக்கந் தானே.

சேரடா குங்குமப்பூ சத்தூரி யிவைகள்
சிறக்கஒரு வராகனெடை பொடிச்சுப் போட
வாரடா தைலத்தை வடித்துப் பின்பு
வைத்திடுவாய் தானியபுடம் பத்து நாள்தான்
சீரடா நாலுநாட் கொருமுழுக்கு முழுகச்
சீயக்கா யரப்புவெந்நீர் சிக்கான தகத்து
போரடா பால்தயிர் மோர்புளிக் கசப்பும்
பொல்லாதபுகை யிலைமாங்கிசம் பொல்லாது தள்ளே.

தள்ளிவிட்டு மறுநாள் தான் கூட்டுறது கூட்டு
தடையில்லை நீரிழிவு மேகமுதல் வெட்டை
தள்ளிவிடு கபாலநீர் பீனிசங்க ளாறுந்
தணலாக எலும்புருக்கி மூத்திரமண்டி பாளை
தள்ளிவிடு மித்திரகண்டி கல்லடைப்பன் சிறுப்பு
தாகமொடு பித்தவகை யுட்டிணமுந் தணியுந்
தள்ளிவிடு சிலேற்பனநீர் மண்டைப்பீ னிசங்கள்
தனில்சதி மூட்சைக்குத் தைலங் கேளே.
(சு.1. பா. 393-396)

செய்முறை : ஏலம், குந்திருக்கம், அடவிகச்சோலம், சடாமாஞ்சில், நறும்பிசின், சந்தனம், சாதிக்காய், தேவதாரம், வங்காளப்பச்சை, அகில், சன்னிநாயகம், கருங்காலி, இலவங்கப்பட்டை, அதிமதுரம், வெந்தயம், இலாமிச்சம்வேர் இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) சேர்த்திடித்து 2 படி (2.6 லிட்) நீரிலிட்டு 1 படி (1.3லிட்) எண்ணெய்ச் சேர்த்து மெழுகுபதமாகக் காய்ச்சி வடித்து, அத்துடன் புனுகுசட்டம், கற்பூரம், குங்குமப்பூ, சத்தூரி மஞ்சள், இவை வகைக்கு 1 வராகன் (4.2கிராம்) சேர்த்து தானியப்புடம் வைத்தெடுத்துக் கொள்ளவும்.

அளவு : இதை நான்கு நாளுக்கொருமுறை தலையிலிட்டு வெந்நீரில் மூழ்கவும்.

தீரும்நோய்கள் : நீரிழிவு, மேகம், வெட்டை, கபாலநீர், பீனிசம், எலும்புருக்கி, கல்லடைப்பு, நீரடைப்பு, தாகம், பித்தம், உட்டிணம், சிலேற்பனம், மண்டைப் பீனிசம் தீரும்.

பத்தியம் : பால், தயிர், மோர், புளி, கசப்பு, புகையிலை, இறைச்சி தள்ளவும்.

தானென்று யெவட்சார சத்தி சாரஞ்
சாயமருளா காச லவணந் தானுந்
தானென்ற வகையொன்று வராகன் நாலுந்
தனித்தனியே தூக்கியே யாட்டி மைந்தா
தானென்று கலக்கியே நாலு நாள்தான்
சகிக்கினையாய்த் தீயிட்டு அஞ்சா நாளில்
தானென்று வடித்தெடுத்து மேல்ம ருந்தைச்
சாற்றுறேன் காந்தபற்பந் தாம்பிரங் காணே.

காணப்பா தாம்பிரபற்பம் பலந்தான் ரெண்டு
கனத்தமணி திப்பிலியும் பலந்தா னெட்டு
தோணப்பா தூளாக்கி நெய்யிலிட் டுறுஞ்சாத்
தேனும் படிதான் ரெண்டு விட்டுப்
பூணப்பா தானியபுட ந் திங்க ளொன்று
புகட்டிவை படிற்கருந்தப் போம்நோய் கேளு
வீணப்பா சயரோகஞ் சுவாச காசம்
வீறான பீலிகையு மரோசிப் போமே.

அரோசிப்போஞ் சுரம்போகுங் குன்மம் போகும்
அப்பனே அறுகூலை ரோக பித்தம்
அரோசிப்போ மெலும்புருக்கி வெப்புப் பார்வை
அப்பனே கர்மமாம் ரோகங்கள் தீருந்தீரும்

(சு.1 பா. 253-258)

செய்முறை : அமுக்கிரா 1 துலாம் (3.5கி.கிராம்) சாரணை பிரண்டை, சிவதை, சங்கு, மிளகு, இவற்றின் வேர் வகைக்கு 10 பலம் (350கிராம்) ;பெருங்குமிழ், பெருவாகை, கூவிளம், பாதிரி, சித்த மல்லி, பேராமல்லி, நெல்லி, கண்டங்காரி, வழுதலை இவை வகைக்கு 3 பலம் (105 கிராம்) இவற்றை இடித்துப்போட்டு இரண்டு தூணி (43லிட்) நீரிட்டு, எட்டொன்றாய்க் காய்ச்சி யெடுத்து ஆவின்நெய் 1 படி (1.3லிட்) சேர்க்கவும். அத்துடன் மதுரம், சூரியபத்திரி, தோள்கடை திரிகடுகு, திரிபலை, தேவதாரம் அரத்தை, மஞ்சள், மரமஞ்சள், திப்பிலி மூலம், கொடுவேலி, படமடக்கி, தகரை, வெட்பாலை, கடுகுரோகணி, எவட்சாரம், சத்தி சாரம், லவணம் இவை வகைக்கு 4 வராகன் (16.8கிராம்)சேர்த்துக் கலக்கி நான்கு நாட்கள் தீயிட்டுக் கொதிக்க வைத்து ஐந்தாம் நாள் வடித்தெடுக்கவும். காந்தபற்பம், தாம்பிரபற்பம் 2 பலம் (70கிராம்), திப்பிலி 8 பலம் (280கிராம்) தூளாக்கி மேற்கண்ட நெய்யிலிட்டு, தேன் 2 படி (2.6.லிட்) விட்டு ஒரு திங்கள் தானியப் புடம் வைத்தெடுத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு உள்ளுக்குக் கொடுக்கவும்.

தீரும்நோய்கள் : சயம், சுவாசகாசம், பீலிகை, அரோசிகம் சுரம், குன்மம், அறுசூலை, ரோகபித்தம், எலும்புருக்கி, வெப்புப் பார்வை, கர்மரோகங்களனைத்தும் தீரும்.

## கடுக்காய் நெய்

தானென்ற கடுக்காய்நெய் சாற்றக் கேளு
தங்கம்போல் வரிக்கடுக்காய் நூறு வாங்கி
ஏனென்ற கீழ்க்காயின் நெல்லி தானும்
இருபதடா பலமிடித்து பாண்டத் திட்டு
வானென்ற தூணிநீர் விட்டுக் காய்ச்சி
மைந்தனே இரண்டுபடி வடித்து விட்டுத்
தேனென்ற ஆவின்நெய் படிதான் விட்டு
திறமான சண்பகப்பூ யேலந் தானே.

ஏலமொடு சிவதைவேர் சுக்கு மஞ்சள்
இதமான சீரகமுங் கடுகு ரோகணி
சீலமொடு திப்பிலியும் வகைக்குத் தானுந்
திறமாகப் பலமரைதான் அரைத்துப் போடு
பாலுமே ரெண்டுபடி சிறுதீ யிட்டு
பதத்தில்வடித் திருகழஞ்சு பருகக் கேளு
தூலமேலும் சுகமொடு பித்த சோகை
சோபமுடன் எரிவக்கினி மந்தம் போமே
யோகுமே மலசலக் கட்டிளைப்புத் தீரும்
பொல்லாத பித்தவெடிப் பெல்லாந் தீரும்.

(சு. 21. 338, 339)

செய்முறை : வரிக்கடுக்காய் 100, கீழ்க்காய் நெல்லி இருபது பலம் (700கிராம்) வாங்கி இடித்து 1 தூணி (21.5லிட்) நீர்விட்டுக் காய்ச்சி இரண்டுபடியாக (2.6லிட்) வடித்துக் கொள்ளவும். அத்துடன் ஆவின்நெய் இரண்டுபடி (2.6லிட்) விட்டு, சண்பகப்பூ ஏலம், சிவதைவேர், சுக்கு, மஞ்சள், சீரகம், கடுகுரோகணி, திப்பிலி இவை வகைக்கு அரைப்பலம் (17.5கிராம்) வாங்கி அரைத்துக் கலந்து இரண்டுபடி (2.6லிட்) பாலும் சேர்த்து சிறு தீயிட்டுப் பதமாக வடித்துக் கொள்ளவும்.

அளவு : இருகழஞ்சு (10.2கிராம்) உண்ணவும்.

தீரும் நோய்கள் : பித்தசோகை, எரிவக்கினி, மந்தம், மலசலக்கட்டு, இளைப்பு, பித்தவெடிப்பு தீரும்.

## கண்டங்காரி நெய்

... ... ... ... ... ...

பேசிறே னுள்மாந்தை யெட்டுந் தீரச்
சுருதிபுகழ் கண்டங் காரி நெய்யைச்
சொல்லிறேன் சமூலம்நீ வாங்கு வாங்கே.

வாங்கியே நாலெட்டுப் பலந்தா னப்பா
வாகான கூவிளமு மமுக்கு ராவும்
பாங்கிடவும் பேய்ப்புடலும் ஆடா தோடை
பாங்கான சங்குசிறு வழுதலையோ டாறுந்
தாங்கியே நிறுத்துநீ யிடித்துக் கொண்டு
தண்ணீர்தா னெண்குறுணி தன்னிலிட்டு
நீங்கிடா தெரியிட்டு யெட்டொன் றாக்கி
நெய்ப்படி நாலிலிட்டு நெறிபின் கேளே.

நெறிவெள்ளைப் பூசணிக்காய் தண்ணீர் தானும்
நெய்க்குநேர் பால்நேராய்க் கலந்து கொண்டு
தறிதாளிச பத்திரியு மிளகு செவ்வியஞ்
சமநாகமும் மூன்று கழஞ்சு தூக்கு
திறியேல மிலவங்கப் பத்திரிப் பட்டை
திப்பிலியு மிராமிச்சஞ் சிறுநாகப் பூவும்
மறிமாஞ்சி கற்கடக சிங்கியிவைக ளெல்லாம்
வகையொன்றுக்குக் கழஞ்சு ரண்டு தூக்கே.

தூக்கியே யாவின்பாலி லாட்டி வாங்கி
சொற்பெறவே கலக்கிநீ யடுப்பில் வைத்து
போற்றியே கணேசன் வைத்து தூப தீபம்
புட்பாஞ் சனை தான் நெய்வேத்தியஞ் செய்து
தாக்கியே சொன்னபுட்பஞ் சாற்றி யங்கே
தனல்மூட்டிப் பதமாக வடித்துக் கொண்டு
தேக்கியே திரிபலையும் பேரீச்சம் பழமுஞ்
சேர்சமனாய் மூன்று கழஞ்சு சேர்த்தே.

சேர்த்த தினமும் மூன்றுகழஞ்சு நெய்தான்
தின்றிடவு முள்மாந்தை சுவாச காசம்
பார்த்தவுடன் கொன்றுவிடுஞ் சுணங்கு மாந்தை
பரிவான வசையுறுஞ் சலந்தகனு மிக்க

மாற்றமுறுஞ் சலேந்திரனு மாறிப் போகு
மைந்தனே ராத்திரிக்கு கசாயஞ் சொல்வேன்.

(சு. 1. பா.230-234)

செய்முறை : கண்டங்காரி சமூலம் 32 பலம் (1.120கி.கி) கூவிளம், அமுக்கிரா, பேய்ப்புடல், ஆடாதோடை, சங்கங்குப்பி, சிறுவழுதலை இவை ஓரளவாய் நிறுத்திடித்துக் கொண்டு 8 குறுணி (42.4லிட்) நீரிலிட்டு எட்டிலொன்றாய்க் காய்ச்சி, ஆவின் நெய் 4 படி (5.2லிட்) விட்டு வெள்ளைப் பூசணிக்காய் பிழிந்து கூட்டி, அத்துடன் தாளிசபத்திரி, மிளகு, செவ்வியம், பூநாகம் வகைக்கு 3 கழஞ்சு (15.3கிராம்), ஏலம், இலவங்கம், சாதிபத்திரி, இலவங்கப்பட்டை, திப்பிலி, விலாமிச்சம், சிறுநாகப்பூ, சடா மாஞ்சில், கற்கடக சிங்கி இவை வகைக்கு 2கழஞ்சு (10.2கிராம்) எடுத்து ஆவின் பாலில் ஆட்டி, கூட்டிக் காய்ச்சிப்பதமாக வடித்துக் கொண்டு, திரிபலை, பேரீச்சம் பழமும் வகைக்கு 3 கழஞ்சு (15.3 கிராம்) சேர்த்துக் கொள்ளவும்.

அளவு : 3 கழஞ்சு (15.3கிராம்)

தீரும் நோய்கள் : உள்மாந்தம், சுவாசகாசம் தீரும்.

(வேறு)

வறட்சியென்ற காசங்கள் தீர வேண்டி
வையப்பா நீகண்டங் காரி நெய்யை
திறட்சிகண்டங் காரி படிதான் நாலு
திறமான ஆவின்நெய் படிதான் ரெண்டு
முறிச்சிடுமே கற்கஞ் சாரணை வேரோடு
மூதண்டச் சிறுகாஞ்சோரி கீழ்க்காய் நெல்லி
தரிக்கவேர் நெருஞ்சிவேர் தூதுவளை வேரு
தான்வகைக்குப் பலமொன்று தூக்கி டாயே.

தூக்கிடா சிறுதேக்குத் தாளிச பத்திரி
சுகமான அரத்தையோடு வெட்பா லரிசிதானும்
தாக்கடா வகைவகைக்குக் கழஞ்சு மூன்று
தான்வைத்துப் பால்தன்னில் கலக்கி விட்டு
தேக்கடா நீயெரித்து மெழுகு பதமாகச்
சணத்தில்வடி காசெடைதான் அந்தி சந்தி
நோக்கடா மண்டலந்தான் கொள்ளும் போது
நுவலுவேன் காசமென்ற நோய்போம் பாரே.

(சு. 21. பா. 343-344)

செய்முறை : கண்டங்காரி 4 படி (5.2லிட்), ஆவின்நெய் 2 படி (2.6லிட்), சாரணை, மூதண்டம், சிறுகாஞ்சோரி, கீழ்க்காய் நெல்லி, நெருஞ்சி, தூதுவளை இவற்றின் வேர் வகைக்கு 1 பலம் (35கிராம்), சிறுதேக்கு, தாளிசபத்திரி, அரத்தை, வெட்பாலரிசி, இவை வகைக்கு மூன்று கழஞ்சு (15.3கிராம்) பாலில் அரைத்துக் கலக்கி அடுப்பேற்றி மெழுகுபதமாக வடித்துக் கொள்ளவும்.

அளவு : காசெடை அளவு (165மி. கி.), அந்திசந்தி ஒரு மண்டலம் உண்ணவும்.

தீரும் நோய் : காசங்கள் அனைத்தும் தீரும்.

## சந்தனாதி நெய்

சார்ந்துகேள் சந்தனமு வெள்ளி லோத்திரம்
தனிமதுர மூந்திரிகை முக்கழுஞ்சி
சாந்துபோ லிவையெல்லாம் பாலி லாட்டித்
தண்ணீர்தான் படியொன்றில் கலக்கிக் கொண்டு
சாந்துநீ நறுநெய்தா னாழி யூற்றித்
தயவாக வடித்திறுத்துத் தலையிற் தேய்த்துச்
சாரந்தா ரைப்பிட்டு முழுகச் சொல்லு
தாபசுரம் பூதசுரந் தணியும் பாரே. (சு. 1. பா. 365)

செய்முறை : சந்தனம், வெள்ளிலோத்திரம், மதுரம், முந்திரி கைஇவை மூன்று கழஞ்சு (15.3கிராம்) வாங்கி பால் விட்டுச்சாந்து போல ஆட்டி, தண்ணீர் 1 படியில் (1.3லிட்) கலக்கி, நெய் 1 நாழி (1.3லிட்) சேர்த்துக் காய்ச்சி வடித்துக் கொண்டு தலையில் தேய்த்து, அரப்பிட்டு முழுகவும்.

தீரும் நோய்கள் : தாபசுரம், பூதசுரம் தீரும்.

## சுக்கு நெய்

சூலைபோஞ் சுக்குநெய்யைச் சூட்டக் கேளு
சுக்குநீ ரண்டுபத்து பலமுந் தூக்கிச்
சீலமுறு மாயிலியப் பட்டை தன்னைச்
சேர்டா சுக்குச் சமனா மப்பா
சாலநீ யிடித்ததனை முக்குறுணி நீரிற்
தாக்கியே நாலொன்றாய் குறுக்கி வைத்துப்
பாலுறையுந் தயிர்த்தண்ணீர் படிதான் ரண்டு
பண்பான நெய்யதற்குள் ரண்டரைதா னூற்றே.

ஊத்திடுவாய் பெருங்காயந் திரிகடுகு செவ்வியம்
ஓமத்தித் திப்பிலியுங் கொடுவேலி வேரும்

ஊத்திடவே திப்பிலியுந் திப்பிலி மூலம்
　　ஓங்கி வளரெவச் சார மொவ்வொன்று
ஊத்திடவே கழஞ்சுரண்டு சேர்த்துக் காய்ச்சி
　　ஒருநேர முக்கழஞ்சு யுண்ட போது
ஊத்திருந்த வதிசாரப் பாண்டு சோகை
　　ஓடிப்போ மண்டலந்தா னுண்ணசீ சொல்லே.
உண்ணையிலே குறுக்குவலி வயிற்று நோவு
　　உடல்நோயுங் காந்தலிவை யுடனே நிற்கும்.
...... ...... ...... ...... (சு. 1. பா. 281- 283)

செய்முறை : சுக்கு 20 பலம் (700கிராம்), ஆயிலியப் பட்டை சமபாகம் சேர்த்து இடித்து மூன்று குறுணி (15.9லிட்.) நீர் விட்டு நாலொன்றாய்க் காய்ச்சி, தயிர் 2 படி (2.6லிட்.) நெய் 2½ படி (3.3லிட்.) ஊற்றி, பெருங்காயம், திரிகடுகு, செவ்வியம், ஓமம், திப்பிலி, கொடுவேலிவேர், திப்பிலிமூலம், எவச்சாரம் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2கிராம்) சேர்த்துக் காய்ச்சி வைத்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு நேரத்திற்கு மூன்று கழஞ்சு (15.3கிராம்) ஒரு மண்டலம் உண்ணவும்.

தீரும் நோய்கள் : அதிசாரம், பாண்டு, சோகை, குறுக்குவலி, வயிற்றுநோவு, உடல்நோவு, காந்தல் இவை அனைத்தும் தீரும்.

## திப்பிலி நெய்

விள்ளுறேன் திப்பிலியுங் கடுக்காய் நெல்லி
　　வெட்பாலை யரிசியுடன் கீழ்க்காய் நெல்லி
கள்ளமறு வில்லைவேர் வேப்பம் பட்டை
　　கடுகுரோ கணிகெந்த மாடா தோடை
தெள்ளுபுகழ் ராமிச்ச முந்திரிகைப் பழமும்
　　சிறியதொரு கெந்தகமும் விடயந் தானுந்
துள்ளவே வகைக்கங்கே காசு தூக்கிச்
　　சுகமாகத் தண்ணீரா லாட்டி வாங்கே.
வாங்கினதோர் மருந்துக்குத் தண்ணீர் நாழி
　　வாகாக நறுநெய்தா னாழி வார்த்துப்
பாங்காக வுமந்த அக்கினியை மூட்டிப்
　　பதமாக வடித்திறுத்துக் கழஞ்சு ரண்டு
தேங்குத்தித் தேனெடைக்கு நெய்யுஞ் சேர்த்துத்
　　தின்றிடவே சுரம்போகும் விக்கல் போகும்

தாங்காத வுழலைபோ மரோசி போகும்
தலைநோவு பிறமேகந் தணியுந் தானே.

(சு. 1. பா, 351-352)

செய்முறை : திப்பிலி, கடுக்காய், நெல்லி, வெட்பாலை அரிசி, கீழ்க்காய்நெல்லி, வில்லைவேர், வேப்பம்பட்டை, கடுகுரோகணி கெந்தம், ஆடாதோடை, இராமிச்சம், முந்திரிகைப்பழம், அதிவிடயம் இவை வகைக்கு 1 காசெடை (165மி.கி) வாங்கி நீர் விட்டாட்டி, தண்ணீர் நாழி (1.3லிட்) சேர்த்துத் தீயெரித்துப் பதமாக வடித்திறுத்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : இருகழஞ்சு (10.2கிராம்)

துணைமருந்து : தேன், நெய் சமபாகம் சேர்த்துக்கொள்ளவும்

தீரும் நோய்கள் : சுரம், விக்கல், உழலைதாகம், அரோசிகம் தலைநோவு, பிரமேகம் நீங்கும்.

## பஞ்சகவ்விய மூலம் நெய்

... ... ... ... ... ...

பஞ்சகவ்விய நெய்யைப் பகரக் கேளு
மாத்தங்கே பால்தயிர் கோமியமும் நீரும்
மைந்தனே நீ பிழிந்து மார்கங் கேளு
ஊத்தப்பா வஞ்சுவகை நீருங் கேளு
ஒருபத்துப் படியாக வளந்துக் கொள்ளே.

அளந்ததற்குள் கற்கவகை செப்பக் கேளு
அதிமதுரஞ் சிறுதேக்குக் கோட்ட மிந்து
விளந்தணியும் வாய்விளங்கங் கொத்த மல்லி
விளாவரிசி வாயுளுவை வெட்பாலை யரிசி
வளந்தருநல் வசம்புள்ளி தேவ தார
மகத்தான சதகுப்பை யரத்தை கெந்தம்
உளங்குங் கருஞ்சீரகமும் முத்தாப் பட்டை
உற்றபூலா விருசுதா மரைபொடி நன்னாரி.

நன்னாரி பொன்முசுட்டை நெல்லி வேரும்
நயமான சாரணைவேர் கீழ்க்காய் நெல்லி
பொன்னா குமரிப்பனையுந் துத்தி வேரும்
புகழ்கடுகு ரோகணியும் பெருங்குரும்பை
மின்னாகு மதிவிடயஞ் சாதிக்காய் காந்தம்
மிக்கபத்திரி திரிகடுகு வில்லைவேர்ச் சாம்பல்
முன்னாந் திரிபலையுங் கழஞ்சாய்த் தூக்கி
மூலநீ ரரைத்திந்த நெய்யில் சேரே.

அரைத்திட்ட மருந்தோடே மூன்று நாள்தான்
அடுப்பேற்றிக் கொதிப்பிட்டு நாலா நாள்தான்
விரைந்துநீ வடித்தேதான் தினந்தா னெட்டு
விபரமுட நெற்குழியில் வைத்துப் பின்பு
வரைந்துதினங் காலமே கழஞ்சு கொள்ள
வற்றாத பெரும்பாண்டு குன்மந் தீரும்
கரைந்தழியும் பீனிசமும் பித்த பாண்டு
காமாலை பெருவயிறுந் தீருங் காணே.

காணவே சொல்லிலந்தப் பிரயோக மெல்லாம்
கரந்தபடி யறைந்திட்டேன் களங்க மன்றித்
தோணவே பிணியுள்ளோ ருண்டோ ராகில்
துயர்தீருஞ் சுகமாகுந் தேகந் தானும்.

(சு. 1. பா. 285-289)

செய்முறை : நெய், பால், தயிர், கோமியம், நீர் இவை 10 படியாக (13லிட்) அளந்து கொள்ளவும். அதிமதுரம், சிறுதேக்கு கோட்டம், இந்துப்பு, வாய்விளங்கம், கொத்தமல்லி, விளாலரிசி, வாயுளுவை, வெட்பாலைஅரிசி, வசம்பு, உள்ளி, தேவதாரம், சதகுப்பை, அரத்தை, கெந்தம், கருஞ்சீரகம், முத்தாப்பட்டை, பூலா, விருசு, தாமரைப்பொடி, நன்னாரி, பொன்முட்டை, நெல்லிவேர், சாறணைவேர், கீழ்க்காய் நெல்லி, குமரிப்பனை, துத்திவேர், கடுகுரோகணி, பெருங்குரும்பை, அதிவிடயம், சாதிக்காய், காந்தம், சாதிபத்திரி, திரிகடுகு, வில்லைவேர்ச் சாம்பல், திரிபலை இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1கிராம்) வாங்கி, மேற்கண்ட நீரில் அரைத்து நெய்யில் சேர்த்து, மூன்று நாட்கள் கொதிக்க வைத்து வடித்துக் கொள்ளவும். பின் எட்டு நாட்கள் நெற்குழியில் வைத்தெடுக்கவும்.

அளவு : காலையில் கழஞ்செடை (5.1கிராம்) உண்ணவும்.

தீரும் நோய்கள் : பெரும்பாண்டு, குன்மம், பீனிசம், பித்த பாண்டு, காமாலை, பெருவயிறு தீரும்.

## பலாசு நெய்

மாணவே பலாசுநெய்யைச் செப்பக் கேளு
மடிபட்ட பலாசப்பா நாலெட் டாகும்
தோணவே பலந்தூக்கி யிடித்து மைந்தா
சொல்லுறே னிருகுறுணி நீரி லூட்டே

ஊட்டியே படியொன்றாக் கூட்டி வாங்கி
உறவரைப்பா யிலைத்தண்டு கழஞ்சு யீராறு
மாட்டியே படிநெய்யை யதனிற் சேர்த்து
வனலிட்டுப் பதமாக வடித்து நீயு
மூட்டவே கிராணிகுன்மங் கழிச்சல் விக்கல்
முறையெல்லாங் குறைதீரு மோசமில்லை
நாட்டவே தயிர்நெய்யை மைந்தா கேளு
நயமான தயிர்குறுணி நெய்நாழி தானே.

தானென்ற பெருங்காய மோமத் தோடு
சாற்றுவாய் கடுக்காயுந் திப்பிலியுங் கூட
மானென்ற வட்டத்திருப்பி கருஞ்சீ ரகமும்
மைந்தனே புங்கம்வேர் வகைக்கோர் பத்து
தேனென்ற வேர்க்கொம்பு முப்ப தாகும்
சேரவே கழஞ்சுநீ தூக்கி யாட்டிக்
கானென்றே யெண்குறுணி நீரி லிட்டுக்
காய்ச்சியே நாலொன்றாய் நெய்யிற் சேரே.

நெய்யிற்சேர் திப்பிலியின் மூலந் தானும்
நேரான காட்டுத்திப் பிலியுங் கூட
உய்யயிரு சீரகமு மத்தித் திப்பிலியும்
உற்பணஞ்சேர் வில்லைக்காய் வட்டத் திருப்பி
அய்யமில்லா வெட்பாலை யரிசியதி மதுரம்
அரத்தையிவை வராக னாறு சேர்த்துக்
கையோடே வடித்திறுத்துக் குடிக்கும் போது
கிராணிகுன்ம மதிசாரஞ் சூலை போமே.

(சு. 1. பா. 277-280)

செய்முறை : பலாசு 32 பலம்(1.120கி.கிராம்) வாங்கி இடித்து இரு குறுணி (10.6லிட்) நீரில் போட்டு 1 படியாக (1.3லிட்) காய்ச்சவும். இவற்றின் இலை, தண்டு 12கழஞ்சு (61.2கிராம்) வாங்கி படி (1.3லிட்) நெய்யில் சேர்த்து வடித்துக் கொள்ளவும். தயிர் 1குறுணி (5.3லிட்), நெய் 1 நாழி (1.3லிட்) இவற்றுடன் பெருங்காயம், ஓமம், கடுக்காய், திப்பிலி, வட்டத்திருப்பி, கருஞ்சீரகம், புங்கம் வேர் இவைவகைக்குப் பத்துகழஞ்சு, வேர்க்கொம்பு 30 கழஞ்சு (153கிராம்)வாங்கி, 8 குறுணி (42.4லிட்) நீரிலிட்டு நாலொன்றாய்க் காய்ச்சி நெய்யுடன் சேர்த்துக் கொள்ளவும். திப்பிலிமூலம், காட்டுத் திப்பிலி, யானைத் திப்பிலி, வில்லைக்காய், வட்டத்

திருப்பி, வெட்பாலையரிசி, அதிமதுரம், அரத்தை இவை 6 வராகன் (25 2கிராம்) வாங்கி இடித்துச் சேர்த்து வடித்து கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

தீரும் நோய்கள் : கிராணி, குன்மம், அதிசாரம், சூலை, கழிச்சல், விக்கல் தீரும்.

## புளியாரை நெய்

பாரப்பா புளியாரை நெய்யைச் சொல்வேன்
படரான கிராணிவகை எல்லாம் போக
நேரப்பா புளியாரை குறுணிச் சத்து
நெய்தானும் ரெண்டுபடி தயிர்தா னாழி
பேரப்பா வதிவிடயம் திரிகடுகு விந்து
பெருங்காய மிவட்சாரஞ் சாதிக் காயும்
காரப்பா வெட்பாலை திப்பிலி மூலங்
கிராம்புமா தளம்பூ மரமஞ்சட் காணே.

காணவே யிலவங்க மிவைக ளெல்லாம்
சழஞ்சியங்கே வகைக்காறு தூக்கி யாட்டி
ஊணவே காய்ச்சிநீ கொடுக்கும் போது
உத்தமனே யாறுவகைக் கிராணி தீரும்

(சு. 1. பா. 276-277)

செய்முறை : புளியாரை குறுணி (5,3லிட்), நெய் 2படி (2.6லிட்) தயிர் 1நாழி (1.3லிட்), அதிவிடயம், திரிகடுகு, இந்துப்பு, பெருங்காயம், எவட்சாரம், சாதிக்காய், வெட்பாலை, திப்பிலி மூலம், கிராம்பு, மாதளம்பூ, மரமஞ்சள், இலவங்கம் இவை வகைக்கு ஆறுகழஞ்சு (30.6கிராம்) வாங்கி ஆட்டி காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு

தீரும் நோய்கள் . ஆறு வகைக் கிராணி தீரும்.

## பொன்முசுட்டை நெய்

உண்ணையிலே பொன்முசுட்டை நெய்யைக் கேளு
உத்தமனே தன்மாந்தக் கிராணி யெல்லா
உண்ணவே பொன்முசுட்டை சித்திர மூலம்
ஓங்கிநின்ற மாதுளம்வேர் தோலிகள் தானும்

உண்ணவே மாதளந்தோ டதிவிடயங்
கோட்டம் பத்துஞ்சேர் திப்பிலியும் மூலங்காணே.
மூலமுடன் சுக்கத்தித் திப்பிலியு மஞ்சள்
முறுதேவ தாரமர மஞ்சள் தானும்
ஆலமாம் வாலுளுவை யிலந்தைப் பட்டை
அப்பனே வெட்பாலை வசம்ப ரத்தை
ஏலமொடு சிற்றேலங் கடுகு ரோகணி
இலவங்கப் பட்டை பத்திரி யோமஞ்
சாலவே பேய்ப்புடலு மிளகு தானுஞ்
சமனாக வராகனொன்று பாலி லாட்டி
பாலிதற்கு ரெண்டுபடி நெய்யும் நாழி
பாய்ச்சிநீ வடித்திறுத்துப் பரணி சேரே.
சேர்த்தங்கே பாலருக்குக் கிராணி மாந்தை
செப்பரிய கணைபிரளி காமாலை சோகை
பார்த்தங்கே மனமுறைத்து கொடுக்கத் தீரும்.
(சு. 1. பா. 283-285)

செய்முறை : பொன்முசுட்டை, சித்திரமூலம், மாதுளம் வேர், தோல், அதிவிடயம், கோட்டம், திப்பிலிமூலம், சுக்கு, அத்தி திப்பிலி, மஞ்சள், தேவதாரம், மரமஞ்சள், வாலுளுவை, இலந்தைப் பட்டை, வெட்பாலை, வசம்பு, அரத்தை, ஏலம், சிற்றேலம், கடுகுரோகணி, இலவங்கப்பட்டை, பத்திரி, ஓமம், பேய்ப்புடல், மிளகு இவை வகைக்கு 1 வராகனை (4.2கிராம்) வாங்கி பாலிலாட்டி, 2 படி (2.6லிட்) பால், நாழி (1.3லிட்) நெய்யும் சேர்த்துக்காய்ச்சி வடித்திறுத்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு

தீரும் நோய்கள் : குழந்தைகளுக்கு கிராணி, மாந்தம், கணை, பிரளி, காமாலை, சோகை தீரும்.

## வல்லாரை நெய்

வாச்சென்ற வல்லாரை நெய்யைச் சொல்ல
மைந்தனே மருந்தினுட வரிசை கேளு
நீச்சென்ற வல்லாரை பசுவின் பாலும்
நேரான சீதேவி செங்கழுநீர் சாறே.
சாறுபடி முன்னாங்கு யிளநீர் தண்ணீர்
தானோ ரண்டுபடி நெய்யு மங்கே

மீறாமல் குன்றிவேர் செங்கழுநீர் மூலம்
மென்மதுரங் கோரோ சனைதான் கோட்டங்
கூறான வரியிலை பச்சைக்கற் பூரங்
குறையாமல் கழஞ்சியொன்று பாலா லாட்டி
ஆறாமல் கொதிப்பித்து மூன்று நாள்தான்
அப்பனே நாலாம்நாள் வடித்துக் கொள்ளே.

கொள்ளவே காசெடைதான் விடங்கள் தீருங்
கூறான நாவிநஞ்சு கழுதை வண்டு
விள்ளவே யாலியெட்டி நஞ்சுந் தீரும்
மேலவத்துக் சாலவத்துக் காந்தல் தீருந்
துள்ளவே யத்திசுர மெலும்பு ருக்கி
சூள்சயமும் வயிற்றெறிவு வாயு லர்ச்சி
அள்ளவே குறைந்தாற்போல் எல்லாந் தீரும்
அனேகசுக முண்டாகு மப்பா பாரே.

(சு. 1. பா. 273-275)

செய்முறை : வல்லாரை, சீதேவிசெங்கழுநீர் இவற்றின் சாறு, பசுவின்பால் இவை வகைக்கு 3 படி (3.9லிட்), இளநீர், தண்ணீர் 2 படி (2.6லிட்) நெய்யும் 2 படி (2.6லிட்) இவற்றில் குன்றிவேர், செங்கழுநீர்மூலம், மதுரம், கோரோசனை, கோட்டம், வரியிலை, பச்சைக் கற்பூரம் இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1கிராம்) வாங்கி பாலிலாட்டிச் சேர்த்து, இவற்றை மூன்று நாள் கொதிக்க வைத்து நான்காம் நாள் வடித்துக் கொள்ளவும்.

அளவு : காசெடை (165மி. கி) உண்ணவும்.

தீரும் நோய்கள் : விடங்கள், நாவி நஞ்சு, கழுதைவண்டு, ஆலியெட்டி நஞ்சு, காந்தல், அத்திசுரம், எலும்புருக்கி, சயம், வயிற்றெரிவு, வாயுலர்ச்சி அனைத்தும் தீரும்.

(வேறு)

ஆகுமே வல்லாதி நெய்யைக் கேளு
அழகான வல்லாரைச் சாறுபடிதா னாலு
ஏகுமே பசுவின் படிதா னாலு
நீர்தான் ரெண்டுபடி நெய்தான் ரெண்டு
வேகுமே சீதாசெங் கழுநீ ரெண்டு
விட்டிடுவாய் பதிமூன்று படியுந் தானே.

படியுமே தளரவிட்டு அடுப்பி லேற்றி
பாருமே சாகமதி மதுரங் கோட்டம்
விடியுமே செங்கழுநீர் கிழங்கு குன்றி
வேருடனே அவுரியிலை மேலுங் கேளு
முடியுமே பச்சைக்கற் பூரத் தோடு
முதன்மைகோ ரோசனையும் வகையொன் றுக்குத்
கடையவே வராகனெடை மூன்று தூக்கு
தானரைப்பாய் பால்விட்டுக் கலக்கி வாரே.

கலக்கிவிட்டு மூன்றுநாள் சிறுதீ யிட்டு
கட்டிவடி நாலாநாள் மயனம் போலே
துலக்கமுடன் அந்திசந்தி காசெடைதான் கொள்ளச்
சோருமே சயமீளை இருமல் மாந்தை
குலக்கவரு மருந்தீ தொண்டைக் கம்மல்
கொண்ட நஞ்சின் விடங்கொடுமை தொலைந்து போகும்
மலைக்கவரும் மேல்மூச்சும் பில்லக் காந்தல்
வாய்நாக்குஞ் செஞ்சுடலை வறட்சி போமே.

(சு. 21. பா. 340-342)

செய்முறை : வல்லாரைச்சாறு, பசுவின் பால் இவை வகைக்கு 4 படி (5.2லிட்) நீர், நெய், சீதா செங்கழுநீர் இவை வகைக்கு 2 படி (2.6லிட்) விட்டு அடுப்பேற்றி, அதிமதுரம், சாகம், கோட்டம், செங்கழுநீர் கிழங்கு, குன்றிவேர், அவுரியிலை, பச்சைக் கற்பூரத் தோடு, கோரோசனை இவை வகைக்கு 3 வராகனெடை (12.6 கிராம்) பால்விட்டரைத்துக் கலக்கி மூன்று நாள் தீயிட்டு நாலாம் நாள் பதம் பார்த்து இறக்கிக் கொள்ளவும்.

அளவு : அந்திசந்தி காசெடை (165மி. கி) கொள்ளவும்.

தீரும் நோய்கள் ; சயம், ஈளை, இருமல், மாந்தம், தொண்டைக் கம்மல், விடம், மேல்மூச்சு, காந்தல், நாவறட்சி அனைத்தும் தீரும்.

# கிருதம்

## கலியாணிக் கிருதம்

பாரப்பா மேகங்கள் ரண்டு பத்தும்
    படுவவத் தைப்புருதி பனிரண்டு பாகந்
தீரப்பா கலியாணி கிருதங் கொண்டு
    செப்பிறேன் மருந்துவகைத் திறமாய்க் கேளு
நேரப்பா நிலைப்பனைவேர் தண்ணீர் விட்டான்
    நெருஞ்சியோடு கொடுவேலி நன்னாரி வேருஞ்
சேரப்பா வழுதலைவேர் சித்தா முட்டி
    சாரணை யின்வேர்த் திராயின் வேரே.

திராயொடு அமுக்கிராப் பாதிரிவேர் வில்வஞ்
    செப்பரிய முத்தக்காய் தாமரைத் தண்டு
தராயிவர்கள் வகைக்கங்கே பலத்தைக் கேளு
    தாக்கடா மூன்றரை தான் தறித்தி டித்துத்
தூராய்தூணி நீரிலிட்டுக் குறுணி யாக்கிச்
    சொல்லுறே ணிலைச்சாற்றை தொடச்சி விட்டு
நிராய்கரும்பு வெள்ளரிக்காய் பொன்னாங் காணி
    நெல்லிக்காய் பூசணிக்காய் முள்ளிலவந் தோலே.

இலவந்தோ லிலுப்பையிலை யிவைச்சா றெல்லாம்
    என்மகனே வகையொன்று ஒவ்வோ ரொன்று
நலமான ஆவின்பால் படியும் நாலு
    நறுநெய்யும் படிரெண்டு கற்கங் கேளு

பிலமான தோடையுடன் சித்தா மல்லி
பேரான நன்னாரி யமுக்கிரா வேரும்
மலமாத்துஞ் சாரணைவேர் நெய்தல் மூலம்
மலர்த்தா மரைவளை முந்திரிகைப் பழமே.

முந்திரிகைப் பேரீச்சுக் கடுகு ரோகணி
முதுவுறையும் வெட்டிவேர் மதுரங் கோட்ட
மந்தயி லுப்பைப்பூ மலர்காய் கெந்த
மாதாளிக் கிழங்குடனே தேவ தார
மந்திரமாஞ் சடாமாஞ்சில் வெட்பாலை யரிசி
மஞ்சிட்டி யதிவிடய மஞ்சள் தானும்
பந்தமுறுங் கார்கோல மிருசீ ரகமும்
பண்பான செவ்வியமும் பரிந்து தூக்கே.

பரிந்தெடுத்து வகையொன்று கழஞ்சு யொன்று
பண்பாக வாட்டி நெய்யில் விட்டு
எரிந்துநீ வடித்திறக்கி வராக னொன்று
இயல்பாக வுண்டிடவே யிடுக்க மில்லை
கரிந்ததொரு மேகங்க ளிரண்டு பத்துங்
காட்டுமுன்னே கரியுண்ட கனிபோ லாகும்
விரிந்தபிற மேகங்கள் பத்து மாகும்
விப்புருதி விடபாகம் பாண்டு போமே.

(சு. 1. பா. 339 – 343)

செய்முறை: நிலப்பனைவேர், தண்ணீர்விட்டான், நெருஞ்சி கொடுவேலி, நன்னாரி, வழுதலை, சிற்றாமுட்டி, சாரணை திராய், அமுக்கிரா, பாதிரி, வில்வம், முத்தக்காய், இவற்றின் வேர்கள், தாமரைத்தண்டு இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்), ஒரு தூணி (21.5 லிட்) நீரிலிட்டு, குறுணி (5.3 லிட்) யாகக் காய்ச்சி வடித்து அத்துடன் கரும்பு, வெள்ளரிக்காய்,பொன்னாங்காணி, நெல்லிக்காய், பூசணிக்காய், முள்ளி, இலவந்தோல் இலுப்பை இலை இவற்றின் சாறுகள் வகைக்கு 1 படி (1.3 லிட்), ஆவின்பால் 4 படி (5.2 லிட்), ஆவின் நெய் 2 படி (2.6 லிட்) ஆடாதோடை, சிற்றாமல்லி, நன்னாரி, அமுக்கிரா, சாரணை நெய்தல் இவற்றின் மூலமும், தாமரை வளையம், முந்திரிகைப்பழம், பேரீச்சை, கடுகுரோகணி, வெட்டிவேர், அதிமதுரம், கோட்டம், இலுப்பைப்பூ, கெந்ததாளி, தேவதாரம், சடாமாஞ்சில், வெட்பாலை அரிசி, மஞ்சிட்டி, அதிவிடயம்,

மஞ்சள். கார்கோலரிசி, இருசீரகம், செவ்வியம் இவற்றை வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) எடுத்து முறைப்படி நெய் யிலிட்டுக் காய்ச்சி வைக்கவும்.

அளவு; வராகனெடை (4.2 கிராம்)

தீரும் நோய்கள்: மேகங்கள் 20, பிரமேகம் 20, விப்புருதி, விடபாகம், பாண்டு தீரும்.

## நீர்குன்றியாதிக்கிருதம்

நொச்சியிலைச்சாறு ஒரு பாகம் நெய், நொச்சியிலை ஒரு பாகம் சாற்றுக்கு நால் மடங்கு அதிகம் விட்டுச் சாறுசுவறக் காய்ச்சி, இதில் கற்கம், செவியம், கொடுவேலி. வாய்விளங் கம், ஏலம், இலவங்கப்பத்திரி, நாகப்பூ, கடுகுரோகிணி, கோட்டம் இவை சமன்கூட்டிச் சூரணம் செய்து பசுவின் நெய் யில் எட்டிலொன்று சூரணஞ் செய்து போட்டுக்கிளரி, பதத் தில் வடிக்க, இது நீர் குன்றியாதிக் கிருதம் என்றுபேர். கஞ்சி, கருங்குருவையரிசியைப் பாவினை பண்ணி நீர் குன்றியாதிக் கிருதத்தோடே கூட்டிக்குடிக்க சயம், காசம், சுவாசம் சாந்தமாம். (சு. 3)

செய்முறை: ஒரு பாகம் நொச்சியிலைச் சாறும், நான்கு பாகம் நெய்யும் விட்டுக் காய்ச்சி. கற்கம். செவியம், கொடு வேலி, வாய்விளங்கம், ஏலம், இலவங்கப்பத்திரி, நாகப்பூ, கடுகுரோகிணி, கோட்டம் இவை சமபாகம் எடுத்துச் சூரணஞ் செய்து மேற்கண்ட நெய்யில் போட்டுப்பக்குவமாகக் கிளரி பதத்தில் வடித்துக் கொள்ளவும்.

அளவு: வேண்டிய அளவு.

துணைமருந்து: கருங்குருவையரிசிக் கஞ்சி

தீரும்நோய்கள்: சயம், காசம், சுவாசம் தீரும்.

## மகாமேருக் கிருதம்

பாரப்பா சருவாங்க நோய்கட் கெல்லாம்
பாடுகிறேன் மகாமேருக் கிருதம் தானும்
காரப்பா பேய்மிரட்டி வேர்பலந்தான் பத்து
கடுக்காய் நெல்லிவேரு தான்றி வேரும்
வேரப்பா பொன்முசுட்டை சிற்றா மல்லி
வில்லைவேர் வெட்டிவேரி லாமிச்சை வேரும்
போரப்பா தூதளையும் மாதளை காஞ்சோரி
பொன்முசுட்டை நன்னாரி நெய்த லன்னே.

நெய்தலோடு செங்கழுநீர் தாமரையும் மல்லி
நிலப்பனையும் நிலவாகை கண்டங் கத்திரியும்
பொய்யாத வகைக்காறு பலந்தான் போட்டு
பேய் மிரட்டி வேரோடே போட்டி டித்து
எய்துமே பாண்டத்தி லிட்டுக் கேளு
இருதூணி சலம்விட்டு யெட்டொன் றாக்கி
அய்துமே கசாயமது படிதா னாலு
அளந்துவிட்டு ஆவின்நெய் படிதா னாலே,

நாலோடு சாதிக்காய் கிராம்பு பத்திரி
நற்சீரக மேல மிலவங்கப் பட்டை
சாலோடு மஞ்சிட்டி சாத்திரப் பேதி
சதகுப்பை வாய்விளங்கந் தாளிச பத்திரி
சேலான தேவதாரம் நல்லசந் தனமும்
சிறுநாகப் பூவோடு மதுரங் கோட்டம்
காலொடு மிளகொடுவை சிங்கி தேக்குக்
கருஞ்சீரகம் கத்தூரி மஞ்ச ளாமே.

மஞ்சளாந் திப்பிலியுந் திப்பிலி மூலம்
மாஞ்சியோடு கடுகுரோகணி நெருஞ்சிக் காயும்
காஞ்சி கொத்த மல்லி கோங்கு
குராசணி வால்மிளகு கடுக்காய் நெல்லி
மிஞ்சாதே குங்குமப்பூ மாதளையின் பிஞ்சும்
விளங்கவகை வகைக்கு நாற்கழஞ்சு கூட்டு
அஞ்சாதே ஆவின் பால்படி சொன்னோம்
அரைத்துமே கரைத்துமுன் நெய்யில் வாரே,

வாரேநீர் செவ்விளநீர் படிதான் ரெண்டு
வல்லாரைச் சாறுபடி ரெண்டு வாரு
சேரேநீ பழச்சாறு படிதான் ரெண்டு
சீனிசர்க் கரையும் பலந்தா னாலு
காரேநீ நல்லவெல்லம் பலந்தா னாலு
கரைத்துமே யடுப்பேற்றி யெரித்துக் காய்ச்சி
வாரேநீ மெழுகுபதம் தன்னைப் பார்த்து
வடித்திடவே வடிகலசந் தன்னில் கேளே.

தன்னிலே சீரகமும் கோரோசனையுங் கூட்டிச்
சார்வாக வடித்துப்பின் சாற்றக் கேளு
நிண்ணயமாய் கணபதியும் கந்தன் பூசை
நிறையாகச் செய்துநீ நெற்பு டத்தில்
சொன்னதொரு நாளொன்றுக் கிருநேரங் கொள்ளு
தொலையாத வியாதியெல்லாம் தொலைந்து போமே.

தொலைந்தோடுஞ் சயமீளைக் காச பித்தஞ்
சொல்லரிய தலைநடுக்கஞ் சலமா றாட்டம்
உலைந்துபோ முட்டிணமொடு பிரமிய மேக
மூத்திரக் கிரச்சியொடு கல்ல டைப்பு
அலைந்தேர்டும் பெரும்பாடு ரத்தச் சாய்ப்பு
அனலோடு மேலேறி உட்டிணப்பேர் போமே.

போமென்ற பவளம்பற்பம் போட்டுக் கொள்ளு
பொல்லாத நோயெல்லாம் பொடியாய்ப் போகும்
தேமென்ற கர்ப்பத்தில் யெழுந்த நோயும்
தீர்ந்துவிடும் மலடிக்குப் பிள்ளை யுண்டாம்
காமென்ற பத்தியந்தான் சாந்தமாய்க் கொள்ளு
கைப்பொடு புளிப்புரெண்டுந் தள்ளிப் போடு
காமென்ற கணைவேக மெல்லாந் தீரும்
கைகண்ட வித்தையிது கண்டு பாரே.

(சு 19. பா. 180—187)

செய்முறை: பேய்மிரட்டிவேர் 10 பலம் (350 கிராம்), கடுக்காய், நெல்லி, தான்றி, பொன்முசுட்டை, சித்தாமல்லி, வில்வம், வெட்டிவேர், இலாமிச்சு, தூதளை, மாதளை, காஞ்சொரி, பொன்முசுட்டை, நன்னாரி, நெய்தல், செங்கழுநீர், தாமரை, மல்லி, நிலப்பனை. நிலவாகை, கண்டங்கத்திரி இவற்றின் வேர் வகைக்கு ஆறு பலம் (210 கிராம்) போட்டிடித்து, பாண்டத்தில் போட்டு இருதூணி (43 லிட்) நீர்விட்டு எட்டொன்றாக்கிய கசாயம் படி நாலு (5.2 லிட்), ஆவின்நெய் படி நாலு (5.2 லிட்), சாதிக்காய், கிராம்பு, பத்திரி, நற்சீரகம், ஏலம், இலவங்கப்பட்டை, மஞ்சிட்டி, சாத்திரபேதி, சதகுப்பை, வாய்விளங்கம், தாளிசபத்திரி, தேவதாரம், சந்தனம் சிறுநாகப் பூ, மதுரம், கோட்டம், மிளகு, சிறுசிங்கி, தேக்கு கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், திப்பிலி, திப்பிலி மூலம், கடுகு ரோகணி, நெருஞ்சிக்காய், கொத்தமல்லி, கோங்கு, குறாசணி வால்மிளகு, கடுக்காய், நெல்லி, குங்குமப்பூ, மாதளைப் பிஞ்சு

இவை வகைக்கு 4 கழஞ்சு (20.4 கிராம்) சேர்த்து ஆவின்பால் படி (1.3 லிட்) விட்டு அரைத்துக் கரைத்து, முன்சொன்ன நெய் யில் கலக்கவும். இவற்றுடன் செவ்விளநீர், வல்லாரைச்சாறு. பழச் சாறு இவை வகைக்கு 2 படி (2.6 லிட்), சீனிச் சர்க்கரை. வெல் லம் வகைக்கு நாலு பலம் (140 கிராம்) வாங்கிக் கரைத்து காய்ச்சி மெழுகுபதமாக வடிக்கவும். வடிக்கும்போது வடிகலசத் தில் சீரகம், கோரோசனையும் கூட்டி வடித்துக் கொள்ளவும்.

அளவு: தேவையான அளவு, ஒரு நாளைக்கு இரு நேரம்.

தீரும்நோய்கள்: சயம், ஈளை, காசம், பித்தம், தலைநடுக் கம், சலமாறாட்டம், உட்டிணம், பிரமியமேகம், மூத்திரக்கிரச்சி கல்லடைப்பு, பெரும்பாடு, ரத்தச்சாய்ப்பு, உட்டிணம் போகும். இம்மருந்துடன் பவளபற்பம் சேர்த்துண்ண அனைத்து நோய் களும் தீரும். கர்ப்பநோய் தீரும். பிள்ளையுண்டாகும்.

பத்தியம்: கைப்பு, புளிப்பு ஆகாது.

# குழம்பு

## அகத்தியர் குழம்பு

பருபதந் தன்னில் வாழும் பரமனா ரருளி னாலே
பொருமையா யுலகில் வாழும் புண்ணிய சனங்க ளுக்கு
உருபல வியாதி வந்தா லுண்மையாய்த் தீரு மென்று
பெருபல முனிவன் தானும் பேசிய மருந்து கேளே.

பேசிய மருந்து கேளாய் பெருங்கா யங்கடு கிந்துப்பு
வீசிய ரசம்வெங் காரம் விடமனோ சிலையுங் கூட்டி
ஆசுதிப் பிலியு மொக்க அரிதாரஞ் தகட தாகு
மாசிலாக் கருஞ்சீ ரகம் வகைவகை கழஞ்சு வாங்கே.

வாங்கிய கழஞ்சுக் கொப்பாய் வாளமும் வறுத்துப் பாதி
தாங்கிய பச்சைப் பயறு சமன்முளை போக்கி நீக்கித்
தீங்கிலா மருந்து பத்துந் தீங்கர அரைக்கக் காந்தும்
ஓங்கிய மோருஞ் சோறும் உண்டுநீ யரைத்தும் கூட்டே.

கூட்டிய மருந்தின் பேரே யகத்தியர் குழம்ப தாகும்
ஈட்டிய சுரமே சுக்கு இருமலே கடுக்காய்ச் சாறு
வாட்டிய குளிர்சு ரங்கள் வகைசுக்கில் மிளகிற் கொள்ளு
பாட்டுயல் ரத்த மூலம் பசுவினெய் மேதிப் பாலே.

பாலினு மொழியே பாண்டு மகோத ரம்பெரு வியாதி
மேலும்நீ ராம்பல் சோகை மிளகுதூள் வெள்வெங் காயஞ்
சாலவே சன்னிக் கெல்லாந் தேனிஞ்சிச் சாற்றி லாகும்
ஏலமாம் விடஞ்சன் னிக்கு வேம்புங் கண்ணி லேயிடே.

இடுகண்ணிற் கடுகு பாதி வீங்குங் கற்றாழஞ் சோறு
வடிதயிர் சந்த னங்கள் வைத்துநீ கட்ட மாறும்
படுபரு பிளவை வாழை பக்கரை யாப்புப் புண்கள்
விடுபரு சிலந்திக் கெல்லா மிகவுநீ நீரில் பூசே.

பூசிய முலைக்குத் துக்கும் புண்ணுக்கு மிதுவே யாகும்
காசிகர வாத சூலை குட்டமே நொச்சிச் சாற்றில்
பாசமாம் வாய்வு வான பற்பல குணத்துக் கெல்லாம்
நேசமாம் நொச்சி சுக்கில் நிச்சயஞ் செய்து பாரே.

பாராய் கபாலவலி முதலாய் பசாசு பறக்குந் திரிபுகையில்
நேரே பிடித்த நீர்ச்செறுப்பு நின்றகல் ஸடைப்புத்
தாழம் விழுதினில்
தீராக் கிரந்தி பறங்கிமுதல் திருங் குப்பிச் சாற்றிலிட
தீரா அரவம் பல்விடமும் தீருந் திரும்புள் திரிப்பிடியே.

பிடிக்குந் திரிக்கு அம்மிதனில் பிறட்டு முறுட்டுந்
திரியதனை
இடிக்கும் வலிக்குந் தலைவாத யிளைத்தே
ஓடுந் திரிப்புகையில்
குடிக்குங் கசாயம் வெங்காயம் கொடியகழஞ்சி முசுக்கை
நொச்சி
அடிக்குஞ் சன்னி பதினெட்டும் அனுபானஞ் செய்நூல்
விதியே.

விதியால் மருந்து இதுவல்லால்
வேறே தேட வேண்டாங்காண்
புதியா நாலா யிரத்துடனே
பறக்கும் வியாதி இதுவெல்லாம்
மதியா யிதுக்குக் குறிப்பறிந்து
வகையா யனுபானங்கள் செய்ய
துதியாத் திரு மென்றுசொல்லி
சொன்னார் மாமுனி சொன்னாரே.

கண்டீர் நவ்வற் பட்டையுடன்
கறுத்தாட்டுப் பால்தனிச் சுரசங்
கொண்ட சீரகப் பொடியுங்
கூட்டிக் கொள்ளுமோர் பணவெடைதான்

பண்டோர் சூதக வாய்வுடனே
பருத்த கர்ப்ப வாதமும்போம்
வண்டார் குழல்சேர் மடமானே
மலைசேர் முனிவன் வகுத்ததுவே.

வகுத்த பிரமன் வகையாலே
வருஞ்சூதக வாய்வுடன் திரட்சி
மிகுந்த வலியுந் தீருமென
முன்னே சொன்னேன் விரகுடனே
பகுத்த நொச்சிச் சாறுதனில்
பங்கஞ் சாறணைவேர் மிளகுசுக்கு
தொகுத்த குழம்பிற் பணவெடைதான்
கொள்வீர் சொன்னேன் கொள்வீரே.

கொள்வீர் புறவீச்சு தனக்குக்
கொடுக்கும் மருந்து தனைக்கேளாய்
உள்ளி முருங்கைப் பட்டையுடன்
உசந்த புங்கு பெருக்கலைவேர்
விள்ள வரிது திருகுகள்ளி
விரைசே ரிஞ்சிச் சுரசமதில்
தெள்ளுங் குழம்பிற் பணவெடைதான்
சேர்த்துக் கொடுக்க வல்லீரே.

வல்லில் நெஞ்சு வலிதனக்கு
வகையாய் மருந்து தனைக்கேளாய்
வெல்லு மிலவங்கப் பத்திரியுஞ்
விரைசேர் கிராம்பு அதிமதுரம்
சொல்லுந் தாளிசப் பத்திரியுஞ்
சேர்ந்த ஆவின் வெண்ணெயுடன்
அல்லல் தீர்க்குங் குழம்புபணம்
அளவாய்க் கூட்டி அருந்திடுவீர்.

அருந்துந் தாளி இலைஅவுரி
ஆவின் வெண்ணெ யதுவுடனே
பொருந்துங் குழம்பு ரண்டுபணம்
போலே சேர்த்துக் கொடுப்பீராய்.

பெருந்தி வினையால் விரியன்
　　பேர்ந்து தீரும் பெரியோரே
வருந்தீர் நீரிம் மருந்தின்
　　வழியே சொன்னேன் மறவீரே.

மறவீர் நவ்வல் கொழுந்துடனே
　　வாய்த்த மிளகு வராகன்ரெண்டு
முறையா யருந்தும் வெள்ளிலைதான்
　　மூன்றுங் குழம்பில் பணவெடைதான்
பறையா றெல்லா மொன்றாக
　　பரிந்து பிசைந்து கொடுப்பீராய்
பெருவாய் நாகங் கடுவிடமும்
　　பிணியுந் தீரும் பெரியோரே.

தீருந் தேனில் விடந்தனக்கு
　　செய்யாக் குத்து துளிரிலையில்
தீருங் குழம்பு பணவெடைதான்
　　திறமாய்ச் சேர்த்துக் கொடுத்துவிடு
ஊருங் கடிவாய்க் குமிழ்நீறும்
　　ஊட்டிப் பூச விடம்போங்காண்
வாருங் குயிலே மடமானே
　　வழலை கடிக்கு மருந்தினிக்கேள்.

கேளாய் வெல்லம் புகையூரல்
　　கிளியே மிளகு பேய்ப்பீர்க்கு
நாளே சென்ற விரைமூன்று
　　நன்றாய்க் குப்பை மேனியின்பால்
ஆளே வார்த்து அரைத்துநன்றாய்
　　அன்பாய்க் குழம்பு பணவெடைதான்
வேளே கொடுக்க வல்லீராய்
　　விடுமே வழலை விடந்தானே.

தானே நெஞ்சு வலிதனக்குச்
　　சாத்து மருந்து தனைக்கேளாய்
மானே பழைய புளிவெல்லம்
　　வரையாய்ச் சித்திர மூலமுடன்

தேனே குப்பை மேனியின் பால்
திறமாய் விட்டுச் சேர்த்தரைத்து
வானோர் குழம்பு பணவெடைதான்
வகையாய் கொடுக்க வலிபோகும்.

வலியே செய்யும் நீர்க்கட்டு
மாற்ற மருந்து வகைகேளாய்
நலியாய் மிளகு பொரிகாரம்
நன்றாய்ப் பொரித்து கண்டினுடன்
மெலியா யாண்டு வராகன்பொடி
மெய்யா யாவின் நெய்யதனில்
புலியாங் குழம்பு பணவெடைதான்
புகழ்ந்தே கொடுக்கப் பிணிபோமே.

(சு.18 பா.1-20)

செய்முறை : பெருங்காயம், கடுகு, இந்துப்பு, இரசம், வெங்காரம், நாபி. மனோசிலை, திப்பிலி, அரிதாரம், கருஞ்சீரகம், இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1கிராம்), வாளம் 10 கழஞ்சு (51 கிராம்) முறைப்படி ஆமணக்கெண்ணெயில் வறுத்து மேற்கூறியப் பொடிகளுடன் சேர்த்து, குழம்பாக்கிக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு

துணைமருந்தும் தீரும்நோயும் : சுக்குக் கற்கத்தில் சுரமும் கடுக்காய்ச் சாற்றில் இருமலும், சுக்கு மிளகு சேர்ந்த பொடியில்-குளிர்சுரமும், பசுநெய், எருமைப் பாலில்-இரத்தமூலமும் மிளகுத் தூள், வெள்வெங்காயச் சாற்றில்-பாண்டு, வெப்பு, மகோதரம், பெருவியாதி, நீராம்பல் சோகையும், தேனிஞ்சிச் சாற்றில்-சன்னியும், வேப்பஞ்சாற்றில்-விடசன்னியும் தீரும்.

கற்றாழஞ்சோறு, தயிர்த்தெளிவு, சந்தனம் இவைகளைச் சேர்த்தரைத்து வைத்துக்கட்ட கண் வீக்கம், சன்னி தீரும்.

பிளவை, தொடைவாழை, அரையாப்பு, சிலந்தி, முலைக் குத்துப்புண் இவைகட்கு உமிழ்நீரில் கலந்து பூசத்தீரும்.

வாதசூலை, குட்டம், வாய்வு போன்றவற்றிற்கு நொச்சிச் சாற்றில் கொடுக்கத் தீரும்.

கபாலவலி, பைசாசம், இவற்றிற்கு அகத்தியர் குழம்பை துணியிலிட்டு திரியாக்கிப் புகைத்துப் பிடிக்கத்தீரும்.

நீர்ச்செறிப்பு, கல்லடைப்பு இவற்றிற்கு தாழம் விழுதிலும், தீராத கிரந்தி, பறங்கிப்புண் இவற்றிற்குச் சங்கங்குப்பிச் சாற்றிலும் பாம்பு, பல் விஷங்களுக்கு புகைக்காட்டவும் தீரும்.

வெள்வெங்காயம், கழற்கொடி, முசுமுசுக்கை, நொச்சி இவற்றின் குடிநீரில் கொடுக்கச் சன்னி நோய்கள் தீரும்.

நாவல்பட்டைச்சாறு, வெள்ளாட்டுப்பால் இவற்றில் சீரகமும் சேர்த்துக் கூட்டிக் குழம்புடன் ஒரு பணவெடை (488 மி.கி) உட்கொள்ள சூதகவாய்வு, கர்ப்பவாதம், தீரும்.

மிளகு, சுக்கு சேர்ந்தப் பொடியில் திறட்சிவலி, சூதகவாய்வு தீரும்.

உள்ளி, முருங்கைப் பட்டை, புங்கு, எருக்காலம் வேர், திருகுகள்ளி, இஞ்சிச் சுரசம் இவற்றில் கொடுக்கப் புறவீச்சு தீரும்.

இலவங்கப் பத்திரி, கிராம்பு, அதிமதுரம், தாளிசபத்ரி, ஆவின் வெண்ணெயும் கூட்டிக் கொடுக்க நெஞ்சு வலிதீரும்.

தாளியிலை, அவுரி, ஆவின்வெண்ணெய் இவற்றுடன் இரண்டு பணவெடை (976மி.கி) குழம்பைக் கூட்டிக் கொடுக்க விரியன்கடி தீரும்.

நாவல் கொழுந்து, மிளகு, வெள்ளிலை இவற்றுடன் சேர்த்துக் கொடுக்க நாகக்கடி விடம் தீரும்.

தேன், உமிழ்நீர் இவற்றில் சேர்த்துக் கொடுக்க விடங்கள் தீரும்.

வெல்லம், மிளகு, பேய்ப்பீர்க்கு, குப்பைமேனி இவற்றில் சேர்த்துக் கொடுக்க வழலை விடம் தீரும்.

பழையபுளி, வெல்லம், சித்திரமூலம், குப்பைமேனி இவற்றில் கொடுக்க வலி தீரும்.

மிளகு, வெங்காரம், கற்கண்டு, ஆவின்நெய் இவற்றில் குழம்பைக் கூட்டிக் கொடுக்க நீர்க்கட்டு போன்ற நோய்கள் தீரும்.

## கும்மட்டிக்காய்க் குழம்பு

காயான வரிக்குமட்டி அஞ்சு பத்து
　　கல்லுரலி லிடித்துத்தான் பாண்டத் திட்டு
தாயான பசுவின் கோமியம்ப தக்குத்
　　தான்விட்டு அடுப்பேற்றி நாலொன் றாக்கித்

தீயான பனிரெண் டரைதான் வெல்லஞ்
சேத்திடப்பா பருவந்தன்னில் மாகாத் திரிகடு
மாயான திரிகடுகு காந்த முள்ளி
மாசினக் காரம் வெங்காரந் தானே.

காரப்பா வெடியுப்பு சவுக்கா ரந்தான்
கரியசீரகமு மிந்துப் புடனே கேளு
பாரமாம் விராகனெடை வகைஒன் றிப்பார்
பாச்சுரசம் நேர்வாள மரையுங் கூட்டு
சாரமாந் திருகுகள்ளிப் பாலுங்கேளு
தானரைக்கால் படிசேர்த்து மருந்தை யாட்டு
வீரமாம் பாகுதனில் கலக்கிக் காய்ச்சி
மேல்வாரு பசுவின்பால் படிதா னொன்றே.

படியரைக்கால் யேரண்டத் தெண்ணெய் வாரு
பசுவின்நெய் படியரைக்கால் கூடத் தாக்கு
திடமுரத்தான் காய்ச்சியே குழம்பு போல
சேரப்பா கல்வத்தில் பத்து நாள்தான்
இடமுறவே தானியத்தில் வைத்தெ டுத்தே
இரையளவு வெள்ளத்தில் யிருத்தி னாக்கால்
துடியரவே நீராம்பல் கவுசி வாய்வு
சொல்பாண்டு ரோகநீர்ச் சோர்வு போமே.

(சு,21. பா. 329-331)

செய்முறை : வரிக்கும்மட்டிக்காய் வேண்டிய அளவு எடுத்து கல்லுரலிலிடித்துச்சாறு கொண்டு, அத்துடன் பசுவின் நீர் ஒரு பதக்கு (10.7லிட்) கூட்டி, நாலிலொன்றாகக் காய்ச்சி, வெல்லம் 12½ பலம் (437.5 கிராம்), திரிகடுகு, காந்தம், உள்ளி, சீனக்காரம், வெங்காரம், வெடியுப்பு, சவுக்காரம், கருஞ்சீரகம், இந்துப்பு இவை வகைக்கு 1 வராகனெடை (4.2கிராம்), நேர் வாளம் ½ வராகன் (2.1 கிராம்), திருகுகள்ளிப்பால் அரைக்கால்படி (187 மிலிட்), எனக் கூட்டிக் காய்ச்சி அத்துடன், பசுவின் பால் 1 படி (1.3லிட்), ஆமணக்கெண்ணெய், பசுவின் நெய் அரைக்கால் படி (187மி. லிட்) இட்டுக்காய்ச்சி, தானியப் புடத்தில் வைத்து எடுத்துக்கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு,

தீரும்நோய்கள் : நீராம்பல்கட்டி, வாய்வு, பாண்டு போன்றவைத் தீரும்.

## வில்வாதிக் குழம்பு

பாடுகிறேன் வில்வாதிக் குழம்பு தன்னைப்
பகரறிய நோயெல்லாம் பறந்து போக
ஆடியதோர் வில்லைவேர் பலமு வைந்து
அதினுடைய மூலந்தானும் ரெண்டுபத்து பலமாம்
பாடியே யிடித்துமொரு பாண்டத் திட்டு
பதக்குநீர் அளந்துவிடு யடுப்பி லேற்றி
வாடியே யெரித்ததனை மூன்றுபடி யாக்கி
வற்றியபின் னிருத்தலிலே சர்க்கரையைப் போடே.

போடுவது நல்லவெல்லம் சர்க்கரைதான் மைந்தா
போட்டதனை பாகுவரும் பதத்தில் கேளு
தேடுவது திப்பிலியும் திப்பிலி மூலம்
செவ்விய மிளகஞ்சி சித்திர மூலம்
தேடுவது சீரகமும் மேல்வில் வங்கஞ்
சிறுநாகப் பூவோடு பத்திரியு மாமே
ஆடுவதும் அதிமதுரம் கூகை நீரு
அழகான வாலுளுவை மாஞ்சி காணே.

காணென்ற அதிவிடய மதுர மிந்துப்பு
கண்டுகொள்ளும் வகைக்குரெண்டு பலந்தான்
சொன்னோம்
காணென்ற குங்குமப்பூ கிராம்பு பத்திரி
சாதிக்காய்.வகைவகைக்கு எல்லாந் தானும்
பேணெனிவைக் கெல்லாம் யிளவறுப்புச் செய்து
பொடித்தந்தக் கசாயத்தில் போட்டுக் கொண்டு
ஏனென்ற கத்தூரி வராகன் போடு
இறக்கிவைத்து நாளென்றுக் கிருநேரங் கொள்ளே.

கொள்ளுவதும் நேரமொரு புன்னைக் காயளவு
குன்மமொடு சத்திவிக்கல் நெஞ்சுவலி தீரும்
கொள்ளவே யரோசிகமு மூக்குநீர்ப் பாய்ச்சல்
குலையெரிவு காமாலை கிராணி மூலம்
வள்ளலே யிளைப்பொடு யிரும லீளை
வயிற்றுவலி புழுக்குடைச்சல் கிருமி மூலம்
தெள்ளியதோர் நோயெல்லா மோடிப் போகும்
தேகமது மண்டலத்தில் தீர்க்க மாகும்.

(சு. 19. பா. 171-174)

செய்முறை : வில்வவேர் 15 பலம் (525 கிராம்) சமூலம் 20 பலம் (700 கிராம்) எடுத்து இடித்து ஒரு பதக்கு (10.7 லிட்) நீரிலிட்டு மூன்று படியாகக் (3.9லிட்) காய்ச்சி, அத்துடன் சர்க்கரையைப் போட்டு பாகுபதமாக ஆக்கவும். அத்துடன் திப்பிலி, திப்பிலி மூலம், செவ்வியம், மிளகு, இஞ்சி, சித்திரமூலம், சீரகம், சிறுநாகப்பூ, சாதிபத்திரி, அதிமதுரம், கூகைநீறு, வாலுளுவை, சடாமாஞ்சி, அதிவிடயம், இந்துப்பு இவை வகைக்கு 2 பலம் (70 கிராம்), குங்குமப்பூ, கிராம்பு, கத்தூரி, சாதிக்காய் இவற்றை வேண்டிய அளவு வறுத்துச் சேர்த்து முறைப்படி குழம்பாக்கிக் கொள்ளவும்.

அளவு : புன்னைக்காயளவு, ஒரு நாளைக்கு இரு வேளை.

தீரும்நோய்கள் : குன்மம், சத்தி, விக்கல், நெஞ்சுவலி, அரோசிகம், மூக்கு நீர்ப்பாய்ச்சல், குலையெரிவு, காமாலை, கிராணி, மூலம், இளைப்பு, இருமல், ஈளை, வயிற்றுவலி, புழுக் குடைச்சல், கிருமிமூலம் தீரும்.

# குளிகை

## ஆனந்த வயிரவன் குளிகை

அரையிறேன் வெங்காரம் நாவி சூதம்
அப்பனே சாதிலிங்க திப்பிலி நல்மிளகு
நிறையாகத் தூக்கியே யிஞ்சிச் சாறு
நேர்சமனாம் பழச்சாறுங் கலந்து கொண்டு
குறையாம விருச்சாம மாட்டி வாங்கிக்
குன்றிபோ லுருட்டடா குளிகை தானும்
கறையான கிராணிக்கு முத்தக் காசு
கனத்தவதி விடையம்பொன் முசுட்டை வேரே.

முசுட்டைவேர்க் கொம்பு சரியாய் வாங்கி
முடுகவதைக் கசாயமிட்டு குளிகை யூட்டு
முசுட்டையுறு மேதிமோர் பிட்டி லுட்ட
மோதிவரும் நீர்மேக மோடுந் தூர
முசுட்டையுறும் பழஞ்சாற்றிற் சுவாச காச
முதிர்ந்துநின்ற வேர்க்கொம்பு கிராம்பு விந்து
முசுட்டைபெறுந் திப்பிலியுஞ் சரியா யாட்டி
முதிர்த்தயிரில் வராகனெடை கொடுத்தி டாயே.

கொடுத்திடவே யதிசாரந் தீரு மப்பா
கூறான வசீரணத்துக் குறவு கேளு
அடுத்துநீ வழுதலையி னீரி லூட்டு
அக்கினி மந்தந்தனக்கு வறையக் கேளு
கடுத்துடைய திரிகடுகு பொடியி லூட்டு
கனவாய்வு போகவென்றால் கசாயங் கேளு
படுத்திடுமே யெவ்வகையும் நிவர்த்தி யாகப்
பஞ்சமாங் கசாயமடா பத்தி செய்யே.

(சு.1 பா. 210-212)

செய்முறை : வெங்காரம், நாவி, சூதம், சாதிலிங்கம், திப்பிலி, நல்மிளகு இவற்றை வாங்கி இஞ்சிச்சாறும், பழச்சாறும் சமஅளவாகக் கலந்த சாற்றினால் இரண்டு சாமம் (6மணி நேரம்) ஆட்டி குன்றி அளவாக (130 மி.கி) குளிகை செய்து கொள்ளவும்.

அளவு : நோய்க்குத் தக்க அளவு.

துணைமருந்தும் தீரும்நோய்களும் : முத்தக்காசு, அதிவிடயம் பொன் முசுட்டை வேர் இவற்றைச் சமயெடை வாங்கி கசாயம் வைத்து அதில் குளிகையைக் கொடுக்க கிராணி, நீர்மேகம் தீரும் பழச்சாற்றிலுண்ண சுவாசகாசம் தீரும். முதிர்ந்தவேர், கிராம்பு, திப்பிலி இவற்றைச் சமஅளவு கலந்து ஆட்டி தயிரில் வராகனெடைச் சேர்த்துண்ண அதிசாரம் தீரும். வழுதலையின் நீரிலுண்ண அசிரணம் நீங்கும். அக்கினி மந்தத்திற்குத் திரிகடுகு பொடியில் உண்ணவும். கனவாய்வெல்லாம் நீங்க பஞ்சமாங் கசாயத்தில் உண்ணவும் தீரும்.

பத்தியம் காக்கவும்.

(வேறு)

உரையாத சூதமொரு பலமுந் தூக்கு
    உற்றரச செந்தூரம் பலமு மொன்று
நிரையாத கந்தகமும் பலந்தா னொன்று
    நேரான அப்பிரகம் பலமு மொன்று
கரையாத நாவியுமோ பலமு மொன்று
    காணப்பா செவ்வாலங்கொட்டை பலமும் மூன்று
வரையாத யிவையெல்லா நாக வல்லி
    சாற்றா லாட்டிநீ வழித்து வாங்கே.

வழித்ததொரு மருந்துக்கு விபரங் கேளு
    மைந்தனே வெற்றிலையா லரைத்து வாங்கி
வழித்திடுவாய் விரல்கனத்தில் குகைப்பி டித்து
    மறுபடியும் மருந்தந்தக் குகைக்குள் வைத்து
வழித்தரைத்த வெற்றிலையைக் குகையின்மேல் பூசி
    வாகாகச் சீலைசெய்து மண்ணுஞ் செய்து
வழித்த கசபுட மொன்று போடு
    வருண்போ விருக்கும் வரிசை கேளே.

கேளப்பா செந்தூர மெல்லா வாங்கி
கிருகபுரி செவ்வாலங் கொட்டை யோடு
வாளப்பா நாவியிவை பலமும் ரெண்டு
ஆட்டுநீ வெற்றிச்சாறு விட்டேன் நன்றாய்
நாளப்பா என்றரைத்து வழித்து நீயு
நற்குன்றிப் பிரமாணம் வுண்டை கட்டி
மீளப்பா சுக்கு நவசித்திர மூல
மீறாமல் பொடிசெய்து வெருகடிதான் தூக்கே.

தூக்கியதோர் பொடிகயி லொருகுளிகை யிட்டு
சுடுசாத்தில் சகையில் தானூட்டு
தாக்கிதோர் நாள்மூன்றில் சுரமெல்லாந் தீரும்
தடைப்பட்ட சுரசூலை கிராணி பாண்டு
தேக்கியதோ றிவ்வகைக்குக் குன்மத் துக்குஞ்
செலுத்தினால் அனைத்துப்போம் பத்தியங் கேளு
ஆக்கியதோர் சோற்றுக்கு பாலா மற்றொன்
றாகாது புளியுடவி லடுத்தி டாதே. (சு.9. பா. 50—53)

செய்முறை: சூதம், ரசசெந்தூரம், கந்தகம், அப்பிரகம், நாவி இவை வகைக்கு 1பலம் (35 கிராம்), செவ்வாலங்கொட்டை 3 பலம் (105 கிராம்) வாங்கி நாகவல்லிச் சாற்றில் ஆட்டிக் கொள் ளவும். வெற்றிலையை அரைத்துக் குகைசெய்து அதனுள் மருந்தை வைத்து மூடிச்சிலை மண் செய்து பக்குவமாகப் புடம் போட்டெ டுக்கவும். புடம் போட்டெடுத்த செந்தூரத்துடன் செவ்வாலங் கொட்டை, நாவி இவை 2 பலம் (70 கிராம்) சேர்த்து வெற்றிலைச் சாறு விட்டரைத்து குன்றிமணியளவு (130 மி.கி) குளிகை செய்து கொள்ளவும்.

துணை மருந்து: சுக்கு, சித்திரமூலம் சேர்த்திடித்த பொடி வெருகடி அளவு ஒரு குளிகை சேர்த்து சுடுசாதத்தில் 3 நாட் கள் உண்ணவும்.

தீரும் நோய்கள்: சுரம், சுரசூலை, கிராணி, பாண்டு, குன்மம் தீரும்.

பத்தியம். புளிநீக்கவும். பால்சோறு உண்ணவும்.

(வேறு)

நாவி சூத மனோசிலை கெந்தகம்
நல்ல லிங்க மரிதாரஞ் சமனொடு
நீவி நிம்பச் சாற்றி லரைத்ததை
நிச்சயஞ் சிறுபய றளவே யுண்டை

மேவு கின்ற குளிரிஞ்சிச் சாறதில்
மிக்க சன்னி முலைப்பாலில் தேய்த்திடில்
ஆவி தன்னை யலையாமல் தகர்த்திடும்
ஆதி யானந்த வயிரவன் குளிகையே.

(சு.20)

செய்முறை: சூதம். மனோசிலை. கெந்தகம். லிங்கம், அரிதாரம் சம அளவுயெடுத்து, நிம்பச்சாற்றிலரைத்து, சிறு பயறளவு உண்டை செய்து இஞ்சிச் சாற்றிலுண்டு, முலைப் பாலில் கலந்துத்தேய்த்திடில் சுரம் தீரும்.

## இரசாயன குளிகை

அடுத்ததொரு ரசாயன வயிரவத்தைச் சொல்வேன்
அப்பனே சந்திரா வறிந்து கொள்ளு
தொடுத்ததொரு நோய்க்கெல்லாம் சம்பிரதா யமதோ
முன்னேநோ யெல்லாந் தூளாய்ப் போகுங்
கடுத்ததொரு சூதம்ரெண்டு வசம்பு ரெண்டு
கழஞ்சிரெண்டு சுக்குரெண்டு மிளகு ரெண்டு
எடுத்ததொரு இரண்டு வாளம் ரெண்டு
இயல்பான திரிபலையுங் கழஞ்சி ரெண்டே.

இரண்டாகு உத்திராட்ச மிவைக்கு நேராய்
மிட்டுவாய் வெள்ளுள்ளி பருப்பு
இரண்டாகும் பாண்டத் திட்டுக் கிளரு
இரஞ்சுக் குள்ளித் தயிலங் கொண்டு
இரண்டாகுஞ் சாமமொன்று வெள்ளாட்டுப் பாலில்
இட்டிறக்கி மத்திகொண்ட முன்பித்தில் வாங்கே.

வாங்கியதோர் பித்துக்குள் சாமமொன்று ஆட்டி
மத்திச்சு ஆறியபின் னெடுத்து மைந்தா
பாங்கியதோற் குன்றியெடை குளிகை கட்டி
பதறாம லந்தந்த வியாதி பார்த்து
தாங்கியதோர் கரிப்பா னீருள்ளி நீரில்
சணந்திரு மிஞ்சிச் சாற்றி லூட்டே
தேங்கிய தோர்முயல் மூர்ச்சை வாய்வு
மூச்செதி லேற்பன மூர்ச்சையிவை போமே.

போமப்பா தலைவலியுஞ் சன்னி மூர்ச்சை
புகழான காலாதி வேதினையா மூர்ச்சை
ஆமப்பா மூக்கினீர்ப் பாய்ச்சல் தானு
மரோசிமுதல் பறந்தோடு மப்பா சேளு
வேமப்பா சுரமெல்லாம் மொழிந்து போகு
மெனுஞ்சிலை பானமென்ற குளிகை சொல்வோம்
நாமப்பா சீலையொன்று துத்த மொன்று
நயமாக சுத்திசெய்து யெடுத்தி டாயே.

(சு.9. பா. 54—57)

செய்முறை: சூதம், வசம்பு, சுக்கு, மிளகு, வாளம் உத்திராட்சம், வெள்ளுள்ளிப் பருப்பு இவை வகைக்கு இரு கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி ஒரு பாண்டத்தில் போட்டு வெள்ளாட்டுப்பாலில் இரண்டு சாமம் (6 மணி நேரம்) வேக வைத்திறக்கி மத்தித்து ஆறிய பின் குன்றியெடை குளிகையாகச செய்து கொள்ளவும்.

அளவு: குன்றியெடை (130 மி.கி).

துணை மருந்து: கரிப்பானீருள்ளி நீர், இஞ்சிச்சாறு.

தீரும் நோய்கள்: முயல்மூர்ச்சை, வாயு, சிலேற்பனமூர்ச்சை தலைவலி, சன்னிமூர்ச்சை, மூக்கில் நீர்ப்பாய்ச்சல்முதலியன தீரும்.

## இராம பாண மகாகுளிகை

பிறையோகஞ் சொன்னதெல்லா முண்மை யுண்மை
பேர்பெரிய சுரராம பாணங் கேளு
பிறையோகம் வாலரசம் பலந்தா னொன்று
பிசகாமல் சுத்திசெய்த வெள்ளைபல மொன்று
பிறையோகம் பாகலிலைச் சாற்றி லாட்டு
பிரியாத ரசமாமும் பேத மில்லைப்
பிறையோக மிருசாம மாட்டிக் கொண்டு
பின்புசிறு குளிகையெனப் பிடித்தி டாயே.

பிடித்திட்ட குளிகைதனை நிழலுலர்த்து லர்த்திப்
பிலமீறத் தானிப்புடமேற்றிச் சிமிழ டைத்துப்
படித்திட்ட இஞ்சிதட்டிப் புழிந்துப்படி தள்ளிப்
பற்றினதை அகற்றியே தெளிவாக வாங்கிக்

குடித்திடவே குளிகையொன்று அந்தி சந்தி
கொடுத்திடுவாய் நால்மாறல் நாலு நாளும்
அடித்தசுரம் விட்டோடு மாறல் போகும்
அப்படியே மும்மாறல் மூன்றுநா ளருந்தத்திரும்.

தீர்ந்துபோம் நித்தியசுரம் வந்த பேர்க்குத்
திறமாக முப்பொழுதிற் றீருந் தீரும்
தீர்ந்துபோம் பலசுரங்கள் சேர்ந்திட் டாக்கேள்
திறங்கண்டு கசாயமிஞ்சி செலுத்தத் தீருந்
தீர்ந்துபோந் தீராத சுரங்க ளெல்லாந்
திறங்கேட்டு ஓடுமிதின் பேர்சொன் னாற்கால்
தீர்ந்துபோம் வெறுட்டு குடில மெல்லாந்
திறங்கெட்டு யாவும் ஓடுந் தானே.

(சு. 1. பா. 89—91)

செய்முறை: வாலரசம், சுத்திசெய்த வெள்ளை இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்) வாங்கி, பாகலிலைச் சாற்றினால் இரண்டு சாமம் ( 6 மணி நேரம்) ஆட்டி, சிறு குளிகை செய்து நிழலுலர்த்தவும். பின் தானியப் புடத்தில் வைத்தெடுத்துச் சிமிழில் அடைத்துக் கொள்ளவும்.

அளவு: காலை, மாலை ஒவ்வொரு குளிகையாக நான்கு நாட்கள்.

துணைமருந்து: இஞ்சித் தண்ணீர், இஞ்சிக்கசாயம்.

தீரும்நோய்கள்: மூன்று நாளருந்தச் சுரம் நீங்கும், நித்தியசுரம் வந்தோாக்கு மூன்றுவேளை உண்ணத்தீரும். இஞ்சிக் கசாயத்திலுண்ணத் தீராத அனைத்துச் சுரங்களும் தீரும்.

## இராமபாண மாத்திரை

சாதிலிங்கம்-4, எலிப்பாடாணம் 6, இந்த இரண்டையுங் கூட்டிப் பொன்னூமத்தை இலைச்சாறு வார்த்தரைத்து நன்றாக அரைத்துக் குன்றிப் பிரமாணம் குளிகை பண்ணி ஒரு குளிகை சர்க்கரையுடன் கொடுக்க. இதுவின்பேர் இராமபாணம். சீதசுரங்கள் போக்கும். (சு.3)

செய்முறை: சாதிலிங்கம்-4, எலிப்பாடாணம் 6 இவை இரண்டையும் பொன்னூமத்தை இலைச்சாறு விட்டரைத்து குன்றிப் பிரமாணம் குளிகை செய்து கொள்ளவும்.

அளவு: குன்றி அளவு (130 மி.கி) ஒரு குளிகை.

துணை மருந்து: சர்க்கரை.

தீரும்நோய்கள்: ஒரு குளிகை சர்க்கரையுடன் கொடுக்கச் சீதசுரங்கள் தீரும்.

## இலவங்காதி மாத்திரை

இலிங்கம், வெண்காரம், இலவங்கம், வாளம், பூரம் இவைகளில் இலவங்கம் வராகன் 6, வாளம் வராகன் 6, மற்ற 3 தினுசுகளும் ஒவ்வொரு வராகனெடை வாங்கி எலுமிச்சம் பழம் ரசம் விட்டு 2 சாமம் அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரை செய்துலர்த்தி வைத்துக் கொண்டு சுரத்திற்கு இஞ்சிச்சாற்றிலும், வலிப்புக்கு தேனல்லது முலைப்பாலிலும் கொடுக்கத்தீரும். (சு. 22)

செய்முறை : இலவங்கம், வாளம் வகைக்கு 6 வராகன் (25.2 கிராம்), இலிங்கம், பூரம், வெண்காரம் இவை வகைக்கு ஒவ்வொரு வராகனெடை (4.2 கிராம்) வாங்கி எலுமிச்சம் பழரசம் விட்டு 2 சாமம் (6 மணிநேரம்) அரைத்து குன்றி மணியளவு (130 மி.கி) மாத்திரை செய்துலர்த்திக் கொள்ளவும்.

அளவு : நோய்க்குத் தக்க அளவு,

துணைமருந்தும் தீரும்நோய்களும்: சுரத்திற்கு இஞ்சிச்சாற்றிலும் வலிப்புக்குத் தேனல்லது முலைப்பாலிலும் கொடுக்கத் தீரும்.

## இலிங்க மாத்திரை

இலிங்கம் வராகன்-1, திப்பிலி-வராகன் ½ பசுவின் பாலில் ஒரு சாமமரைத்துப் பாசிப் பயறளவு மாத்திரை உருட்டி, நிழலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். இஞ்சி ரசத்திலிடச் சகல காய்ச்சலும் நீங்கும். சுட்டபுளி, வறுத்த உப்பு சேர்த்துக் கொள்ளவும். (சு. 22)

செய்முறை : இலிங்கம் 1 வராகன் (4.2 கிராம்) திப்பிலி ½ வராகன் (2.1 கிராம்) வாங்கி, பசுவின்பால் விட்டு ஒரு சாமம் (3மணி நேரம்) அரைத்து, பாசிப்பயறளவு மாத்திரை செய்து கொள்ளவும்.

அளவு : நோய்க்குத் தக்க அளவு.

துணைமருந்து : இஞ்சிரசம்.

தீரும்நோய்கள் : எல்லாக் காய்ச்சலும் நீங்கும்.

பத்தியம் : சுட்டபுளி, வறுத்த உப்பு சேர்க்கவும்.

## ஏலாதி மாத்திரை

பாகமா மேலாதி மாத்திரை தன்னைப்
　　பாடுறேன் புலத்தியனே பண்பாய்க் கேளு
ஏகமா மேலமில வங்கம் வால்மிளகு
　　இசைந்த திரிகடு குடனேசன்ன யிலவங்கம்
வேகமுள்ள சித்திரத்தை திப்பிலியின் மூலம்
　　வெட்டிவேர் லாமிச்சுச் செவ்விய மதிவிடையம்
தாகம்விடு மதிமதுரஞ் சீரகங்க ளிரண்டு
　　தாளிபத் திரிகடுகு ரோணியுஞ் சேரே.

சேரப்பா திரிபலையுங் குரோசாணி ஓமந்
　　தேசபுர மக்கிராக் காரமுத்தக் காசு
சேரப்பா சாதிக்காய் பத்திரி கிராம்புச்
　　சிறுநாகங் குங்குமப்பூ கற்கடக சிங்கி
சேரப்பா அமுக்கரா நன்னாரி கொத்தமல்லி
　　சீனிக்கற் கண்டு முந்திரிகை பேரீச்சு
சேரப்பா மாதுளத்தின் தோடுபொரி காரஞ்
　　சிலைகெவுரி தாரம் வசுவாசி ரசகெந்தம்.

கெந்தமடா மலற்காயுங் கூடவிள நீறு
　　கெடியான கோரோசனை கத்தூரிப் புழுகு
பந்தமுள்ள சாதிலிங்கம் சாம்பி ராணி
　　பிரிந்தமரி தாரமமுர்த சர்க்கரையுங் கூட்டு
இந்தவகைக் கோர்கழஞ்சு சுத்திவகைப் படியே
　　எடுத்தபின்பு செந்தூரஞ் சேரும்வகைக் கேளு
முந்தாச் செந்தூரங் காந்த மப்பிரக
　　முறையோடே தாம்பிரமும் வங்கசெந் தூரம்.

செந்தூர மிந்தவகைக் கொருகழஞ்சி யப்பா
　　சேரடா யிவையெல்லாங் கல்வத்தி லிட்டு
பந்தூர மாதுளம்பழச் சாற்றி லாட்டு
　　பதறாமல் ரண்டுநா ளான பின்பு
இந்தூரு மிரண்டுநா ளிஞ்சிச் சாற்றில்
　　இயல்பான மாதுளம்பூச் சாற்றிலி ரண்டு
தினந்தான் வெந்தூரும் பன்னீரில் ரண்டு
　　தினமரைத்து மேலான குளிகைசிறு பயத்தளவே

(சு. 1. பா. 308-311

செய்முறை : ஏலம், இலவங்கம், வால்மிளகு, திரிகடுகு, சித்தரத்தை, திப்பிலிமூலம், வெட்டிவேர், இலாமிச்சு, அதி விடயம், செவ்வியம், அதிமதுரம், சீரகம், தாளிசபத்திரி, கடுகு ரோகணி, திரிபலை, குரோசாணி ஓமம், அக்கிராக்காரம், முத்தக் காசு, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சிறுநாகம், குங்குமப்பூ, கற்கடகசிங்கி, அமுக்கிரா, நன்னாரி, கொத்தமல்லி, சீனிக்கற் கண்டு, முந்திரிகை, பேரீச்சு, மாதுளத்தின் தோடு, பொரிகாரம், மனோசிலை, கவுரி, தாரம், வசுவாசி, ரசகந்தம், இளநீறு, கோரோ சனை, கத்தூரி, புழுகு, சாதிலிங்கம், சாம்பிராணி, அரிதாரம், அமுர்தசர்க்கரை இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1கிராம்) வாங்கி சுத்தி செய்து கொள்ளவும். செந்தூரம், காந்தம், அப் பிரகம், தாம்பிரம், வங்க செந்தூரம் இவற்றை வகைக்கொரு கழஞ்சாகக்கல்வத்திலிட்டு மேற்கண்ட சரக்கைக் கொட்டி மாது ளம் பழச்சாற்றில் இரண்டு நாளரைக்கவும். இரண்டு நாளான பின் இஞ்சிச் சாற்றில் இரண்டு நாளும், மாதுளம் பூச்சாற்றில் இரண்டு நாளும், பன்னீரில் இரண்டு நாளும் அரைத்துச் சிறுபயறின் அள வாகக் குளிகை செய்து கொள்ளவும்.

அளவு : சிறு பயறளவு ஒரு குளிகை.

தீரும்நோய்கள் :மாந்தம்.

(வேறு)

தானென்ற ஏல மதிமதுர மஞ்சு
சுக்கு சாதிக்காய் பொன்மெழுகு லவங்கப்பட்டை
நானென்ற சந்தனமுந் தேவ தாரம்
நன்னாரி வேருடனே முத்தக் காசு
கோனென்ற கோரோசனையுங் கடுகுரோ கணியுங்
கோட்டமொடு இலுப்பைபூ மிலாமிச் சம்வேர்
ஊனென்ற முந்திரிகை பேரீச் சோடு
உயர்ந்தசடா மாஞ்சி திப்பிலியு மாமே,

ஆமடா பச்சிலை யும்வகை யொன்று
அப்பனே கழஞ்சியொன்று கல்வத் திட்டு
தாமடா கருப்பஞ்சாறு யிளநீர் விட்டுத்
தானரைத்து சுண்டைக்கா யளவதாக
ஓமடா உருட்டிநிண லுலர்த்திக் கொண்டு
உத்தமனே இளநீரே வேக வைத்து

போமடா அந்நீரில் சீனி யிட்டுப்
புசிக்கவே குளிகையொன்று போகும் நோயே.

நோயேது பத்தியந்தான் அரைப்பு மிட்டு,
நேற்றுவரைப் பருப்புடனே அன்னங் கொள்ளு
தாயேது பசுவின்பால் சீனி யிட்டு
தான்கொள்ளு சூடெல்லா மாறிப் போகும்.

(சு. 21. பா. 268-270)

செய்முறை : ஏலம், அதிமதுரம் 5 கழஞ்சு (25 5 கிராம்), சுக்கு, சாதிக்காய், பொன்மெழுகு, இலவங்கப் பட்டை, சந்தனம், தேவதாரம், நன்னாரிவேர், முத்தக்காசு, கோரோசனை, கடுகு ரோகணி, கோட்டம், இலுப்பைப்பூ, இலாமிச்சம்வேர், முந்திரி, பேரீச்சம், சடாமாஞ்சில், திப்பிலி, பச்சிலை இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) வாங்கி கல்வத்திலிட்டு, கரும்புச்சாறும், இளநீரும் விட்டரைத்துச் சுண்டைக்காயளவு குளிகை செய்து கொள்ளவும்.

அளவு : 1 குளிகை.

துணைமருந்து : இளநீர், சர்க்கரை.

தீரும் நோய்கள் : இளநீரைக் கொதிக்க வைத்து சர்க்கரை போட்டு அதில் ஒரு குளிகை போட்டுக் குடிக்க நோய்களெல்லாம் தீரும்.

## கத்தூரி மாத்திரை

கத்தூரி, ஏலக்காய், கற்பூரம், கோரோசனை, சாதிக்காய், பச்சைக்கற்பூரம், சாதிப்பத்திரி, இலவங்கம், மிளகு, வால்மிளகு, திப்பிலி மேற்கண்டதுகளில் கத்தூரி வராகன் 2, மற்றதெல்லாம் வராகன் 1 வாங்கி, இலவங்க கசாயத்திலரைத்து, சிறுபயறு பிரமாணம் உருண்டை செய்து நிழலுலர்த்தி, கருப்பட்டியில் வைத்துக் கொடுக்கவும். தோடம், நாவறட்சி, வலிப்பு, தலை பாரம் தீரும். (சு.22)

செய்முறை : கத்தூரி 2 வராகன் (8.4 கிராம்), ஏலக்காய், கற்பூரம், கோரோசனை, சாதிக்காய், பச்சைக்கற்பூரம், சாதி பத்திரி, இலவங்கம், மிளகு, வால்மிளகு, திப்பிலி இவை வகைக்கு 1 வராகன் (4.2கிராம்) வாங்கி இலவங்கக் கசாயத்திலரைத்துச் சிறு பயறளவாக உருண்டை செய்து கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : கருப்பட்டி.

தீரும்நோய்கள் : தோடம், நாவறட்சி, வலிப்பு, தலைபாரம் தீரும்.

## குங்குமப்பூ மாத்திரை

குங்குமப்பூ, சுக்கு, திப்பிலி, மிளகு, சாதிக்காய், கிராம்பு, ஏலம், சந்தனத்தூள், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், தேசாவாரம், கடுகுரோகணி, கோரோசனை இந்த பதினான்கில் குங்குமப்பூ பலம் 1, கோரோசனை பலம் $\frac{1}{4}$, மற்ற தினுசுகள் வகைக்கு பலம் $\frac{1}{2}$ வாங்கி சகலவற்றையும் ஒன்றுபடுத்தி எலுமிச்சம் பழச்சாற்றால் ஆறுசாமமரைத்து, பிறகு இஞ்சிச்சாற்றில் நான்கு சாமமரைத்து, கண்டங்கத்திரி ரசத்தில் இரண்டு சாமமரைத்து சிறு பயறு பிரமாணம் மாத்திரை உலர்த்தி கருப்பட்டியில் கொடுக்கவும்.காய்ச்சலுக்குத் தக்கினவாறு, தேன், முலைப்பாலில் வைத்துக் கொள்ளவும். சீதளம், வறட்சி போகும். (சு. 22)

செய்முறை : சுக்கு, திப்பிலி, மிளகு, சாதிக்காய், கிராம்பு, ஏலம்,. சந்தனத்தூள்,கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், தேசாவாரம், கடுகுரோகணி இவை வகைக்கு அரைபலமும், (17.5 கிராம்), குங்குமப்பூ ஒரு பலமும் (35கிராம்) கோரோசனை கால் பலமும்(8.7 கிராம்) வாங்கி எலுமிச்சம்பழச்சாற்றில் 6சாமம் (18மணிநேரம்),இஞ்சிச்சாற்றில் 4 சாமம் (12மணிநேரம்), கண்டங் கத்தரி ரசத்தில் 2 சாமம் (6மணிநேரம்) அரைத்துச்சிறு பயறளவாக மாத்திரை செய்து உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

அளவு : காய்ச்சலுக்கு ஏற்றவாறு.

துணை மருந்து: கருப்பட்டியுடன் சேர்த்து தேன் அல்லது முலைப்பால்.

தீரும் நோய்கள்: காய்ச்சல், சீதளம், வறட்சி தீரும்.

## குங்குலாதி மாத்திரை

வல்லாத தாதுக்கு குங்கு லாதி
மாத்திரையே சொல்லுகிறேன் மகிழ்ந்து கேளு
சொல்லாத லோகபற்பங் கற்பூர பற்பந்
தேவிவிந்து சிவன்விந்து கடுகு ரோகணி
பொல்லாத பேய்ச்சுரையும் விரையும் வாளம்
பொன்னூமத்தம் விரையுடனே சிவதை வேரே.

வேரப்பா வெள்ளைக்காக் கணையின் வேரு
இயலான திரிகடுகு பச்சை நாவி
ஆரப்பா மால்தேவி வெள்ளை தானும்
அரிதகியும் வகையொன்று கழஞ்சு ரெண்டு

போரப்பா கல்வத்தி லிட்டு ஆட்ட
பாங்கான நாகவல்லிச் சாற்றி லேநால்
சேரப்பா மிளகுத்தூள் கழஞ்சியெண் ணாங்கு
சேர்த்துஇள வெந்நீரில் அரைத்துக் கூட்டே.

கூட்டுவாய் மிளகளவு உண்டை கட்டி
கனமான நிழலுலர்த்தி யிளவெந் நீரில்
ஆட்டியில்லா தொருகுளிகை யீந்தா யானால்
அறுபத்து நாலுசுரம் அன்றே யேகும்
வீட்டிடுமே ஒருதரந்தான் பேதி யானால்
வெந்நீரும் அன்னமுந்தான் கொள்ளச் சொல்லு
தாட்டிவிடும் பகலுறக்கம் வேண்டாஞ் சொன்னேன்
சரசமிட்டுச் செய்யப்பா சாத்தொண் ணாதே.

ஒண்ணான திரிதோடச் சுத்தி னோடு
ஒடுங்காத விச்சுரங்கள் யேழுந் தீரும்
பெண்ணார்கள் சுகசன்னி சன்னி வாதம்
பெருஞ்சன்னி வாதசுரம் பிரலா பங்கள்
எண்ணாத சுரமனைத்தும் யில்லை யில்லை
எளிதல்ல செய்துபார் யிடுக்கந் தீரும்
கண்ணாலே திரிபுரத்தே யெரித்த யீசன்
கற்றறிந்து தேவிசொல்லக் கண்டிட் டேனே.

(சு. 21. பா. 255-258)

செய்முறை : லோகபற்பம், கற்பூரபற்பம், தேவிவிந்து, சிவன் விந்து, கடுகு ரோகணி, பேய்ச்சுரைவிதை, வாளம், ஊமத்தம் விதை, சிவதைவேர், வெள்ளைக் காக்கணையின் வேர், திரிகடுகு, பச்சைநாவி, வெள்ளை, மால்தேவி, அரிதகி இவை வகைக்கு இரு கழஞ்சு (10.2கிராம்) சேர்த்துக் கல்வத்திலிட்டு நாகவல்லிச் சாற்றில் ஆட்டி, மிளகுத்தூள் 32 கழஞ்சு (163.4 கிராம்) இளவெந் நீரில் அரைத்துக் கூட்டவும். மிளகளவு உருண்டை செய்து நிழலு லர்த்திக் கொள்ளவும்.

அளவு : மிளகளவு ஒரு குளிகை.

துணைமருந்து: இள வெந்நீர்.

தீரும்நோய்கள்: ஒருகுளிகை இளவெந்நீரில் உண்ண 64 சுரமுந் தீரும். சுகசன்னி, சன்னிவாதம், பெருஞ்சன்னி, வாதசுரம், அனைத்து சுரமுந் தீரும்.

பத்தியம்: ஒருமுறை பேதியானால்வெந்நீருஞ் சோறும் சாப்பிடவும். பகலுறக்கம் நீக்கவும்.

(வேறு)

கண்டபடி மகாகுங்கு லாதி யொன்று
காணுநீ சாதிலிங்கம் பச்சை நாவி
விண்டபடி யிந்துப்புச் சூதங் கெந்தி
வெங்காரந் திரிகடுகு கடுக்காயுங்
கொண்டபடி சிவதை யெட்டிவிரைக் குஞ்சினோடு
கொடுவேர்ப் பட்டைத் தூளுங் கூட்டு
உண்டபடி இவையெல்லாம் சமன தாக
உத்தமனே சதுரக்கள்ளிப் பால்விட் டாட்டே.

ஆட்டியே மிளகுபோ லுண்டை செய்து
அப்பனே நிணலுலர்த்தி வைத்துக் கொண்டு
கூட்டியே ஒருகுளிகை யிளவெந் நீரில்
கொடுத்திடவே சுரங்களறுபத்து நாலு மாக
கேட்டியே யாமென்ற சூலை தீருங்
கேடுகெட்ட சுரசூலை கெட்டுவிட் டோடும்
நாட்டியே அன்னமோடு வெந்நீ ருந்தான்
நல்கிடுவாய் மற்றொன்றும் நலங்கொள் ளாதே.

(சு. 21. பா. 259-260)

செய்முறை: சாதிலிங்கம், பச்சைநாவி, இந்துப்பு, சூதம், கெந்தி, வெங்காரம், திரிகடுகு, கடுக்காய், சிவதை, எட்டிவிதை, கொடுவேர்ப் பட்டைத்தூள் இவற்றைச்சம எடையாகக் கொண்டு சதுரக்கள்ளிப் பாலை ஊற்றி ஆட்டி, மிளகளவு உருண்டை செய்து நிழலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

அளவு: ஒரு குளிகை.

துணைமருந்து: இளவெந்நீர்.

தீரும் நோய்கள்: 64 சுரங்கள், சூலை, சுரசூலை தீரும்.

பத்தியம்: வெந்நீருஞ் சோறும் உண்ணவும்.

## கோடாகுடி குளிகை

கூட்ட மெனும் நோய்தீரக் கோடாக்
குளிகைதனை கூட்டுறேன் கூர்ந்து கேளு
ஈட்டமெனும் நாவிச்சங் காந்தங் கெந்தி
இயல்பான அரிதாரஞ் செவ்வலங் கொட்டை

நாட்டமெனுந் திப்பிலியுந் திரிபலை முள்ளி
நயமாக வகையொன்று கழஞ்சி யொன்று
காட்டமெனுஞ் செம்புத்தூள் எயிறாருங்
கழஞ்சியப்பா அக்கிரா கார மொன்றே.

ஒன்றான நவச்சாரம் நீர்முள்ளி விதைதான்
உற்ற நிலைப்பனைக் கிழங்குங் கூட்டி
நன்றாகும் நாளொன்று கரிப்பான் சாற்றில்
நயமாக விடாமலே கடிகை யொன்று
அன்றாட மேரெண்டு நாளரைத்து நீயும்
அப்பனே யுளுந்துபோலக் குளிகை கட்டி
குன்றாகும் வியாதிக்கு யுறுதி கண்டு
கொடுத்துவர ஆள்பலமுங் குறித்துப் பாச்சே.

பாச்செயிலே யுறுதி கண்டு கொண்டு
பழச்சாற்றில் ஆட்டியே வுண்டை செய்து
பாச்செயிலே செறியாமை குணத்துக் கென்றால்
சேரப்பா பசுநெய் கிராணி யென்றால்
பாச்செயிலே சுக்குநீ ரதனி லூட்டு
சுகமான நீராகும் முலங்கி நீராம்
பாச்செயிலே வரோசிக்கு யேரண்ட யெண்ணெய்
கட்டுமலங் கழற்றவென்றா வெல்லத் தூட்டே.

ஊட்டுவாய் பழச்சாற்றில் விடத்துக் கென்றால்
உள்கொண்டு மேலுக்குந் துவாலை போடு
நாட்டடா நெல்லுமுளைச் சாற்றி லுண்ண
நாசமாம் வினையனைத்து நன்றாய்க் கேளு
பூட்டடா நீர்ப்பிளவை வெள்ளு டைப்புப்
புகழான லேபணத்துக் கெல்லாம்
நீட்டடா முத்தக்காசு வடித்த நீரில்
நேரான கிராணிக்கு நேரே கேளே.

நேரான அசீரணமுங் கிராணி சூலை
நிலையாத கடுஞ்சூலைக் கெல்லாந் தீரும்
வேறான முருங்கைத்தோல் சாற்றி லூட்டு
மிகுந்தசெறி யாமைக்குத் தயிரி லூட்டு
வாறான சன்னிக்கு மத்தஞ் சாறு
மைந்தனே உள்ளுக்கும் மேலும் பூசு
சீரான மூச்சடைப்பு சுவாச காசம்
தீரவெவ் வாட்டுப் பாலி லூட்டே.

ஊட்டுநீ பிரமேகம் வுட்ணந் தீரும்
உரவாக நொச்சியிலைச் சாற்றி லூட்டு
நாட்டுநீ கண்புகைச்சல் போக வென்றால்
நலமான பழச்சாற்றில் நெற்றியிலே தேய்க்க
நீட்டுவா யுடலெரிவு போக வென்றால்
நெல்லிக்காய் சாற்றிலே நினைவா யூட்டு
கூட்டுநீ தண்ணீரில் பித்தம் போகுங்
கூறான கழுநீரி லுட்ணம் போமே.

போகுமடா வாயுவாதம் நடுக்கு வாதம்
புகட்டுநீ சாதிக்காய் பொடியி லப்பா
ஆகுமடா உடல்வீக்கம் சிறுநீரில் தீரும்
அப்பனே விடகடி விடமு மிக்க
வாகுமடா வாஞ்சினைக்கு சுக்கு நீரில்
வலிகடுப்புத் தீரவென்றால் வசம்புத் தூளில்
ஏகுமடா வாதமறு முள்ளிச் சாற்றில்
இயல்பான அனுப்பானங் கோடி தானே.

(சு. 9. பா. 40-46)

செய்முறை: நாவி, காந்தம், கெந்தி, அரிதாரம், செவ்வலங் கொட்டை, திப்பிலி, திரிபலை, முள்ளி இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1கிராம்), செம்புத்தூள் 6 கழஞ்சு (30.6கிராம்), அக்கிராகாரம் 1 கழஞ்சு (5.1கிராம்), நவச்சாரம், நீர்முள்ளிவிதை, பனைக் கிழங்கு இவற்றைக் கரிப்பான் சாற்றில் இரண்டு நாள் அரைத்து, உளுந்து அளவாகக் குளிகை செய்து கொள்ளவும்.

அளவு: நோய்க்குத் தக்க அளவு.

துணைமருந்தும் தீரும் நோய்களும்:

செறியாமைக்குப் பசுநெய்யில், கிராணிக்குச் சுக்கு நீரில் உண்ணவும். மலத்தை வெளியேற்ற ஏரண்ட எண்ணெய், வெல்லத்துடன் கலந்து கொடுக்கவும். விடத்திற்குப் பழச்சாற்றில் உட்கொண்டு மேலுக்குந் துவாலை போடவும். நெல்லின் முளைச் சாற்றிலுண்ண வினைகள் அனைத்தும் தீரும். நீர்ப்பிளவை, வெள்ளுடம்பு,லேபணத்திற்கு முத்தக்காசு வடித்தநீரிலுண்ணவும். கிராணி, அசீரணம், கிராணிசூலை, கடுஞ்சூலைக்கு முருங்கைத் தோல் சாற்றிலுண்ணவும், மிகுந்த செறியாமைக்குத் தயிரிலுண்ண வும். சன்னிக்கு ஊமத்தஞ் சாற்றில் கொடுத்து மேலுக்கும் பூசவும். மூச்சடைப்பு, சுவாசகாசம் தீர்வதற்கு வெள்ளாட்டுப் பாலி லுண்ணவும். பிரமேகம், உட்டிணந் தீர நொச்சி இலைச் சாற்றி

லுண்ணவும். கண் புகைச்சல் போகப் பழச்சாற்றில் கலந்து நெற்றியில் தேய்க்கவும். உடலெறிவு போக நெல்லிக்காய்ச் சாற்றில் உண்ணவும். தண்ணீரிலுண்ணப் பித்தம் போகும். கழுநீரிலுண்ண உட்டிணம் போகும். வாயுவாதம், நடுக்கு வாதம் போகச் சாதிக்காய்ப் பொடியில் உண்ணவும். உடல் வீக்கம் தீரச் சிறு நீரிலுண்ணவும். மிக்கவிடமுள்ள விடக்கடிக்குச் சுக்கு நீரிலுண்ணவும். வாதம் நீங்க உள்ளிச் சாற்றில் உண்ணவும்.

## கோரோசனை மாத்திரை

கோரோசனை, சாதிக்காய், கருஞ்சீரகம், கற்பூரம், சூதம், சாதிபத்திரி, திப்பிலி, ஓமம், இலவங்கம், அதிமதுரம், கோட்டம் அக்கிராகாரம், நன்னாரிவேர், மேற்கண்ட தினுசுகளில் கோரோசனை பலம் $\frac{1}{4}$, மற்ற தினுசுகள் வகைக்கு பலம் $\frac{1}{8}$, வாங்கி அரைத்து பயறு பிரமாணம் செய்து உலர்த்தவும். தேனில் ஒரு மாத்திரை உரைத்துக் கொடுக்கவும். சீதளம், சுரம் தீரும்.
(சு. 22)

செய்முறை: கோரோசனை கால் பலமும் (8.7கிராம்) சாதிக்காய், கருஞ்சீரகம், கற்பூரம், சூதம், சாதிபத்திரி, திப்பிலி, ஓமம் இலவங்கம், அதிமதுரம், கோட்டம், அக்கிராகாரம், நன்னாரிவேர் இவை $\frac{1}{8}$ பலமும் (4.3கிராம்) வாங்கி சேர்த்தரைத்துப் பயறளவு உருண்டையாகச் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

அளவு: ஒரு மாத்திரை.

துணைமருந்து: தேன்.

தீரும் நோய்கள்; சீதளம். சுரம் தீரும்.

## சதுரந்தி காங்குசம்

அரிதாரம், கந்தகம், தாம்பூரகாசம், மனோசிலை இவையெல்லாம் குழிக்கல்லில் வைத்து வெற்றிலைச் சாற்றில் மூன்று நாளரைத்துவரவும். புடமிட்டு வெற்றிலையுடனே கொடுக்க சர்வ சுரமும், சீதசுரமும் சாந்தமாம். (சு. 3)

செய்முறை; அரிதாரம், கந்தகம், தாம்பூரகாசம், மனோசிலை இவற்றைக் குழிக்கல்லில் போட்டு, வெற்றிலைச் சாற்றில் மூன்று நாளரைத்துப் புடமிட்டெடுக்கவும்.

அளவு: வேண்டிய அளவு.

துணை மருந்து: வெற்றிலை.

தீரும் நோய்கள்: சர்வசுரமும், சீதசுரமும் குணமாகும்.

## சதுரந்தி காங்குசம்

பச்சைநாவி, எருக்கலம் பாலில் ஏழுநாளூரவைத்து வேப்பஞ் சாறு வார்த்து ஒரு சாமம் அரைத்து உளுந்துப் பிரமாணம் குளிகை பண்ணி, அரத்தைக் கசாயத்தில் கொடுக்க சதுரந்திவை சாந்தமாம். அசமோதகத்தினுடன் கொடுக்கச் விடசுரஞ் சாந்த மாம். பெருஞ்சீரகக் கசாயத்தில் கொடுக்க விடசுரஞ் சாந்தமாம். இளநீரில் கொடுக்கப் பித்தசுரஞ் சாந்தமாம். சீத சுரத்திற்கு மோருடன் கொடுக்கவும். வசுரமும் சாந்தமாம். சாந்தசுரமும் போம். இது சதுரந்தி காங்குசம் என்று பேர். (சு.3)

செய்முறை : பச்சை நாவியை எருக்கலம் பாலில் ஏழுநாள் ஊரவைத்து வேப்பஞ்சாறு வார்த்து ஒருசாமம் அரைத்து உளுந் தளவு குளிகை செய்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு குளிகை.

துணைமருந்தும் தீரும் நோய்களும் : அரத்தைக் கசாயத்தில் கொடுக்கச் சதுரந்திவை குணமாகும். அசமோதகம் அல்லது பெருஞ்சீரகக் கசாயத்தில் கொடுக்க விடசுரம் தீரும். இளநீரில் கொடுக்கப் பித்தசுரம் தீரும். மோருடன் கொடுக்கச் சீதசுரமும், சாந்தசுரமும் தீரும்.

## சருவாங்க மாத்திரை

இனியென்ன ரசங்கழஞ்சு கெந்தி துத்தம்
இந்துப்பு அரிதாரம் துருசு காந்தம்
மணியென்ன மனோசிலையும் பவளப் புத்து
வலம்புரிச்சங் கதிமதுரம் மாயக் காயு
முனிசொன்ன மிருதார சிங்கி யோம
முக்கழஞ்சு சாதிலிங்கம் பொரிகாரத் தோடே
இனியென்ன சாதிக்காய் யேலம் வாளம்
எவச்சாரம் நவசாரஞ் சீனக் காரம்.

காரமென்ன வெண்காரம் மிளகு சுக்கு
கடுகு ரோகணி சீனங்காய் மீயஞ்
சாரமென்ன சவ்வீரம் நவபா டாணம்
சாதிபத்திரி சீயக்காய் கோதுமை யிஞ்சி
வாரமென்ன சனிஞாய றுள்ளிச் செம்பி
வசம்பும் பவுரிக்கவு தும்பை மாதருணும்
ஓரமென்ன ஒன்பத்தா ரண்பத்தி னாலும்
ஒருகழஞ்சு செடியோடு சமூலத் தப்பா.

அப்புவிட்டு யித்தனையு மேழு சாமம்
அரைத்திடுவாய் மைபோலே வழித்துக் கொண்டு
செப்பிலிட மிளகளவா யுருட்டிக் கரத்தில்
திரட்டியிவை சமனுலர்த்தி வைத்துக் கொண்டு
கப்புவிட்டுக் கவரவெடித்த பிணிநோய்க் கெல்லாங்
கங்கையிலே யுண்டையொன்று கரைத்துத் தாக்குத்
தப்பிவிட்டோ மென்றுசொல்லி ஓடிப் போகுஞ்
சருவாங்க மாத்திரையிது வைத்தி யோர்க்கே.

(சு. 4. பா. 63-65)

செய்முறை : இரசம் 1 கழஞ்சு (5.1 கிராம்), கெந்தி, துத்தம், இந்துப்பு, அரிதாரம், துருசு, காந்தம், மனோசிலை, பவளப்புத்து, வலம்புரிச் சங்கு, அதிமதுரம், மாயக்காய், மிருதார் சிங்கி, ஓமம் இவை வகைக்கு மூன்று கழஞ்சு (15,3 கிராம்,) சாதிலிங்கம், பொரி காரம், சாதிக்காய், ஏலம், வாளம், எவச்சாரம், நவச்சாரம், சீனாக்காரம், வெண்காரம், மிளகு, சுக்கு, கடுகுரோகணி, சீனங் காய், சவ்வீரம், நவபாடாணம், சாதிபத்திரி, சீயக்காய், கோதுமை, இஞ்சி, மிளகு, சீரகம், வசம்பு, கவுதும்பை வகைக்கு 1 கழஞ்சு, (5.1 கிராம்) வாங்கி, சமூலத்தின் சாறுவிட்டு, மேற்கண்ட சரக்கையும் சேர்த்து மைபோல அரைத்து வழித்து மிளகளவு குளிகை செய்து கொள்ளவும்.

அளவு : ஒரு குளிகை.
துணை மருந்து : நீர்.
தீரும் நோய்கள் : எல்லாப் பிணியும் நீங்கும்.

## சிலைப்பாணக் குளிகை

போமப்பா தலைவலியுஞ் சன்னி மூர்ச்சை
புகழான காலாதி வேதனையா மூர்ச்சை
ஆமப்பா மூக்கில்நீர்ப் பாய்ச்சல் தானும்
அரோசிமுதல் பறந்தோடு மப்பா கேளு
வேமப்பா சுரமெல்லா மொழிந்து நிற்கு
மென்சிலைப் பாணமென்ற குளிகை சொல்வோம்
நாமப்பா சிலையொன்று துத்த மொன்று
நயமாகச் சுத்திசெய்து எடுத்தி டாயே.

எடுத்திடாய் மோர்காய்ச்சித் தெளித்துக் கொண்டு
இதமாகச் சாமமொன்று ஆட்டி வாங்கி
தொடுத்திடாய் மிளகெடைக்குக் குளிகை தட்டி
சுரங்களுக்குப் பசுவின் மோருள் ஊட்டு

விடுத்திடா சுரமெல்லாம் விட்டுப் போகு
மீறியதோர் சிலேற்பனத்துச் சுரத்துக் கெல்லாங்
கொடுத்திடுவாய் சுவாச கோடாரி மாத்திரை
கூறுவேன் மருந்துவகைக் கூறு வேனே.

(சு. 1. பா. 561-562)
(சு. 9. பா. 57-58)

செய்முறை : மனோசிலை, துத்தம் இவை வகைக் கொவ் வொன்று சுத்தி செய்து கொண்டு, மோரைக் காய்ச்சி ஒரு சாமம் (3மணிநேரம்) ஆட்டி, மிளகெடைக்குக் குளிகையாக உருட்டி உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு குளிகை.

துணைமருந்து : பசுவின்மோர்.

தீரும் நோய்கள் : தலைவலி, சன்னி, மூர்ச்சை, சுரம்.

## சீவசஞ்சீவி மாத்திரை

சுக்கு, திக்காரை மூலவேர்ப்பட்டை, திப்பிலி, சீந்தில் கிழங்கு, கடுக்காய், சேங்கொட்டை, தான்றிக்காய், வாய்விளங்கம், வசம்பு, நாவி இவைகளைச் சமனெடையாய்த் தூக்கி கல்வத்திலிட்டு பசுவின் கோமியம் விட்டரைத்து, குன்றிமணிப் பிரமாணம் மாத் திரை செய்துலர்த்தி வைத்துக் கொள்ளவும் இதற்கு அனுபானம், அசீரணத்திற்கு 1 மாத்திரையும், வாந்தி பேதிக்கு 2 மாத்தி ரையும், பாம்பின் விடத்திற்கு 3 மாத்திரையும், சன்னி பாதத் திற்கு 4 மாத்திரையாகத் தேகத்தின் திடமறிந்து இஞ்சிச் சாற்றில் கொடுக்கவும். (சு. 22)

செய்முறை : சுக்கு, திக்காரை மூலவேர்ப்பட்டை, திப்பிலி, சீந்தில் கழங்கு, கடுக்காய், சேங்கொட்டை, தான்றிக்காய், வாய் விளங்கம், வசம்பு, நாவி இவை சமயெடையாய் நிறுத்து கல்வத்தி லிட்டுப் பசுவின் கோமியம் விட்டரைத்துக் குன்றிமணி அளவாக (130 மி.கி) மாத்திரைச் செய்து கொள்ளவும்.

அளவு : அசீரணத்திற்கு 1 மாத்திரை, வாந்திபேதிக்கு 2 மாத்திரை, பாம்பின் விடத்திற்கு 3 மாத்திரை, சன்னிபாதத்திற்கு 4 மாத்திரை என உடம்பின் திடமறிந்து கொடுக்கவும்.

துணை மருந்து : இஞ்சிச் சாறு.

தீரும் நோய்கள் : அசீரணம், 'வாந்திபேதி, பாம்பின் விடம், சன்னி முதலியன தீரும்.

## சுரபரணி

சங்குப் பாடாணத்தை அல்லது வெள்ளைப் பாடாணத்தை யாவது துண்டுத் துண்டாகக் கொண்டு வந்து, நறுக்கிப் பெரிய பாகற்காயை நறுக்கி விட்டு, விதை நீக்கி விட்டு, அதனுள் பாடா ணத்தை வைத்து நூல் சுற்றி சீலைமூடி செம்மண் கவசம் செய்து 5 விரட்டியில் புடம் போடவும். மேல்துணி சாம்பல் கலரான பிறகு மருந்தை எடுத்து, சாடியில் தட்டிவிட்டு அந்த பாகற்காய்ப் புடத்தைக் கல்வத்திட்டு அரைக்கவும். இளநீர் விட்டு அவித்து, பாகற்காய்ச் சாறுவிட்டு அரைத்து, சிறு சுண்டைக்காயளவாக உண்டைசெய்து, நிழலுலர்த்தி வைத்துக் கொள்ளவும். ஒரு மாத் திரை வாயில் போட்டு மிளகுக்கசாயம் சாப்பிடவும். பத்தியம்— இச்சா பத்தியம். (சு. 22)

செய்முறை : பெரிய பாகற்காய் ஒன்று விதையை நீக்கி அதனுள் சங்குப் பாடாணம் அல்லது வெள்ளைப் பாடாணத்தின் சிறு துண்டுகளை வைத்து நூல் சுற்றி, சீலைமூடி, செம்மண் கவசம் செய்து 5 விரட்டியில் புடம் போடவும். சீலை சாம்பல் நிறமான உடன் பாகற்காயினுள் உள்ள மருந்தைச்சாடியில் தட்டி விட்டு, அந்தப் பாகற்காயை இளநீர் விட்டவித்து, பாகற்காயின் சாற்றை விட்டரைத்து, சிறு சுண்டைக்காயளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

அளவு : ஒரு மாத்திரை.

துணை மருந்து : மிளகுக்கசாயம்.

தீரும் நோய் : மூளைக் காய்ச்சல்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## சுவாச குடோரி மாத்திரை

......... ......... ........

விடுத்துப்பார் சுரமெல்லா விட்டுப் போகு
மீறியதோர் சிலேற்பன சுரத்துக் கெல்லாம்
கொடுத்துப்பார் சுவாச குடோரி மாத்திரை
கூறுவேன் மருந்துவகை கூறு வேனே.

கூறுவே னரிதார மிரதஞ் சுக்கு
கூர்மையுற்று வெங்காரந் திப்பிலியு தானு
மீறுமே சமபாகங் கரிப்பான் சாற்றில்
வெண்ணைபோலச் சாமமொன்று ஆட்டி வாங்கி

ஊறுமே நொச்சிச்சாறு சாம மொன்று
ஊறாட்டி பாவட்டங் காய்போலக் கட்டி
தேறுமே இஞ்சிச்சாறு தேனுஞ் சேர்த்துத்
திடமாக உண்டையொன்று கொடுத்தி டாயே.

கொடுத்திடவே சுரகாசஞ் சுவாச காசம்
குத்திருமல் நெட்டிருமல் குறுகு றுப்பு
விடுத்திடவே சரம்பாய்ந்தாப் போலே யோடு
வீர்கடக்கச் சுத்தியுடன் மருந்து சொல்வேன்
கொடுத்திடவே நாவிக்கு சிறுகீரைச் சாற்றில்
கூட்டுவாய் தினமொன்று பழச்சாறு கொண்டு
அடுத்திடவே நாளொன்று சீலைதாஞ் சுத்தி
அப்பனே தாளகத்தின் சுத்தி கேளே. (சு. 9. பா. 58-60)

செய்முறை : அரிதாரம், இரதம், சுக்கு, வெங்காரம் திப்பிலி இவை அனைத்தும் ஒரளவாய் வாங்கி, கரிப்பான் சாற் றில்ஒருசாமம் (3 மணிநேரம்) வெண்ணெய் போல் ஆட்டவும். நொச்சிச் சாற்றில் ஒரு சாமம் (3 நேரம் மணி)ஆட்டவும். பாவட் டங்காய் போலக்கட்டி இஞ்சிச்சாறும் தேனுஞ் சேர்த்து உருண்டையாகச் செய்து கொள்ளவும்.

அளவு : ஒரு உருண்டை, நோய்க்குத் தக்கவாறு.

துணை மருந்து : இஞ்சிச்சாறு, தேன்.

தீரும் நோய்கள் : சுரகாசம், சுவாசகாசம், குத்திருமல், நெட்டிருமல், குறுகுறுப்பு இவை தீரும். நாவிக்குச் சிறுகீரைச் சாற்றில் தினமும் பழச்சாறு கலந்து கொடுக்கவும்.

## நாகபூபதி

தானென்ற தாம்புரம் பலந்தான் ரெண்டு
தகடுவெகு லேசாகத் தட்டி வாங்கித்
தானென்ற புளியிலைச் சாறுக்குள்ளே போட்டு
சாதகமாய் கொதிப்பித்து யெடுத்துக் கொண்டு
தானென்ற கெந்திரண்டு பலந்தான் வாங்கிச்
சாதகமா யெருக்காலைப் பால்விட்டு ஆட்டி
தானென்ற தகட்டிலே யிருபுறமும் பூசித்
தனல்ரவியி லுலர்த்தியே திரும்ப வாங்கே.

வாங்கியந்த தகடுதன்னை சிறுசட்டிக் குள்ளே
மாட்டியெரு மேற்கொண்டு மூடி மூடி
தாங்கியந்த சட்டிக்குச் சீலை செய்து
சாதகமாய் மண்ணுஞ் செய்துயிரு சாண்மட்டுந்
தேங்கியந்த யெருவடிக்கி சட்டிதன்னை வைத்து
திரும்பவொரு முறைசாம மெருவ டிக்கிப்
பாங்கி அனலூட்டி யெரித்து ஆறிப்
பார்மகளே செந்தூர பற்ப மாமே.

பற்பமென்ற தாம்புரத்தேத் தூளா யாட்டி
பாச்சடா சமபாகஞ் சூதங் கெந்தி
அற்பமென்ற யெண்ணாத செருப்படிச் சாறுவிட்டு
ஆட்டியே குகையிலிட்டு மண்ணுஞ் செய்து
சிற்பமென்ற முன்போலே புடத்தைப் போடு
சிவசிவா ஆறவிட்டு யெடுத்துப் பின்பு
சொற்பமென்றோ ரெட்டிலொன்று நாவி கூட்டிச்
சோறாமல் நாவிலொன்று மிளகு கூட்டே.

மிளகிட்டு கொடுவேலி மூலம் வாங்கி
முலரவேசச் சாய்த்து ஆட்டு ஆட்டு
இளகிட்டு யிருசாமங் கழிந்த பின்பு
இதமாகக் குன்றியெடை குளிகை கட்டி
மளகூட்டுக் குகையிலிட்டு நெல்லுக் குள்ளே
வைத்துஒரு திங்கள்சென்று வாங்கி மைந்தனே
பளகிட்ட நோய்க்கெல்லா மனுப்பானந் தன்னைப்
பாடுகிறேன் பண்டிதரே பார்த்தி டீரே.

பார்த்திடவே திப்பிலித்தூள் பணந்தா னொன்று
பாச்சடாப் பதியா முண்டை யொன்றுச்
சேர்த்திடவே பதிமூன்று சன்னி போகும்
சேரிதற்கு ளிஞ்சிச்சாறு திறமாய் நீயுங்
கார்த்திடவே கொடுவேலிக் கசாயத் தூட்டு
காட்டுமுன்னே பதினெட்டு சூலை போகுங்
கோர்த்திடவே திரிகடுகு வெந்நீரி லாட்டிக்
கொடுத்திடவும் சுரமனைத்துங் கூசிப் போமே.

கூசிப்போ மட்டகுன்மந் தேனி லூட்டு
குலாவியதோர் சயரோகங் கூடவிட் டேகும்
பேசிப்போம் பவுந்திரமுங் கரப்பான் புண்ணும்
பிரசிவருங் குத்துப் பிலங்கெட் டோடும்
மாசிப்போ மென்றிருந்த வியாதி யெல்லா
முடனே பெயர்ந்து போமப்பா கேளு
வாசிப்போ மென்றுநின வாகித் தானால்
மைந்தனே யிந்தநூல் வாசிப் பாயே.

(சு. 9. பா. 148-154)

செய்முறை: தாமிரம் 2 பலம் (70 கிராம்) வாங்கி லேசாக தகடாகத் தட்டிப்புளியிலைச் சாற்றில் கொதிக்க வைத்து எடுக்கவும். கெந்தி 2 பலம் (70 கிராம்) வாங்கி எருக்காலம் பால் விட்டு ஆட்டி, தாமிரத் தகட்டின் மேல் பூசி உலர்த்தவும். தகட்டை சிறுசட்டியில் போட்டு மேலே ஒரு சட்டி மூடி சீலை செய்து பக்குவமாகப் புடம் போட்டெடுக்கப் பற்பமாகும். அந்த தாமிரபற்பத்துடன் சமபாகம் சூதம், கெந்தி சேர்த்து, செருப்படிச்சாறு விட்டு ஆட்டி, முன்போல புடம் போட்டெடுக்கவும். பின் அதில் எட்டிலொரு பங்கு நாவி, நாவிலொன்று மிளகு சேர்த்து, கொடுவேலி மூலம் சேர்த்து இருசாமம் (6 மணிநேரம்) ஆட்டி யெடுத்து, குன்றியெடை (130 மி.கி) மாத்திரையாகச் செய்து, குகையில் வைத்து அதை ஒரு திங்கள் நெல்லுக்குள் வைத்தெடுத்துக் கொள்ளவும்.

துணை மருந்தும் தீரும் நோய்களும் : திப்பிலித்தூள் 1 பணவெடையும் (488 மி.கி) பாதி குளிகையும் சேர்த்துண்ண 13 சன்னி தீரும். இஞ்சிச்சாறு, கொடுவேலிக் கசாயத்திலுண்ண 18 சூலை தீரும். திரிகடுகை வெந்நீரிலாட்டி உண்ண அனைத்து சுரங்களும் தீரும். குளிகையைத் தேனில் உண்ண அட்ட குன்மம் சயரோகம், பவுத்திரம், கரப்பான், புண் போன்ற அனைத்து நோய்களும் தீரும்.

## பஞ்சவக் கிராசம்

சுத்தி பண்ணினரசம், பச்சை நாவி, கந்தகம், மிளகு, வெண்காரம், திப்பிலி இவையெல்லாம் ஊமத்திலைச் சாறு விட்டரைத்து, ஒரு நாள் அரைத்து, குன்றிமணிப் பிரமாணம் குளிகை பண்ணி நிழலுணர்த்தி இது பஞ்சவக்கிராசம் என்று பேர். இரண்டு குளிகை எருக்கலம் வேர்க் கசாயத்திலாகுதல், சுக்கு, மிளகு, திப்பிலியுடனாகுதல் கொடுக்கச் சன்னிவாதஞ் சாந்தமாம்.

(சு.3)

செய்முறை: சுத்தி செய்தரசம், பச்சைநாவி, கந்தகம்,மிளகு வெண்காரம், திப்பிலி இவற்றை ஊமத்திலைச் சாறுவிட்டு ஒரு நாள் அரைத்து, குன்றிமணி அளவாகக் (130 மி.கி) குளிகை செய்து நிழலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

அளவு: இரண்டு குளிகை.

துணை மருந்து: எருக்கலம் வேர்க்கசாயம் (அல்லது) சுக்கு. மிளகு, திப்பிலி கசாயம்.

தீரும் நோய்: சன்னிவாதம்.

## பூபதி குளிகை

நாவி, சூதம், தாரம், சுக்கு, திப்பிலி, மிளகு, காயம் இவைகள் சமனெடையாக்கி சித்திர மூல கசாயத்தில் 7 நாளரைத்து மிளகுப் பிரமாணம் உருட்டி உலர்த்தி, தேனல்லது இஞ்சிச் சாற்றிலிடசன்னி, தோடம், வாதவாயு, குன்மம், நாவறட்சி, சயகாசம் மேகம், இதுகள் தீரும். புளி, கடுகு, நல்லெண்ணெய் நீக்க வேண்டியது. (சு. 22)

செய்முறை: நாவி, சூதம், தாரம், சுக்கு, திப்பிலி, மிளகு, காயம் இவை சமனெடை வாங்கி, சித்திரமூல கசாயத்தில் 7 நாளரைத்து மிளகளவு உருட்டி உலர்த்திக் கொள்ளவும்.

அளவு: வேண்டிய அளவு.

துணைமருந்து: தேன் அல்லது இஞ்சிச்சாறு.

தீரும் நோய்கள்: சன்னி, தோடம். வாதவாயு, குன்மம். நாவறட்சி, சயகாசம், மேகம் இவைகள் தீரும்.

பத்தியம்: புளி, கடுகு, நல்லெண்ணெய்.

## மகா சுராங்குசம்

இரசம், கந்தம், ப்ச்சைநாவி, ஊமத்தைவிதை இந்த மூன்றுக்கும் சமன். இந்த நான்கிற்கும் இருமடங்கு சுக்கு, மிளகு திப்பிலி இவை சூரணம் பண்ணி இரண்டு குன்றிப் பிரமாணம் எலுமிச்சம் பழச்சாற்றில்தான், இஞ்சிச்சாற்றில் தான் கொடுக்கவும். இது மகா சுராங்குசமென்று பேர். சர்வ சுரங்களையும் போக்கும். ஏகாயிகசுரம், மந்திரியாகிகசுரம், சதுராந்திக சுரம் இவையெல்லாஞ் சாந்தமாம். சந்தேகமில்லை.

(சு.3)

செய்முறை: இரசம், கந்தம், பச்சைநாவி, ஊமத்தை விதை சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றைச்சேர்த்து சூரணம் செய்து கொள்ளவும்.

அளவு: இரண்டு குன்றி மணிஅளவு (260 மி.கி).

துணை மருந்து; எலுமிச்சம் பழச்சாறு, இஞ்சிச்சாறு.

தீரும் நோய்கள்: எல்லாச்சுரங்களும் தீரும்.

## மகா சுராங்கிசக் குளிகை

உண்மைமகா சுராங்கிசத்தைச் சொல்லக் கேளு
உமைவிந்து ரசம்நாவி வெள்ளை தானும்
வன்மையென்ற பொன்னூமத்தை வித்தி னோடு
வகைக்குரெண்டு காசெடை தான்கலத் திட்டு
தன்மையதாய் மிளகதுவுங் கழஞ்சு பத்து
தான்சேர்த்து ஊமத்தஞ் சாற்றா லாட்டி
வெண்மையதாய்க் குன்றியெடை குளிகை கட்டி
மிக்கநிண லுணர்த்திவைத்து விளம்பக் கேளே.

கேள்சன்னி வாதமொடு சீத சுரம்
வந்தால் யிஞ்சிரசந் தன்னி லூட்டு
தாள்பித்த சுரம்விடமாஞ் சுரத்துக் கெல்லாஞ்
சம்பழத்தின் சாற்றிலிடு சருவசுரந் தீரும்
வாள்வெந்நீ ரன்னமுங்கொள் மற்றொன் றாகா
மைந்தனே வறுத்தஉப்பு சற்றே கூட்டு
சூள்கின்ற சுரமனைத்துந் தீரா வென்றால்
சுராங்கிசந்தான் யின்னமொன்று சொல்லக் கேளே.

(சு. 21. பா. 251-252)

செய்முறை: உமைவிந்து, இரசம், நாவி, வெள்ளை, பொன்னூமத்தை வித்து இவை வகைக்கு இரண்டு காசெடை (330 மி.கி) வாங்கி கலத்தில் போட்டு, பத்து கழஞ்சு (5.1 கிராம்) மிளகும் சேர்த்து ஊமத்தஞ் சாற்றாலாட்டி, குன்றி எடை (130 மி.கி) அளவாகக் குளிகை செய்து கொள்ளவும்.

அளவு: நோய்க்குத் தக்க அளவு.

துணை மருந்தும் தீரும் நோய்களும்: சன்னிவாதம், சீதசுரம் இவைதீர இஞ்சி ரசத்திலுண்ணவும், பித்தசுரம், விடசுரத்திற்கு எலுமிச்சம் பழத்தின் சாற்றிலுண்ணவும். எல்லாச் சுரமுந் தீரும்.

பத்தியம்: வெந்நீர், சோறு உண்ணவும். வறுத்த உப்பைக் கூட்டவும்.

## மிறுத்தீஞ்ச குளிகை

*நிமிளை, அரிதாரம், நேர்வாளம், பச்சைநாவி, மனோசிலை, சுத்தி பண்ணின இரசம், கந்தகம் இவை சமன்கூட்டி, நிலப்பனைக் கிழங்குச்சாறு வார்த்தரைத்து ஒரு சாமமரைத்து குக்குடப்புடம் வைத்து எடுத்து, ஒரு குன்றிப் பிரமாணம் இஞ்சிச்சாற்றில் கொடுக்கச் சர்வசுரமும் சன்னிவாதமுஞ் சாந்தமாம்.* (சு.3)

செய்முறை : நிமிளை, அரிதாரம், நேர்வாளம், பச்சை நாவி, மனோசிலை இவற்றுடன் சுத்தி செய்த இரசம், கந்தகம் இவற்றைச் சேர்த்து, நிலப்பனைக் கிழங்குச் சாறுவிட்டு, ஒரு சாமம் அரைத்து, குக்குடப்புடம் போட்டெடுக்கவும்.

**அளவு :** ஒரு குன்றிமணி (130 மி கி).

**துணைமருந்து :** இஞ்சிச்சாறு.

**தீரும்நோய்கள் :** எல்லாச்சுரமும், சன்னிவாதமுந் தீரும்.

## மிறுத்தீஞ்சியாதம் குளிகை

*இரசம் கழஞ்சு, எலிப் பாடாணம் கழஞ்சு கூட்டித்தண்ணீர் வார்த்தரைத்து மூன்று நாள் அரைத்துக் குளிகை பண்ணி நிழலுலர்த்தலாக உலர்த்தி இரண்டு குன்றிப் பிரமாணம் வெல்லத்துடனே கொடுக்க. இதற்குப் பத்தியம். தினம் பசுவின்பால் கூட்ட சீத சுரமெல்லாம் சாந்தமாம்.*

செய்முறை : இரசம் 1 கழஞ்சு (5.1கிராம்), எலிப்பாடாணம் 1 கழஞ்சு (5.1கிராம்) இவை இரண்டையும் தண்ணீர் விட்டு மூன்று நாளரைத்துக் குளிகை செய்து நிழலுலர்த்திக் கொள்ளவும்.

**அளவு :** இரண்டு குன்றி அளவு (260 மி.கி).

**துணைமருந்து :** வெல்லம்.

**தீரும்நோய் :** சீத சுரம் தீரும்.

**பத்தியம் :** பசுவின்பால் தினமும் சேர்க்கவும்.

## மேகாதி குளிகை

பத்தியுறு மேகாதி குளிகை சொல்வோம்
    படரான நீரழிவு மனைத்துந் தீரும்
புத்தியுறு சூதமப்பா கழஞ்சு பத்து
    புகழான வப்பிரகஞ் சிவப்பு ரட்டி

சித்தியுறுங் கெந்தியப்பா வன்ப தாகுந்
திறமான தாரமது மன்ப தாகும்
வெத்தியுறுஞ் சிலாசத்துக் கழஞ்சி யஞ்சு
மேலான காரீய செந்தூரங் கேளே.

செந்தூரங் கழஞ்சியுமே முப்ப தாகுஞ்
சேர்த்திடுவாய் முன்மருந்தைச் செப்பக் கேளு
பந்தூரும் பருத்திவிதை தேற்றான் வித்து
பாங்கான வெண்குன்றி வித்துத் தானுங்
கந்தூரும் புளியன்விதைத் தோடு தானுங்
கற்கடக சிங்கியிவை சமனாய் நீயும்
அந்தூருங் கழஞ்சியஞ்சு நிறுத்து வாங்கி
அப்பனே மரமஞ்சள் தூக்குத் தூக்கே.

மஞ்சளெனுங் சத்தூரி மஞ்சள் தானு
மன்னபணி நிலைப்பனைவேர் சித்திர மூலம்
மிஞ்சாமலப்பா அறுகழஞ்சு தூக்கு வேம்பு
வெள்வேலக் கருங்காலி கருவேலப் பிசினுந்
துஞ்சவே கழஞ்சுபத்துத் தென்னம் பூத்தூள்
துலங்கவே முக்கழஞ்சு தூக்குத் தூக்கு
தஞ்சமுறு திரிகடுகு வென்ப தாகுந்
தனித்திந்த விதங்களெல்லாம் நிறுத்துக் கொள்ளே.

கொள்ளடா வாவரையு மருந்தி லந்தை
கொத்தோடே யிலைச்சாற்றைப் பிழிந்து நீயுந்
தள்ளடா மூன்றுதினம் வெவ்வே றாகச்
சவளநீ யாட்டியே வாங்கி மைந்தா
விள்ளடா தெற்றின்விதைப் பிரமா ணத்தில்
என்மகனே திரட்டியே யெடுத்து வைத்து
விள்ளடா குளிகையொன்று தேனி லீய
மேகமென்ப திருவதையும் வெல்லுந் தானே.

(சு 1. பா. 213-216)

செய்முறை : சூதம் 10 கழஞ்சு (51 கிராம்), அப்பிரகம், கெந்தி, தாரம் 50 கழஞ்சு (255 கிராம்), சிலாசத்து 5 கழஞ்சு (25.5 கிராம்), காரீய செந்தூரம் 30 கழஞ்சு (153 கிராம்) இவற்றுடன் பருத்தி விதை, தோற்றான் விதை, வெண்குன்றிவித்து, புளியன் விதையின் தோடு, கற்கடக சிங்கி இவை வகைக்கு 5 கழஞ்சு (25.5கிராம்) நிறுத்து அதனுடன், மரமஞ்சள் 1 தூக்கு

(1.7கி. கிராம்), கத்தூரி மஞ்சள், நிலப்பனைவேர், சித்திரமூலம் இவை ஆறு கழஞ்சு (30.6. கிராம்), வேம்பு, வெள்வேலம், கருங் காலி, கருவேல்பிசின், இவை 10 கழஞ்சு (51 கிராம்), தென்னம் பூத்தாள் 3 கழஞ்சு (15.3. கிராம்) திரிகடுகு 80 கழஞ்சு (408 கிராம்) இவ்வாறு நிறுத்துக் கொள்ளவும். ஆவாரை, இலந்தை இவற்றின் சாற்றைப் பிழிந்து மூன்றுநாள் மேலுள்ள சரக்குகளுடன் சேர்த்து ஆட்டி, ஆதற்றின் விதை அளவாகக் குளிகை செய்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : நோய்க்குத் தக்க அளவு.

துணை மருந்து : தேன்.

தீரும்நோய்கள் : மேக நோய்கள் இருபதும் தீரும்.

## வைரவன் மாத்திரை

சுக்கு, திப்பிலி, மிளகு, இலிங்கம், நெல்லிக்காய், கோநாகம், வெண்காரம், வச்சநாபி இதுகள் வராகன் 1, முதலில் இலிங்கத்தை கம்மாறு வெற்றிலைச் சாற்றில் 3 நாள் ஊரவைத்து, மேற்படி சாற்றில் 1 நிமிடம் சுருக்குக் கொடுத்து யெடுத்துக் கொள்ளவும். வச்சநாபியைப் பசுவின் கோமியத்தில் ஒருநாள் ஊரவைத்து நல்ல சலத்தில் கழுவி மேல் புறணி சீவி, துண்டுத் துண்டாக நறுக்கி வெய்யிலில் உலர வைத்து, பிறகு எடுத்து, ஏலம், சுக்கு, கலந்து கல்லுரத்தில் இடித்து, கல்வத்திட்டு, 150 எலுமிச்சம் பழம் ரசம் விட்டரைத்து, சிறுமிளகுப்பிரமாணம் மாத்திரை செய்து உலர்த்தி கருப்பட்டியில் வைத்துக் கொடுக்கவும். இதற்கனுபானம் வலிப்புக்கு மாத்திரை-1, மிளகு, 2 வெற்றிலையில் மடித்து வைத்துக் கொள்ளவும். கழுத்துநோய், தலைநோய் இவைகளுக்கு வெற்றிலை கசக்கியசாற்றில் அல்லது முலைப்பாலில் அரைத்து கலிக்கம் போடவும். பெரியவர், சிறுவர் இவர்களுக்கு, பித்தக் காய்ச்சல், சீதசுரம் இவற்றிற்கு முலைப்பால், துளசி, பூசணிக் காய்ச் சாற்றில் ஆடாதோடை, கண்டங்கத்திரி இந்தரசங்களில் ஒரு மாத்திரை கொடுக்கலாம். புளிதள்ளவும். (சு 22)

செய்முறை : சுக்கு, திப்பிலி, மிளகு, இலிங்கம், நெல்லிக்காய் கோநாகம், வெண்காரம், வச்சநாபி இவை வகைக்கு 1 வராகன் (5.1 கிராம்) வாங்கவும். இலிங்கத்தை வெற்றிலைச் சாற்றில், 3 நாட்கள் வைத்து, அதில் ஒரு நிமிடம் சுருக்குக் கொடுக்கவும் வச்சநபியைப் பசுவின் கோமியத்தில் ஊறவைத்து, நீரில் கழுவி மேல்தோல் நீக்கி, துண்டுகளாக வெய்யிலில் உலரவைத்தெடுத்துக்

கொள்ளவும். இவற்றுடன் மற்ற பொருட்களையும், ஏலம், சுக்குடன் கலந்திடித்து எலுமிச்சம் பழச்சாறை விட்டரைத்து, சிறு மிளகளவு மாத்திரை செய்து கொள்ளவும். கருப்பட்டி சேர்த்து 1 மிளகு, 2 வெற்றிலையில் மடித்து வைத்துக் கொள்ளவும்.

துணைமருந்து : கருப்பட்டி.

அளவு : நோய்க்குத் தக்க அளவு.

தீரும்நோய்கள் : வலிப்புக்கு-1 மாத்திரை, கழுத்துவலி, தலை வலிக்கு வெற்றிலைச் சாற்றில் அல்லது முலைப்பாலில் கலிக்கம் போடவும். பித்தக்காய்ச்சல், வாதக்காய்ச்சல், சீதசுரத்திற்கு, முலைப்பால், துளசி, பூசணிக்காய்ச் சாற்றில், ஆடாதோடை, கண்டங்கத்தரிச் சாற்றில் 1 மாத்திரை.

பத்தியம் : புளி நீக்கவும்.

(வேறு)

மூன்று நாழிகைக் குள்ளே சுரங்கள்நிற்கும்
　　மூன்றுபாக பத்தியங்கே ளிச்சா பத்தியம்
மூன்று நாழிகை வணிதிகேள் சுருங்குசுதை
　　யுரைக்கிறேன் ரசதுத்தம் நாவி நாகம்
துன்றுநாள் மடைத்தாரம் வாளங் கெந்தி
　　சேர்லோகம் ரெண் டுஞ் சமனாய்ச் சேர்த்துத்
துன்றுநா ளுத்தம தாளிச் சாற்றில்
　　தயவாக யேழுதர மாட்டு ஆட்டே.

ஆட்டாமத்தஞ் சாறு மணித்தக் காளி
　　அடவாக முன்போலே அரைத்துத் தீயும்
நீட்டியே போகார மாட்டி வாங்கி
　　நினைவாகக் குகைக்குள்ளே தடவி பின்பு
ஊட்டியே உண்டைதனைக் குகைக்குள் ளிட்டு
　　உறவுசேர் வெங்கார மறைத்து மேலு
மூட்டியே தெரியாம லேழு சீலை
　　முறையாகச் சுத்தி மண்ணுஞ் செய்யே.

மண்செய்து பாண்டத்து நடுவே தானும்
　　மைந்தனே தமரிட்டு ஓடும் போடு
திண்செய்து அதின்மேலே மணலைக் கேளு
　　திறமாக நாலுவிரல் கடையு மிட்டுப்

பண்செய்த குகையதனை மணல்மேல் வைத்துப்
பாங்காக மேலுமதே பாண்டத் துள்ளே
தன்செய்து மணல்தாக்கு முக்கா லிட்டுத்
தயவாக மேல்சட்டி கவிழ்த்து மூடே.

மூடியே யெண்சாமம் வன்னி
மூட்டிநன்றா யாறியபின் கல்வத்தில்
கோடியே கடைசரக்கு பூசைசெய்து
நலமாக தூளாக்கிச் சிமிழில் வைத்து
நீடியே நோயறிந்து குன்றியெடை யூட்ட
நிலைத்துநின்ற இருவரையு மவங்கள் தீரும்
வீடியே யனுப்பானம் வெத்திலையில் பொதிந்து
மென்றுதிண்ணச் சொல்லங்கே விபரங் காணே.

காணப்பா சலக்கழிச்சல் குட்ட ரோகங்
கனமாகக் காசம் கோழத்துக் கெல்லாம்
பூணப்பா சீனியிலே உண்ணச் சொல்லு
புகழாக வயிறுவலி வியாதிக் கேதான்
மாணப்பா காட்டாமணக்கு நீரி லூட்ட
வுற்றவெள்ளைச் சாணைநீர் சாணத்தத்
தாணப்பா திரிகடுகு பொடியி லூட்டு
சுகசன்னி முதலான தெல்லாம் போமே.

போமப்பா இஞ்சிச்சாறுக் குள்ளே யுண்ண
பொதுவான திரிதோடம் போகும் போகும்
வேமப்பா சூலைக்கு பெருங்காயத் தூட்டு
மேலுமினி யனுப்பானம் வினைய மாக
தாமப்பா செய்திடவே பிணியெல்லா மாறுந்
தயங்காதே பத்தியமா யிருக்கச் சொல்லு
ஆமப்பா அட்டகுன்மம் நீராமை கவுசி
அப்பனே மகோதரமும் தீரக் கேளே. (சு. 9. பா. 61-68)

செய்முறை : இரசம், துத்தம், நாவி, நாகம், தாரம், வாளம், கெந்தி இவற்றைச் சம எடை வாங்கி உத்தமதாளிச்சாற்றில் ஏழு தரம் ஆட்டவும். ஊமத்தஞ்சாறு, மணித்தக்காளியை அரைத்துக் குகையின் உள்ளே மேற்கண்ட மருந்தை வைக்கவும். வெங்காயத்தை அரைத்துக் குகை மேல் பூசி, ஏழுசீலை மண் செய்து மண் பாண்டத்தின் நடுவேவைத்து, ஓடு போட்டு மூடி மணலைக் கொட்டி, சட்டியைக் கவிழ்த்து மூடி 8 சாமம் (1 நாள்)

பக்குவமாக எரித்தெடுக்கவும். ஆறியபின் தூளாக்கி வைத்துக் கொள்ளவும்.

அளவு: குன்றியெடை (130 மி. கி).

துணை மருந்துகளும் தீரும் நோய்களும்: வெற்றிலையில் தின்ன சலக்கழிச்சல், குட்டம், காசம் தீரும்.

சீனியிலே உண்ண வயிறு வலி தீரும். காட்டாமணக்கு நீரிலுண்ண வெள்ளைச் சாணைநீர் தீரும். திரி கடுகுப்பொடியில் உண்ண, சுகசன்னி தீரும். இஞ்சிச் சாற்றில் உண்ண திரிதோடம் தீரும். பெருங்காயத்திலுண்ண சூலை தீரும். மற்றும் அட்ட குன்மம், நீராமை, கவுசி, மகோதரம் அனைத்தும் தீரும்.

பத்தியம் காக்கவும்.

(வேறு)

போமென்ற கிருசணங்க ளாறு முண்ணப்
பூட்டுகி றேன்சிலோ தாரை தன்னை
வேமென்ற நாவிகெந்தி சூதமென
கவுரிபெருங் காயஞ் சவுக்காரம்
ஆமென்ற நேர்வாளம் நஞ்சுபோக்கி
இவையெல்லாஞ் சமனாக்கித் தூளாயாட்டி
மேமென்ற சம்பழச் சாறுவார்த்து
வெண்ணெய்போ லாட்டிநீ வாங்குவாங்கே.

வாங்கியதோர் மருந்துதனை மிளகு போலே
மணியாக்கிக் குழலிலே வைத்துக் கொண்டு
ஓங்கியதோர் அனுப்பானம் வெல்லம்
அப்பனே யாரமுற்ற பழச்சாறாகுஞ் சொன்னேன்
தேங்கியதோர் வியாதிகண்டு யனுப்பா னத்தால்
பெருவயிறு நோய்குகை வெண்ணோய்
பாங்கிய தோற் பெருவயிறு கெண்டைகுணமும்
பரந்தூரும் நீர்க்கோர்வை தீரும் பாரே.

(சு. 9. பா. 73, 74)

செய்முறை: நாவி, கெந்தி, சூதம், கவுரி, பெருங்காயம், சவுக்காரம், நேர்வாளம் இவற்றைச் சுத்தி செய்து சம அளவு எடுத்து, சம்பழச்சாறு விட்டு வெண்ணெய் போலாட்டி, மிளகள வாக மாத்திரைசெய்து கொள்ளவும்.

அளவு: நோய்க்குத் தக்க அளவு.

துணைமருந்து: வெல்லம், பழச்சாறு.

தீரும் நோய்கள்: பெருவயிறு, வெண்ணோய், நீர்க்கோர்வை தீரும்.

(வேறு)

மாலையுடன் சுராங்கிசத்தைச் சொல்லக் கேளு
வாளசூத மவின்கஞ்சா வசுவாசி நேராய்ச்
சோலையுடன் தூதளையின் சாறா லாட்டி
துவரைபோல் குளிகைகட்டி வைத்தி டாயே.

வைத்ததொரு குளிகையொன்று இஞ்சிச் சாற்றில்
மைந்தனே குளிர்மாரலனே சுரமும் போகும்
வைத்ததொரு கிரிசணத்துக் கின்னஞ் சொல்வேன்
மண்ணில்வாழ் பூநாக மிலுமிச்சங் காயளவு
வைத்ததொரு பாலிலே கரைத்துக் கொள்ள
மகத்தான கல்லடைப்புத் தெறித்து வீழு
மரைத்ததொரு முசுட்டையிலை பாக்கது
மருவியதோர் வெண்ணெயிலே கொடுத்திடாயே.

கொடுத்திடவே நீரடைப்புத் தீர்க்கு் கண்டாய்
கூறுறேன் கொள்ளுச்சாறு வாங்கிக் கொண்டு
கொடுத்திடவே அரிசியிட்டு கஞ்சி காய்ச்சிக்
குடித்தஉடன் நீர்ச்செறுப்பு குணமாய்க் காணும்
கொடுத்திடவே சிறுபீளை வேருங் கூட்டி
கூறான நெருஞ்சிவேர் பிறாமுட்டி வேரும்
கொடுத்திடவே மாவிலிங்கை வடவேர்தான்
கூட்டிநீர் விட்டுயெட் டொன்றாய்க் காய்ச்சே.

காய்ச்சிவடித் துண்டிடவே பாரை முதலா
கருங்காத்தெறிக்கும் நீர்க்கடுப்பு கரைய வென்றால்
காய்ச்சிவடித் திருத்தபழங் கஞ்சி யுக்குள்
கருநெல்லி முள்ளியொரு பிடிதா னிட்டு
காய்ச்சிநறுந் தாழையுட விழுதுச் சாறு
கலந்தரைத்து எட்டுநா ளுண்டான் கேளு
காய்ச்சிறாமல் நீர்க்கடுப்பு மடைப்புந் தீருங்
கடும்புழுகு பணவெடைதான் தூக்குத் தூக்கே,

தூக்கியிள வெந்நீரில் கொள்ள
துளிவிறாதல் பொசிந்துரல துறந்து போகுந்
தூக்கியே வெண்மலகு மடைத்த தானால்
சாத்திறே னீராமல் தாரை தன்னை (சு. 9. பா. 98-102)

செய்முறை: வாளம், சூதம், அபின், கஞ்சா, வசுவாசி இவற்றைத் தூதளையின் சாற்றிலாட்டி, துவரை அளவாகக் குளிகை செய்து கொள்ளவும்.

துணைமருந்தும் தீரும்நோயும் : ஒரு குளிகை இஞ்சிச்சாற்றில் உண்ண குளிர்சுரம் தீரும்.

பூநாகத்தை எலுமிச்சங்காயளவு பாலில் கரைத்து, அத்துடன் குளிகை உண்ண கல்லடைப்புத் தீரும்.

முசுட்டை இலையைப் பாக்களவு வெண்ணெயில் கலந்து மருந்துண்ண நீரடைப்புத் தீரும்.

கொள்ளுச் சாற்றில் அரிசிபோட்டு, கஞ்சி காய்ச்சி உண்ண நீர்ச்செறுப்புத் தீரும்.

சிறுபீளைவேர், நெருஞ்சிவேர், பிறாமுட்டிவேர், மாவிலங்கை இவற்றில் நீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து மருந்துண்ண நீர்க்கடுப்புத் தீரும்.

காய்ச்சி வடித்த பழங்கஞ்சியில் கருநெல்லிமுள்ளி ஒரு பிடியும், தாழையின் விழுதுச்சாறும் கலந்தரைத்து 7 நாள் உண்ண நீர்க்கடுப்பும் அடைப்பும் தீரும்.

(வேறு)

நேர்வாளம்-4, இரசம், கந்தகம் இந்த இரண்டும் நேர்வாளத்திற்குச் சமன், இத்தனைக்கும் பாதி கடுகுரோகணி இந்த யோகம் கெசாங்குசமென்று பேர்-முலைப்பாலிலாகுதல், ஆட்டுப்பாலிலாகுதல், இளநீரிலாகுதல் ஒரு பண மாத்திரம் கொடுக்கச் சர்வசுரமும் போம். (சு.3)

செய்முறை : நேர்வாளம்-4, இரசம், கந்தகம் இவை இரண்டும் சேர்த்து நேர்வாளத்திற்குச் சமஎடை, இவற்றில் பாதி எடை கடுகுரோகணி இந்த அளவாக எடுத்துச் சூரணித்துச் சேர்க்கவும்.

அளவு : ஒரு பணவெடை (488 மி.கி.).

துணை மருந்து : முலைப்பால், ஆட்டுப்பால், இளநீர்.

தீரும் நோய் : எல்லாச்சுரமுந் தீரும்.

# செந்தூரம்

## அட்டலோகச் செந்தூரம்

பண்ணவே அட்டலோகச் செந்தூ ரத்தைப்
பாடுறேன் மாணாக்காள் பணிந்து கேளு
நண்ணவே அயப்பொடிதான் பலமு மொன்று
நலமான தாம்புரத்தின்பொடி பலந்தா னொன்று
கண்ணவே கஞ்சத்தின்பொடி பலந்தா னொன்று
கருதியே பித்தளையின்பொடி பலந்தா னொன்று
பண்ணவே திராவொன்று வெள்ளி யொன்று
பரிவான வங்கமொன்று தங்க மொன்றே.

தங்கமுட னிவையெல்லாங் கல்வத் திட்டு
தருவான திராவகத்தால் நால்சாம மாட்டி
பொங்கமுடன் வில்லைதட்டிக் காயப் போட்டு
புத்தோட்டி விட்டுமே லோடு மூடிப்
பங்கமே கசபுடத்தில் போட்டு வாங்கு
பாவகமாய் முன்போலே அரைத்துக் கட்டி
அங்கமே புடம்போட்டு யெடுத்துமுன் போல
ஆட்டியே முன்புடத்தி லெடுத்து வாங்கே.

வாங்கியே கல்வத்தி விட்டு நீயும்
வளமான சூதமரைப் பலமும் போடு
தாங்கியே கெந்தியரைப் பலமும் போடு
தருவான சீலையதுவு மரைப்பலமே போடு

ஓங்கியே லிங்கமரைப் பலமே போடு
உசத்தியாந் திராவகத்தா லாறு சாமம்
பாங்கியே ஆட்டிநன்றாய்ச் சண்பவிதை போலே
பக்குவமாய் வில்லைதட்டிக் காயப் போடே.

போட்டுமே காசியென்ற மேருக் கேற்றிப்
புகழான வாலுகையின் மேலே வைத்து
மூட்டுமே தீயாட்டுக் கமலம் போலே
முசியாதே பனிரெண்டு சாமந் தானும்
ஆட்டுமே செந்தூர மருணன் போலாம்
ஆத்தாளுக்குங் கணேசனுக்கும் பூசை பண்ணு
ஊட்டவே நவலோக மாயிரத்துக் கொன்று
உத்தமனே மாத்தென் பதினா ராமே.

ஆறான செந்தூரங் குன்றி யுண்ண
அழகான தேகமது சிவந்து மின்னும்
பேறான சடத்துள்ளே நோயெல்லாம் போகும்
பிலத்துமே தாதுவெல்லா மிறக்கிக் கட்டும்
ஏறாத வாசியைத்தான் உள்ளே யேத்தும்
இருகண்ணும் பரத்தி னொளிதர வீசும்
ஆறான வாரியது பொங்குமாப் போல
அட்டமா செந்தூரப் போக்குத் தானே.

போக்கான பெருநூலில் வாதப் போக்குப்
பித்துளான் வெவ்வேறே விரித்துச் சொன்னேன்
பார்க்கவே சூத்திரத்தி லடக்க மாகப்
பாடினேன் வேருன்றிப் படருமாப் போல
ஏற்கவே யினத்துக்கு இனமொன் றாக
இயம்பினேன் ஒவ்வொன்றில் கோடா கோடி
ஆற்கவே அடிமூலப் பொருளைச் சோதி
ஆகாகா முடிகண்டா லண்ட மாமே.

(சு 2 பா. 126-131)

செய்முறை: அயம், தாமிரம், கஞ்சம், (காரீயம், வெள்ளீயம்) பித்தளை, திரா (வெங்கலம்), வெள்ளி, தங்கம் இவை வகைக்கு ஒருபலம் (35 கிராம்) எடுத்து கல்வத்திலிட்டு, திராவகத்தால் நான்கு சாமம் (12 மணி நேரம்) ஆட்டி, வில்லை தட்டிக் காயப்போட்டு, புதிய ஓட்டிலிட்டு, மேலோடு மூடி, கசபுடம் வைத்

தெடுக்கவும். மீண்டும் முன்போலவே கல்வத்திலிட்டரைத்து, புடம்போட்டெடுத்தவுடன் சூதம், கெந்தி, மனோசிலை, லிங்கம் இவை வகைக்கு அரைப்பலம் (17.5 கிராம்) சேர்த்து, திராவகத் தால் ஆறு சாமம் (18 மணி நேரம்) ஆட்டி, பக்குவமாய் வில்லை தட்டிக் காயவைக்கவும். இதைக் கமலாக்கினியில் 12 சாமம் (36 மணி நேரம்) வைத்தெடுக்கச் செந்தூரமாகும்.

அளவு: குன்றிமணியளவு.

தீரும் நோய்கள்: உடற்தாது வளர்ச்சி, கண்ணொளி யுண்டாகும். பலநோய்களும் நீங்கும்.

## அப்பிரகச் செந்தூரம்

மறைப்பேது அப்பிரகச் செந்தூ ரத்தை
வயனமாச் சொல்லுகிறேன் மச்சந்தீரக் கேளு
நிறைபோற்று மப்பிரக மிடித்து வாங்கி
நேர்ப்பாக பாண்டத்தி லிட்டு நீயும்
நறைபோற்றுங் கல்லதி யரசு அத்தி
நயமான ஆலம்பட்டை யிலைகள் நேராய்
குறைப்போக்கி யிடித்துநீ சலமும் விட்டுக்
குமட்டி யேவதை யூற வைய்யே.

ஊறியதோர் நீர்பிழிந்து அப்பிரக மாட்டி
உத்தமனே யெருக்கிலையில் பரத்தி யாத்தி
மாறியதோர் களாறி டத்தான் னுலர்ந்தபின்
வீதியிலே யெருக்குவித்து அடையை வைத்து
மாறியதோ ரடைமேலே யெருவுங் கொட்டி
மைந்தனே வராகப் புடத்தைப் போடு
தேறியதோ ரிப்படியே யிருப்ப தொன்று
திறத்திலே அப்பிரகச் செந்தூர மாமே.

செந்தூர மெடுத்துநீ சலத்தில் போடு
சிக்கா திற்தா வுந்து பொம்மி
தந்திடாது செந்தூரம் பணவெ டைதான்
தேனில்கொள்ள தீருந்தா னீரிழிவுந் தீருந்தீரும்
செந்தூர முண்டிடவே கிரிசணந் தீரும்
செப்பரிய சர்ப்பந்தீரும் குன்மந் தீருஞ்
செந்தூர முண்டிடவே யெல்லாந் தீரும்
சிவசிவா பிரமத்தை யறிந்த பேர்க்கே.

(சு.9. பா. 124-126)

செய்முறை : அப்பிரகத்தை வேண்டிய அளவு எடுத்திடித்து, அரசு, அத்தி, ஆலம்பட்டை இவைகளை இடித்து நீர்விட்டு ஊற வைத்து ஆட்டி, எருக்கிலையில் அடைத்தட்டி, எரு கூட்டிப் புடம் போடவும். இப்படி 21 முறை செய்ய அப்பிரகச் செந்தூர மாகும்.

அளவு; பணவெடை (488மி.கி).

துணை மருந்து: தேன்.

தீரும் நோய்கள்: நீரிழிவு, கிரிசணம், குன்மம்.

(வேறு)

... — ... ...

தேக்கான அப்பிரக மின்னங் கேளுத்
திருமாலின் அப்பிரக மெடுத்து வந்து
வாக்கான வெள்ளாட்டு நீரில் வெந்து
மைந்தனே மறுபடி புரட்டிக் கேளே.

மாட்டக்கேள் சுண்ணாம்பு தண்ணீர்க் குள்ளே
வாகான கோநீரி லவித்துக் கொண்டு
நாட்டக்கேள் சலம்விட்டுக் கழுவிப் போட்டு
நன்றாக தனித்தனியா யெடுத்துக் கொண்டுப்
பூட்டக்கேள் கிழிக்கட்டி சட்டிக்குள் வைத்து
முத்துபோலத் தெளிகாடி மட்டாய் வாரே.

வார்த்து நன்றாய்ப் பிசைந்திடவே அப்பிரகம் கரைந்து
மண்டிபோல் நீர்க்குந் தெளிந்தி றுத்து
வார்த்து நன்றா யுலர்ந்தபின்பு ஆலம்பாலும்
ஆல விழுதும் தினமுகிழும் கூட்டி
வார்த்து நன்றா மையன்போ லாட்டி
வாங்கிநன்றா யாலிலைப் பருப்பு வாங்கி
... ... ... ...
மடக்கொன்றில் மருந்தப்பி மடக்கால் மூடே.

மூட்டியே சீலைசெய்து மண்ணுஞ் செய்து
முசியாத கசபுடந்தான் போட்டு வாங்கி
நாட்டியே மூன்றுதின மிரட்டையிலை யிட்டு
நயமாக அறுபுட மிப்படியே போடு

நீட்டியே கற்றாழஞ் சாற்றா லாட்டி
நெகிழமூன்று தரமிப் படியே போடு
தேடியே ஓரிதழ்தா மரையின் சாற்றால்
சிறக்கவே மூன்றுபுடம் போடு போடே.

போட்டதொரு அப்பிரக மெடுத்த பின்பு
போறவெள் ளாட்டு நீர்தன்னில் மூட்டு
மூட்டதொரு கையாலே பிசைந்து நீயு
முழங்கவே கொடுப்பைதனை சமூலம் வாங்கி
கூட்டதொரு குறுகரிந்து சட்டிக்குள் போட்டு
குறையன்றி முச்சாம மெரிக்க பற்பந்
தீட்டதொரு நாவல்தோ லத்தித் தோலுஞ்
சிறப்பான அரசன்தோ லத்தித் தோலே.

தோல்சமனாய்ப் பொருக்கெல்லாஞ் சீவிப் போட்டு
துண்டுத்துண்டாய் சன்னமாய் நறுக்கி யாட்டி
தோல்சமனாய் குறுணி நீரிற் போட்டுத்
தனலவே யூறியபின் நாலொன் றாக்கித்
தோல்சமனாய் வெந்த சலமப் பிரகத்
தூளாட்டி வில்லைதட்டி யுலர வைத்துத்
தோல்சமனாய் கசபுடந்தான் போடு போடு
சோரைபோ லாக்கும் காயும் வைய்யே.

கோலாகு கசாயத்தால் புடந்தான் பத்து
குமட்டியே வெந்தபின்பு சீனி வாழை
போலாகும் பழந்தேன்பால் நெய்யஞ்சும் நேராய்
புகட்டி யதிலே செந்தூரம் வைத்து
காலாகும் பதமேது சலந்தான் வற்றில்
பணமெல்லாங் காணாமல் நெய்ப்பதமாங் காணே.

நெய்ப்பதமா நிற்கயிலே செந்தூர மாகும்
நேராக வாரி வைத்து நீயும்
மெய்ப்பதமா யனுப்பானஞ் சுரத்துக் கெல்லாம்
மீறாமற் சின்னிலே அறமா வூட்டு
செய்ப்பதமாய் தாபசுரம் போக வென்றால்
சேரேன் சுக்குத்தூள் பணந்தான் வாங்கி
கைப்பதமாய் செந்தூரம் வுரமா வூட்டு
கடுஞ்சுரஞ் சன்னிக்கு முருங்கைத் தோலே.

முருங்கைத்தோல் கசாயத்தில் அறமா வூட்டு
மூர்ச்சேயுரும் தோடசுர மனைத்துந் தீரும்
முருங்கைத்தோல் பத்தியங்கள் வெள்ளாட்டுப் பாலில்
உழக்குநெய் யிட்டங்கே கஞ்சி காய்ச்சி
முருங்கைத்தோல் பனைவெல்லம் கஞ்சி யிட்டு
மொழுமெனவே காய்ச்சிக் குடிக்கச் சொல்லு
முருங்கைத்தோ லத்திரத்தில் வியாதிக் கெல்லாம்
மூன்றுநாள் தேனிலே குன்றி யூட்டே.

ஊட்டுவாய் ரண்டுமா செந்தூரம் வாங்கி
உற்றநொச்சிச் சாற்றிலிடு அட்டகுன்மம் போகும்
நாட்டுவா யுத்திரத்தில் கட்டி போக
நறுநெய்யில் சேர்த்துநீ யுண்ணச் சொல்லு
நீட்டுவாய் நீரிழிவு போக வென்றால்
நிறுத்தநொறு மாச்செந்தூரந் தேனி லூட்டு
மாட்டுவாய் காயசு வாசம் போக
மைந்தனே செந்தூரங் காணி போடே.

காணியிடு நெய்யிலே சயரோகம் போக
காயாசு வாசம்போம் வறட்சி போகும்
கோணியிடு வலிகுன்மம் போக வென்றால்
கொட்டடா முருங்கைத்தோல் சாற்றி னுள்ளே
ஊணியிடு சத்திகுன்மம் போக வென்றால்
உத்தமனே சுக்குவெந்நச் சலத்தி னுள்ளே
பேணியிடு செந்தூர மிருமா நீயும்
பேரான இரதபற்பங் கூட்டுக் கூட்டே.

கூட்டயிலே மேதமென்ற வுண்டா சென்றால்
கூறுவேன் காந்த செந்தூரத் தோடும்
ஊட்டயிலே சூதசெந் தூரந் தானும்
ஓரொன்று பணந்தாக்குப் பாக மரைமா
நீட்டயிலே யட்ட குன்மம் போகும்
நேராக பத்தியத்தை நீகே ளப்பா
நாட்டயிலே பிரமகுலத் துதித்தோ னாகில்
நலமான துவ்வரையாந் தூதளங்கா யாமே.

ஆமப்பா மாங்கிசம் புசிக்கும் பேர்க்கு
ஆட்டுவற்றல் முசல்கறியும் நிறமோங்கும்
வேமப்பா உடம்புமெத்த மெலிந்த தானால்
வெண்ணெயிலே திண்ணச்சொல்லு வேறு கேளு.
(சு.9. பா. 127-138)

செய்முறை : அப்பிரகத்தை வெள்ளாட்டு நீரில் வேகவைத்தெடுத்து, சுண்ணாம்புத் தண்ணீரிலிட்டெடுத்து, பசுநீரில் அவித்தெடுத்து, நீர்விட்டுக் கழுவி, கிழிகட்டிச் சட்டிக்குள் வைத்து, காடி வார்த்துப் பிசைந்திட அப்பிரகம் கரையும். பிறகு தெளிந்திறுத்து நன்றாக உலர்ந்த பின் ஆலம்பால், ஆலம் விழுது இவற்றைக் கூட்டி ஆட்டி வாங்கியெடுத்து, சீலைமண் செய்து கசப்புடம் போட்டெடுக்கவும். இப்படியே ஆறு புடமிட்டு, பிறகு கற்றாழஞ் சாற்றிலும், ஓரிதழ்தாமரைச் சாற்றிலும், தனித் தனியே அரைத்தெடுத்து மும்மூன்றுப் புடம் போட்டெடுத்து, வெள்ளாட்டின் நீரில் பிசைந்து வைத்து, கொடுப்பைச் சாற்றில், 3 சாமம் (9மணி நேரம்) எரிக்கப் பற்பமாகும். நாவல், அத்தி, அரசு இவற்றின் பட்டைகளை நீரிலிட்டுக் காய்ச்சி அதில் அப்பிரகத் தூளையிட்டு வில்லைதட்டி உலரவைத்து கசப்புடம் போட்டெடுக்கக் கசாயம் போலாகும். அத்துடன் சீனி, பழம், நெய், பால், தேன் இவற்றைக் கூட்டி நெய்ப் பதமாக எடுக்கவும்.

அளவு : குன்றிமணியளவு.

துணை மருந்தும் தீரும் நோய்களும் : சுரத்திற்குச் சின்னியிலைச் சாற்றிலும், தாப சுரத்திற்குச் சுக்குத் தூளிலும், கடும் சுரம் சன்னிக்கு முருங்கைத் தோலிலும், அட்ட குன்மத்திற்கு நொச்சிச் சாற்றிலும், நீரிழிவிற்குத் தேனிலும், சயரோகத்திற்கு நெய்யிலும், வலிகுன்மத்திற்கு முருங்கைத் தோல் சாற்றிலும் உண்ணத் தீரும்.

இரசபற்பம், சூதசெந்தூரம், காந்தசெந்தூரம் இவற்றுடன் நோய்க்குத் தகுந்தவாறு கொடுக்க அட்டகுன்மம் போன்ற நோய்கள் தீரும்.

பத்தியம் : வெள்ளாட்டுப் பால், நெய், பனவெல்லமிட்ட கஞ்சி, துவரை, தூதுவளங்காய், ஆட்டுவற்றல், முயல்கறி, வெண்ணெய் ஆகும்.

(வேறு)

கோழி முட்டைத்தோடு ஒரு பலம், கணவாய் ஓடு ஒரு பலமிது இரண்டையு மெலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து,

வில்லை தட்டிப் புடம்போட வெள்ளையாம். இந்த வெள்ளையைப் பசுவின் வெண்ணெயில் ஒரு பணவெடை கொடுக்கவும். சயம், உள்மாந்தை, குவளை, விப்புருதி தீரும். சுக்கு, மிளகு, திப்பிலி பொடி செய்து இந்த வெள்ளை பணவெடை கூட்டிக் கொடுக்க வாத சூலை தீரும். சர்வ பத்தியம். (சு. 5)

செய்முறை : கோழிமுட்டைத்தோடு, கணவாய் ஓடு இவை வகைக்கு ஒரு பலம் (35கிராம்) வாங்கி, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, வில்லை தட்டிப் புடம்போட வெள்ளையாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி).

துணை மருந்து : பசுவின் வெண்ணெய்.

தீரும் நோய்கள் : சயம், உள்மாந்தை, குவளை, விப்புருதி தீரும். சுக்கு, மிளகு, திப்பிலிப் பொடியுடன் உண்ண வாத சூலை தீரும்.

பத்தியம் : சர்வ பத்தியம்.

## அயகாந்தச் செந்தூரம்

மயமான அயகாந்தச் செந்தூரஞ் சொல்வேன்
மாசற்ற அயப்பொடிதான் பலந்தா னொன்று
அயமான அந்தெடைக்குக் காரஞ் சேர்த்து
அப்பனே லிங்கமதில் பாதிச் சேர்த்து
உயமான வழலையோர் கழஞ்சி கூட்டி
உற்றதொரு கெந்திதனைச் சமனாய்ச் சேர்த்துச்
சியமான செயநீராற் சாம மாட்டித்
தீர்க்கமாய் வில்லைதட்டி ரவியில் போடே.

போட்டுமே யேழுநாள் காய்ந்த பின்பு
புகழான வெடியுப்பு அப்பிரகம் ரெண்டும்
ஆட்டுமே செயநீரா லரைத்துப் பூசி
அழகான செங்கலென்ற குகையில் வைத்து
மூட்டுமேலு மந்தச் சில்லால் மூடி
முயச்சியா யேழுசீலை மண்ணுஞ் செய்து
தீட்டுமே தாய்ப்பதத்தைப் பூசை பண்ணிச்
சிவசிவா கசபுடத்தில் செந்தூர மாமே.

ஆமென்ற செந்தூரம் நவலோ கத்தில்
அனைத்திடவே ஆயிரத்துக் கோடும் பாரு
தாமென்ற அனுப்பானத் தோடு கொண்டால்
தப்பாது நோய்களெல்லாந் தவிடுபொடி யாகும்

போமென்ற காயசித்தி மண்டலத்தி லாகும்
போக்கோடே பத்தியமா யுண்டு தேறு
நாமென்ற யிரும்பிலே வேதை கோடி
நலமா நவசாரச் சுண்ணங் கேளே. (சு. 2. பா. 35-37)

செய்முறை : அயப்பொடி 1 பலம் (35 கிராம்), காரம் 1 பலம் (35 கிராம்), லிங்கம் ½ பலம் (17.5 கிராம்), வழலை 1 கழஞ்சு (5.1 கிராம்), கெந்தி 1 கழஞ்சு (5.1 கிராம்) சேர்த்து, செயநீரால் 1 சாமம் (3 மணிநேரம்) ஆட்டி வில்லை தட்டி, வெய்யிலில் காய வைக்கவும். ஏழு நாட்கள் காய்ந்தபின் வெடியுப்பு, அப்பிரகம் இரண்டையும் செயநீராலரைத்து அதன்மேல் பூசி, செங்கல் குகையில் வைத்து, சில்லுமூடி, ஏழுசீலை செய்து, கசபுடத்தில் வைக்கச் செந்தூரமாகும்.

அளவு : தேவையான அளவு.

தீரும் நோய்கள் : எல்லா நோய்களும் தீரும். 1 மண்டலம் உண்ணக் காயசித்தியாகும்.

பத்தியம் : பத்தியம் காக்கவும்.

## அயச்செம்பு உருக்குச் செந்தூரம் லோக செந்தூரம்

அரப்பொடி புதுசா உடனே ராவி ஒரு பலம் அரப்பொடி யெடுத்து குமரி வேரரைத்து, பெருவிரல் கணம் குகை போலேப் பண்ணி, அதுக்குள்ளே அரப்பொடியை வைத்து, வாய்க்கு அரைத்த மருந்து தானே வைத்து மூடி, மண் குகையைச் சுட்டுப் போட்டு, அதற்குள்ளே கவசத்தை வைத்து, குகை வாய்க்குச் சில்லுப்போட்டு, சீலை மண் செய்து, பதக்குக்கரிப் போட்டு, குகை அழிஞ்சதுக்குமேல் நன்றா உருக்கி எடுக்கவும். உருக்க அயச் செம்பாகும். உடைத்தால் உடையும். செந்தூரத்துக்கு உடைத்து பழச்சாறு விட்டு அரைத்து பொடுதலைச் சாறு ரெண்டும் ரெண்டு சாமம் விட்டு அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து, புதுச்சட்டியில் வைத்து மேல் சட்டி மூடி, சீலை மண் செய்து தொண்ணூறு நாழியிலெரித்து, குளிர் ஆறி எடுத்தால் செந்தூரம் செம்பருத்திப் பூப்போல இறுகும். சகல ரோகத்திற்கும் கொடுக்கலாம். இச்சா பத்தியம். (சு 11)

செய்முறை : குமரி வேரை அரைத்துக் குகை செய்து, அதன் நடுவில் அரப்பொடி ஒரு பலம் (35 கிராம்) வைத்து மூடி, கவசம் செய்து, சுட்ட மண் குகைக்குள் கவசத்தை வைத்து, சீலை மண் செய்து உருக்க அயச் செம்பாகும், அத்துடன் பழச்சாறும்,

பொடுதலைச்சாறும் விட்டுத் தனித்தனியே இருசாமம் (6 மணி நேரம்) அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து புதுச்சட்டியில் வைத்து, மேல்சட்டி மூடிச் சீலைமண் செய்து பக்குவமாக எரித்தெடுக்கவும்.

அளவு : வேண்டிய அளவு.

தீரும் நோய்கள் : எல்லா நோய்களும் தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## அன்ன செந்தூரம்

அன்னபேதியை மான்செவி கள்ளியிலையில் அரைத்து 10 எருவில்புடம், தேள்கடி, வாய்வு, வீக்கம் தீரும். (சு. 22)

செய்முறை : அன்னபேதியை ஒரளவெடுத்து கள்ளியிலைச் சாற்றில் அரைத்துப் புடம் போட்டெடுக்கச் செந்தூரமாகும்.

அளவு : வேண்டிய அளவு.

தீரும் நோய்கள் : தேள்கடி, வாய்வு, வீக்கம் தீரும்.

## இரசச் செந்தூரம்

சழந்திரு மிரதச்செந் தூரஞ் சொல்வோஞ்
சகலநோய்க் கெல்லாஞ் சஞ்சீவி யாகும்
விழந்திருங் கெந்தியொன்று தார மொன்று
மி நவ்வல் பட்டையோடு அரசம் பட்டை
அழந்திர பருத்தியிலை பாகலிலை சேர
அப்பனே சரியெடையாய் சேரு சேரே

சேர்த்ததனை மயனம்போ லாட்டி வாங்கிச்
செப்புகிறேன் புதுச்சட்டிக் குள்ளே நீயும்
மாற்றமற மூன்றுபடி யுப்பு மிட்டு
மயனமென்ற மருந்ததற்குள் நடுவே வைத்து
வைத்திடுவாய் சூதமதில் பலந்தா னொன்று
மறுபடிநீ மருந்தாலே குழியை மூடி
சாத்தியே சில்லிட்டு சீலை செய்து
தணலூட்டு பதிமூன்று கடிகை தானே.

பதிமூன்று கடிகைநீ எரித்து வாங்கி
பதத்தோடே செந்தூர மருணம் போலாம்
விதினாறுங் குழலிலே யடைத்துக் கொண்டு
மிஞ்சியதோர் சட்டிக்குள் வெல்ல மிட்டு

மதினாறும் மிரட்டியந்த வெல்லந் தன்னை
    மாட்டுவாய் பருத்திவிதைப் பிரமா ணத்தில்
கதினாறுந் தினமேழு சூலை தீருங்
    கருப்பட்டி பணவெடையில் வெல்ல மூட்டே.

வெல்லத்தி லூட்டிடவே பக்க சூலை
    மேல்சூலை கால்சூலை கண்ட சூலை
வெல்லத்தி லூட்டிடவே தசையின் சூலை
    வீக்கமொடு புண்பிளவை முழந்தாள் சூலை
வெல்லத்தி லூட்டிடவே சந்து நோயும்
    மெய்க்குடச்ச லெலும்புருக்கி விரணம் போகும்
வெல்லத்தி லூட்டிடவே நோய்க ளெல்லாம்
    வீரடங்கும் பத்தியங்கேள் முருங்கைத் தண்டே.

தண்டுடனே துவரைப்பருப்பா மற்றொன் றாகா
    தண்ணீர்தான் வெந்நீராந் தாழ்ச்சி யின்றி
........ ........ ........ ........

(சு. 1. பா. 523-527)
(சு. 9. பா. 19-23)

செய்முறை : கெந்தி 1 பலம் (35 கிராம்), தாரம் 1 பலம் (35 கிராம்), நவ்வலபட்டை, அரசம்பட்டை, பருத்தியிலை, பாக விலை இவற்றை ஓரெடையாய்ச் சேர்த்து மை போல அரைக்கவும். புதுச்சட்டி ஒன்றில் மூன்றுபடி உப்பைக் கொட்டி அதன் நடுவில் மருந்தை வைத்து, அதில் 1 பலம் (35 கிராம்) சூதத்தையும் வைத்து, சில்வைத்துச் சீலைசெய்து பதின்மூன்று கடிகையெரிக்கச் செந்தூரமாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி).

துணைமருந்து : கருப்புக் கட்டி.

தீரும்நோய்கள் : செந்தூரம் செய்த சட்டியில் வெல்லத்தைப் புரட்டி அதைப் பருத்தி விதையளவு தினமும் உண்ண ஏழு சூலை தீரும். வெல்லத்தில் செந்தூரமுண்ணப் பக்கசூலை, மேல்சூலை, கால்சூலை, கண்டச்சூலை, தசையின்சூலை, புண், பிளவை, முழந் தாள் சூலை, சந்துநோவு, உடல் குடைச்சல், எலும்புருக்கி முதலியன தீரும்.

பத்தியம் : முருங்கைத்தண்டு, துவரைப் பருப்பு, வெந்நீர் ஆகும்.

(வேறு)

ரசம் கழஞ்சு-3, காரீயம் கழஞ்சி-3, ஒரு கோழி முட்டையை ஒரு பணம் போலே தகர்த்து வெள்ளக் கருவடைத்து, வெள்ளெருக் கம் பாலும், மஞ்சக்கருவைத் தள்ளிவிட்டு ரசமுங் காரீயமும் கோழிமுட்டையிலடைத்து, வெள்ளக் கருவுமடைத்துக் கோழிப் புடம் போட்டு ஆறவிட்டெடுத்து, குழலிலடைத்து வைத்துக் கொண்டு, அரைப்பணவெடை வேப்பம் பட்டைச் சாற்றிலிடவும் வாயுபூண்ட சன்னிதீரும். பிற வீச்சுக்கு மிளகு அவித்தண்ணீர் கொடுக்கவும். குன்மம், பித்த சுரத்திற்குப் பொடுதலையைச் சட்டி யில் போட்டு அந்த சட்டியில் தண்ணீருற்றி ஒரு பணவெடை பற்பம் போட்டுச் சாப்பிடத்தீரும். (சு. 5.)

செய்முறை : கோழி முட்டையைச் சிறிய ஓட்டை செய்து மஞ்சட் கருவைத் தள்ளிவிட்டு, ஓட்டிலுள்ள வெள்ளைக் கரு வுடன் ரசம், காரீயம் வகைக்கு 3 கழஞ்சும் (15.3 கிராம்), வெள்ளெ ருக்கம் பாலும் சேர்த்தடைத்து, கோழிப்புடம் போட்டெடுத்து ஆறியபின் குழலிலடைத்துக் கொள்ளவும்

அளவு : அரைப்பணவெடை (244 மி. கி).

துணைமருந்தும் தீரும்நோய்களும் : வேப்பம் பட்டைச் சாற்றி லுண்ண வாயுசன்னி தீரும். மிளகு அவித்த தண்ணீரிலுண்ண பிறவீச்சு தீரும். பொடுதலையைச் சட்டியில் போட்டு, தண்ணீ ருற்றி ஒரு பணவெடை (488 மி.கி) பற்பம் போட்டுச் சாப்பிட குன்மம், பித்த சுரங்கள் தீரும்.

## இராமபாணச் செந்தூரம்

வீரம், பூரம், லிங்கம், ரசம், செந்தூரம், நெல்லிக்காய், கந்தகம் வகைக்கு கழஞ்சு வீதம் எடுத்து முலைப்பாலில் நாலு சாமம் அரைத்துவெய்யிலில் வைத்தால் செந்தூரமாகும் எடுத்துக் கொண்டு பனைவெல்லத்தில் அரையெடை கொடுக்கவும். இச்சா பத்தியம். வாய்வு, வீக்கம், சுரம், மேகம், சன்னி, நீரேற்றம் இவை நீங்கும். (சு. 22)

செய்முறை : வீரம், பூரம், லிங்கம், ரசம், செந்தூரம். நெல்லிக்காய், கந்தகம் இவை வகைக்கு 1 கழஞ்சு (5 1 கிராம்) வாங்கி முலைப்பாலில் நான்கு சாமம் (12 மணி நேரம்) அரைத்து வெய்யிலில் வைக்கச் செந்தூரமாகும்.

அளவு : அரையெடை.

துணைமருந்து : பனைவெல்லம்.

தீரும்நோய்கள் : வாய்வு, வீக்கம், சுரம், மேகம், சன்னி நீரேற்றம் நீங்கும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## உதையாக்கினிச் செந்தூரம்

பாரப்பா லோகமென்ற வுருக்கு தன்னைப்
பாடுறேன் காமாலை பாண்டு தீர
சீரப்பா அதின்பேரு மைதிச முகவு
தையாக் கினிசெந் தூர மென்பார்
சேரப்பா சூதமொன்று கெந்தி ரெண்டு
சீரப்பா காந்தமது பலந்தான் நாலு
நேரப்பா வுருக்குத்தூள் பலமும் நாலு
நெகிழாட்டு கற்றாழஞ் சாறு வார்த்தே.

கற்றாழஞ் சாற்றினால் கடிகை நாலுக்
களிபோலே யாட்டியே வில்லை தட்டி
விற்றாழஞ் சட்டியிலே ஆலிலையைப் பரப்பி
மேல்வைத்து வில்லைதனை இலையால் மூடி
கொற்றாழஞ் சீலைசெய்து மண்ணுஞ் செய்து
கொடியதோ ரடுப்பேற்றித் தீயை மூட்டி
முற்றாழ மூன்றுபத்து கடிகை யங்கே
முட்டிநிப்பாற் பளவில் செந்தூர மாமே.

ஆகியதோர் செந்தூர மாதுளைப்பா லாலாட்டி
அடைத்திடுவாய் குழலிலே அன்பா மைந்தா
பாகியதோர் சுக்குத்தூள் வராக னொன்று
பாச்சடா செந்தூரம் பணந்தான் மூன்று
வாகியதோர் நெய்தேனி லுண்ணச் சொல்லு
வலியதொரு பெருவயிறு காமாலை சோகை
ஏகியதோர் பாண்டுப்பித்தம் விடபாகந் தானும்
இந்தனத்தில் விளத்தீப்போ லெரியுந் தானே.

[சு. 9. பா. 32-34]

செய்முறை : சூதம் 1 பலம் (35 கிராம்), கெந்தி 2 பலம் (35 கிராம்), காந்தம் 4 பலம் (140 கிராம்), உருக்குத்தூள் 4 பலம் (140 கிராம்) இவற்றைக் கற்றாழஞ் சாற்றினால் நான்கு கடிகை களிபோல ஆட்டி வில்லை செய்யவும். ஒரு சட்டியில் ஆலிலையைப் பரப்பி அதன் மீது வில்லையை வைத்து மீண்டும் இலையை வைத்துமூடி சீலை செய்து அடுப்பேற்றி முப்பது கடிகை யெரிக்கச் செந்தூரமாகும். இந்செந்தூரத்தை மாதுளைப் பாலாலாட்டிக் குழலில் அடைத்து வைக்கவும்.

அளவு : மூன்று பணவெடை (1.4 கிராம்)

துணைமருந்து : சுக்குத்தூள், நெய், தேன்.

தீரும்நோய்கள் : ஒரு வராகன் (4.2 கிராம்) சுக்குத்தூளுடன் மூன்று பணவெடை (1.4 கிராம்) செந்தூரம் கலந்து நெய், தேனி லுண்ணப் பெருவயிறு, காமாலை, சோகை, பாண்டு, பித்தம், விடபாகம் தீரும்.

## சண்ட மாருதச் செந்தூரம்

பூரம் பத்து வராகன், லிங்கம் வராகன் எட்டு, ரசசெந்தூரம் வராகன் இரண்டு, நெல்லிக்காய், கந்தகம் வராகன் ஒன்று. இது களைக் கல்லுவத்திட்டு எட்டு சாமம் அரைத்து, கோழி முட்டை வெள்ளைக் கருவால் எட்டுநாள் அரைத்து, வில்லை செய்து நிழலில் உலர்த்தி, நல்ல சலம் ஒரு படி கொதிக்க வைத்து, அதில் இந்த வில்லையைப் போட்டு, சூடு ஆறின பிறகுயெடுத்து உலர்த்தி கல்வத்தில் அரைக்கச் செந்தூரமாகும். அரிசியெடை தேனில் கொடுக்கவும். பாரிச வாய்வு, சன்னி தீரும். கடுகு, நல்லெண்ணெய் தயிர், பாலாகாது. (சு. 2)

செய்முறை : பூரம் 10 வராகன் (42 கிராம்) லிங்கம் 8 வராகன் (32.8 கிராம்) ரசசெந்தூரம் 2 வராகன் (8.2 கிராம்), நெல்லிக் காய், கந்தகம் வகைக்கு 1 வராகன் (4.1 கிராம்) வாங்கி கல்வத்திலிட்டு 8 சாமம் (24 மணி நேரம்) அரைத்து, கோழி முட்டை வெள்ளைக் கருவால் 8 நாள் அரைத்து வில்லை செய்து நிழலிலுலர்த்தி 1 படி (1. 3லிட்) கொதித்த நீரில் போட்டு, சூடு ஆறின பின்பெடுத்துலர்த்தி, கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : அரிசியெடை.

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : பாரிசவாய்வு, சன்னி தீரும்.

பத்தியம் : கடுகு, நல்லெண்ணெய், தயிர், பால் ஆகாது.

(வேறு)

சுத்திசெய்த ரசகற்பூரம் வராகன் 8, லிங்கம் வராகன்-8, வீரம் வராகன் 2, கந்தகம் வராகன் 2, ரசசெந்தூரம் வராகன்-1 இவைகளைக் கல்வத்திட்டு இரண்டு சாமம் விடாமல் அரைத்துப் பணவெடை பனைவெல்லத்தில் இட்டு உருட்டி விழுங்கச் செய்ய வும். ஆறுவேளை கொடுக்கவும். சன்னி 13, குட்டம், மகோதரம், பீலிகை, குன்மம், வாதம்-80, கிரந்தி, சிரங்கு, காமலை, விரவை

சுரம், களைப்பு, தனுவாதம், சூலை, பவுத்திரம், கண்டமாலை, வண்டுகடிகள், யோனிபுற்று முதலான வியாதிகளையும் தக்க அனுபானங்களிடத் தீரும்.

செய்முறை ; சுத்தி செய்த ரசகற்பூரம், லிங்கம் இவை வகைக்கு 8 வராகன் (32.8 கிராம்) வீரம், கந்தகம் வகைக்கு 2 வராகன் (8.2 கிராம்), ரசசெந்தூரம் 1 வராகன் (4.1 கிராம்) இவற்றை இருசாமம் (6 மணி நேரம்) விடாமல் அரைத்துக் கொள்ளவும்.

அளவு : பணவெடை (488 மி.கி) ஆறுவேளை சாப்பிடவும்.

துணைமருந்து : பனைவெல்லம்.

தீரும்நோய்கள் : சன்னி 13, குட்டம், மகோதரம், பீலிகை குன்மம், வாதம்-80, கிரந்தி, சிரங்கு, காமாலை, விரவைசுரம், களைப்பு, தனுவாதம், சூலை, பவுத்திரம், கண்டமாலை, வண்டு கடிகள், யோனிபுற்று முதலியன தீரும்.

## சவ்வீர வைப்புக் கோடாக்குடிச் செந்தூரம்

கல்லுப்பு வெடியுப்பு அக்கிரா காரங்
கடியதோர் நவசார மன்ன பேதி
வெல்லவல்ல மயில்துத்தம் ரசமோ டேழு
விளம்புதல் சவ்வீர வைப்பு செயரோக
நல்லதொரு செங்காசலக் குப்பிக் கேற்க
நலம்பெறவே ஏழுசீலை மண்ணுஞ் செய்து
சொல்லஅரி தானசிவ சத்தி பூசைத்
தொழில்முடித்து மணல்பாண்டக் குப்பி வைய்யே.

வைத்துமணல் குப்பிக்கு மட்டிட்டு
வாகாக முத்தீயு மாறாம லேதான்
பத்திரமாய் மூன்றுதின மெரித்துப் பின்பு
பாங்குடனே பூசைவி திப்படி நடாத்தி
மத்தநாட் குப்பியெடுத்தாற் பதங்க மேறி
வாசியென்ற வீரமென்று வகுப்பார் பாரில்
அத்ததீர் கிளப்பிட்டியது செந்தூ ரங்காண்
அதையிலைச் சாறுவிட்டு அரைக்க லாமே.

அரைத்துவைத்த செந்தூரம் வில்லை யாக
அடைபிடித்து யுலரவைத்து அப்பால் நல்ல
புரையறவே வராகபுடம் போட்டுப் பின்பு
புடம்பிரித்துச் செந்தூர மதனை வாங்கி

நிரைநிரையாய் நொச்சியிலைச் சாற்றி லோர்நாள்
நேராக யிஞ்சிமுலைப் பாலிலீர் நாளும்
வரையாது மூன்றுதின மரைத்தப் பின்பு
மாத்திரையுங் கடலைப்பிர மாணஞ் செய்யே.

செய்துவைத்த மாத்திரையை நிழலினு லர்த்திச்
சேர்த்திடுவாய் சிமிழிலது சென்ற காலம்
உய்வதுக்கு நறுநெய்தே னதிலொரு மண்டலம்
உண்ணவிரு போதுஅரை மண்ட லத்தில்
நையும்விட பாண்டுமகோ தரமுங் குட்டம்
நற்காச்சு வாசமொடு காசக் கூறும்
பையநற்கண்டே பிரிந்து தட்டுக் கெட்டுப்
பழவினையும் பயந்தோ டும்படி சொன்னோமே.

சொன்னோம்நாம் பத்தியத்தின் வகையைக் கேளு
சுத்திசெய்த உப்பதனைச் சுகமாய்க் கூட்டு
சொன்னோம்நாம் வெள்ளாட்டுப் பாலுநெய்யும் கூட்டு
துவரையுடன் வழுதலங்காய்ப் பிஞ்சு கூட்டு
சொன்னோம்நாம் முருங்கையிலைச் சாறு கூட்டு
. துடுக்காக மற்றொன்று மாகா தப்பா.

(சு.1. பா. 347-352)

செய்முறை : கல்லுப்பு, வெடியுப்பு, அக்கிராகாரம், நவாச்சாரம், அன்னபேதி, மயில் துத்தம், ரசம், சவ்வீரம், இவற்றை குப்பியிலடைத்து, ஏழு சீலைமண் செய்து, முறைப்படி யெரித்து, பதங்கமானபின் எடுத்து, இலைச்சாறு விட்டரைத்து, வில்லையாகத் தட்டி, வராகப்புடம் போட்டெடுத்து, அதில் நொச்சிச் சாறு, இஞ்சிச்சாறு, முலைப்பால் இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாளரைத்து, கடலையளவு மாத்திரையாக்கி நிழலிலிட்டு உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு, அரைமண்டலம் (24 நாட்கள்)

துணைமருந்து : தேன், பசுநெய்.

தீரும்நோய்கள் : விடப்பாண்டு, மகோதரம், குட்டம், காசம், தீரும்.

பத்தியம் : வறுத்த உப்பு, வெள்ளாட்டுப்பால், நெய், துவரை, வழுதலங்காய்ப்பிஞ்சு, முருங்கையிலைச் சாறு ஆகும்.

## சவ்வீர செந்தூரம், சாப்பிட வியாதி தீரும் விபரம்

சூலை, வாதசூலை, முடக்கு சூலை, கரப்பான், அரையாப்பு, குன்மவலி, அண்டவாய்வு, ஆனந்தவாய்வு, பாரிசவாய்வு, மேகக் கடுப்பு, மேகத்திற்கு இதற்கெல்லாம் வியாதிப்பலன் கண்டு 7 போது, 6 போது கொடுக்கவும். உதையஞ் சாயந்திரம் பணவெடை சீரகம், மிளகு, இளவறுப்புப் பொடிபண்ணி, கருப்புக் கட்டியில் சேர்த்து நடத்தி, தெரியாமல் பொதிந்துக் கொடுக்கவும்.

(சு.4)

## சாதிலிங்கச் செந்தூரம்

காயமென்ன சாதிலிங்கம் கழஞ்சு ரெண்டு
　　கட்டாக வாங்கிவந்து கல்லி விட்டு
வாயமென்ன குமரிச்சாறு தன்னா லாட்டி
　　மைந்தனே வில்லைதட்டி யுலர்த்திக் கொண்டு
நேயமென்ன சீராயடுப் போடத்தான் போடு
　　நேரியிருந்த செந்தூரம் யிரவி போலாந்
தாயமாட் டென்னயினி வேறே கற்பஞ்
　　சோதிப்பாய் சரீரத்தில் சூடு போச்சே.

(சு. 4. பா. 21)

செய்முறை : சாதிலிங்கம் இரண்டு கழஞ்சு (10.2கிராம்) வாங்கி, குமரிச்சாறு விட்டு ஆட்டி வில்லைதட்டியுலர்த்தி, புடம் போட்டுப் பக்குவமாய் எடுக்கச் செந்தூரமாகும்.

தீரும்நோய் : உடம்பு சூடு தணியும்.

## சூத செந்தூரம்

விரும்பிக்கேள் சூதமொடு கெந்தி ரெண்டு
　　மீறாமல் கருந்துளசி நீரா லாட்டி
விரும்பக்கேள் ரெண்டுதினங் குப்பிக் கேத்தி
　　விபரமுடன் சீலைமண்தா னேழு செய்து
விரும்பக்கேள் குப்பியுட வாய்க்குத் தானும்
　　வெண்ணுப்புப் பச்சைமண்ணு முப்புங் கூட்டி
விரும்பிக்கே ளாட்டியதை விரவப்போற் றித்துமேல்
　　வாய்க்குள்ளே மத்திநன் றாய் வைத்தி டாயே.

வைத்திட்டு அடிகனத்த பானைத் தூறில்
மைந்தனே தமறிட்டு மணலைக் கொட்டி
வைத்திட்டு விரற்கனந்தா னால தாக
வாகாக அதின்மேல் குப்பி வைத்து
வைத்திட்ட குப்பிக்கு கழுத்து மட்டு
மணல்சொறிந்து சூட்டடுப்பில் வைத்து நீயும்
வைத்திட்ட மந்தா அக்கினியே மூட்டி
மைந்தனே ரெண்டுபத்துச் சாம மாட்டே.

மாட்டடா காடாக்கினி பத்துச் சாமம்
வளமாக செந்தூர மாகும் பாரு
நீட்டடா ஆறியபின் னிறக்கிப் பாரு
நீர்யிந்திர கோபம்போலக் கடுஞ்சிவப்பு மாகும்
ஆட்டடா செந்தூர மிறக்கும் போதும்
ஆயிக்குப் பூசைநன்றா யமைத்து நீயும்
மூட்டடா அனுப்பானத் துரையோ டொக்க
வொவ்வொன்றாய்ச் சொல்லுகிறே னுணுகிக் கேளே.

கேளப்பா பொரிமாவில் செந்தூரம் பணந்தான்
கெடியாக வுண்டிடுவாய் சத்தசுரம் போகும்
நாளப்பா வுள்காய்ச்சல் போக வென்றால்
நலமாக முன்பொடியி லூட்டு வூட்டுத்
தாளப்பா சர்க்கரையில் தாபசுரம் போகுஞ்
சயகாசந் தீரவென்றா லிஞ்சிச் சாற்றில்
வாளப்பா சாத்தியமாஞ் சுரங்கள் மாறவென்
றால்நொச்சிச் சாறுக் குள்ளே வூட்டே.

ஊட்டுவாய் வயிற்றாலே சீதம் வீழில்
உத்தமனே பாலிலே வூட்டு மைந்தா
நீட்டுவா யட்டகுன்மம் போக வென்றால்
நேரான கொடுவேலிக் கசாயத் தூட்டு
நாட்டுவாய் திரிதோட மொழிய வென்றால்
நயமான தசமூலக் கசாயத் தூட்டே.

கசாயமிடு ஆறோகிசுரம் போக வென்றால்
கடுஞ்சுக்கும் நெல்லு மிவைசமன் வறுத்து
கசாயமிட்டு ரெண்டுங் கூட்டிக் கூட்டு
கண்கொண்ட பவுந்திரங்கள் போக வென்றால்
கசாயமிடு தோடைநிறத் தன்னி நீயுங்
கரிப்பானும் மிளகுநன்றாய் அரைத்தி டாயே.

அரைத்ததொரு செந்தூர மருந்திடவே
அஞ்சுவகைப் பாண்டுந் தீரும்
இரைத்ததொரு பதினெட்டு வாதம்போக
ஏரண்டத் தயிலத்தி லூட்டு வூட்டு
நிரைத்ததொரு மருந்துடனே ஆறுமூலம் போகவென்றால்
நேராகச் சாரணைச் சாற்றிலே வுண்ணப்போகும்
பரைத்ததொருப் பயித்திய ரண்டு மேகம்போக
பருத்திவிதைத் தயிலத்தில் பாய்ச்சுப் பாய்ச்சே.
(சு. 9. பா. 161-168)

செய்முறை; சூதம், கெந்தி இவை வகைக்கு இரு பங்கு எடுத்து, கருந்துளசிச் சாற்றிலாட்டி, குப்பியிலிட்டுச் சீலை மண் செய்து, அதை அடி கனத்த பானையுள் நான்கு விரல் கனத்திற்கு மணலைக் கொட்டி, அதன்மேல் குப்பியை வைத்து, குப்பிக் கழுத்து வரை மணலையிட்டு மந்தாக்கினியில் 10 சாமமும் (30மணிநேரம்) காடாக்கினியில் 10 சாமமும் (30மணிநேரம்) வைத்தெடுக்க இந்திர கோபம் போலக் கடும் சிவப்பாகும்-

அளவு: பணவெடை (488மி.கி).

துணை மருந்தும் தீரும் நோய்களும்:

பொரி மாவில் சத்தசுரமும், சர்க்கரையில் தாபசுரமும், இஞ்சிச் சாற்றில் சயகாசமும், நொச்சிச் சாற்றில் சுரங்களும், பாலில் சீதம் விழுதலும், கொடுவேலிக் கசாயத்தில் அட்ட குன்மமும், தசமூலக் கசாயத்தில் திரிதோடமும், சுக்கும் நெல்லுமிட்ட கசாயத்தில் சுரமும், ஆடா தோடை நீரில் பவுத்திரங்களும், கரிப்பான், மிளகுச் சாற்றில் பாண்டு நோய்களும், ஆமணக் கெண்ணெயில் வாத நோய்களும், சாரணைச் சாற்றில் மூல நோய்களும், பருத்தி விதைத் தைலத்தில் பயித்தியம், மேகம் போன்ற நோய்களும் தீரும்.

## சூத வெள்ளை

மிண்டுபுரி நோய்க்கெல்லாஞ் சுத்த சூதம்
வெள்ளையாய்ச் செய்கிற விபரங் கேளு
மொண்டுவா ரிரண்டுபலச் சூதங் கல்லில்
மூவிலை மின்னிச்சாறு முங்க விட்டுக்
கண்டிதமாய் கடிகைநூறு மத்தித் தப்பா
கனக்கவதை மூன்றுண்டை கட்டுக் கட்டே.

கட்டினதைச் சட்டிநடு வைத்து நீயுங்
கனலூட்டு நாற்கடிகை பின்பு கேளு
தட்டியே சுத்தியலாற் கிண்டிக் கிண்டித்
தான்வறுப்பாய் நாற்கடிகை தானு மப்பா
துட்டியின்றிச் சூட்டடா கல்வத் திட்டுச்
சுருளவே நாற்கடிகை தூளா யாட்டிக்
கொட்டியிடு குழலிலே பதனம் பண்ணிக்
கொள்ளடா அனுப்பானங் கூறு றேனே.

கூறக்கேள் பணவெடைநீ பற்பந் தீத்துக்
குழைந்திருந்த வெல்லத்திற் குணத்தைக் கேளு
மீறக்கேள் பெருஞ்சூலை பக்க சூலை
விலாநோவு படுவெ லும்பு வீக்கந் தூக்க
மேறக்கேள் குன்மம்போ மவத்தை சூலை
யெட்டுவகைச் சூலையெல்லா மிதமா பாரு.
(சு. 1· பா. 527-529)

செய்முறை : சூதம் இரண்டு பலத்தை (70கிராம்) மூவிலை மின்னிச் சாறு விட்டரைத்து, மூன்று உருண்டை செய்யவும். இதை ஒரு சட்டியின் நடுவில் வைத்து, தீயெரித்து, கிண்டி, வறுத்து கல்வத்தில் கொட்டி, பக்குவமாகத் தூளாக்கிக் குழலில் வைத்துக் கொள்ளவும்.

அளவு : பணவெடை (488மி.கி).

துணை மருந்து ; வெல்லம்.

தீரும் நோய்கள் : பெருஞ்சூலை, பக்கசூலை, விலாநோவு, எலும்பு வீக்கம், குன்மம், எட்டுவகைச் சூலைகள் முதலியன தீரும்.

## தாம்பிர பற்ப செந்தூரம்

கேளப்பா செந்தூர பாக மெல்லாங்
கெட்டியாய் வகைவகையா யின்னங் கேளு
நாளப்பா சூதமொடு மனோசிலை யுங்கெந்தி
நலமான அரிதாரம் நாவி லிங்கம்
வேளப்பா நேர்வாள மக்கிராக் காரம்
மேலான நிறுவிடமும் வெண்காரந் தானும்
நீளப்பா காரீய முருக்குச் செம்பு
நேராக வகைக்கிரண்டு பலந்தான் தூக்கே.

தூக்கியே தாம்புரத்தை யுருக்குத் தன்னைத்
தூளாக ராவியே மருந்தோ டொக்கத்
தாக்கியே கற்றாழஞ் சாறு தன்னால்
சாதகமா யிருசாமந் தளர ஆட்டித்
தேக்கியே யடைதட்டிக் காய வைத்துச்
செயமாகப் புதுச்சட்டிக் குள்ளே யிட்டுத்
தோக்கியே மறுசட்டிக் கொண்டு மூடித்
துடியாக விளிம்பெல்லாஞ் சீலை செய்யே.

சீலைசெய்து மண்செய்து வாலுகையி லேத்தி
தேவிக்குப் பூசித்துத் திட்ட மாக
வாலைசெய்த அம்பரையே கருணை வாழ்வே
மகத்தான பெரியோர்கள் மனமே யென்று
காலைசெய்த முத்தீயு மெரித்து நன்றாக
கருவாய்த்த தானாற் சாமங்கழிந்த பின்பு
மாலைசெய்த ராத்திரியும் நாலு சாம
மாட்டிவர செந்தூர மகத்தாம் பாரே.

மகத்தான செந்தூரந் தூளா யாட்டி
மைந்தனே குழலிலே வாங்கி வைத்து
அகத்தான வியாதிகட்குக் கொடுக்க நன்றாய்
அனுப்பானஞ் சொல்லுகிறோ மப்பா சேளு
சுகத்தான திரிகடுகு வறுத்தத் தூளில்
கூட்டுவாய் வெருகடியிற் றேனிற் சேர்த்து
உகத்தான செந்தூரம் பணந்தான் தூக்கி
ஊட்டிவிடில் ஒழிகிற நோயைக் கேளே.

நோயேது அட்டகுன்ம மெரியாமை தானும்
நுசர்ந்துவருஞ் சூலைசுர மகோதரமும் வெப்பும்
நோய்போகுங் காமாலை கிரந்தி குட்டம்
நூறாறு வெடிசூலை வண்டுகடி தானும்
நோய்போகும் பெரும்பாடு ரத்த காசம்
நுணுக்கத்தி லணுகாத தாம்பிர மப்பா
நோய்போகு முள்கருவை யறிந்தா யானால்
நொடிக்குள்ளே வியாதிகளை யுண்ணும் பாரே.

[சு.1 பா. 687-691]

செய்முறை : சூதம். மனோசிலை, கெந்தி, அரிதாரம், நாவி, லிங்கம், நேர்வாளம், அக்கிராக்காரம், வெண் காரம், காரீயம், உருக்குச்செம்பு இவை வகைக்கு இரண்டு பலம் (70 கிராம்) வாங்கிக் கொள்ளவும். உருக்குத் தாம்பிரத்தைத் தூளாக்கிக் கொண்டு மற்றமருந்துகளோடு கற்றாழஞ் சாற்றினால் இரண்டு சாமம் (6 மணிநேரம்) ஆட்டி, அடை தட்டிக் காய வைக்கவும். புதுச்சட்டியின் நடுவே அந்த அடையை வைத்து மேல் ஒரு சட்டி மூடி, சந்துவாய்க்குச் சீலை மண் செய்து ஒரு சாமம் முத்தீயாக எரித்தெடுத்து, நான்கு சாமம் (12 மணிநேரம்) செந்தூரத்தைத் தூளாக ஆட்டிக் குழவிலடைத்து கொள்ளவும்.

அளவு : பணவெடை (488 மி.கி).

துணைமருந்து : திரிகடுகு வறுத்துப் பொடி செய்த தூளுடன், வெருகடியளவு தேனும் சேர்க்கவும்.

தீரும்நோய்கள் : அட்டகுன்மம், எரியாமை, சூலை, சுரம் மகோதரம், வெப்பு, காமாலை, கிரந்தி, குட்டம், வெடிசூலை, வண்டுகடி, பெரும்பாடு, ரத்தகாசம் ஆகியன தீரும்.

(வேறு)

தாமிரக்காசு கொண்டு வந்து, தட்டானிடத்தில் கொடுத்து காய்ச்சி, இலேசாய் தகடாய்த் தட்டி, பிறகு நன்றாய்ச் சிவக்கக் காய்ச்சி, எலுமிச்சம்பழ ரசத்தில் துவைக்கவும். பிறகு அகத்திக் கீரையை அரைத்து ஒவ்வொரு தகட்டிற்கும் பூசி, அதாவது மொத்தை நடுவில் தகட்டைவைத்து ஒரே மொத்தையாய்த் திரட்ட, சள்ளி கோணிப்பட்டை சோற்றில் பிரட்டி, கீரை மொத்தமே கவசம் செய்து, இரண்டு முழம் ஆழமுள்ள கசப்புடத் தில் நூறுவிரட்டியில் புடம் வைக்கவும். நாலுநாள் ஆறிய பிறகு அதை எடுத்து கல்லுவத்தில் வெள்ளெருக்கன் பால் விட்டரைத்து வில்லை செய்து நிழலுலர்த்தி, அகல் வைத்து மேல் அகல் வைத்து மூடி கவசம் செய்து 50 விரட்டியில் புடம். மறுநாள் எடுத்துப் பார்க்க உதர செந்தூரமாயிருக்கும். அதைக் கல்லுவத்திவிட்டு அரைத்துப் பெட்டியில் வைத்துக் கொள்ளவும்.

இதற்கனுபானம் : திரிகடுகுச் சூரணத்தில் ரூபாய் தேன், இஞ்சி, பசுவின்நெய் மூன்றும் விட்டு, சிறிய பாக்களவு லேகியத்தில் அரிசியெடை சிறு பூநாகம் சாப்பிட வாதசுரம், மேக வாய்வு, பாரிச வாய்வு, கண்ட மாலை, கிரந்தி வியாதியெல்லாம் தீரும். தாது விருத்தியுண்டாம். கடுகு, நல்லெண்ணெய் நீக்கவும். இச்சாபத்தியம்,

(சு.22)

செய்முறை : தாமிரக்காசைத் தகடாய்த்தட்டி எலுமிச்சம் பழரசத்தில் ஊறவைக்கவும். பின் அகத்திக்கீரையை அரைத்து தகட்டின் மேல் பூசி கவசம் செய்து பக்குவமாய்ப்புடத்தில் வைத்தெடுக்கவும். பின் வெள்ளெருக்கன் பால் விட்டரைத்து வில்லை செய்து நிழலிலுலர்த்தி அகல் வைத்துமூடி கவசம் செய்து, புடம் போட்டெடுத்து, மறுநாள் பார்க்கச் செந்தூரமாயிருக்கும். அதைப் பொடியாக்கிக் கொள்ளவும்.

அளவு : அரிசியெடை.

துணைமருந்தும் தீரும்நோய்களும் : திரிகடுகுச் சூரணத்தில் தேன், இஞ்சி, பசுவின்நெய் இவற்றில் அரிசியெடை சிறு பூநாகம் சாப்பிடவும். கிரந்தி, வாதசுரம், மேகவாய்வு, பாரிச வாய்வு, கண்டமாலை அனைத்தும் தீரும். தாது விருத்தியாகும்.

பத்தியம் : கடுகு, நல்லெண்ணெய் ஆகாது. இச்சாபத்தியம்.

## தாளகச் செந்தூரம்

தாக்கிப்பார் செந்தூரம் நோய்கட் கெல்லாம்
 தாளகமும் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
நோக்கிப்பார் ஆரையிலைச் சாற்றா லாட்டி
 நுணுக்கமாய் வில்லைதட்டி யுருபத் தாகப்
போக்கிப்பார் காயவைத்து சட்டிக் குள்ளே
 போட்டிடுவாய் வில்லைபத்தும் போட்டதி லேதான்
நோக்கிப்பார் மேல்மூடி சீலை யேது
 ஐந்நூறு விறாட்டிநடு வைத்து மூடே.

மூட்டியே சிறுசின்னிச் சாறு விட்டு
 மூண்டரைத்து யெருநூறு போட முன்போலே
வீட்டிமையா யதையெடுத்து மேனிச் சாற்றில்
 மிகுந்தரைத்து யெட்டுவில்லை ஆறாய்ச் செய்து
போட்டெடுப்பாய் முந்நூறு யெருவி லப்பா
 பிறகுசிறு தும்பையிலே வில்லை நாலு
ஈட்டமுட னெருவுமோ யிருநூ றப்பா
 இதன்பிறகு அவுரிச்சாறு வில்லை ரெண்டே.

இரண்டு வில்லை யிருநூறு பிறகுகேளு
 இதையெடுத்து எருக்கலம்பால் தன்னி லாட்டிக்
கொண்டு வில்லையொன்று செய்துஅஞ்சு பத்துக்
 கூறெருவில் புடமி ருக்கத்துக் கெல்லாம்

உண்டுபண்ணி சட்டிரெண்டு வேறுவே றப்பா
உதயாதி சூரணத்தை யென்ன சொல்வேன்
திண்டுமுண்டு செய்யாதே குரைநோய் குட்டந்
தீருமடா பணவெடையில் நோய்கள் போமே.

நோய்கள்போம் ஆவின்பால் முலைப்பால் சன்னி
நூதனத்தி லாவின்நெய் பாலுகா வேணும்
பேய்கள்போம் பிசாசுபோம் பிணியும் போகும்
பித்தம்போம் பிதற்றல்போம்
நாய்கள்போல் குரைக்கல் விக்கல் கக்கல்போகும்
நறுந்தேனில் சயமத்து ஓடிப் போகுந்
தூயழகாய் முன்தேக மப்பா சொன்னேன்
தூரவில்லை யின்னாளே தூண்டிப் பாரே.

தூண்டிப்பார் பழந்தின்னு நெய்யுந் தின்னு
தூதுவளை துவரையொடு பொன்னாங் காணி
வேண்டிப்பார் சிறுகீரை மிளகு போடு
வேளையிலை தக்காளி வற்ற லாகும்
மீண்டிப்பார் பாலாவின் ஆவின் வெண்ணெய்
யேரண்ட யெண்ணையிட்டு முழுகச் சொல்லு
தாண்டிப்பா லோடிவிடும் நோய்க ளெல்லாஞ்
சணத்திலே கண்டறவாய் சாற்றப் பாரே.

(சு.4. பா. 14-18)

செய்முறை : தாளகம் 10 பலம் (350 கிராம்) ஆரையிலைச் சாற்றிலாட்டி 10வில்லை தட்டிக்காயவைத்து;சட்டிக்குள் போட்டு மூடிசீலை செய்து புடம் போட்டெடுக்கவும். பின் சிறுசின்னிச் சாறு,குப்பைமேனிச்சாறு, தும்பையிலைச்சாறு,அவுரிச்சாறு, எருக்கலம் பால் இவற்றில் தனித்தனியாகப் போட்டு, தனித்தனி புடம் போட்டுப் பக்குவமாக எடுத்துக் கொள்ளவும்.

அளவு : பணவெடை (488மி கி).

துணைமருந்து : ஆவின்பால், நெய், முலைப்பால்.

தீரும்நோய்கள் : குரைநோய், குட்டம், இருமல், விக்கல், கக்கல் தீரும். பித்தம், பிதற்றல், பேய், பிசாசுகளும் தீரும்.

பத்தியம் : பழம், நெய், தூதுவளை, துவரை, பொன்னாங் கண்ணி, சிறுகீரை, மிளகு, வேளையிலை, தக்காளி வற்றல் இவை ஆகும். ஆவின் வெண்ணெய், ஆமணக்கெண்ணெய் இவற்றை இட்டு முழுகவும்,

## பூங்காவி செந்தூரம்

பூங்காவி 2 வீசம், படிகாரம் 2 வீசம் இவை இரண்டும் கல்வத்திட்டு அரைத்து வெண்ணெயில் அல்லது நெய்யில் சாப்பிடவும். எடுபாடு, வெள்ளை, பசுமை, ரத்தகாசம், மேகவெட்டை, உட்காய்ச்சல், உட்ணவாய்வு, நாக்கு வறட்சி இதுகள் தீரும். இச்சாபத்தியம். கடுகு, நல்லெண்ணெய் நீக்கவும்.

செய்முறை : பூங்காவி, படிகாரம் வகைக்கு 2 வீசம் வாங்கிக் கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக் கொள்ளவும். (சு. 22)

அளவு :- வேண்டிய அளவு.

துணைமருந்து : வெண்ணெய், நெய்.

தீரும்நோய்கள் : எடுபாடு, வெள்ளை, பசுமை, ரத்தகாசம், மேகவெட்டை, உட்காய்ச்சல், உட்டிணவாய்வு, நாக்கு வறட்சி தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம். கடுகு, நல்லெண்ணெய் ஆகாது.

## மண்டூர செந்தூரம்

பலம் மண்டூரம் எடுத்து உலையில் காய்ச்சி பசுவின் கோமியத்தில் துவைக்கவும். இம்மாதிரி 7 தரம் துவைக்கவும். உரலில் போட்டுக் கடப்பாறையால் இடித்து வஸ்தறாளிதம்செய்து, கல்வத்தில் போட்டுப் பசுவின் கோமியத்தில் ஒருநாள் அரைக்கவும். வெள்ளாட்டு நீரில் ஒரு நாள் அரைக்கவும். எருமைக்கடா மூத்திரத்தில் ஒரு நாள் அரைக்கவும். பிறகு கரிசார கண்ணி, உத்தாமணிச் சாறு, பூந்துளசிச்சாறு, கொட்டக் கிரந்திச் சாறு, பிரண்டை, ஆடாதோடை, குன்றிமணிச்சாறு, நெல்லிக்காய் இடித்தசாறு, பச்சை மஞ்சள் இடித்த சாறு, சாம்பிராணி இலை, கருவேலம் பட்டைக் கசாயம், கற்றாழைச்சாறு, சங்கம் பட்டைச்சாறு, தேவதாரி கசாயம், நாவல்பட்டைக் காசயம், நீர்முள்ளி, ஆகாசநெருஞ்சி, ஆலம் வேர் இடித்தசாறு, பழச்சாறு, புளி இலை இடித்தசாறு, புளி தண்ணீர், உலர்ந்த கடுக்காய் கசாயம் அரைத்தச் சாறு, அரசம்பட்டை, சித்திரை மூலம், சமூலம், கசாயம் இவைகள் நாளொன்றுக்கு ஒரு வகையினாலரைத்து வில்லை செய்து, நூறு விரட்டியில் வைத்து, பத்துக் கூடை உமிகொட்டி பத்துக் கூடை கரி கசபுடத்தில் வைத்து, மூன்றுநாள் பொறுத்தெடுத்து, கல்வத்தில் அளந்தெடுத்துக் கொள்ளவும். இதை

தேனில் அரிசியெடை கொள்ள சுவாசகாசம், உப்புசம் சயம், கிராணி 15, அதிசாரம், உட்காய்ச்சல், சோகை, பாண்டு இவைகள் திரும். கடும்பத்தியம். (சு. 22)

செய்முறை : மண்டூரம் (இரும்புத்தூள்) 1 பலம் (35 கிராம்) வாங்கிக் காய்ச்சி 7 முறை பசுகோமியத்தில் துவைத்து, இடித்து, பசுநீர், வெள்ளாட்டு நீர், எருமை நீரில் ஒவ்வொரு நாள் அரைக்கவும். பின் கரிசலாங்கண்ணி, உத்தாமணி, பூந் துளசி, கொட்டைக்கிரந்தி, பிரண்டை, ஆடாதேடை, குன்றி மணி, நெல்லிக்காய், பச்சை மஞ்சள், சாம்பிராணி இலை, கரு வேலம்பட்டைக் கசாயம், கற்றாழை, சங்கம்பட்டை, தேவதாரி, நாவல்பட்டை, நீர்முள்ளி, ஆகாசநெருஞ்சி, ஆலம்வேர் இவற்றின் சாறுகள், பழச்சாறு, புளி இலைச்சாறு, புளித்தண்ணீர், உலர்ந்த கடுக்காய்க் கசாயம், அரைத்தச்சாறு, அரசம்பட்டை, சித்திரைமூலம், இவைகளின் சாறுகளில் ஒவ்வொரு நாள் ஒவ் வொரு சாற்றிலரைத்து வில்லை செய்து பக்குவமாய்ப் புடம் போட்டெடுத்துக் கொள்ளவும்.

அளவு : அரிசியெடை.

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : சுவாசகாசம், உப்புசம், சயம், கிராணி 15, அதிசாரம், உட்காய்ச்சல், சோகை, பாண்டு இவை தீரும்.

பத்தியம் : கடும்பத்தியம்.

## மணி செந்தூரம்

இரசம், கெந்தி, வெங்காரம் வகைக்கு பலம் 1 சுத்தி செய்து 3ம் கலந்தரைத்துத் துணியில் கிழிக்கட்டிச் சட்டியில் மணலிட்டு கிழிகட்டிதனைப் புதைத்துச் சீலைமண் செய்து 100 எருவில் புடம் போடச் செந்தூரமாகும். திரிகடுகுத்தூளில் தேன் விட்டுக்குழப்பி, பணவெடை செந்தூரம், மண்டலம் சாப்பிட சூலை 18ம், வாய்வு, விப்புருதி, அட்டகுன்மம், எலிகடி இவை தீரும். மந்தாரகாசம், சயம், சுவாசகாசம், மூலம், அரையாப்பு, காமாலை 6, துடைவாழை, சூலை, பக்க சூலை, காமாலை, கரப்பான், புண், கடி, விப்புருதி, சுரம் போமே. அழிஞ்சி விதை தவிட்டிலூட்ட பெருவயிறு, மகோதரம் போமே.

திரிபலை சூரணத்தில் அதிவிடயம் கலந்து சேர்த்து, செந் தூரம் தேன் குழப்பி உண்ணில் அதிசாரம் 2 வகையும், இரத்தக் கடுப்பு, கிராணி சாரம் தீரும். காட்டுக் கருணைக் கிழங்குப்பொடி

செய்து, திப்பிலிப் பொடிச் சேர்த்து உண்ணில் மூலம், பவுத்திரம் போமே. ஆவாரைத் தயிலத்திலிடச் சதையடைப்பு 18ம், நீரடைப்பு 21ம், மேகம் 21ம், எருக்கலம் பழுப்புச் சாற்றிலிட ஒரு சேரயிட பேதி ஆகும். மோரும் சோறும். விடம், காமாலை தீரும். (சு.22)

செய்முறை : இரசம், கெந்தி, வெங்காரம் வகைக்கு ஒரு பலம் (35 கிராம்) சேர்த்தரைத்துத் துணியில் கிழிக்கட்டி மணலிட்டச் சட்டியில் புதைத்துச் சீலை செய்து புடம்போடச் செந்தூரமாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி). 1 மண்டலம்.

துணை மருந்தும் தீரும் நோய்களும் : திரிகடுகுத் தூளில் தேன்விட்டுப் பணவெடை செந்தூரம் உண்ண சூலை 18, வாய்வு, விப்புருதி, அட்டகுன்மம், எலிகடி, மந்தார காசம், சயம், சுவாச காசம், மூலம், அரையாப்பு, காமாலை-6, துடைவாழை, சூலை, பக்கசூலை, காமாலை, கரப்பான், புண், கடி, விப்புருதி, சுரம் தீரும். அழிஞ்சி விதைத்தவிட்டிலுண்ணப் பெருவயிறுதீரும். திரிபலை சூரணம், அதிவிடயம், செந்தூரம், தேன் இவை சேர்த்துண்ண அதிசாரசுரம் 2 வகை, இரத்தக்கடுப்பு, கிராணி சாரம் தீரும். காட்டுக் கருணைக் கிழங்குப்பொடி, திப்பிலிப் பொடிச் சேர்த்துண்ண மூலம், பவுத்திரம் தீரும். ஆவாரைத் தயிலத்தில் சதையடைப்பு 18, நீரடைப்பு 21, மேகம் 21 தீரும். எருக்கலம் பழுப்புச் சாற்றிலுண்ண பேதி ஆகும். விடம், காமாலை தீரும்.

பத்தியம் : மோரும்சோறும்.

## வாலை சூத செந்தூரம்

கால்பலம் நெல்லிக்காய், கௌரியை ஒரு குடுக்கையில் ஒரு பலம் வாலை ரசத்துக்கு கௌரியை கீழும் மேலும் வைத்து ஓடு மூடி, சீலைமண் செய்து, மூன்றுயெருவில் புடம் போட்டெடுக்கவும். அரிசியெடை தேனிலிட வாய்வு, சுரம் தீரும். புளியாகா. (சு.22)

செய்முறை : நெல்லிக்காய், கௌரி வகைக்கு கால் பலம் (8.7 கிராம்) வாங்கி, ஒரு பலம் (35 கிராம்) வாலை ரசத்திற்கு மேலும் கீழும் வைத்து ஓடு மூடி சீலைமண் செய்து, பக்குவமாய்ப் புடம் போட்டெடுத்துக் கொள்ளவும்.

அளவு : அரிசியெடை.

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : வாய்வு, சுரம் தீரும்.

பத்தியம் : புளி ஆகாது.

# பற்பங்கள்

## அஞ்சனக்கல் பற்பம்

.... ... ... ...

உசித்திடவே யஞ்சனக்கல் சொல்வேன் கேளு
　　உறுபுளியின் சிறுகீரை குகைபோற் பண்ணே.

பண்ணியே மேலே மூடியொன்று செய்து
　　பாங்கான யஞ்சனக்கல் நிறைய யிட்டு
உண்ணியே மண்சீலை செய்துகச புடத்தில்
　　உறுதியுள்ள சங்கதுபோல் நீறிப் போகுந்
தண்ணியிலே போட்டவுடன் மிதக்கும் பாரு
　　சலமான மேகவகை இருப துக்கும்
எண்ணியே தேனிலே யிடுவா யாகில்
　　என்சொல்வேன் நீறின் போக்குத் தானே.

(சு. 13. பா. 47-48)

செய்முறை : புளியிலை, சிறுகீரை இவற்றை அரைத்து, குகை போல் செய்து, அதற்கு மேலே மூடியொன்றும் செய்து வைத்து, அக்குகையினுள்ளே அஞ்சனக் கல்லை நிறையயிட்டு மண்சீலை செய்து, கசபுடத்தில் வைத்தெடுக்க வெண்சங்கு நிறம் போல நீறு உண்டாகும். இதைத் தண்ணீரில் போட்டால் மிதக்கும் இதுவே மருந்தின் பக்குவமாகும்.

அளவு : தேவையான அளவு.

துணை மருந்து : தேன்.

தீருநோய்கள் : மேகவகை இருபது.

## அரிதார பற்பம்

பாரப்பா அரிதார பற்பந் தன்னை
பாடுறேன் பொன்தாரம் பலந்தா னொன்று
நேரப்பா நாக்கழஞ்சி பஞ்சாங்க பற்பம்
நத்தியே அரப்பொடியும் நினவாய் வாங்கி
சேரப்பா சட்டிக்குள் சாம்ப லிட்டுச்
சிக்கவே அரிதாரம் பரத்தி மேலும்
வாரப்பா சாம்பலிட்டு சட்டியால் மூடி
விளிம்பெல்லாஞ் சீலைசெய்து மண்ணுஞ் செய்யே.

சீலைசெய்து அடுப்பேற்றி ஓராநாள் மட்டுந்
தீயா றாதே யெரித்து வாங்கி
காலையிலே பணவெடை நற்றே னூட்ட
சகலபுண்ணுஞ் சூலையொடு வாதம் வாய்வு
வாலைப் பெண்போல வருஞ்சய ரோகம்போம்
மாட்டுதற்குத் திரிகடுகு தேனு மாகும்
காலநம நோய்க்கெல் லாம்மரி தாரக்
கருப்புகை முறையாய் புலத்தியனே கண்டாயே.

கண்டிட்டார் முனிவோரும் ரிசிகள் தோற்று
கனாதர சிதர்களும் யோகி ஞானி
உண்டிட்டார் பல நூலும் பலமுகமாய்ப் பாடி
ஊரிலே அலைந்திடப் பித்த ரெல்லாங்
கண்டிட்டார் கற்பங்க ளமுர்து முண்ணார்
கருவிபிறக் கருவிகளுங் காணார் காணார்
பண்டிட்டார் செகனடி மறைதடித் தாற்றப்
பார்த்தறிந்தோன் மெஞ்ஞானி பார்த்தி டாயே.

(சு.9.பா. 13-15)

செய்முறை : பொன்னரிதாரம் ஒருபலம்(35கிராம்), பஞ்சாங்க பற்பம் நான்கு கழஞ்சு(20.4 கிராம்), அரப்பொடியும் கலந்து, சட்டியில் சாம்பல் கொட்டி, அதன் நடுவே இவற்றைப் பரப்பி, மீண்டும் சாம்பல் கொட்டி மூடி, சட்டிமூடி சீலை செய்து ஒரு நாள் முழுதும் குறையாதத் தீயிட்டெரிக்க நீறாகும்.

அளவு : பணவெடை (488 மி. கி). காலையில் மட்டும்.

துணைமருந்து : தேன், திரிகடுகு.

தீரும் நோய்கள் : புண்கள், சூலை, வாதம், வாய்வு, சயநோய் முதலியன தீரும்.

(வேறு)

பார்த்திடவே ரெண்டுபலந் தாரம் வாங்கி
பருக்கவே நறுக்கிநீ பண்பாய் மைந்தா
சேர்த்திடவே சாரணையே சமூல மாட்டி
செப்பரிய சட்டிக்குள் முக்கால் விட்டு
வார்த்திடவே சட்டிமேல் தாரம் வைத்து
மறுபடியும் சானையை வைத்து மூடி
சேர்த்திட்டு சில்லிட்டு சீலை செய்து
நினவா மூட்டியே மண்ணுஞ் செய்யே.

மூடிநீ தீயெரிப்பாய் சாமம் நாலு
முதிராமல் ஆறியபின் னிறக்கி வைத்து
நீடிநீ சட்டிக்குள் பற்றி தந்து
நின்றதெல்லாங் களைந்து மற்றெல்லா பற்பமும்
நீகல் வத்தில் தூளாட் டியுறச்
சேரு குழலிலே அடைத்து வைத்து
நாடிநீ பதினெட்டுக் குட்டந் திரக்
கால்வீர பொருக்குடனே கிராம்புமூலஞ் சேரே.

சேரப்பா சமபாகந் தயிலம் வாங்கிச்
சிறப்பாக பணவெடைதான் தயிலத் துள்ளே
ஆறப்பா பற்பத்தில் பணத்தில் பாதி
அளித்திடவே குட்டமொடு புண்ணு நோவும்
போமப்பா ஒழிந்துவிடுந் தேனுங் கூட்டு
பிலத்தூட்டுப் படியொன்று பிரிந்து போகும்
நோமப்பா இவைக்கெல்லாம் பத்தியங் கேளு
நெய்யாகும் பாலாகும் பழமு மாமே.

(சு.9. பா. 16-18)

செய்முறை : அரிதாரம் இரண்டு பலம் (70 கிராம்) நறுக்கி, ஒரு சட்டிக்குள் சாரணைச் சமூலம் ஆட்டியதை முக்கால் விட்டு, சட்டியின் மேல் தாரத்தை வைத்து, அதன் மேல் சானையை வைத்து மூடி, சீலை செய்து, மண்கொட்டி மூடி, நான்கு சாமம் (12 மணிநேரம்) தீயெரித்து, ஆறியபின் அதையெடுத்துக் கல்வத்திலிட்டுத் தூளாக்கிக் குழலிலே அடைத்துக் கொள்ளவும்.

அளவு : பண வெடை (488 மி கி).

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : பதினெட்டு குட்டம், புண்.

பத்தியம் : நெய், பால், பழம், உண்ணவும்.

(வேறு)

பொன்னரி தாரந் தன்னைப் பொருந்தவே தகடுத் தட்டி
மின்னிய சுண்ணம் போலே விட்டுநீறு வெந்த போது
இன்னிவை யீரவெங் காயம் இடித்ததில் சாகம் விட்டுச்
சொன்னரி தாரந் தன்னைத் துவக்கறக் காய்ச்சிக் கொள்ளே.

கொடுவேலி வேரிற் சுத்திக் கொடிய வூமத்திற் சுத்திப்
படியுறு பசுவின் பாலில் பதறாமல் சுத்தி செய்தே
கடியரி தாரந் தன்னைக் கடுக்காய்கற் றாழைச் சாற்றில்
அடரவே யம்மி தன்னில் அரைத்தடைப் பிடித்து லர்த்தே.

உலர்ந்த பின்புளி அரசு உத்தகொடு வேலி யெல்லாம்
நலம்பெறச் சுட்ட சாம்பல் ஒரொன்று நாழி கூட்டிக்
கலந்ததைச் சட்டி தன்னில் கையினால் மூக்கிச் செம்மி
அலங்குழ மத்தி லையில் அடையதில் வைத்து மூடே.

மூடிய சாம்ப லெல்லா முதிரவே யமுக்கிச் செம்மி
நாடியே யாறு சாமம் நலம்பெற வெந்த போது
ஓடியே விரைந்தெ டுத்து உகந்தொரு சிமிழி விட்டுக்
கூடியே பற்பந் தானுங் குலவியே தேனில் கொள்ள

கொடுத்திடும் பத்து நாளாய்க் கொண்டிடும் பணவெ டையாம்
தடித்தபுத் தெரிப்புச் சூலை களத்துடல் வீக்கம் வாதம்
இடித்திடு மண்டை சூலை எரிப்புடன் பறங்கிப் புண்கள்
படுத்திடும் வியாதி தீரும் பத்தியம் பாலுஞ் சோறே.

(சு.20)

செய்முறை: பொன்னரிதாரத்தைத் தகடாகத் தட்டி, ஈரவெங்காயச் சாற்றைவிட்டுக் காய்ச்சி, கொடுவேலிவேர், ஊமத்தைவேர், பசுவின்பால் இவற்றில் தனித்தனியே சுத்தி செய்து, அதை கடுக்காய் மற்றும் கற்றாழைச் சாற்றைவிட்டு அம்மியில் அரைத்து அடையாகத் தட்டி உலர்த்தவும். பின் ஒரு சட்டியில் புளி, அரசு, கொடுவேலி இவற்றின் சாம்பலைக்கொட்டி அதன் நடுவில் அடையை வைத்து, மேலே சாம்பலைக் கொட்டி அழுத்தி மூடி, ஆறுசாமம் எரித்தெடுக்க நீறாகும். அதைச் சிமிழில் அடைத்துக் கொள்ளவும்.

அளவு: பணவெடை (488 மி.கி). பத்து நாட்கள்.

துணைமருந்து: தேன்.

தீரும் நோய்கள்: எரிப்புச்சூலை, உடல்வீக்கம், வாதம், மண்டைசூலை, பறங்கிப்புண்கள் ஆகியன தீரும்.

பத்தியம்: பாலும்சோறும் உண்ணவும்.

## ஆமை ஓடு பற்பம்

ஆமை ஓட்டை நறுக்கி, பச்சைக் கோரைக் கிழங்கை அரைத்து அதன்மேல் பூசி கவசம் செய்துலர்த்தி 50 விரட்டியில் புடம் போட பற்பமாகும். நெய்யில் கொடுக்க பசி தீவனம் உண்டாகும். அசீரணம் நீங்கும். இச்சாபத்தியம். (சு.22)

செய்முறை: ஆமை ஓட்டை நறுக்கிப் பச்சைக் கோரைக் கிழங்கை அரைத்து அதன்மேல் பூசி, கவசம் செய்துலர்த்தி 50 விரட்டியில் புடம்போடப் பற்பமாகும்.

அளவு: வேண்டிய அளவு.

துணை மருந்து: நெய்.

தீரும் நோய்கள்: அசீரணம் நீங்கும், பசி உண்டாகும்.

பத்தியம்: இச்சாபத்தியம்.

## இரசபற்பம்

வெண்மையுறுஞ் சூதமொன்று கெந்தி யொன்று
மீறாமற் றூளாக்கி வாங்கிக் கொண்டு
கண்மையுறு மேரண்டத் தயிலந் துள்ளி
காட்டியே மத்திச்சுக் கலர வைய்யே.

கலந்ததொரு சூதத்தைத் தேன்பி ரட்டிக்
கட்டாக யுருட்டிநீ கருத்தாய் மைந்தா
குலந்துசெங்கற் குகைபிடித்துக் குடைந்து அங்கே
கூறாக எருக்குப்பொன் னாவரையின் பழுப்பும்
பிலக்கவே மிளகுமிவை நேரா யாட்டி
... ... ... ...
புலக்கவே செங்கலுக் குள்ளே பூசிப்
புகட்டடா களங்கமென்ற சூதங் கேளே.

கேளடா களங்கம்வைத்து மருந்தால் வாயைக்
கெட்டியா யடைத்துமிரு செங்கல் லாலே
சூளடா யடைத்துநன்றாய்ச் சீலை செய்து
சூட்டடா எழுசீலை மண்ணு மேலே
ஆளடா குழியொன்று முழத்திற் தோண்டி
அதுநிரம்ப விறகெருவும் போட்டெ ரித்து
நீளடா குழிநிரம்ப மணலைக் கொட்டி
நினைவாக யெருவடுக்கிப் புடத்தைப் போடே.

புடம்போடு பதிமூன்று வாட்டி மைந்தா
புகழான சூதமங்கே பற்ப மாச்சு
கடம்போடு நோய்க்கெல்லாம் பணவெடைதான் நிறுத்து
காசெடை சீரகத்தில் தேனுங் குத்தி
உடம்போடு வென்றுண்ண நெஞ்சுவலி கிராணி
ஒழியாத கிராணிக் கனுப்பானந் தானும்
திடம்போடு சாதிக்காய் கிராம்புபத்திரி தேனுஞ்
செருவாய்க் குச்சீர கத்தைக் கூட்டே.

கூட்டியிடு யீடுவகை தீர்க்க வென்றால்
கூறுகிறேன் எருக்கம் பால்துளி ரண்டு
மூட்டடா செந்தூரம் பணந்தா னப்பா
முத்தபழச் சாறாகுங் கருந்துளசி நீராம்
நாட்டுமா தளம்பழ நீர்சன்னி நிற்கும்
நல்லகண்டங் கத்திரிச்சாறு பழச்சாறு நேராய்
ஊட்டுவாய் சயமுதலாய் நெஞ்சுக் கட்டும்
உற்றநீர்ப் பாய்ச்சலிவை அனைத்தும் போமே.

போமப்பா குறுவைநெல் மாக்கழஞ் சிரண்டு
பொதிந்தூட்டு செந்தூரம் நீரடைப்புத் தீரும்
வேமப்பா ஊர்க்குருவி முட்டைக் குள்ளே
விரைந்தூட்டு மாங்கிச அடைப்பு வாங்கும்
நாமப்பா யிப்படியே நிசத்தைச் சொன்னோம்.
நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டாம்
ஆமப்பா வியாதிக்கு மாற்பி லாணி
அறிந்தவனே அருள்யோகி பண்டிதனு மாமே.

(சு.1. பா. 513-518,
சு.9.பா.6-12)

செய்முறை : சூதம் ஒருபங்கு, கெந்தி ஒரு பங்கு வாங்கி, ஆமணக்கெண்ணெய் சிறிதுவிட்டு அரைத்துக் கலந்து தேன் விட்டு உருட்டி, செங்கல்லைக் குகைபிடித்து, அதனுள் எருக்கும் பொன்னாவரையின் பழுப்பும், மிளகும் அரைத்துப்பூசி, அதனுள் அவ்வுருண்டையை வைத்து, அதன் வாயைச் செங்கல்லால் அழுத்திமூடி ஏழுசீலை செய்து, முழமளவு குழிதோண்டி, அது நிறைய விறகும் எருவும் போட்டெரித்து, பின்மணலைக் கொட்டி, எருவடுக்கி 13 முறை புடம்போட்டெடுக்கச் சூதம் நீறாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி).

துணை மருந்து : தேன், சீரகம், சாதிக்காய், கிராம்புபத்திரி எருக்கம்பால், கருந்துளசி நீர், மாதளம்பழ நீர், கண்டங்கத்திரிச் சாறு, பழச்சாறு, குறுவைநெல், குருவி முட்டை.

தீரும் நோய்கள் : சீரகத்தைச் சேர்த்து தேன் விட்டுண்ண நெஞ்சுவலி, கிராணி தீரும். சாதிக்காய், கிராம்புபத்திரி, தேன், சீரகம் இவற்றுடன் உண்ணத் தீராத கிராணி தீரும். எருக்கம் பால் இரண்டு துளி, பழச்சாறு, கருந்துளசி நீர், மாதளம்பழநீர் இவற்றைச் சேர்த்துண்ணச் சன்னி நிற்கும். கண்டங்கத்திரிச்சாறு பழச்சாறு கலத்துண்ணச்சயம், நெஞ்சுகட்டு, நீர்ப்பாய்ச்சல் இவை தீரும். இரண்டு கழஞ்சு (10.2 கிராம்) குறுவை நெல்லில் பற்பத்தைப் பொதித்துண்ண நீரடைப்புத் தீரும். ஊர்க்குருவி முட்டைக்குள் வைத்துண்ணச் சதை அடைப்பு தீரும்.

(வேறு)

இசைந்துபார் சூதபற்பஞ் சொல்லக் கேளு
என்மக்காள் சூதம்ஒரு பலந்தான் தூக்கி
வசைந்ததொரு கல்வத்தி விட்டுக் கொண்டு
வாகான வெள்ளையது கழஞ்சி போடு
பசைந்ததொரு சவ்வீரங் கழஞ்சி போடு
பரையான சூடனது கழஞ்சி போடு
உசந்ததொரு வெள்ளீய பற்ப மொன்று
உத்தமனே யிவைநாலுஞ் சமனாய்ப் போடே.

போட்டுமே கருடனுட கிழங்குச் சாறும்
புகழான மால்தேவிக் கிழங்குச் சாறும்
நாட்டுமே அண்டவெள்ளை வர்க்கம் பாலும்
நால்வகையும் ஒன்றாக யெடுத்தே தானும்

ஊட்டுமே முச்சாம மாட்டி மைபோல்
உத்தமனே வில்லைதட்டி ரவியிற் போடே.

உலர்ந்தபின்பு அண்டோடு கல்லுச் சுண்ணம்
உவர்ப்பூவும் சமனாக விரவி யேதான்
நலந்ததொரு ஓட்டிலே கீழ்மே விட்டு
நலமான வில்லையைத்தான் நடுவே வைத்துச்
சிலந்ததொரு மேலோடு மூடி யேதான்
சீலைசெய்து பத்தெருவில் புடத்தைப் போடு
மலந்ததுவு மல்லிகைப்பூப் போலே யாகும்
ஆயிபதம் பூசைபண்ணி வைத்துக் கொள்ளே,

கொள்ளவே நவலோகத் தீய்ந்தா யானால்
குறையாது வெள்ளியது பத்து மாற்று
விள்ளாதே ரசபற்பஞ் சுண்ண மாச்சு
வெகுசுறுக்கு வெகுசுறுக்கு யுள்ளே கொண்டால்
தள்ளுமடா பவுத்திரமுங் கிரந்தி வெட்டை
சண்டாள மேகமொடு கபால குட்டங்
கொள்ளவே அரிதார பற்பத் தோடே
கொண்டிட்டால் நோயேது கண்டி லேனே.

(சு. 2. பா. 86-89)

செய்முறை : சூதம் ஒருபலம் (35 கிராம்) வாங்கி கல்வத்தி லிட்டு வெள்ளை, சவ்வீரம், சூடம், வெள்ளீயபற்பம் இவை நான்கும் ஒவ்வொரு கழஞ்சு (5. 1 கிராம்) வீதம் நான்கு கழஞ்சு (20. 4கிராம்) போட்டு, கருடங் கிழங்குச்சாறு, மால்தேவிக் கிழங்குச்சாறு, அண்டவெள்ளை, வர்க்கம் பால் இவை நான்கும் ஒன்றாக ஊற்றி மைபோல மூன்று சாமம் (9 மணி நேரம்) ஆட்டி வில்லைதட்டி, சூரிய ஒளியில் காயவைக்கவும். உலர்ந்த பின்பு ஒரு ஓட்டில் அண்டோடு, கல்லுச் சுண்ண உவர்ப்பும் கலந்து கீழ் மேலிட்டு இடையில் அந்த வில்லையை வைத்து மேலோடு மூடி, சீலைசெய்து, பத்து எருவில் புடம் போட்டெடுக்க மலர்ந்த மல்லிகைப் பூப்போலப் பற்பமாகும்.

அளவு : தேவையான அளவு.

துணை மருந்து : அரிதார பற்பம்.

தீரும்நோய்கள் : பவுத்திரம், கிரந்தி, வெட்டை, மேகம், கபாலகுட்டம்.

(வேறு)

சொல்கிறேன் ரசந்தன்னைச் சுத்தி செய்துச்
சுகமாக கரந்தைச்சாறு விட்டு யாட்டி
அல்விரென மூன்றுநா ளரைத்த பின்பு
அடைபோலே பிடித்ததனை யுலரப் போட்டு
மல்கிறே னோட்டில்வைத்துச் சீலை செய்து
வைத்திடவே குக்கிடத்தில் மாண்டு போகும்
நல்வீறென் சூதமது நீறிப் போனால்
ரசபற்பம் பணவெடையில் சூலைபதி னெட்டெ.

பதினெட்டுக் குட்டமொடுக் கிரந்தியரை யாப்புப்
பரங்கிக்கும் பணவெடைதான் பனைவெல் லத்தில்
எதிரிட்ட நோய்களெங்கே யோடிப் போகும்
ஈரைந்து நாள்கொள்ளு மிருநே ரந்தான்
... ... ... ... (சு.13.பா.17-18)

செய்முறை : சுத்தி செய்த ரசத்தைக் கரந்தைச் சாறுவிட்டு மூன்று நாளரைத்து, அடைபோலச் செய்துலர்த்தி, ஓட்டில் வைத்து, சீலை செய்து எரித்தெடுக்க நீறாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி). நாளொன்றுக்கு இரு நேரமாக பத்து நாட்கள்.

துணைமருந்து : பனைவெல்லம்.

தீரும்நோய்கள் : சூலைபதினெட்டு, பதினெட்டு குட்டம், கிரந்தி, அரையாப்பு, பரங்கிப்புண் முதலியன குணமாகும்.

(வேறு)

ரசம் வராகன் 5, சிவகரந்தை இலைச் சாற்றாலரைத்து மேற்படி இலையை அரைத்து குகை செய்து மேற்படி மருந்தை வைத்து மேல்மூடி சீலை மண் செய்து, கால் கசபுடம் போடவும். (சு. 22)

செய்முறை : ரசம் 5 வராகன் (21 கிராம்) வாங்கி, சிவகரந்தை இலைச்சாற்றிலரைத்து, அதன் இலையை அரைத்து குகை செய்து அதனுள் ரசத்தை வைத்து மூடி, சீலை மண் செய்து புடம்போடப் பற்பமாகும்.

## இரத்தின நீறு

கேளறு பள்ளம் போன்ற கெவுரியை யரைத்துக் கொண்டு
ஆளது குகைபோற் பண்ணி அதனுள்ளே ரத்தினம் வைத்துச்
சூளது சில்லுப் போட்டுச் சுற்றிசீ லைமண் ணும்செய்து
நாளது குக்கு டத்தில் நன்றதாய் நீறிப் போமே.

போமிது நீற தானால் புவிதனில் காட்டொண் ணாது
ஆமிது ரத்தின நீறு அதிகமாஞ் சித்தர் செய்வார்
நாமிது வழியாய்ச் சொன்னோம் நாட்டினில் மானுடர் காக
ஆமிது யனுப்பா னங்கேள் அறிந்திட யுறுதி தானே.

செய்முறை : கௌரியை அரைத்து, குகைபோல் செய்து அதனுள் ரத்தினம் வைத்துச் சில்லுப்போட்டு மூடி, சீலைமண் செய்து குக்குடப்புடம் போட நீறாகும்.

## இலிங்க பற்பம்

இலிங்கம் வேண்டிய மட்டும் கொண்டு வந்து, வெள்ளெருக்கம் வேர் கொண்டு வந்து, பொடித்துப் போட்டிடித்துச் சாறு பிழிந்து அந்த ரசத்தில் பாதியெடுத்து இலிங்கத்தைச் சுருக்குக் கொடுக்கவும். மற்ற ரசத்தில் மேற்படி பாலை ஊர வைத்துலர்த்தி எடுத்து தூள் செய்து, கழுத்து நீண்ட குவையில் அரைகுவை மேற்படி உப்பைக் கொட்டி அதின் பேரில் லிங்கத்தை வைத்து, அந்த லிங்கத்தின் மேல் உப்பைப் போட்டு நிரப்பி, பத்து எருவில் புடம் போட்டு, சிவந்தவுடன் எடுத்து ஆறவைத்து லிங்கத்தை எடுத்துக் கொள்ளவும். இதற்கனுப்பானம் பணவெடை தேன், நெய்யில், வெண்ணெய் நெய்யில் இதுகளில் கொடுக்கத் தீரும்வியாதி மேகம், ரணம், கரிமேகம், தழும்பு, வாய்வு இதுகள் தீரும். இச்சாபத்தியம். பீர்க்கங்காய், முருங்கம் பிஞ்சு, துவரை கூட்டவும். 3 அல்லது 5 நாள் கொடுக்கவும். வாய்வு பிடித்தால் பசுவின் பால் கொப்பளிக்கவும். முழுங்கவும். (சு. 22)

செய்முறை : வெள்ளெருக்கம் வேரிடித்துச் சாறெடுத்து, பாதியில் இலிங்கத்தைச் சுருக்குக் கொடுக்கவும். மற்ற பாதியில் வெள்ளெருக்கம் பாலை ஊரவைத்துலர்த்தி தூள் செய்து கழுத்து நீண்ட குடுவையில் உப்பைக் கொட்டி, அதன்மேல் லிங்கம் வைத்து உப்பைப் போட்டு மூடி 10 எருவில் புடம் போட்டுச் சிவந்தவுடன் ஆறவைத்து இலிங்கத்தை எடுத்துக் கொள்ளவும்.

அளவு : பணவெடை (488மி. கி).

துணைமருந்து : தேன், நெய், வெண்ணெய்.

தீரும்நோய்கள் : மேகம், இரணம், கரிமேகம், தழும்பு, வாய்வு தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம். பீர்க்கங்காய், முருங்கம் பிஞ்சு, துவரை சேர்க்கவும். 3 அல்லது 5 நாள் கொடுக்கவும். வாய்வு பிடித்தால் பசுவின் பால் கொப்பளித்து விழுங்கவும்,

## உதயாக்கினி பற்பம்

தானென்ற வுதயாக்கினி திசமுகமாம் பற்பஞ்
சாற்றுறேன் ரசகந்த அரப்பொடியுங் காந்தந்
தேனென்ற வகையொன்று கழஞ்சு ரண்டுச்
சிதறாமல் கற்றாழஞ் சாறா லாட்டு
மானென்று கலசத்தி லிட்டு வைத்து
வாயைமூடிப் பார்த்திருக்க வேகும் பாரு
கானென்ற சாற்றாலே யாரவிட்டுப் பின்பு
கலராட்டி மூன்றுதினம் வேக வையே.

கலந்ததொரு மருந்தங்கே ஆறிற் றானால்
கல்லிட்டு அரைக்கவே தூள தாட்டி
அலந்ததொரு அனுப்பான வாய்வுக் கானால்
அப்பனே திரிகடுகும் பொடியாய்ச் செய்து
கலந்ததொரு பற்பத்தில் பணவெடைதான் ரண்டு
கூட்டிநீ ரண்டுகா செடையில் செந்தூர
வலந்ததொரு வுள்கொள்ளத் தேனில் சேரு
வாவுவருஞ் சன்னிக்கு வரிசை கேளே.

வரிசைபெற பற்பத் தில்பண வெடைதான்
ரெண்டு வாங்கி வெள்ளுள்ளி தூட்ட
பிரிசைபெற பிரமே கந்தா னென்றால்
பேறான மருதாணிச் சாற்றி லூட்டு
வரிசைபெற யெரிகுன்மந் தீர வென்றால்
உதநொச்சி கொடுவேலி சீந்தி தானே.

வேளையிலே முருங்கைத்தோல் சாற்றி லாகும்
விரைந்திடவே வாதம்போ மிகுதி யாகில்
ஆநெய்யில் பெருங்காயம் தன்னி லூட்டு
நல்லமஞ்சட் காமாலை நாச மாக
தூளசியிலை பூவரசு சீரகமும் நேராய்
துவளயாட்டிப் பாலே யுண்ணப் போகும்
... ... ... ...

(சு. 9.பா. 30-33)

செய்முறை : இரசகந்தம், அரப்பொடி, காந்தம் இவை வகைக்கு இரண்டு கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி, கற்றாழஞ் சாற்றிலாட்டி, கலசத்திலிட்டு வாய்மூடி வேகவைத்தெடுத்து,

ஆறினபின் கானச் சாற்றிலே ஆட்டி மூன்று தினம் வேகவைத்து, ஆறியபின் கல்லிலிட்டு அரைத்துத் தூளாக்கி வைத்துக் கொள்ளவும்.

அளவு : நோய்க்குத் தக்கவாறு.

துணைமருந்துகள் : திரிகடுகுப்பொடி, தேன், வெள்ளுள்ளி, மருதாணிச்சாறு, சீந்திற்தண்டு, நொச்சி, கொடுவேலி, சீந்தில், முருங்கைத்தோல், ஆவின்நெய், பெருங்காயம், துளசியிலை, பூவரசு, சீரகம்.

தீரும் நோய்கள் : வாய்வு, சன்னி, பிரமேகம், எரிகுன்மம், வாதங்கள், மஞ்சட்காமாலை போன்றன தீரும்.

## ஒருக்கரைப் பற்பம்

புகலவே கல்லூரிதனை யரைத்து யப்பிப்
போட்டிடவே கசபுடத்திற் பொருமி நீறும்
சிகதலங்கள் மெச்சுதடா யிந்த நீறு
தேசத்தில் வைத்தியர்க்குக் கிட்டு மோசொல்
அகன்றதொரு பாண்டுவோடு வீக்கஞ் சோகை
அப்பனே நீங்காத நீராம்ப லோடு
இகலாத நோய்களுக்கு யனுப்பா னங்கள்
இட்டிடுவாய் நேயமே தேனிலிரண்டு நாளே,

நாலாநாள் தனிலே வாங்கிப் போகும்
நரைதிரையு மில்லையடா நமனும் வாரான்
சோலான சோலியில்லை பற்புஞ் செய்யத்
தொழிலாளி யானாக்காற் செய்து பாரு
... ... ... ... (சு.13. பா.27-28)

செய்முறை : கல்லூரியை அரைத்து அப்பிக் கசபுடத்தில் போட நீறாகும்.

அளவு: வேண்டிய அளவு. இரு நாட்கள்.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : பாண்டு, வீக்கம், சோகை, நீராம்பல்.

## கந்தக பற்பம்

நீற்றுவதுக் கின்னமொரு செய்தி கேளு
நேரான கந்தகத்தின் பற்பஞ் சொல்வேன்
ஏற்றுகின்ற சிறுசின்னி தன்னைய ரைத்து
எலுமிச்சங் காயளவு குகைபோல் பண்ணித்

தோற்றுகின்ற குகையதனைக் காயப் போட்டுச்
சுகமாகக் காய்ந்தபின்பு சொல்லக் கேளு
சாற்றுகின்ற கந்தகத்தின் கட்டி வாங்கித்
தளமாகச் குகைக்குள் சில்லுப் போடே.

சில்விட்டுச் சீலை செய்துக் கிடந்தான்
தீத்தாறி யெடுத்துப்பார் செயபற் பந்தான்
மல்விட்டு வாதாடி வந்த நோய்கள்
மயங்கியே ஓடுதற்கு யனுப்பா னங்கேள்
நெல்விட்டு நெல்லெடைதான் தேனிற் கொள்ள
நிலையாத குன்மமொடு குட்டம் போகும்
பல்விட்டு கடித்ததொரு சில்வி டங்கள்
பாரித்த வாய்வோடு வாத ரோகம்

வாதத்தினா லெழுந்த கிராணி சூலை
வயிற்றுவலி நீர்பெருத்த மகோத ரங்கள்
சூதகத்தால் வந்ததொரு கர்ப்ப ரோகஞ்
சுழற்றியே மரத்திலிரும் பற்றாப் போலே
பாதத்தில் வீக்கமொடு பாண்டு ரோகம்
பறக்குமடா பரபதத்திற் பாரு பாரு
தாதத்து யிடுப்புவலி சந்து வாதந்
தசையிலுள்ள நீர்க்கடுப்புச் சாந்த மாகும்
வேதத்தாற் சொன்னதிந்த பற்ப மெல்லாம்
விருதிட்ட வியாதியெல்லா மற்றுப் போமே.

(அ. 13. பா. 43-45)

செய்முறை : சிறுசின்னி இலையை அரைத்து எலுமிச்சங் காயளவு குகைபோலச் செய்து நன்றாக உலர்த்திக் கொண்டு, அதனுள் கந்தகத் தூளை வைத்துச் சீலை செய்து புடம் போட்டெடுக்கப் பற்பமாகும்.

அளவு : நெல்லெடை.

துணை மருந்து : தேன்.

தீரும்நோய்கள் : குன்மம், குட்டம், பல்லால் கடித்தவிடங்கள், பாரிசவாய்வு, வாதரோகம், வாதத்தினால் வந்த கிராணி, சூலை, வயிற்றுவலி, நீர்கொண்ட மகோதரம், கர்ப்பநோய், பாத வீக்கம், பாண்டு, இடுப்புவலி, சந்துவாதம், நீர்க்கடுப்பு முதலியவை குணமாகும்.

அழுத்தி மேல்சட்டி மூடி, சீலைமண் செய்து கசபுடம் போட பற்பமாகும். பசுவின் வெண்ணெயில், நெய்யில் கொடுக்கவும். 21 மேகந்தீரும். கடும்பத்தியம். (சு.22)

செய்முறை : ஆவாரை சமூலம் இடித்து ஒரு சட்டியில் அரை போட்டு, அதன்மேல் சுத்தி செய்த கருவங்கம் 1 பலம் (35 கிராம்) தகடு தட்டி வைத்து, சட்டிமூடி, சீலைமண் செய்து கசபுடம் போட்டெடுக்கவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணை மருந்து : பசுவின் வெண்ணெய், நெய்.

தீரும்நோய்கள் : 21 மேகமுந்தீரும்.

பத்தியம் : கடும்பத்தியம்

(வேறு)

கருவங்கம் நாலுபலம் கொண்டுவந்து அத்திப்பட்டை அல்லது மருதம் பட்டை இடித்து மேற்கூறிய கவசம் செய்து நாலுகை விரட்டியில் புடம். கசபுடம். கல்வத்தில் வைத்து அரைத்துக் கொள்ளவும். (சு. 22)

செய்முறை : கருவங்கம் நாலுபலம் (140 கிராம்) வாங்கி, அத்திப்பட்டை அல்லது மருதம் பட்டை இடித்து, அதன்மேல் கவசம் செய்து நாலுகை விரட்டியில் கசபுடம் போட்டெடுத்து, கல்வத்தில் அரைத்து வைத்துக் கொள்ளவும்.

## கல்நார் பற்பம்

பார்ப்பதற்குக் கல்நாரு பற்பங் கேளு
　　பட்சிதின்னாங் கோங்கிலவம் பட்டை தன்னை
ஆர்க்கவே யிடித்ததனை யோட்டில் வைத்து
　　அதின்மேலே கல்நாரை நடுவே வைத்து
மேற்படியும் பட்டையுட பொடியை வைத்து
　　மேலோடு மூடியல்லோ சீலை செய்து
மூர்க்கமாய்க் கசபுடத்தில் நீறிப் போகும்
　　மூதண்டக் கல்நாரின் முறையைக் கேளே.

முறையான பற்பத்தைத் தேனிற் கொள்ள
　　மூட்டோடே யலைந்தபல்லு மிறுகிப் போகும்
அறையாமல் சிலேற்பனத்தை யறுத்துப் போடும்
　　அகலாத யுட்டிணத்தை யடக்கிப் போடும்

புறையான நாளொன்றுக் கிருபோ துண்ண
போரான சயமிருமலொடு சுவாச காசம்
நிறையான மந்தார காச மேகும்
நேரான தூதுவளை லேகியத்தி லென்னே.

(சு. 13.பா. 31-32)

செய்முறை : கோங்கிலவம் பட்டையை நன்றாக இடித்து, ஓட்டில் பரப்பிவைத்து, நடுவில் கல்நாரை வைத்து, அதன்மேல் மீண்டும் இடித்தபட்டைத் தூளை வைத்துமூடி மேலோடு மூடி, சீலை செய்து, கசபுடத்தில் வைத்தெடுக்க நீறு உண்டாகும்.

அளவு : தேவையான அளவு. காலை, மாலை இருவேளை.

துணை மருந்து : தேன், தூதுவளை லேகியம்.

தீரும் நோய் : தேனிற்கொள்ள ஆடும்பல் இறுகும். சிலேற்பனம், உட்டிணம்போகும். நாளொன்றுக்கு இருவேளை தூதுவளை லேகியத்திலுண்ண சயம், இருமல், சுவாசகாசம், மந்தார காசம் போகும்.

(வேறு)

சுத்திசெய்த இரண்டுபலம் கல்நார் வாங்கி, பசுவின் கோமியத்தில் 5 நாள் ஊற வைத்து, கழுவி உலர்த்தி, ஆவார இலையைஅரைத்துக்கவசம் செய்து கசபுடம் போட பற்பமாகும். இதைப் பசுவின் வெண்ணெய், நெய், கற்கண்டு இதில் கொடுக்க சகல மேகங்களும் தீரும். (சு.22)

செய்முறை : சுத்திசெய்த கல்நார் 2 பலத்தை (70 கிராம்) பசுவின் கோமியத்தில் 5 நாள் ஊற வைத்து, கழுவி, உலர்த்தி, ஆவார இலையை அரைத்துக் கவசம் செய்து கசபுடம் போட பற்பமாகும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : பசுவின் வெண்ணெய், நெய், கற்கண்டு.

தீரும் நோய் : சகல மேகங்கள் தீரும்.

(வேறு)

கல்நார் உப்பும் கொண்டு வந்து துண்டு துண்டாக இடித்து குடுவையில் போட்டு, எலுமிச்சம் பழச்சாறு வீட்டு நிழலில் ஊறிய

பிறகு இதே மாதிரியாய் அவிந்து ஊற வைத்தெடுத்து முப்பது விரட்டியில் புடம்போட்டு கல்வத்திட்டு அரைத்துக் கொள்ளவும். வெண்ணெயிலாவது, நெய்யிலாவது கொடுக்கப் பல நோயெல்லாம் தீரும். நிவர்த்தியாகும். இச்சாபத்தியம். (சு. 22)

செய்முறை : கல்நார் உப்பைத் துண்டுத்துண்டாக இடித்து குடுவையில் போட்டு, எலுமிச்சம் பழச்சாறு விட்டு நன்கு ஊற வைத்தெடுத்து முப்பது விரட்டியில் புடம் போட்டெடுத்து கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டியஅளவு.

துணைமருந்து : வெண்ணெய் (அ) நெய்.

தீரும்நோய் : பல நோய்கள் தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## கலைக் கொம்பு பற்பம்

கலைக் கொம்பு துண்டு படுத்தி அதைக் கரிப்பானை அரைத்துப் பொதித்து புடம்போட நீறும். அதைப் பசுவின் வெண்ணெய் கூட்டிச் சாப்பிடவும். நீர்க்கடுப்புத் தீரும். காண்டா மிருகத்தின் கொம்புக்கு மிப்படியே செய்து நீற்றி இந்தப்படி கொடுக்கவும். நீர்க்கடுப்பு தீரும். (சு. 15)

செய்முறை : கரிப்பானை அரைத்து மான்கொம்பைத் துண்டுகளாக்கி அதனுள் வைத்து மூடி புடம் போட நீறு உண்டாகும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : பசுவின் வெண்ணெய்.

தீரும்நோய் : நீர்க்கடுப்பு.

குறிப்பு :- (காண்டா மிருகத்தின் கொம்பையும் இப்படிச் செய்துண்ண நீர்க்கடுப்பு நீங்கும்).

(வேறு)

மான்கொம்பை அரைவீசை வாங்கி, துண்டுத் துண்டாக நறுக்கி உடைத்து இதை அகத்திக்கீரையும் போட்டு ஒரு பெரிய பானையில் போட்டு வேகவைத்து, ஒருசாமம் ஆனபிறகு நீர்முள்ளி இலையைக் கவசம் செய்து சீலைமூடி 50 விரட்டியில் புடம் போடவும் பற்பமாகும். கல்வத்தில் அதை அரைத்தெடுத்து நெய்யில் கொடுக்க மார்நோய், இடுப்புநோய், நாவறட்சி, வெள்ளை, மேகம் இதுகள்நீங்கும். இச்சாபத்தியம். (சு. 22)

செய்முறை : மான்கொம்பு அரைவீசை (700 கிராம்) வாங்கி நறுக்கி உடைத்து, ஒருபானையில் போட்டு, அகத்திக்கீரையும் போட்டு ஒருசாமம் (3 மணிநேரம்) வேகவைத்து, நீர்முள்ளி இலையைக் கவசம் செய்து 50 விரட்டியில் புடம்போடப் பற்ப மாகும். கல்வத்தில் அரைத்துக்கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : நெய்.

தீரும்நோய்கள் : மார்புநோய், இடுப்புநோய், நாவறட்சி, வெள்ளை, மேகம்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## கற்பூர சிலாசத்து பற்பம்

கற்பூர சிலாசத்து கழஞ்சு வாங்கி சுண்ணாம்புத் திறமாய் பூசி எட்டு விரட்டியில் புடம் போடப் பற்பமாகும். அதன் மேல் சுண்ணாம்புத் தட்டி விட்டெடுத்துக் கொள்ளவும். இதை நெய் யில் கொடுத்தால் சகலமேக வாய்வு, சூடுநீங்கும். இச்சாபத்தியம். (சு. 22)

செய்முறை : கற்பூர சிலாசத்து கழஞ்சு (5. 1 கிராம்) வாங்கி சுண்ணாம்புத் திறமாய்ப் பூசி, எட்டு விரட்டியில் புடம்போடப் பற்பமாகும். அதன்மேல் சுண்ணாம்புத் தட்டி விட்டெடுத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : நெய்.

தீரும்நோய்கள் : சகல மேக வாய்வு, சூடு நீங்கும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## கற்பூர நீறு

வாய்த்திடு பிரமே கங்கள் வந்த நீரிழிவு் தீருஞ்
சாய்த்திடுங் கற்பூ ரத்தை சாத்திறேன் சுண்ண மாக
காய்ந்த கற்பூர வள்ளிச் சாற்றினிற் கலந்த ரைத்துத்
தேய்த்திடும் வட்ட தாக ரவியினிற் காயச் சொல்லே.

சொல்லிய வட்ட ஓட்டில் துலங்க வைத்தோடு மூடி
நல்லதோர் சீலை செய்து நவின்றிடக் கோழி யாக
மெல்லியே யெடுத்துப் பார்த்தால் வியனுள்ள சுண்ண மாகும்
வல்லிவெற் றிலையிற் தின்றால் வச்சிர காய மாமே.

காயமே பலத்துப் போகுங் கசடது மற்றுப் போகும்
வாயினில் ரோகந் தீரும் வருந்திய கபமுந் தீரும்
மாயமாய் வாய்வுப் போக்கு மலக்கட்டுத் தீரும்
நேயமாங் கண்து லங்கும் நிச்சய மிதுசொன் னோாமே.

(சு. 13. பா. 89-91)

செய்முறை : கற்பூரத்தைக் காய்ந்த கற்பூரவள்ளியின் சாற்றில் கலந்தரைத்து வட்ட ஓட்டில் விட்டு, வெய்யிலில் வைத்துக் காய்ந்தபின், ஓடுமூடி சீலை செய்து கோழிப்புடம் போட்டெடுத்தால் நீறாகும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : வெற்றிலை.

தீரும்நோய்கள் : உடம்பு பலம்கொண்டு வச்சிரகாயமாகும். வாயினில் வரும் நோய்தீரும். கபம், வாய்வு, மலக்கட்டுத்தீரும். கண் நன்றாகத் தெரியும்.

## காந்த பற்பம்

... ... ... ...

பாரிலே நோய் தீர்ப்பதற்குக் காந்தந் தன்னைப்
பற்பமாய்ச் சொல்லுகிறேன் பரிந்து கேளு
ஆருமே செய்வதற்குச் சிறியா நங்கை
அமுரிவிட்டு யிடித்தசாறு தானே விட்டு
நீருமே வற்றவற்ற யரைத்து மூன்றுநாள்
நிசமாக வில்லைசெய்து ரவியில் வைய்யே.

வைத்தவில்லை காய்ந்தபின்பு யோடு மூடி
வளமாகச் சந்துவாய் சீலை செய்து
கைத்தவில்லை கசப்புடத்தில் நீறிப் போகும்
காந்தத்தின் பெருமைதனை காட்டொண் ணாது
சுத்தமுள்ள யோடு சோகை
தீரமா தளங்காய்ச் சாறு வார்த்து
சுத்த முள்ள சுக்கதனை யரைத்துக் கிண்டிச்
சுகமாக காந்தபற்பம் பணவெடைதான் கொள்ளே.

கொள்ளவே மண்டலத்தில் தீரும் பாண்டு
கடிதான சலக்கழிச்சல் பிரமே கங்கள்
தள்ளவே நீர்ச்செறுப்புக் கதுக்கனுப் பானங்கேள்
சஞ்சீவிச் சூரணத்தில் சாந்த மாகும்

உள்ளபடி மூலத்தில் கிராணிக் கெல்லாம்
லோகசபற்பம் காந்தபற்ப மிரண்டுஞ் சேர்த்து
வள்ளலே காந்தாதி சூர ணத்தில்
வைத்தருந்தத் தீரும்நோய் மகிழ்ந்து கேளே.

(சு. 13.பா. 12-14)

செய்முறை : சிறியா நங்கையை அமுரியை விட்டு இடித்த சாற்றைவிட்டு, காந்தத்தை நீர்வற்ற மூன்று நாளரைத்து வில்லை தட்டிக் காயவைத்து, ஓட்டில் வைத்து ஒடுமூடி சீலை செய்து, கசபுடத்தில் வைக்க நீறாகும்.

அளவு : பணவெடை (488மி. கிராம்). ஒரு மண்டலம் (48 நாட்கள்).

துணைமருந்து : மாதளங்காய்ச்சாறு, சுக்கு, சஞ்சீவிச் சூரணம்.

தீரும்நோய்கள் : சுக்கு மாதளங்காய்ச் சாறுவிட்டு உண்ண பாண்டு, சலக்கழிச்சல், பிரமேகம், நீர்ச்செறுப்பு தீரும். சஞ்சீவிச் சூரணத்திலுண்ண மூலக்கிராணி தீரும்.

## காரீய பற்பம்

... ... ... ...

கருவியென்ற காரீய பற்பங் கேளு
கருநொச்சியி லையரைத்துக் கவச மாக்கே.
ஆக்கியதோர் வெள்ளீய பற்பம் போலே
அளவாகப் புடம்போட யாறு நீறும்
தூக்கிசமாய்ச் சூலையொடு குட்டந் தீரும்
சுனைப்புள்ளக் கிரந்திப்பிர மேகந் தீரும்
தேக்கியதோர் தேகத்தில் காந்தல் தீருஞ்
செறுத்தநீர்க் கடுப்புடனே வெப்புந் தீரும்
பாகமாய்த் தேகத்தி லுட்டிணங்க ளெல்லாம்
பறக்குமடா காரீய பற்பத் தாலே.

(சு. 13. பா. 20-21)

செய்முறை : கருநொச்சி இலையை அரைத்து அதனுள் காரீயத்தை வைத்து, கவசம் செய்து, வெள்ளீய பற்பம்போல புடம் போட்டெடுக்க நீறு உண்டாகும்.

அளவு : தேவையான அளவு.

தீரும் நோய்கள்: சூலை, குட்டம், கிரந்தி, மேகம், தேகத்தின் காந்தல், நீர்க்கடுப்பு. வெப்பு, உட்டிணங்கள் தீரும்.

## கோழி பற்பம்

முற்றக் கோழிதனிற் சேவல்
முதுகைப் பிளந்து கடுகிந்துப்பு
உற்ற காய முக்கழஞ்சி
உழக்கு மிளகு வெள்ளுள்ளி.
பற்றி யிடித்தங் கதனுள்
பருத்த கள்ளிப் பால்விட்டு
சுற்றிக் கட்டிக் கோநீரால்
சுருள அவித்தே யெடுத்துலர்த்தே.

நெய்யில் தின்னவும். தேனில் தின்ன வற்றும். மூலம், கிராணி, குன்மம், வாய்வு, கரிவாய்வு, சத்தி, குன்மம், பாண்டுரோகம், காமாலை இதுவெல்லாம் பொறுக்கும். பொருமல், சேற்பம், கிராணி இதுவும் பொறுக்கும். (சு.20)

செய்முறை : முற்றின சேவலின் முதுகைப் பிளந்து, அதனுள் மூன்று கழஞ்சு (15.3 கிராம்) கடுகு, இந்துப்பு, காயத்தையும், உழக்கு மிளகு, வெள்ளுள்ளியையும் இடித்து வைத்து, கள்ளிப்பால் விட்டு, சுற்றிக்கட்டி, ஆவின் நீரால் அவித்து எடுத்துலர்த்தவும்

அளவு: வேண்டிய அளவு.

துணைமருந்து : நெய், தேன்.

தீரும்நோய்கள் : மூலம், கிராணி, குன்மம், சத்திகுன்மம், பாண்டுரோகம், காமாலை, பொருமல், சேற்பம் இவை தீரும்.

(வேறு)

முற்றின கோழியைத் தலையுங் குடலு முட்டையும் போக்கிக் கானச் சாற்றிலவித்து, திரிகடுகு மூன்று கழஞ்சு, இந்துப்பு ஐந்து கழஞ்சு, உள்ளிலை ஐந்து கழஞ்சு, காயம் மூன்று கழஞ்சு, உலுவா ஐந்து கழஞ்சு, சீரகம் ஐந்து கழஞ்சு, சீரகம் ஐந்து கழஞ்சு தேங்காய்ப்பால் விட்டரைத்து, ஆவின் நெய்யில் வெந்து, இந்த மருந்தைக் கோழிக்குள் வைத்து, கள்ளிப்பால் மாகாணிப்படி கூட விட்டு வெந்து, கிண்டிக் கிண்டி வெந்தால் எலும்பு போக்கி, மறுபடி தாளிதஞ் செய்து கிண்டி இறக்கி, நெல்லிக் காயளவு தின்ன மூலவாய்வும் பதினெட்டு குன்மமும், குடகரி வாய்வும், பித்தவாய்வும் இதுவெல்லாம் பொறுக்கும். (சு.20)

செய்முறை : முற்றின கோழியைத் தலை, குடல்நீக்கி கானச் சாற்றிலவித்து, காயம், திரிகடுகு வகைக்கு மூன்று கழஞ்சும் (15.3 கிராம்), இந்துப்பு, உள்ளிலை, உலுவா, சீரகம் வகைக்கு ஐந்து கழஞ்சும் (25.5 கிராம்) தேங்காய்ப் பாலில் அரைத்து ஆவின் நெய்யில் வேகவைத்து, கோழிக்குள் வைத்து, கள்ளிப் பால் மாகாணி விட்டு வெந்தபின் எலும்பு நீக்கி தாளிதஞ் செய்து இறக்கிக் கொள்ளவும்.

அளவு : நெல்லிக் காயளவு.

தீரும்நோய்கள் : மூலவாய்வு, பதினெட்டு குன்மம், குடகரி வாய்வு, பித்தவாய்வு இவை தீரும்.

(வேறு)

காணம் படி 4, கொடுவேலிவேர் கழஞ்சு 5, கள்ளிவேர் கழஞ்சு 5, எருக்கலைவேர் கழஞ்சு 5 இது நாலும் நாலுமரக்கால் தண்ணீரில் போட்டுக் குறுணியாகக் காய்ச்சி வடித்து ஒரு கருங்கோழியைக் கால், தலை, இறகு வாங்கிப் போட்டு அதிலிட மருந்து கடுகு, வெந்தயம், மஞ்சள், திரிகடுகு, காயம், வெள்ளுள்ளி, ஈருள்ளி வகைக்கு 6 பலம், இந்துப்பு 1 பலம், பொரிகாரம் 1 பலம். ஊசி காந்தம் 2 பலம் , சாதிலிங்கம் 2 பலம், இரதம் 2 பலம், கந்தம் 2 பலம், அரப்பொடி 1 பலம், திப்பிலி மூலம் 2 பலம் இதுவெல்லா மரைத்து, கோழி வயிற்றில் வைத்துத் தைத்து, ஒரு பானையில் நாலு விரலுக்கு மேல் கம்பு பரப்பி அதில் முன் வடித்தசாறு விட்டு கோழியை வைத்து, சட்டி மூடி சீலைமண் செய்து அவித் தெடுத்து எலும்பு போக்கி, மருந்துமிறைச்சியும், இஞ்சிச்சாறும் விட்டரைத்து நிழலுலர்த்திச் சூரணம் பண்ணி வைத்துக் கொள்ளவும். வெருகடிப் பிரமாணம் சுக்குத் தண்ணீரில், தேனில் கொள்ளவும். தீரும் வியாதி வாதம், சூலை, வறள்சூலை, சூலைக் கடுப்பு, அரையாப்பு, கிராந்திப்புண், புரை, மகோதரம், பாண்டு, காமாலை, நீராம்பல், பேராம்பல், வெப்புப்பார்வை, குன்மம், குடல் வாதம், கர்ப்பவிப்புருதி, மூலக்கிறராணி, வாய்வு பலதுந் தீரும். (சு.12)

செய்முறை : காணம் 4 படி (5.2 லிட்), கொடுவேலிவேர், கள்ளிவேர், எருக்கலைவேர் இவை வகைக்கு 5 கழஞ்சு (25.5 கிராம்) நான்கு மரக்கால் (5.3லிட்) தண்ணீரில் போட்டு, குறுணியாக (5.3 லிட்) காய்ச்சி வடித்துக் கொள்ளவும். பின் ஒரு கருங்

கோழியின் கால், தலை, இறகு இவற்றை நீக்கி அதனுள், கடுகு, வெந்தயம், மஞ்சள், திரிகடுகு, காயம், வெள்ளுள்ளி, ஈருள்ளி வகைக்கு 6 பலம் (210 கிராம்), அரப்பொடி, இந்துப்பு, பொரிகாரம், இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்), ஊசிகாந்தம், சாதிலிங்கம், இரதம், கந்தம், திப்பிலி மூலம் இவை வகைக்கு 2 பலம் (70 கிராம்) இவற்றையெல்லாம் அரைத்து வைத்துத் தைத்து, ஒரு பானையில் நாலுவிரலுக்கு மேல் கம்பு பரப்பி அதில் முன் வடித்தச் சாற்றை விட்டு, கோழியை வைத்து. சட்டிமூடி சீலைமண் செய்து அவிக்கவும். அவித்தபின் எலும்பு போக்கி, மருந்துமிறைச்சியும், இஞ்சிச்சாறும் விட்டரைத்து, நிழலுலர்த்திச் சூரணம் செய்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : வெருகடிப் பிரமாணம்.

துணைமருந்து : சுக்குத் தண்ணீர், தேன்.

தீரும்நோய்கள் : வாதம், சூலை, வறள்சூலை, சூலைக் கடுப்பு, அரையாப்பு, கிரந்திப்புண், புரை, மகோதரம், பாண்டு, காமாலை, நீராம்பல், பேராம்பல், வெப்புப்பார்வை, குன்மம், குடல்வாதம், கர்ப்பவிப்புருதி, மூலக்கிராணி, வாய்வு தீரும்.

## சவ்வீர பற்பம்

உகந்திட்டேன் சவ்வீர பற்பம் உரைக்கிறே னுறுதி யாகச்
சகந்தனி லப்பை மூலிக் கிழங்கதைக் குகைய தாக்கி
இகந்தனில் வீரந் தன்னை இசைந்திடுங் குகைக்குள் வைத்து
பகர்ந்திடுஞ் சில்லுப் போட்டுச் சீலையும் பரிவாய்ச் செய்யும்

செய்துகுக் கிடமே போடத் திறமதாய் நீறிப் போகும்
மெய்யது தேனிற் கொள்ளப் பணவெடை யளவ தாக
ஐயது குன்ம வாய்வு அகன்றது தானே போகு
மெய்யிது சூலை போகுங் கார்நிற விரைந்தி டாயே.

(சு.13.பா. 54-55)

செய்முறை : அப்பை மூலிக் கிழங்கைக் குகைபோல் செய்து, அதனுள் சவ்வீரத்தை வைத்துமூடி, சீலை செய்து, குக்குடப்புடம் போட நீறாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி).

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : குன்மவாய்வு, சூலை.

## சாத்திரவேதி நீறு

போமென்ற சாத்திர வேதிப்
　　புகலுறேன் புனித மாக
ஆமென்ற முலைப்பால் விட்டு
　　அதனுட னெருக்கம் பாலும்
வாமென்ற சாமம் நாலு
　　மகிழ்ந்தரைத் துண்டை செய்து
தாமென்ற யோட்டில் வைத்துச்
　　சந்துவாய்ச் சீலை செய்து
நாமென்ற குக்கு டத்தில்
　　நாட்டிட நல்ல நீறே.

நல்லதோர் நீறு தன்னை
　　நாட்டிடு மிஞ்சிச் சாற்றில்
வல்லதோர் சுரமுந் தீரும்
　　மருவியே பாலிற் கொள்ள
முல்லையின் நகையி னாளே
　　முழங்கிய சுரமுந் தீரும்
வெல்லதோ ருட்டி ணங்கள்
　　விரைந்திடும் வெள்ளை தானே.

(சு.13.பா. 58-59)

செய்முறை: சாத்திரவேதியை முலைப்பாலும் எருக்கம் பாலும் விட்டு, நான்குசாமம் (12·மணி நேரம்) அரைத்து, உருண்டை செய்து, ஓட்டில் வைத்து ஓடு மூடி, சீலை செய்து, குக்குடத்தில் போட்டெடுக்க நீறாகும்.

அளவு: வேண்டிய அளவு.

துணைமருந்து: இஞ்சிச்சாறு, பால்.

தீரும் நோய்கள்: இஞ்சிச்சாற்றில் உண்ணச் சுரம் தீரும். பாலில் உண்ணச் சுரமும், உட்டிணமும், வெள்ளையும் தீரும்.

## சாதிலிங்க பற்பம்

செய்ததொரு சாதிலிங்கங் கட்டி வாங்கிச்
　　சிவமூலி வேர்ப்பட்டை யரைத்துக் கட்டி
வெய்யதொரு குகைதனிலே வைத்து மூடி
　　விதமாகச் சந்துவாய்ச் சீலை செய்து

வெய்யவே குக்குடத்தில் நீறிப் போகும்
பரிவாக நிறுத்துப்பா ரிடைபோ காது
உய்யவே நோயெல்லாந் தீர வேண்டி
உரைப்பான யனுப்பான முறுதி யொன்றே.

ஒன்றுதான் தேனிற் கொள்ள
உறுகுன்ம வாய்வு பாண்டு
பண்டுள்ள சன்னி வாதப்
பாரிச வாய்வுச் சூலை
வென்றிடு மிருமல் தானு
மிளைப்புடன் விரைந்து போகும்
நன்றிடுஞ் சுரமுந் தீரும்
கபங்களும் நாடா தோடும்
உண்டிடு மனுப்பா னங்கள்
கண்டுகண் டுகந்தி டாயே. (சு.13. பா. 52-53)

செய்முறை : சிவமூலி வேர்ப்பட்டையை அரைத்து, குகை போல் செய்து அதனுள், சாதிலிங்கக் கட்டியை வைத்துமூடி சீலை செய்து, குக்குடத்தில் வைக்க நீறாகும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : குன்மவாய்வு, பாண்டு, சன்னிவாதம், பாரிசவாய்வு, சூலை, இருமல், இளைப்பு, கபம், சுரம் முதலியவை குணமாகும்.

## சீனிக்கார பற்பம்

மாதேவி பலம் 1, வெடியுப்பு பலம் 1, சீனிக்காரம் பலம் 1, இதுகளை உமிழ்நீர் விட்டாட்டி வில்லை செய்து காயவைத்து சீலை மண் செய்து கொடுக்கப் புடம் பற்பமாகும். (சு. 22)

செய்முறை : மாதேவி, வெடியுப்பு, சீனிக்காரம் இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்) உமிழ்நீர் விட்டாட்டி, வில்லை செய்து காய வைத்து, சீலை மண் செய்து, புடம் போட்டெடுக்க பற்பமாகும்.

## தங்க பற்பம்

... ... ... ...

ஓமிந்த தங்கபற்பஞ் சொல்லக் கேளு
உறுதியுள்ள தங்கரச மதனை வாங்கித்
தாமிந்தப் பனிதாங்கி மூலி தன்னைச்
சாந்துபோ லரைத்தப்பி யோட்டில் வைத்து
வாமிந்தச் சந்துவாய்ச் சீலை செய்து
வைத்திடுவாய் கசபுடத்தில் பற்ப மாச்சே.

ஆச்சிந்த பற்பத்தை வைத்துக் கொண்டு
அளவில்லா வித்தைதனை யாடு மாடும்
பாச்சிந்த வகையறிந்து வேதை தன்னைப்
பாச்சினா ளுரைக்குமப்பா பாயும் பாயும்
வாச்சிந்த சொன்னபற்பம் வியாதியெல்லாந் தீர்க்கும்
வளமான அனுப்பான மறிந்து போடு
காச்சிந்த அனுப்பானஞ் சொல்லக் கேளு
கண்டாத்திரி லேகியத்திற் கொண்டாற் கேளே.

கொண்டாக்கால் சிலேற்பனந்தான் தொண்ணூற் றாறுங்
குடிபோறோ மென்றுசொல்லிக் கூட்டோ டேபோங்
உண்டாக் கால்சய ரோகங்க ளீழை
உள்மாந்தை கட்டோ டேபோம்
உண்டாக்கால் திரிகடுகு லேகி யத்தில்
உறவுகெட்ட குன்மமொடு மகோத ரங்கள்
செண்டாக்கால் வாய்வோடு நீராம்பல் சூலை
சிரசுநோவு கண்ணோவு தீரும் பாரே.

தீருமே குட்டமொடு குறைநோ யெல்லாஞ்
சீனப்பா லேகியத்திற் தின்றாற் கேளு
பாருமே சூலையொடு கிரந்திப் புண்கள்
பிறக்குமே தேனிலிடு பத்து நாளிற்
சேருமே பிரமேகம் நீரிழிவு தீருஞ்
சிந்தியுட சூரணத்தில் தின்றால் கேளு
வாருமே நெல்லிக்காய் கசாயத்தில் தானும்
வளமாகக் கொண்டிடவே பித்தம் போமே,

போகுமே சிவன்வேம்புச் சூர ணத்தில்
புகட்டவே புண்புரைகள் சில்வி டங்கள்
ஆகுமே வண்டுகடி விடமென்ற தெல்லாம்
ஆச்சரியம் வேம்பினுட சூரணத்திற் கொள்ள
ஏகுமே வாதமென்ற தெண்ப துந்தான்
எடுத்தெடுத்த நோயெல்லா மெங்கே போகும்
வாகுமே யனுப்பான மறிந்து செய்தால்
வருகின்ற நோய்தீருஞ் சொர்ணம் போலாமே.

சொன்னோமது தின்றாக்கால் சொர்ண மாகுஞ்
சுகமான யிரும்புதின்றா விரும்பு போலாம்
அன்னமது தின்றாக்கா லழிந்து போகும்
ஆசையது மிகுத்தாக்கால் பிறவி தீரா
வன்னமது பிறந்தாக்கால் வறுமை பாழாம்
மானிலத்தி லிருந்தாக்கால் தவசு பாழாம்
பொன்னதனை மறந்தாக்கா லந்தம் போகும்
போகாது போகாது பொன்னை நீத்தே.

(சு. 13.பா. 37-42)

செய்முறை : தங்க ரசத்தின்மேல், பனிதாங்கி மூலிகையைச் சாந்துபோல் அரைத்து மூடி ஓட்டில் வைத்துச் சீலை செய்து, கசபுடத்தில் போடப் பற்பமாகும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்துகள்: கண்டங்கத்தரி லேகியம், திரிகடுகு லேகியம், சீனப்பாலேகியம், தேன், சிந்திச் சூரணம், நெல்லிக்காய் கசாயம், சிவன் வேம்புச் சூரணம்.

தீரும்நோய்கள் : கண்டங்கத்தரி லேகியத்திலுண்ண 96 வகை சிலேற்பனமும், சயரோகம், ஈழை, உள்மாந்தை போன்றவை தீரும். திரிகடுகு லேகியத்திலுண்ணக்குன்மம், மகோதரம், வாய்வு, நீராம்பல், சூலை, தலைநோய், கண்ணோய் முதலியன தீரும். சீனப்பா லேகியத்திலுண்ணக் குட்டம், சூலை, கிரந்திப் புண்கள் போன்றவையும் தீரும். தேனில் பத்து நாட்களுண்ணப் பிரமேகம், நீரிழிவு தீரும். சிந்தியுட சூரணத்திலும், நெல்லிக் காய் கசாயத் திலும் உண்ணப்பித்தம் போகும். சிவன்வேம்புச் சூரணத்திலுண்ண புண், புரைகள், வண்டுகடி விடங்கள், வாதம் எண்பதும் போகும்.

(வேறு)

அரை மாத்துள்ள பொன் வாங்கி மிக அச்சவில்லை தட்டி சிகப்பு முள்ளுக்கிரை வேரின்பட்டை அரைத்து, தகட்டின்மேல் பூசி சீலை கவசம் செய்து, பத்து விரட்டியில் புடம்வைத்து ஆறின பிறகு எடுத்து, கல்வத்தில் அரைத்தெடுத்து சீசாவில் அடைத்துக் கொள்ளவும். இதை நெய்யில் சாப்பிட்டால் வீக்கம் வாய்வுபோம். (சு. 22)

செய்முறை : அரை மாத்துள்ள பொன்னை அச்சவில்லை யாகத் தட்டி, சிகப்பு முள்ளுக்கிரை வேரின்பட்டை அரைத்து தகட்டின் மேல்பூசி, சீலை கவசம் செய்து 10 விரட்டியில் புடம் வைத்து ஆறினபிறகு கல்வத்தில் அரைத்தெடுத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : நெய்.

தீரும்நோய்கள் : வீக்கம், வாய்வு தீரும்.

## தாமிரபற்பம்

கேளப்பா தாமிரத் துட்டொன்று வாங்கிக்
கிருபையுள்ள நெல்கனமாய்த் தகடாய்த் தட்டி
வேளப்பா யாடுதொடா மூலிவேரும் வெண்ணொச்சி
வேரி ரண்டுஞ் சமனாய்ச் சேர்த்து
நாளப்பா யெருக்காலம்பால் தன்னா லாட்டி
நலமான தகட்டின்மே லப்பிக் கொண்டு
சூளப்பா யோட்டில் வைத்து ஓடுமூடிச்
சுகமாகச் சந்துவாய்ச் சீலை செய்யே.

சீலையது மூன்றுசெய்து கசபு டத்திற்
சென்றிடவே நீறியது செந்தூ ரந்தான்
ஆலையா மட்டகுன்மந் தீர வென்றால்
ஆவட்ட சூரணத்துடனே தேனுங் கூட்டி
மாலையுட காலையிலே கொள்வீ ராகில்
வாய்வென்ற வர்க்கமெல்லாம் மாண்டு போகும்.

(சு. 13.பா. 15-19)

செய்முறை : தாம்பிர துட்டை நெல் கனமாகத் தட்டிக் கொண்டு, ஆடு தொடா மூலி வேரும், வெண்ணொச்சி வேரும் சமனாகக் கொண்டு, எருக்காலம் பால் விட்டரைத்து, தகட்டின் மேலப்பி ஓட்டில் வைத்து, ஓடுமூடி மூன்று சீலை செய்து கசபுடத்தில் போட நீறாகும்.

அளவு : வேண்டிய அளவு. காலை, மாலை இருவேளை.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : அட்ட குன்மம், வாய்வு.

(வேறு)

தாம்பிரப்பொடி 20, கந்தகம் 8 கழஞ்சு, அரிதாரம் 3 கழஞ்சு, இரதம் 4 கழஞ்சு, புதுச்சட்டியில் தாம்பிரப் பொடியைப் போட்டு மூக்கரைச் சாரடைச் சாகம் நாழி விட்டுக்காய்ச்சி, உரிய வற்றினால் அதில் மூன்று மருந்தும் விட்டு விரவி, வேறொரு சட்டிமூடி ஐந்து சீலைமண் செய்து, இராப்பகலறுபது நாழிகை தீயெரித்து வெந்தால் ஆறி யெடுத்துப் பொடி செய்து, அதில் வெள்வெங்காயம் 2 கழஞ்சு, திப்பிலி 2 கழஞ்சு, இந்துப்பு 2 கழஞ்சு, கடுக்காய் 2 கழஞ்சு, நெல்லிக்காய் 2 கழஞ்சு, தான்றிக் காய் 2 கழஞ்சு, சீனக்காரம் 2 கழஞ்சு, வெந்த தாம்பிரபற்பம் 2 கழஞ்சு ஆகக் கூட்டி வல்லாரைச் சாகத்திலரைத்து சுண்டைக் காய்ப் பிரமாண முண்டை செய்து கொள்ளவும். அனுப்பானம் தேனில், வாழைப்பழத்தில், திப்பிலியில், கருப்புக் கட்டியில் கொடுக்க எட்டுவகைக் குன்ம முதலாய பதினெட்டுக் குன்மமுந் தீரும். (சு. 20)

செய்முறை : தாம்பிரப்பொடி இருபது கழஞ்சைப் (102கிராம்) புதுச்சட்டியில் போட்டு மூக்கரைச் சாரணைச்சாறு நாழி (1·3லிட்) விட்டு வற்றக் காய்ச்சிய பின் அதில் கந்தகம் 8 கழஞ்சு (40.8 கிராம்), அரிதாரம் 3 கழஞ்சு (15.3 கிராம்), இரதம் 4 கழஞ்சு (20.4 கிரர்ம்) போட்டுக் கலந்து, வேறொரு சட்டிமூடி, ஐந்து சீலை செய்து, இரவும் பகலும் அறுபது நாழிகை தீயெரித்து வெந்து ஆறியபின்னெடுத்து, பொடி செய்து அதனுடன் வெள் வெங்காயம், திப்பிலி, இந்துப்பு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சீனக்காரம், வெந்த தாம்பிரபற்பம் இவை வகைக்கு இரு கழஞ்சு (10.2 கிராம்) சேர்த்து வல்லாரைச் சாற்றிலரைத்து, சுண்டைக் காயளவு உருண்டை செய்து கொள்ளவும்.

அளவு : ஒரு உருண்டை.

துணைமருந்து : தேன்,வாழைப்பழம், திப்பிலி, கருப்புக்கட்டி.

தீரும் நோய்கள் : குன்மம் தீரும்.

(வேறு)

மிருதார சிங்கை பூவரசம் காய் அரைத்து கவசம் செய்து புடம் போடவும். சல்லியை நன்றாய் அத்திரி செய்து கொண்டு மேற்படி மிருதார சிங்கையுமிழ் நீர் விட்டரைத்து மேற்படி சல்லிக்கு புளி இலை பிரமாணம் பூசி, கண்டங்கத்திரி வித்து, பிரண்டைவித்து இரண்டையும் சமனாய் எடுத்து உமிழ்நீர் விட்டரைத்து, குகை செய்து அதற்குள் மருந்தை வைத்து மூன்று சீலைசெய்து முழுப் புடம் போடவும். பற்பமாகும். அனுபானம் பார்த்துச் செய்யவும். (சு. 22)

செய்முறை : பூவரசங்காயரைத்து மிருதார சிங்கிற்குக் கவசம் செய்து புடம் போடவும். சல்லியை அத்திரி செய்து, மிருதார சிங்கை உமிழ்நீர் விட்டரைத்து சல்லியின் மேல் பூசி, கண்டங் கத்தரிவித்து, பிரண்டை வித்து இரண்டையும் உமிழ்நீர் விட்ட ரைத்துக் குகைசெய்து, அதனுள் முன் மருந்தை வைத்துச் சீலை செய்து புடம் போடப் பற்பமாகும்.

## தாளக பற்பம்

போக்கான தாளகத்தின் நீறு சொல்வேன்
புதியதலை யோடதனைப் பொடித்துக் கொண்டு
நீக்கான சுண்ணாம்புத் தண்ணீர் விட்டு
நிலையாக யரைத்ததனை குகைபோற் பண்ண
வாக்கான மேல்மூடி யொன்று செய்து
வளமாகக் காயவைத்து யதனுட் சேளு
பாங்கான தாளகத்தின் கட்டி வைத்து
பரிவாகச் சீலைசெய்து யுலரவைய்யே.

உலர்ந்தபின்பு குக்குடத்தில் நீறிப் போகும்
உத்தமனே தாளகத்துக் கொப்பு முண்டோ
மலர்ந்ததொரு மல்லிகைப்பூ போலாம் வெள்ளை
மாசற்ற வெள்ளைதனை வைத்துக் கொண்டு
அலர்ந்தமலர்த் தேனதிலே கொள்வீ ராகில்
அடர்ந்ததொரு சயரோக மந்தார காசங்
கலர்ந்தசவ யீளை யிருமலுள் மாந்தை
கைகடந்து யோடிப்போங் கண்டு கொள்ளே.

கண்டுகொள்ளு மனுப்பான மறிந்து செய்தால்
காணாக் கடியென்ற குறைநோய் குட்டம்
வண்டுகடி எலிவிடங்க ளெல்லாந் தீரும்
மைந்தனே யனுப்பான மறிந்து போடு.

... ... ... ... (சு. 13. பா.49-51)

செய்முறை: புதிய தலையோட்டைப் பொடி செய்து, சுண்ணாம்புத் தண்ணீர் விட்டரைத்து, குகைபோல் மூடியுடன் செய்து, நன்றாகக் காய்ந்த பின்பு அதனுள் தாளகக் கட்டியை வைத்து, சீலை செய்து உலர்ந்தபின் குக்குடத்தில் வைத்தெடுக்க மலர்ந்த மல்லிகைப் பூப்போன்ற வெள்ளை நிறத்தில் நீறு உண்டாகும்.

அளவு: தேவையான அளவு.

துணைமருந்து: தேன்.

தீரும்நோய்கள்: சயரோகம், மந்தாரகாசம், ஈளை, இருமல், உள்மாந்தை, குட்டம், வண்டுகடி, எலிகடி விடம் அனைத்தும் போகும்.

(வேறு)

எண்ணிய தாளகத்தைப் பற்பம் பண்ண
எவராலும் முடியாது சித்தர்க் காகும்
ஒண்ணரிய நாதாக்கள் ஆடும் ஆட்டு
உத்தமனே வித்தையிது உசத்தி மெத்த
பண்ணரிய சுந்தரமே சொல்லக் கேளு
பாசமற்ற ஞானிகள்தான் பண்ணு வாரே.

பண்ணப்பார் மேனிச்சாறு படிதான் ரெண்டு
பழங்காடி ரெண்டுபடி கல்லுச் சுண்ணம்
வண்ணப்பா மேனிச்சாறு தேங்காயினளவா யிட்டு
வோமத்தான் கடைந்திடுவாய் கடிகை ரெண்டு
நண்ணப்பா தாளகத்தின் பலமி ரண்டு
நடுநிற்க தோளாந் திரமுங் கூட்டி
எண்ணப்பா அடுப்புதீ யெரிநே ரப்பா
இருந்ததண்ணீர் வற்றினபின் னெடுத்துக் கொள்ளே.

எடுத்தபுளி பலம்பத்து பாண்டத் திட்டு
இரவிபடி நாலும் கூட விட்டு
அடுத்து மூன்றங்கே கடைந்து வாநீ
அப்பனே தாளகந் தான்திறங் காட்டி

கொடுத்தசிறு தீயிட்டுக் கரிபோ லானால்
குலாவியதோர் தாளகத்தை எடுத்துக் கொண்டு
கடுத்தஅப்பைச் சாற்றினிலே சாமம் ரெண்டு
கனகமென்ற தாளகத்தை அரைத்தி டாயே.

அரைத்திட்டு ரூபாய்போல் வில்லை தட்டி
அப்பனே உலரவைத்துப் பின்பு கேளு
நிரைத்திட்ட முன்கனிகை அடுப்பி லேற்றி
நீர்வற்ற வறுத்துரெண்டு பங்கு செய்து
உரைத்திட்ட சட்டிதனில் பங்கொன் றிட்டு
ஒப்பாவாய் மூளத்தில் வில்லை வைத்து
மரைத்திட்ட மறுபங்கு மேலே இட்டு
வாய்க்கிணங்கு சட்டிகொண்டு கவிழ்த்து மூடே.

மூடியே சீலைமண் செய்து லர்த்தி
மூதண்ட வயிரவர்க்கும் நிருவா ணிக்குந்
தேடியே பானமொடு சுத்தி வைத்து
சிவனா செய்துஅடுப் பேற்றி யெரித்துக்
கூட்டியே யெண்சாம மான பின்பு
குளுந்தபின்பு யெடுத்துப்பார் கறுத்துப் போகும்
வாடியே மயங்காதே அப்பைச் சாற்றில்
மாட்டியரை வில்லைதட்டி உலரப்போடே.

உலர்ந்தமுன் சாம்பல் அமுரி யாலே
ஒப்பாவாய் பதங்கொடுத்துச் சட்டிக்கு நடுக்குவித்து
மலர்ந்திடவே அடுப்பேற்றி யெரிப்பாய் சாமம்
மைந்தனே விபூதிபோல நீறிப் போகும்
அலர்ந்தஅண்ட நீராலே அரைத்து வாங்கி
அகல்ரெண்டு செய்துலர்த்தி வில்லை வைத்து
புலர்ந்தஅகல் மேல்மூடிச் சீலை செய்து
புகழாகக் குக்குடப் புடத்தைப் போடே.

போடவே நீறியது வெள்ளை யாகும்
பொன்னான வயிரவத்தைப் பூசை பண்ணு
வாடவே வேண்டாநீ கலிவ ராது
மக்களே பணவெடைகால் நிறுத்துக் கொண்டு

கூடவே சண்டரச பற்பஞ் செய்து
கொடுத்திடவே குட்டமொடு குறைநோ யெல்லாம்
ஓடவே சொல்லுமடா கிரந்தி யேது
உலக்கெடுத்த சூலையொடு வாதம் போமே.

வாதமொடு பவுத்திரங்கள் கண்ட மாலை
வளர்கின்ற புற்றுடனே பிளவையும் விப்புருதி
காதமென்ற தூரமல்ல வோடும் வேகம்
கலங்காதே பத்தியத்தைக் காரு காரு
ஆதியெனார் வழலைதன்னை அணைத்தா யானால்
அப்பனே காட்டுமுன்னே யலரி வாங்கும்
பேதமென்ற மூடருக்குஞ் சொல்லாதே பித்தரைப்
போலே யிருக்கப் பிழைப்பாய் நீயே.

(சு. 21. பா. 366-373)

செய்முறை : குப்பைமேனிச்சாறு இரண்டுபடி (2.6 லிட்) பழங்காடி இரண்டுபடி (2.6 லிட்), கல்லுச்சுண்ணம் தேங்காயளவு தாளகம் இரண்டுபலம் (70 கிராம்) என இவற்றை முறைப்படி எடுத்துச் சேர்த்து தீயிலிட்டு எரித்து, நீர் வற்றியபின், புளி 10பலம் (350கிராம்), ரவி 4 படி (5.2 லிட்) சவர்க்காரம் கூட்டித் தீயிலிட்டு கருக்கவும். அதை அப்பைச்சாற்றில் இரண்டு சாமம் (6 மணிநேரம்) அரைத்து ரூபாய் போல வட்டமாக வில்லை தட்டி உலர்த்தவும் இந்த வில்லைகளை முறைப்படி ஆவியில் அவித்தெடுத்துலர்த்திய பின் குளிர்ந்து கறுப்பாகும். அதை அப்பைச் சாற்றிலரைத்து வில்லைதட்டி உலரவைக்சவும். அதை அமுரியுடன் கலந்து முன் போல ஒரு சாமம் (3 மணிநேரம்) எரித்தெடுக்க நீறாகும். அதை அண்ட நீரில் அரைத்து வில்லை தட்டி, சீலை செய்து குக்குடப்புடத்தில் வைத்தெடுக்க வெள்ளை நீறாகும்.

அளவு : கால் பணவெடை (122 மி. கி).

துணைமருந்து ; சண்டரசபற்பம்.

தீரும்நோய்கள் : குட்டம், கிரந்தி, சூலை, வாதம், பவுத்திரம், கண்டமாலை; புற்று, பிளவை, விப்புருதி முதலியன தீரும்.

பத்தியம் : பத்தியம் காக்கவும்,

(வேறு)

தாளகம் ஒரு பலம் வாங்கி, கல்சுண்ணாம்பைக் கலயத்தில் போட்டு, சலம்விட்டு, சலம் தெளிந்தபிறகு மேற்படிதெளிந்த சலத்தில் 7 நாள் அரைத்து வில்லை தட்டி உலரவைத்து, ஏகலசத்தி

சுண்ணாம்பு நீரை அழுத்தமாய் வைத்து இந்த வில்லையை வைத்து வேறே ஒரு கலயத்தில் சுண்ணாம்பு நீரை வைத்து மேல் மூடி ஏழு சீலை கவசம் செய்து சுமார் 10 விரட்டியில் புடம். தேனில் கொடுக்கவும். பத்தியம் புளி, நல்லெண்ணெய், கடுகு ஆகாது. கடியும்தீரும். (சு. 22)

செய்முறை : கல்சுண்ணாம்பைக் கலயத்தில் போட்டு நீர் விட்டு தெளிந்தநீரை எடுத்து, தாளகம் ஒரு பலத்தில் (35 கிராம்) விட்டு 7 நாட்கள் அரைத்து, வில்லைதட்டி உலரவைத்து, கலசத்தில் சுண்ணாம்பு நீரை அழுத்தமாய் வைத்து, இந்த வில்லையை வைத்து வேறே ஒரு கலயத்தில் சுண்ணாம்பு நீரை வைத்து மேல் மூடி ஏழு சீலை கவசம் செய்து சுமார் 10 விரட்டியில் புடம் போட்டெடுக்கவும்.

அளவு : தேவையான அளவு.

துணை மருந்து : தேன்.

தீரும்நோய்கள் : கடிகள் தீரும்.

பத்தியம் : புளி, நல்லெண்ணெய், கடுகு நீக்கவும்.

(வேறு)

தாளகத்தைச்சுத்தி செய்து அரசம் வேர் குடைத்து, அதற்குள் தாளகத்தை வைத்து மூடி மாதுள இலைஅரைத்துக்கவசம் செய்து காயவைத்து,சாண்புடம் போடபற்பமாகும்.கபம், இருமல், சயம் தீரும், கடுகு, நல்லெண்ணெய், பால், மோர், வாயுபதார்த்தம் தள்ளுபடி. (சு. 22)

செய்முறை : அரசம் வேரைக் குடைந்து, சுத்திசெய்த தாளகத்தை வைத்துமூடி, மாதுளை இலையை அரைத்து, கவசம் செய்து, காயவைத்துச் சாண்புடம் போட்டெடுக்கப் பற்பமாகும்.

அளவு : வேண்டிய அளவு.

தீரும்நோய்கள் : கபம், இருமல், சயம்.

பத்தியம் : கடுகு, நல்லெண்ணெய், பால், மோர், வாய்வு உண்டாக்கும் காய் கறிகள் நீக்கவும்.

## நாக பற்பம்

என்னவே நாகபற்பத் தியல்பு கேளு
எருக்காலம் பால ரைத்திடு கெசந்தான்
பன்னவே யரைத்துவில்லை ரவிகண் டேதான்
பரிவாக யோட்டில்வைத்து சீலை செய்து

முன்னமே சொன்னபடி புடத்தில் நீர்த்தி
மூதண்ட பற்பத்தின் முக்கியங் கேளு
வன்னமாங் கிராணியொடு மூல ரோகம்
வயிற்றெரிவு நெஞ்செரிவு வாய்வு ரோகம்.

வாய்வுடனே யிதுக்கெல்லா மனுப்பா னங்கேள்
வரிசையுடன் திரிகடுகு திரிப லாதி
தூயலா கிரிகஞ்சா மஞ்சட் தானுஞ்
சூரணித்துத் தேனிலே கிண்டி கிண்டி
நேயமுடன் கொண்டுவிடு மண்ட லந்தான்
நேர்பான முன்சொன்ன ரோகந் தீரும்.

(சு.13.பா. 33-34)

செய்முறை : நாகத்தை எருக்காலம் பால்விட்டரைத்து வில்லைதட்டி வெய்யிலில் காயவைத்து, ஓட்டில் வைத்து, சீலை செய்து கசபுடத்தில் போட நீறாகும்.

அளவு : குறிப்பிட்ட அளவு, 1 மண்டலம் (48 நாட்கள்).

துணைமருந்து : திரிகடுகு, திரிபலாதி, கஞ்சா, மஞ்சளும் சூரணித்து அதனுடன் தேன் கலந்து கொள்ளவும்.

தீரும் நோய்கள் : கிராணி, மூலம், வயிற்றெரிவு, நெஞ் செரிவு, வாய்வு போகும்.

(வேறு)

நாகம், சுத்திசெய்து கொண்டு, கீழாநெல்லி மூலம் சேர்த் திடித்து, ரசம் பிழிந்து அதில் ஊரவைத்து, மேற்படி நாகத்தை பொன்னாங் கண்ணிச் சாறு விட்டரைத்து, வில்லைதட்டிக் காய வைத்துக் காய்ந்த பிறகு,மேற்படி வில்லையை மேற்படி இலையால் கவசம் செய்து புடம் சாண் போட்டு ஆறியெடுக்கப் பற்பமாகும்.

(சு 22)

செய்முறை : சுத்திசெய்த நாகத்தை கீழாநெல்லி மூலத்தின் சாற்றில் ஊரவைத்தெடுத்து, பொன்னாங்கண்ணிச்சாறு விட்டரைத்து வில்லைதட்டிக் காயவைத்தெடுத்து, பொன்னாங் கண்ணி இலையால் கவசம் செய்து பக்குவமாகப் புடம்போட் டெடுக்கப் பற்பமாகும்.

## படிகார பற்பம்

சீரிய மண்குகையில் ஒருபலம் பசுவின் வெண்ணெய் வைத்து அதன்மேல் ஒருபடிகாரம் ஓரே கட்டியாய் வைத்து வாய்ப்புறம்

ஓடு மூடி சீலை மூன்று செய்து 5 விரட்டியில் புடம்போட நீர்த்து பற்பமாயிருக்கும். அதை வெண்ணெயில் மிளகெடை குழப்பிக் கொடுக்க 3 நாள் 6 வேளையில் வெள்ளைநீர், கடுப்பு இதுகள் நீங்கும். (சு.22)

செய்முறை : சீரிய மண்குகையில் பசுவின் வெண்ணெய் ஒரு பலம் (35 கிராம்) வைத்து, அதன் மேல் ஒரு படிகாரம் ஓரே கட்டியாய் வைத்து வாய்ப்புறம் ஓடு மூடி, சீலை மூன்றுசெய்து 5 விரட்டியில் புடம்போட நீர்த்து பற்பமாகும்.

அளவு : மிளகெடை. 3 நாள், 6 வேளை.

துணைமருந்து : வெண்ணெய்.

தீரும் நோய்கள் : வெள்ளைநீர், கடுப்பு தீரும்.

## பலகறைப் பற்பம்

பலகறை மூன்று பலம் வாங்கி, புது குடுக்கையில் எலுமிச்சம் பழச்சாறு விட்டுக் கவசம் செய்து, பத்து விரட்டியில் புடம் போடவும். எடுத்து கல்வத்தில் வைத்துப் பொடித்துக் கொள்ளவும். இதைத் தேனில் கொடுக்க 6 சூலை, மார்பு நோய், வாய்வு நீங்கும். (சு.22)

செய்முறை : பலகறை மூன்று பலம் (105 கிராம்) வாங்கிப் புதிய குடுக்கையில் எலுமிச்சம் பழச்சாறுவிட்டு, கவசம் செய்து பத்து விரட்டியில் புடம்போட்டெடுத்துப் பொடித்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : 6 சூலை, மார்புநோய், வாய்வு தீரும்.

## பவள பற்பம்

*சிறந்திடும் பவள பற்பஞ் செய்கிறேன் திறம தாகத்*
*திறந்திடு முசலி ரத்தந் தீர்க்கமாய் விட்டு யாட்டிக்*
*குறைந்திடும் வில்லை செய்துக் குலாவிலே யோட்டில் வைத்து*
*சிறந்திடுங் குக்கு டத்தில் தீர்க்கமாய் நீறுந் தானே.*

*தானது நீறி வெள்ளை சதுர்முகன் போல தாகும்*
*ஆனதோர் நீறு தன்னைப் பணவெடை யனுப்பா னங்கேள்*
*ஏனமாந் தூத ளைநீர் தேனுட னீறு கொள்ள*
*மானமாங் குழலி னாளே சயங்களுங் கண்டு போமே.*

அகன்றிடு மிருமல் காசம் ஆகமாம் பவள பற்பம்
புகன்றிடப் போகா தப்பா புனிதமோ மிந்த நீறு
செகந்தனில் செய்ய மாட்டார் செப்பினேன்
செகத்தோர்க் காக
நிகண்டது போலா மிந்நூல் நிச்சயம் நிகழ்த்தி னேனே.

நிகழ்த்தினேன் நல்ல நூல்தான் நீற்றின பேர்க்குச் சூட்சம்
அகத்தினி லிருந்து கொண்டு ஆடலாங் கோடி வித்தை
மகத்துவ மிந்த நூல்போல் வைத்தியங் கண்டி லேனே.
(சு.13.பா. 63-66)

செய்முறை : பவளத்தை முயலின் ரத்தம் விட்டு ஆட்டி வில்லை செய்து, ஒட்டில்வைத்து, குக்குடப்புடம் போட்டெடுக்க சதுர்முகன் போல் வெள்ளையாகும்.

அளவு : பணவெடை (488 மி,கி).

துணை மருந்துகள் ; தூதுவளைநீர், தேன்.

தீரும்நோய்கள் : இருமல், காசம்.

(வேறு)

பவளம் 5 பலம் வாங்கி எலுமிச்சம் பழச்சாற்றில் 7 நாள், ஊறவைத்து, கழுவி எடுத்து, வாயகலமான குகையில் போட்டு முசல் ரத்தம் விட்டு, சீலை கவசம் செய்து, எண்பது விரட்டியில், புடம் போடப் பற்பமாகும். கல்வத்தில் அரைத்து எடுக்கவும். நெய்யில் கொடுக்க இருமல் நீங்கும். இச்சாபத்தியம். (சு.22)

செய்முறை : பவளம் 5 பலத்தை (175 கிராம்) எலுமிச்சம் பழச்சாற்றில் 7 நாள் ஊறவைத்துக் கழுவி, வாயகலமான குகையிலிட்டு முசல் ரத்தம் விட்டுச் சீலை கவசம் செய்து, எண்பது விரட்டியில் புடம்போடப் பற்பமாகும். கல்வத்தில் அரைத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : நெய்

தீரும்நோய் : இருமல்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## பித்தளை பற்பம்

கட்டான பித்தளையின் பற்பங் கேளு
காஞ்சுரையின் வேரரைத்துக் கனத்திற் பூசி
வட்டாக வோட்டில்வைத்து யோடு மூடி
வைத்திடுவாய் கசபுடத்தில் மாண்டு போமே.

மாண்டுபோம் நோய்களைத்தான் சொல்லக் கேளு
வாய்வோடுக் குன்மமுதற் கிராணி மூலம்
பாண்டுவென்ற நீர்க்கடுப்பு வாய்நீ ராடல்
பாயுகின்ற குடல்வாய்வுப் பாரிச வாய்வு
காண்டதொரு யானந்த வாய்வு தானுங்
கைகண்ட யனுபான மறிந்து கொள்ளு.

(சு.13.பா.25-26)

செய்முறை ; காஞ்சுரையின் வேரை அரைத்து, பித்தளைத் தகட்டின் மேல் கனமாகப் பூசி, ஓட்டில் வைத்து ஓடு மூடி கசபுடத்தில் (1000 எரு) வைக்க நீறாகும்.

அளவு : தேவையான அளவு.

தீரும்நோய்கள் : வாய்வு, குன்மம், கிராணிமூலம், பாண்டு, நீர்க்கடுப்பு, வாய்நீராடல். குடல்வாய்வு, பாரிசவாய்வு முதலியன தீரும்.

## பேரண்ட பற்பம்

பால்போலிருக்கும் அண்டகத்தைப் பூநீரில் கொதிக்க வைத்து கழுவியெடுத்து எருமைச்சாணி அடைத்து மத்தியில் வைத்து அரை கசபுடம் வைத்தெடுத்து, இதற்கு நான்கு பாகத்திற்கு பூரம் பாகம் சேர்த்து வாய்நீரால் அரைத்து வில்லை செய்துலர்த்தி அரைக் கசபுடம் போடவும். அனுபானம் தேனில் கொடுக்க அரைமண்டலம் சேர்க்க மேகம் தீரும். (சு.22)

செய்முறை : பால்போன்ற அண்டகத்தை, பூநீரில் கொதிக்க வைத்துக் கழுவியெடுத்து, எருமைச்சாணியின் மத்தியில் வைத்து அரைக் கசபுடம் போட்டெடுத்து, நான்கு பாகத்திற்கு ஒரு பாகம் பூரம் சேர்த்து உமிழ்நீரால் அரைத்து வில்லை செய்துலர்த்தி அரைக்கசபுடம் போடவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும்நோய் : அரைமண்டலம் உண்ணமேகம் தீரும்.

## பொரிகார பற்பம்

கரைந்திடும் பொரிகா ரத்தின் கட்டிதான் விரைந்து வாங்கி
அரைந்திடும் சங்கை நீற்றி அரைத்ததைக் குகையுண் டாக்கி
நிரைத்தசில் லதனால் செய்து நிறைபொரி காரம் வைத்து
இரைந்திடுஞ் சீலை செய்து குக்குடம் வைத்தி டாயே.

வைத்திடாய் கார நீறு வளமிது யனுப்பா னங்கேள்
நெய்த்திடத் தேனில் கொண்டால் நீர்க்கடுப் புடனே மாறும்
இத்தநீர் விட்டுப் பாயும் இசைந்தகல் லடைப்புத் தீரும்
துத்திடுஞ் சதைய டைப்புத் துறந்துநீர் தோடம் போமே.
(சு. 13. பா. 56-57)

செய்முறை : சங்கை அரைத்துக் குகைபோல் செய்து, அதனுள் பொரிகாரத்தை வைத்துமூடி, சீலை செய்து, குக்குடப் புடம் போட நீறாகும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள்: நீர்க்கடுப்பு, கல்லடைப்பு, சதையடைப்புத் திரும்.

## பொன்னிமிளை பற்பம்

வாங்குபொன் னிமிளை பற்பம் வளமதாய்ச் சொல்லக் கேளு
தூங்கிய யரசின் பட்டைத் தூளதா யிடித்துக் கொண்டு
தாங்கியே கீழ்மே விட்டுக் கட்டியை நடுவே வைத்து
ஓங்கியே யோட்டில் வைத்து ஓடுமே லோடு மூடே.

மூடியே சீலை செய்து முக்கிய கசபு டத்தில்
சாடியே நீறிப் போகுந் தவளம்போல் வெள்ளை யாகுங்
கூடிய வாய்வு ரோகங் குலைகுலைந் தோடிப் போகும்
நீடிய குன்ம மெட்டும் நிலையைவிட் டோடுங் காணே.

காணவே சூலை யெட்டு கண்டவிப் புருதி மாலை
ஊணரை யாப்புப் புற்று ஓடிடுந் தேனிற் கொள்ள
... ... ... ... (சு.13.பா. 99-101)

செய்முறை : அரசம்பட்டையைத் தூளாக இடித்து, பொன்னிமிளைக் கட்டியின் மேலும் கீழும் வைத்துமூடி, ஓட்டில் வைத்து, மேலோடு மூடி, சீலை செய்து, கசபுடத்தில் போட்டெடுக்க வெண்மையான நீறாகும்.

அளவு : தேவையான அளவு.

துணை மருந்து: தேன்.

தீரும் நோய்கள் : வாய்வு, குன்மம், சூலை, விப்புருதி, அரையாப்பு முதலியன தீரும்.

## மண்டூர பற்பம்

அத்ததொரு மண்டூர பற்பஞ் சொல்வேன்
அதிகமாஞ் சிறுசுணங்கு யரைத்து யப்பி
வைத்ததொரு மண்குகையில் சில்லுப் போட்டு
வளமாகச் சீலையொன்று வாயில் செய்து
பத்தியுடன் கசபுடத்தின் கூகை நீறின்
பரிசான வாரது போலே நீறிப்போம்
புத்தியுட னிதையெ டுத்துக் கொண்டு
புனிதமாய்த் தேனிலே பொசித்தி டாயே.

பொசித்திடவே பணவெடைதான் தேனிற் கொள்ள
போக்கத்த பாண்டுவகை யெல்லாம் வீக்கம்
நிசித்திடவே பண்ணுவிக்கும் மண்டூ ரந்தான்
நல்லோகம் போலல்லோ வீரியந்தான் மெத்த
முசித்திடவே விடபாகம் விடநீ ரெல்லாம்
மூட்டோடே பிடுங்கிவிடு மூற்க மெத்தம்.

(சு. 13. பா. 46-47)

செய்முறை : சிறுசுணங்கை அரைத்து, மண்டூரத்தின் மேல் அப்பி, மண்குகையில் வைத்து, சீலை செய்து, கசபுடத்தில் போட வெண்மையான நீறு உண்டாகும்.

அளவு : பணவெடை (488மி.கி).

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : பாண்டு, வீக்கம், விடம் ஆகியன நீங்கும்.

## முத்த நீறு

தானென்ற முத்த நீறு சாற்றினேன் தரணி யோர்க்கு
மானென்ற யண்ட நீரில் மகிழ்ந்தரைத் துண்டை செய்து
நானென்ற யோட்டில் வைத்து நாட்டியே சீலை செய்து
வானென்றக் குக்கு டந்தான் வைத்திடில் சுண்ண மாமே.

சுண்ணமா முத்த நீற்றை வெற்றிலை தன்னிற் பூசி
உண்ணவே தாம்பூ லந்தான் அருந்திடி லதிக மாகும்
உண்ணவே பல்லு மிறுகுஞ் சிலேற்பன முழுதுந் தீரும்
வண்ணமாஞ் சரீரத் துக்கு வாய்த்தது சுண்ணந் தானே.

(சு.13. பா. 87-88)

செய்முறை : முட்டையின் வெண்கருவில் முத்தை அரைத்து உருண்டை செய்து, ஓட்டில் வைத்து ஓடு மூடி, சீலை செய்து, குக்குடத்தில் வைக்க நீறாகும்.

அளவு : வேண்டிய அளவு.

துணை மருந்து : வெற்றிலை.

தீரும் நோய்கள் : பல்லிறுகும். சிலேற்பனம் தீரும். உடல் நிறம் மாறும்.

## வங்க பற்பம்

... ... ... ...

சதிரிட்ட மேகவகை தீர வேண்டி
சாத்திறேன் வங்கபற்பஞ் சார்ந்து கேளு
அதிரிட்ட வெள்ளீயக் கட்டி வாங்கி
அப்பனே நெற்கனமா யடித்துக் கொள்ளே.

அடித்திட்ட தகடதுதான் பலந்தா னொன்று
ஆடுதொடா மூலிவேர்ப் பலந்தா னொன்று
துடித்திட்ட வேந்தோன்றிக் கிழங்கு பலமொன்று
சுகமாக அரைத்ததனை மேலே யப்பி
வெடித்திட்ட யோட்டில்வைத்து யோடு மூடி
வெண்மையாய்க் கசபுடத்தில் வெளுத்து நீறும்
வடித்திட்ட மேகவகை இருப துக்கும்
வைத்திடுவாய் பணவெடைதான் மருவிக் கேளே.

மருவியதோ ரவரைப்பஞ் சாங்கம் வாங்கி
மைந்தனே தேன்விட்டு மத்தித் தேதான்
இருபொழுதுங் கொண்டிடவே நீர்ச்செ றுப்பு
இயல்பான கல்லடைப்புக் கிரிச்ச னங்கள்
அருமென்ற சதையடைப்புப் பிரமே கங்கள்
அனுபான மறிந்துசெய்தால் கண்டு போகும்
... ... ... ...

(சு.13.பா. 18-20)

செய்முறை : வெள்ளீயக் கட்டியை நெல் கனமாகத் தட்டி, ஆடுதொடா மூலிவேர், வேந்தோன்றிக் கிழங்கு இவை மூன்றும் வகைக்கு ஒருபலம் (35கிராம்) அரைத்து, வங்கத்தின் மேலப்பி ஓட்டில் வைத்து, ஓடு மூடி, கசபுடத்தில் வைக்க வெண்மையான நீறாகும்.

அளவு : பணவெடை (488மி.கி). காலை, மாலை இருவேளை.

துணைமருந்து : அவரைப் பாஞ்சாங்கத்துடன் கலந்த தேன்.

தீரும்நோய்கள் : மேகவகை இருபது, நீர்ச்செறுப்பு, கல்லடைப்பு, கிரிச்சனங்கள், சதையடைப்பு, பிரமேகம் முதலியன தீரும்.

(வேறு)

வெள்வங்கம் நாலுபலம் எடுத்து அரசம்பட்டையை இடித்து கோணிப் பட்டியில் வைத்து, அதன் நடுவில் வங்கத்தை வைத்துச் சுருட்டி மண்ணினால் சீலை செய்து 30 விரட்டியில் புடம் போட்டெடுத்துக் கொள்ளவும். கல்வத்தில் வைத்தரைத்து, புட்டியில் வைத்துக் கொள்ளவும். இதை நெய்யில் கொடுக்க 21 மேகம் தீரும். (சு.22)

செய்முறை : அரசம்பட்டையை இடித்துக் கோணிப்பட்டியில் வைத்து. அதன் நடுவில் வெள்வங்கம் நாலுபலம் (140 கிராம்) வைத்துச்சுருட்டி மண்ணினால் சீலை செய்து 30 விரட்டியில் புடம் போட்டெடுத்து, கல்வத்தில் அரைத்து எடுத்துக் கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : நெய்.

தீரும்நோய்கள் : 21 மேகங்கள் தீரும்.

## வயிர பற்பம்

கண்டதோர் வயிரந் தன்னைக் கதுமையாய் யுரைக்கக் கேளு
பெண்டுகள் சுரோணி தத்தைப் பேணிவிட் டரைத்து வில்லை
நன்றதாய் செய்து லர்த்தி நாட்டியே யோட்டில் வைத்துச்
சென்றிடக் கசபு டத்தில் தீர்க்கமாய் நீறிப் போமே.

நீறிய நீறு தன்னை நினவுடன் தேனிற் கொள்ள
ஊறிடும் தேக மெல்லாம் உற்றதோர் வயிரம் போலாம்
மாறிடு மேனி யெல்லாம் வச்சிர காய மாகும்.
... ... ... ... ... (சு.13, பா. 67-68)

செய்முறை : வயிரத்தை, பெண்களின் சுரோணிதத்தை விட்டரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டில் வைத்து, கசபுடம் போட நீறாகும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும்நோய் : உடல் வயிரம் போலாகும். மேனி வச்சிர காயமாகும்.

## வீரபற்பம்

வீரம், ரசம், பொரிகாரம் இந்த மூன்றும் சமனெடையாய் எடுத்தரைத்து, பனைவெல்லத்தில் ஒரு பணவெடை வைத்து சாப்பிடபுண், வெள்ளை, கிரந்திகட்டி, சூலை, சூதகவாயு இதுகள் தீரும். 3 நாள் இருவேளை சாப்பிடவும். வறுத்த உப்பு கூட்டவும். (சு.22)

செய்முறை : வீரம், ரசம், பொரிகாரம் இவை சமனெடையாய் எடுத்தரைத்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு பணவெடை (488மி.கி). 3 நாள், இருவேளை.

துணைமருந்து : பனைவெல்லம்.

தீரும்நோய்கள் : புண், வெள்ளை, கிரந்திகட்டி, சூலை, சூதகவாயு முதலியன தீரும்.

பத்தியம் : வறுத்த உப்பு கூட்டவும்.

(வேறு)

வீரம் பலம், முத்திருக்கான் கள்ளிச் சாற்றால் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி மேற்படி பாலில் உலர்த்தி ஓட்டில் வைத்து, கவசம் செய்து குக்குடப்புடம் போடவும் பற்பமாகும். (சு. 22)

செய்முறை : வீரம் பலத்தை (35 கிராம்) முத்திருக்கான் கள்ளிச் சாற்றிலரைத்து வில்லைதட்டி உலர்த்தி, அக்கள்ளிப் பாலில் உலர்த்தி, ஓட்டில் வைத்து மூடி, புடம் போட்டெடுக்க பற்பமாகும்.

## வெங்கல பற்பம்

பற்பமாய் வெங்கலத்தைச் சொல்லக் கேளு
பசளையிலை தனையரைத்துக் கவச மாக்கி
அற்பமா யெண்ணாதே யோட்டில் வைத்து
அழகான கசபுடந்தா னாடிப் பாரு

நொற்பமாய் நீறியது வெள்ளை யாகும்
நுணுக்கமாய்ப் பணவெடைதான் நெய்தேனில் கூட்டி
உற்பனமாய்க் கொண்டிடவே சூலை தீரும்
உறைப்பான குன்மமுதல் வாய்வு தீரும்.

தீருமே சயரோக மிருமலுள் மாந்தை
சிவசிவா பென்னசொல்வேன் வெங்கலத்தி னேர்மை
ஊருமே யிருக்கின்றோர்க் கின்னு லப்பா
யோகவான வைத்தியத்துக் குறுதி யாகும்
பாருமே யிம்முறையைச் செய்து பார்த்தால்
பற்பத்தி னருமையெல்லாங் காண லாகும்
ஆருமே யறிந்தவர்க்கு யறிந்துச் சொன்னேன்
அந்தந்த நூல்பார்த்து யலைய வேண்டாமே.

(சு. 13. பா. 22, 23)

செய்முறை : பசளை இலையை அரைத்து வெங்கலத்தின்மேல் வைத்துக் கவசம் போலாக்கி, ஓட்டில் வைத்துக் கசபுடம் போட்டெடுத்து, ஆறினபின் வெள்ளையான நீறாகும்.

அளவு : பணவெடை (488மி.கி).

துணைமருந்துகள் : தேன், நெய்.

தீரும்நோய்கள் : சூலை, குன்மம், வாய்வு, சயரோகம், இருமல், உள்மாந்தை தீரும்.

## வெள்ளி பற்பம்

... ... ... ...

பாயுகின்ற வெள்ளியுட பற்பங் கேளு
பருத்ததொரு ரூபாயை வாங்கித் தானே.

வாங்கியே செம்முள்ளி யிலைய ரைத்து
மகத்தான கவசமாய்ச் செய்து கொண்டு
தேங்கியே குகைக்குள்ளே வைத்து மூடி
சில்லிட்டுச் சீலைசெய்து முமிப்பு டத்தில்
பாங்கியே வைத்திடவே நீறிப் போகும்
படுபாவி வெள்ளியது பற்ப மாச்சு
ஓங்கியே சிமிழுக்குட் பதனம் பண்ணு
உறவுகெட்ட குன்மமொடு நீர்க்கடுப்புச் செல்லாம்,

நீர்ச்செறுப்புத் தசையடைப்புக் கிறுகி றுப்பு
நெஞ்சிலுள்ள கபமெல்லாம் வாங்கிப் போகு
மூக்கிலுள்ள நீர்ப்பாய்ச்சல் பீனி சங்கள்
வாச்சமண்டைச் சூலையொடு புண்புரைகள் தானும்
... ... ... ...
வாங்கி விடும் வெள்ளியுட மகத்து வந்தான்
சூட்சமிந்த பற்பத்துக் கனுபா னந்தான்
சுகமான யமுக்கிராவேர்ச் சூரணந்தா னாமே.

ஆமிந்தத் தேன்விட்டு மண்ட லந்தான்
அகலாத நோய்களெல்லா மகண்டு போகும்
... ... ... ...

(சு. 13. பா, 34-37)

செய்முறை : பெரிய வெள்ளி ரூபாயை வாங்கி, செம்முள்ளி இலையை அரைத்துக் கவசமாக்கி அதனுள் வெள்ளியை வைத்து, சில்லிட்டுமூடி, சீலைசெய்து, உமிப்புடத்தில் வைக்க நீறாகும். அதைச் சிமிழுக்குள் வைக்கவும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : அமுக்கிராவேர்ச்சூரணம், தேன்.

தீரும் நோய்கள் : அமுக்கிராவேர்ச் சூரணத்திலுண்ண குன்மம், நீர்க்கடுப்பு, நீர்ச்செறுப்பு, தசையடைப்பு, கிறுகிறுப்பு, கபம், நீர்ப்பாய்ச்சல், பீனிசம், மண்டைசூலை, புண்புரைகள் நீங்கும். தேனில் ஒரு மண்டலம் உண்ண எல்லா நோய்களும் தீரும்.

## வெள்ளைக்குந்திருக்க நீறு

வெள்ளைக்குந் திருக்கன் நீறு விளம்புகிறேன் விரைந்து கேளு
பண்ணியின் பாலை விட்டுப் பரிந்தரைத் துண்டை செய்து
அண்ணலே யோட்டில் வைத்து அதன்மேலே ஓடு மூடி
மண்ணது சீலை செய்து வைத்திடு குக்கு டத்தில்.

குக்குடந் தன்னில் நீறிக் கூகைநீ றொப்ப தாகும்
மிக்கடா நீறு தன்னை வெண்ணெயி லருந்து வீரால்
பக்குடா கடுப்பு ரத்தம் பாரினில் பறந்து போகும்
மூக்குள்ள புண்ணுந் தீரும் வெண்ணெயில் விரைந்து போடே,

போடுபல் லுளைவுக் கெல்லாம் புண்ணெனப் பட்ட தெல்லாஞ்
சூடது கொண்ட புண்ணுஞ் சூலையின் புண்ணுந் தீரும்
ஆடிடும் பற்க ளெல்லாம் ஆணிபோ லுறைந்துப் போகுந்
தேடு வனங்குந் திருக்கஞ் செய்திடுந் திறங்கள் தானே.

(சு. 13.பா. 60-62)

செய்முறை : வெள்ளைக்குந்திருக்கத்தைப் பன்றியின் பாலை விட்டரைத்து உருண்டை செய்து, ஓட்டில் வைத்து ஓடு மூடி, சீலைசெய்து, குக்குடப் புடத்தில் வைக்கக் கூகையின் நீறு போலாகும்.

அளவு : வேண்டிய அளவு.

துணைமருந்து : வெண்ணெய்.

தீரும்நோய்கள் : இரத்தக்கடுப்பு, புண், பல்வலி, சூட்டினால் வரும் புண்கள், சூலையினால் வரும் புண்கள் தீரும். ஆடும் பல்லிறுகும்.

# சுண்ணம்

## அரிதாரச் சுண்ணம்

ஒரு வாரகனெடை மயில்துருசை உமிழ்நீர் விட்டரைத்து கற்பூர சிலாசத்து வராகன் ஒன்றுக்கு பொருக்கக்கட்டி இறக்கி மேல் பூசி அனலில் காயவைத்து வாட்டி, கரிபடாமல் துறவாய் எடுத்து வெந்நீர் விட்டரைத்து, குகை செய்து, அரிதாரம் வராகன் இரண்டு குகைக்குள் வைத்து, ஒரு உமித்தூளில் புடம் போடவும்.
(சு 22)

செய்முறை : மயில்துருசு ஒரு வராகன் (4. 2 கிராம்) வாங்கி உமிழ்நீரி... லரைத்து, கற்பூரசிலாசத்து 1 வராகன் (4. 2 கிராம்) வாங்கி அதன் மீது மயில் துருசைப் பூசி காய வைத்து வாட்டி, கரி படாமல் எடுத்து, வெந்நீர் விட்டரைத்து, குகைபோல் செய்து, அதனுள் அரிதாரம் 2 வராகன் (8 4கிராம்) வைத்துப்பக்குவமாகப் புடம் போட்டெடுக்கச் சுண்ணமாகும்.

## கல்லுப்புச் சுண்ணம்

கண்டுபார் கல்லுப்புச் சுண்ணஞ் சொல்வேன்
கசகாமல் பலமொன்று நிறுத்துக் கொண்டு
பண்டுகேள் செயநீரில் தோய்த்துத் தோய்த்துப்
பக்குவமா யேழுநாள் ரவியிற் போடு
விண்டுபார் பளிங்குபோல் வெளுறிக் கட்டும்
விதமாக அதின்மேலே வீரம் பூரம்
அண்டான புனுகோடு வழலைச் சுண்ணம்
அப்பனே யிவைநாலுஞ் சமனாய்க் கூட்டே.

கூட்டியே சாரத்தின் செயநீரா லாட்டிக்
குழம்பாகப் பீங்கானில் வழித்து வாங்கிப்
பூட்டியே உப்புதன்னைப் பிரட்டி வாங்கிப்
புகழான கடுஞ்சுண்ணக் குகையில் வைத்து
மூட்டியே மேல்மூடிச் சீலை செய்து
முயற்சியா யுவர்ப்பூவுங் கல்லுச் சுண்ணந்
தீட்டியே செய்துரவி முகத்தில் வைத்துச்
சிறப்பாகப் பத்தெருவில் புடத்தைப் போடே.

போடவே கல்லுப்புச் சுண்ண மாச்சுப்
பொன்னான வாதமிதி லடங்கிப் போச்சு
நாடவே லவணவகைக் கெல்லா மைந்தா
நலமான முற்குருவாம் நாட்டிப் பாரு
கூடவே சரக்குவகை எல்லாங் கட்டுங்
குருவாகும் பிரித்திட்டால் வேதை கோடி
தேடவே சூதமது கட்டிப் போகுஞ்
சிறப்பான காயசித்தி யோகசித்தி யாமே.

(சு 2. பா. 47-49)

செய்முறை : ஒருபலம் (35கிராம்) கல்லுப்பை நாள்தோறும் செய நீரில் தோய்த்து வெய்யிலில் ஏழு நாள் போடப்பளிங்கு நிறம் போல் வெள்ளையாகும். வீரம், பூரம், புனுகு, வழலைச் சுண்ணம் இவற்றைச் சம அளவு கலந்து, செயநீராலாட்டி, குழம்பாகப் பீங்கானில் வழித்து, உப்பை அதனுடன் கொட்டிப் பிரட்டவும். இதனைச் சுண்ணக் குகையில் வைத்து, மேல் மூடி சீலை செய்து வெய்யிலில் வைத்துப் பின் பத்தெருவில் புடம் போடக் கல்லுப்புச் சுண்ணமாகும்.

அளவு : தேவையான அளவு.

தீரும்நோய்கள் : வாதம், சூதம் தீரும். காயசித்தி, யோக சித்தியாகும்.

## காரக்கட்டுச் சுண்ணம், சீனக்கட்டுச் சுண்ணம்

நீர்க்கட்டு, நீர்க்கடுப்புக்குக் கொடுக்கவும்.

தும்பைச்சாறு பிழிந்து, காரக்கட்டியில் விட்டு, பீங்கானில் வைத்து, நாலுநாள் ரவியிலே வைக்கச் சுண்ணமாகும். இந்தச் சாறு காரத்துக்கு விட்டு ஒரு சாமம் அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, ஓட்டில் வைத்து மூடி, சீலை ரெண்டு செய்து, மூன்று விரட்டியில் வைக்கச் சுண்ணமாகும். சீனத்துக்கும் தும்பைச்சாறு

விட்டு ரெண்டு சாமம் அரைத்து, வில்லை தட்டிக் காய வைத்து, ஓட்டில் வைத்து மூடி, இரண்டு சீலை செய்து இரண்டு விரட்டியில் புடமிடச் சுண்ணமாகும். இந்தச்சுண்ணம் ஒருவராகனெடைவாய் நீறு விட்டு அரைத்து ஒரு வராகனெடை வீரக்கட்டிக்குப் பூசி காய வைத்து, தும்பை இலை அரைத்துக்கவசம் பண்ணி ரெண்டு சீலை செய்து ஒரு விரட்டியில் புடமிட வீரச் சுண்ணமாகும். (சு. 11)

செய்முறை : தும்பைச் சாற்றைப் பிழிந்தெடுத்து காரக்கட்டியில் விட்டுப் பீங்கானில் வைத்து, நான்கு நாள் வெய்யிலில் வைக்கவும். இந்தச்சாற்றைக்காரத்திற்கு விட்டு ஒருசாமம் (3மணி நேரம்) அரைத்து வில்லைதட்டிக் காய வைத்து, ஓட்டில் வைத்து ஒடு மூடி இரண்டு சீலைசெய்து, மூன்று விரட்டியில் வைக்கச் சுண்ணமாகும். சீனத்திற்கும் இவ்வாறே செய்ய சுண்ணமாகும். இந்தச் சுண்ணத்தில் ஒரு வராகனெடை (4. 2 கிராம்) வைத்து உமிழ்நீர் விட்டரைத்து வீரக்கட்டியின் மேல் பூசி காயவைத்து, தும்பை இலையை அரைத்துக் கவசம் செய்து இரண்டு சீலை செய்து, ஒரு விரட்டியில் புடமிட வீரச்சுண்ணமாகும்.

அளவு : வேண்டிய அளவு.

தீரும்நோய்கள் : நீர்க்கட்டு, நீர்க்கடுப்புத்தீரும்.

## தாளகச் சுண்ணம்

எய்தவே தாளகத்தின் சுண்ணஞ் சொல்வேன்
இதமான தாளகமோர் பலந்தா னொன்று
நய்யவே கற்சுண்ணத் துள்ளே வைத்து
நலமான தேசிநீர் விட்டு நீத்து
அய்தவே யிப்படியே யேழுதரம் நீத்து
அரிதாரஞ் சுத்தியடா அதீத மாகும்
எய்தபின்பு ஓட்டிவிட்டு அடுப்பி லேற்றி
ஈருள்ளிச் சாறும்ஒரு படிதான் தாக்கே.

தாக்கியே கமலம்போல வன்னி மூட்டிச்
சாறெல்லாம் வற்றவற்றச் சுறுக்குப் போடு
பாக்கியே ஒருசாம மான பின்பு
பரிவான குமரிச்சாறு படிதான் தாக்கு
ஆக்கியே கரந்தைசாறு படிதான் தாக்கு
அரிதாரங் கட்டுமது யிடைபோ காது
சோக்கியே மயங்காதே முழுக்கட் டாச்சுச்
சுண்ணமின்ன மாவதற்குச் சொல்லக் கேளே.

சொல்லக்கேள் பூநீறு வீரஞ் சூதஞ்
சுகமான சூடனொடு அண்டத் தோடு
மெல்லவே சமன்கொண்டு வர்க்கம் பாலும்
வெண்கருவு மிட்டரைத்துக் கவசஞ் செய்து
புல்லதின்மேல் சுண்ணாம்புச் சீலை செய்து
புரசுசுட்ட சாம்பலைத்தான் சட்டியி லிட்டு
அல்லவே அரிதாரம் நடுவே வைத்து
அதின்மேலே சர்ம்பலிட்டு அழுத்தி மூடே.

மூடியே சீலைசெய்து அடுப்பி லேற்றி
முசியாத தென்னனுட மட்டை கொண்டு
தேடியே கமலம்போல நாலு சாமம்
சிறப்பாக யெரியிட்டு ஆறவிட்டு வாங்கி
நாடியே தேவிபதம் பூசை பண்ணி
நலமான குருவென்று வைத்துப் போற்று
வாடியே நவலோகந் தன்னி லப்பா
மாட்டிடவே நூற்றொன்றில் மாத்தெட் டாமே.

எட்டான தாளகத்தின் பற்பந் தன்னை
இயல்பான அனுபானத் தோடே கொண்டால்
மட்டில்லா மேகமொடு கிரந்தியரை யாப்பு
மந்தார யீளையென்ற காச ரோகங்
கெட்டோமென் றோடுமே குட்ட நோயுங்
கெடியான மண்டலமே கொண்டா யானால்
இட்டமாந் தேகமது கற்றூ ணாச்சு
இம்மென்ற பேர்போச்சு யிசைந்து பாரே.

(சு. 2. பா. 81-85)

செய்முறை : தாளகம் 1 பலம் (35கிராம்) வாங்கி, கற்சுண்ணத்தின் உள்ளே வைத்து, தேசிநீர் விட்டு ஏழுமுறை ஆட்டி, ஈருள்ளிச்சாறு ஒருபடி (1.3லிட்) விட்டு ஓட்டில் வைத்து அடுப்பேற்றவும். ஒருசாமமானபின் (3மணிநேரம்) குமரிச்சாறு 1 படி (1.3 லிட்), கரந்தைச்சாறு 1 படி (1.3 லிட்) விட்டுப் பக்குவ மாகக் காய்ச்சவும். பூநீறு, வீரம், சூதம், சூடன், அண்டத்தோடு இவை சமஅளவு வாங்கி, வர்க்கம் பாலும், வெண்கருவும் விட்டு அரைத்துக் கவசம் செய்து, அதனுள் காய்ச்சிய மருந்தை வைத்து சுண்ணாம்புச் சிலைசெய்து, பக்குவமாக எரித்தெடுக்கச் சுண்ண மாகும்.

அளவு: தேவையான அளவு.

தீரும்நோய்கள் : மேகம், கிரந்தி, அரையாப்பு, மந்தார ஈளை, காசம், குட்டநோய் முதலியன தீரும்.

ஒரு மண்டலம் உண்ண உடம்பு திடமாகும்.

(வேறு)

சித்தண்டம் சவ்வெடுத்துப் போட்டு ஒருபடி அமுரியிலே ராத்திரிக்கு ஊறப்போட்டு, காலமே அடுப்பிலே வைத்து எரித்து, கொஞ்சமா சுண்டி இருக்கும் போது இறக்கி, குளிர ஆறி தண்ணீர் விட்டு அலம்பி, காயவைத்து, பழச்சாறு விட்டு, நாலு நாழி அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து, ஓட்டில் வைத்து, துருத்தியில் ஊதி, சுண்ணமா எடுத்துக் கொள்ளவும். சீனச் சுண்ணம் பண்ணிக் கொள்ளவும். சீனச் சுண்ணம் ஒரு பலமும், சித்தண்டச் சுண்ணம் மூன்று பலமுமாச் சேர்த்து பழச்சாறுவிட்டு ஒரு சாமம் அரைத்து வில்லைதட்டி நாலு நாழியரைத்தாலும் போதும். வில்லை காயவைத்து ஓட்டில் வைத்து மூடி, சீலை செய்து முப்பது விரட்டியில் புடமிட்டு எடுத்து, பத்திரமா வைத்துக் கொண்டு இதிலே இரண்டு பங்கும் முன்னஞ் சுத்தி பண்ணின தாளகம் ஒரு பங்குமாகச் சேர்த்து, பழச்சாறு விட்டு இரண்டு சாமம் அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து, புடம் முழுப்பிடச் சுண்ணமாகும். சகல வியாதிக்கும் கொடுக்கவும். கை கண்டது.

(சு.11)

செய்முறை : ஒரு படி (1.3 லிட்) அமுரியில் சித்தண்டம் சவ்வை யெடுத்துப் போட்டு இரவு ஊறவைத்து, காலையில் அடுப்பில் வைத்துக் கொதிக்க வைத்து, கொஞ்சமாகச் சுண்டிய உடன் இறக்கவும். ஆறியபின் தண்ணீர் விட்டுக் கழுவி உலர வைத்து,பழச்சாறு விட்டு நான்குநாழி (5.2லிட்) அரைத்து வில்லை தட்டிக் காயவைக்கவும். இதை ஓட்டில் வைத்துத் துருத்தியில் ஊதச் சுண்ணமாகும். சீனத்தைச் சுண்ணம் செய்து அது ஒரு பலமும் (35கிராம்) சித்தண்டச் சுண்ணம் மூன்று பலமும் (105 கிராம்) சேர்த்து, பழச்சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து, வில்லைதட்டிக் காயவைக்கவும். இதை ஓட்டில் வைத்து ஓடுமூடி, சீலைசெய்து முப்பது விரட்டியில் புடமிட்டெடுக்கவும். இதில் இரண்டு பங்கும் சுத்தி செய்த தாளகம் ஒரு பங்குமாகச் சேர்த்து பழச்சாறு விட்டு இரண்டு சாமம் (6 மணி நேரம்) அரைத்து வில்லைத்தட்டிக் காயவைத்து முழுப்புடமிடச் சுண்ணம் ஆகும்.

அளவு : வேண்டிய அளவு.

தீரும்நோய்கள் : பல நோய்களும் தீரும்.

(வேறு)

சித்தண்டத்தைச் சவ்வெடுத்துப் போட்டு, சிறுநீரிலே போட்டு நாலு நாழியெரிச்சு யெடுத்து, உலர்த்தி, பழச்சாறுவிட்டு, நாலு நாழி அரைச்சு வில்லை தட்டிக் காய வைத்து, அகலில் வைத்து மூடி சீலை மண் செய்து, துருத்தியில் வைத்து ஊதி எடுத்துக் கொள்ளச் சுண்ணமாகும். சினக்காரம் இரண்டு பலம் வாங்கி கல்வத்தில் போட்டு, பெரிய எலுமிச்சங்காயத்தனை வெண்ணெய் போட்டு இரண்டு நாழி அரைத்து வழித்து, குழிச்ச பெரிய ஓட்டில் வைத்து மேலோடு சும்மா மூடி வைத்து, துருத்தியிலே வைத்து ஊதவும். ஊதச் சேர்த்தும் மறுபடிவெளுக்கும். அப்போது சலம் உண்டாகும். கண்ட சலத்தைக் குறட்டாலே ஒட்டயெடுத்து ஊற்றிப்போட்டு மறுபடியும் வைத்து ஊதவும். ஊதும்போது மஞ்சள் நிறமாகும். அப்போதுயெடுத்து ஆறவைத்தால் வெளுத் திருக்கும். தாளகம் இரண்டுபலம் வாங்கி, தென்னங்கள்ளு விட்டு சுக்கான் சுட்ட நீரிலே தாளகம் வைத்து, கள்ளுவிட்டு ரெண்டுபடி கள்ளில் அரைப்படி நீறு போட்டுக் கலக்கி, தாளகக்கட்டியை அதிலே கூடப்போட்டு, சுண்டமட்டும் யெரித்துஎடு. கழுவிக்காய வைத்து, இந்தப்படி மூன்று சுத்தி மூன்றுதரம் எரித்து அந்தக் கட்டியைச் சின்னச்சின்னக் கட்டியாகப் போட்டுஎரிக்கவும். மறுபடியும் கழுவி எடுத்துக் கொண்டு காய வைத்து இந்தச் சுத்தித் தாளகம் இரண்டு பலமும் முன்சீனச் சுண்ணம் ஒரு பலமும் முன் அண்டச்சுண்ணம் 1 பலமும் இப்படி நான்கு பலமும் கல்வத்தில் போட்டு, சங்குசுட்ட நீரிலே தண்ணீர் விட்டு வைத்து, பொங்கி தெளிந்த நீரெடுத்து, இந்தத் தண்ணீர்விட்டு முன் அவித்ததில் விட்டு, ஒரு சாமம் ரெண்டு சாமம் காக்கை நீர்போலே தெளிந்த சங்குத் தண்ணீரெடுத்துவிட்டு அரைத்து, அரைவிரல் கனமாக இரண்டு வில்லையாகத்தட்டி, நன்றாக நாலுநாள் காயவைத்து அகலில் வைத்து மேலகில் மூடி, ஒரு சீலை செய்துமுப்பது விரட்டி யில் புடமிடச் சுண்ணமாகும். ஒரு பணவெடை அந்தி சந்தி துளசிச் சாற்றிலே, அவரை இலைச்சாறாகிலும், சிறுநீராகிலும், தேனா கிலும் அனுபானம் பண்ணி ஏழுநாள் சாப்பிடவும். இருக்கிற நேரம் பார்த்துக் கொண்டு இரண்டு முறை, மூன்றுமுறை பத்து நாள் நிறுத்தி வைத்துச் சாப்பிடவும். சகல வியாதியுந்தீரும். பத்தியம் பழைய சோறு, நல்லெண்ணெய் ஆகாது. ஏழுநாள்

மருந்து சாப்பிட்டு, எட்டாம்நாள் கஞ்சி தேய்த்து முழுகி, பத்தாவது நாள் விளக்கெண்ணெய் தேய்த்து அரப்புத் தேய்த்து முழுகவும். நான்கு நாளைக் கொருமுறை அஞ்சாறு முறை விளக்கெண்ணெய் தேய்த்து முழுகவும். (சு.11)

செய்முறை : சித்தண்டம் சவ்வெடுத்து விட்டு சிறுநீரில் போட்டெடுத்து, உலர்த்தி, பழச்சாறு விட்டரைத்து, வில்லை தட்டிக் காயவைத்து,சீலைமண் செய்து, பக்குவமாய் ஊதியெடுக்க சுண்ணமாகும். சீனாக்காரம் 2 பலம் (70 கிராம்) வாங்கி, கல்வத்திலிட்டு, எலுமிச்சங்காயளவு வெண்ணெயும் போட்டரைத்து ஓட்டில்வைத்து மேலோடு மூடி, பக்குவமாக ஊதியெடுக்க வெளுப்பாகும். தென்னங்கள் 2 படியில் (2.6லிட்) ½படி (650 மி. லிட்) நீறு போட்டுக் கலக்கி அதில் தாளகம் 2 பலம் (70 கிராம்) போட்டு பக்குவமாக எரித்துக் கழுவிக் கொள்ளவும். இவற்றில் தாளகம் 2 பலம் (70 கிராம்) முன்சொன்ன சீனச்சுண்ணம் (35 கிராம்) அண்டச்சுண்ணம் 1 பலம் (35 கிராம்) எடுத்து, சங்கு சுட்ட நீரிலரைத்து வில்லை தட்டிக் காய வைத்து, அகலில் வைத்து மூடி புடமிடச் சுண்ணமாகும்.

அளவு : பணவெடை (488 மி.கி) காலை, மாலை ஏழுநாட்கள் உண்ணவும்.

துணைமருந்து : துளசிச்சாறு (அ) அவரை இலைச்சாறு (அ) சிறுநீர் (அ)தேன்.

தீரும்நோய் : எல்லா நோயும்தீரும்.

பத்தியம் : பழையசோறு, நல்லெண்ணெய் ஆகாது. ஏழு நாட்கள் மருந்து உண்டு எட்டாவது நாள் கஞ்சியும் பத்தாவது நாள் விளக்கெண்ணெயும், அரப்பும் தேய்த்து முழுகவும். தொடர்ந்து நான்கு நாட்களுக் கொருமுறை விளக்கெண்ணெய் தேய்த்து முழுகவும்.

## துருசுச் சுண்ணம்

நந்தியாவட்டப் பூவை அரைத்து, துருசுக்குக் கவசங்கட்டி, ஒரு சீலை செய்து, ஒரு வராகனெடை துருசுக்கு கவசம் பண்ணி இரண்டு விரட்டி புடமிடச் சுண்ணம்.

மறுமுறை : களிப்பாக்கு, கற்பூரவெற்றிலை, சங்கு, சுட்ட சுண்ணாம்பு தடவி களிப்பாக்கு நன்றாக மென்று துருசுக்கட்டி மறைய பீங்கானில் கட்டி மிதக்க உமிஞ்சு, அஞ்சு நாழியில்

ரவியிலே வைத்து, மறுபடி அந்தக் கட்டி எடுத்து ஓரெலைத் தாமரையை நன்றாகக் கசக்கிக் குழம்பாக்கி, இந்தக்குழம்பை முனங் கட்டிக்குக் கவிசமாகக் கட்டி, அஞ்சு நாழியில் ரவியிலே வைத்து மறுபடி எடுத்து ஆகாசத் தாமரையை இடித்துச் சாறு பிழிந்து அஞ்சாறு துணியிலே சாத்திலே துணியை ரெண்டுதரம் காயக்காய நிழலிலே உலர்த்தி இந்தத் துணியை முன் துருசுக்கு நாலுசீலை சுத்தி, சின்ன அகிலிலே கொஞ்சம் சாணி வைத்து, அதுபோல சீலைக்கவசம் வைத்து மேலகில் மூடி, சந்துக்கு நாலு சீலை செய்து ஐந்து விரட்டிப் புடமிடச் சுண்ணமாகும். (சு.11)

செய்முறை : 1. துருசு 1 வராகன் (4.2 கிராம்) வாங்கி, நந்தியாவட்டப்பூவை அரைத்துக் கவசம் செய்து இருவிரட்டியில் புடமிடச் சுண்ணமாகும்.

2 களிப்பாக்கு, கற்பூரவெற்றிலை, சங்கு, சுட்ட சுண்ணாம்பு இவற்றைச் சேர்த்து மென்றெடுத்து, துருசுக் கட்டியில் பூசி வெய்யிலில் வைத்து, ஓரிலைத் தாமரையின் சாற்றினால் கவசம் செய்து கொள்ளவும். ஆகாயத் தாமரையின் சாற்றைத் துணி யில் ஊற்றிக்காய வைத்தெடுத்து, துருசிற்குச் சீலைசுற்றி அகலில் வைத்து மேலகல் மூடி, சீலை செய்து, பக்குவமாக புடமிட்டெடுக்கச் சுண்ணமாகும்.

(வேறு)

துருசு கட்டியாக வாங்கி வாய் நீரிற் போட்டு ரவியுலர்த்தி அப்புறம் நாய்க் கிட்டத்தை வாய்நீர் விட்டரைத்து, அதன்மேற் பூசி ரவியுலர்த்தி, மேற்புறம் கிலுகிலுப்பை வேரரைத்து, பொதித் துலர்த்தி, சீலை மண் செய்து, காடைப் புடம்போட்டு எடுக்கவும். நீரிப்போகும். கை கண்டது. (சு.15)

செய்முறை : துருசுக் கட்டி வாங்கி, வாய் நீரில் போட்டுலர்த்த வும். நாய்க்கிட்டத்தை வாய்நீர் விட்டரைத்து, துருசுக்கட்டி மேல்பூசி உலர்த்தி, கிலுகிலுப்பை வேரரைத்துப்பூசி, சீலைமண் செய்து, பக்குவமாகப் புடம்போட்டெடுக்கச் சுண்ணமாகும்.

## நவசாரச் சுண்ணம்

கேளப்பா நவசாரம் பலந்தா னொன்று
கெடியாகச் சொல்லுகிறேன் சூட்ச மாக
வேளப்பா யதினுடைய போக்குத் தன்னை
விரித்துநான் பாடவென்றால் பனையோ யில்லை

நாளப்பா கோடியுக மலைந்து பார்த்தேன்
நலமான அணுவள வுமெரு வாகச்
சூளப்பா சார்வித்தை சுருக்கிச் சொல்வேன்
சுகமான செயநீரில் தோய்த்தி டாயே.

தோய்த்துமே யேழுநாள் ரவியிற் போடு
துப்பரவாய்க் காய்ந்தபின்பு யெடுத்துக் கொண்டு
ஆய்த்திடவே பொரிகாரஞ் சீனக் காரம்
அப்பனே சூடனொடு வீரம் பூரம்
நாய்த்திடவே பழச்சாற்றி லரைத்து மைபோல்
நலமான சாரத்தின் மேலே பூசி
ஓய்த்திடவே சட்டியிலே கற்சுண்ண மிட்டு
உத்தமனே சாரத்தின் கட்டி வையே.

வைய்யப்பா அதின்மேலே கற்சுண்ண மிட்டு
வாகாக மேல்மூடிச் சீலை செய்து
அய்யப்பா அடுப்பேற்றி ஆவரையின் விறகால்
அப்பனே சாமந்தான் கமலம் போலே
மெய்யப்பா யெரித்துப் பின்னால் விட்டுவாங்கு
விதமான சாரமது சுண்ண மாகும்
பொய்யப்பா சொல்லவில்லைச் சாரச் சுண்ணம்
புகழான அண்டரண்டம் நீறிப் போமே.

போமெனவே சரக்கான தறுபத்தி னாலும்
பூட்டிடவே பஞ்சுபோலப் பொருமி நீறும்
வேமேதான் நவலோக மெல்லாம் நீறும்
வெகுசுறுக்கு வெகுசுறுக்கு வேதை கோடி
ஆமேதான் சுண்ணத்தில் வீரம் பூரம்
அனைத்துமெள்ள வாய்நீரால் துருசுக் கப்பி
நாமேதான் சுண்ணாம்புச் சீலை செய்து
நாட்டியே பத்தெருவில் புடத்தைப் போடே.

போடவே நீறியது சுண்ண மாகும்
புகழான துருசுனுட போக்கு மெத்த
நாடவே சூதமது விறைத்துப் போகும்
நலமான சாரத்தா லெல்லா மாச்சு

வாடவே யிதைவிட்டால் வேதை போச்சு
    வழலையென்ற நாமமது சாரத் தாலே
தேடவே சாரமென்ற சுண்ணந் தன்னைச்
    சிறப்பான பனியில்வைக்கச் செயநீ ராமே.

நீரான செயநீரில் வீரம் பூரம்
    நிலையாக மத்தித்து வைத்துக் கொண்டு
கூறான நாகத்தை உருக்கிச் சாய்க்கக்
    குடிகெடுத்த புகையேழுங் கட்டிப் போகும்
ஆறான நாகத்தி னெடையே தங்கம்
    அந்தெடைக்குச் சூதமுடன் கெந்தி கூட்டிப்
பேறான குலாமல்லிச் சாற்றா லாட்டிப்
    பொடிபண்ணிக் காசியென்ற மேருக் கேற்றே.

ஏற்றியே வாலுகையில் தீயை மூட்டி
    எரித்திடுவாய் பனிரண்டு சாமந் தானும்
ஆற்றியே ஆறிவிட்டு யெடுத்துப் பார்த்தால்
    அருணநிறம் போலிருக்குஞ் செந்தூர மப்பா
போற்றியே ஒருவருடன் பேச வேண்டாம்
    புகழான நவலோக மெல்லாம் பொன்னாந்
தேற்றியே செந்தூரந் தேனி லுண்ணச்
    சிறப்பான சட்டைகக்கிப் பாலை யாமே.

பாலையாஞ் செயநீரி லின்னங் கேளு
    பாசாண வற்கங்க ளறுபத்தி நாலுஞ்
சாலவே தோய்த்துமெள்ள வாட்டும் போது
    சணத்திலே மெழுகாகும் வேதை யாகும்
ஆலையாஞ் சூதத்தில் செயநீர் குத்தி
    அரைத்திடவே சூதமது அட்டை போலாம்
மாலையாஞ் சூதத்தில் சாரணையே செய்யில்
    மாசற்ற தச்சுடரை மருவ லாமே.

மருவவே லிங்கத்தில் பறித்தகடு சுற்றி
    மகத்தான செயநீரில் தோய்த்து வாட்ட
உருகியே பறியெல்லா முள்ளே வாங்கி
    உற்றதொரு லிங்கமது மெழுகு மாகும்
பருகியே வெள்ளியிலே நூற்றுக் கொன்று
    பாய்ச்சிடவே பத்தையு மாத்துக் காணுங்

கருதியே சாரத்தின் செயநீராலே
கண்டுகொள்ளா வேதையுமாங் கண்டு பாரே.
(சு.2. பா.37-46)

செய்முறை : ஒரு பலம் (35 கிராம்) நவசாரத்தை செயநீரில் ஏழு நாட்கள் தோய்த்தெடுத்து வெய்யிலில் காயவைக்கவும். பொரிகாரம், சீனக்காரம், சூடம், வீரம், பூரம் இவற்றைப் பழச் சாற்றில் மைபோலரைத்து நவசாரத்தின் மேல் பூசவும். சட்டியில் கற்சுண்ணம் வைத்து அதன்மேல் நவசாரம் வைத்து மேலும் கற்சுண்ணம் கொட்டி மேல்மூடி, சீலை செய்து ஆவரையின் விறகால் கமலம்போல் ஒரு சாமம் தீயெரிக்கச் சுண்ணமாகும்.

(வேறு)

நிச்சய மாகச் சொல்வோம் நீலமாந் துருசுப் போக்கு
வச்சதோர் வங்கத்தோடு யெடைக்கெடை யிரதம் வார்த்து
மெச்சுமிந் தெடைக்கு நல்ல வெடியுப்புக் கூடக் கூட்டி
உச்சிதம் வாய்நீ ராலே யூறவரைத் துலர்த்தி டாயே.

வட்டமா யோட்டில் வைத்து வளையவே சீலை செய்து
திட்டமாங் குட்டந் தானும் சென்றிடச் சுண்ண மாகும்
இட்டமாய்ச் சிவந்து தானால் முறைப்படி யுப்பைக் கூட்டி
திட்டமா யரைத்து முன்போல் புடத்தினி லதிகச் சுண்ணம்.

சுண்ணத்தை வாய்நீ ராலே சுழற்றியே யரைத்துக் கொண்டு
விண்ணொத்த துருசுக் கட்டி கப்பியே ரவியில் போடு
முன்னொத்த மூன்று நாளில் முழுவெள்ளை யாகும் பாரு
பொன்னொத்த சீலை செய்து போட்டிடு காடை யொன்றே.

என்றிதை யெடுத்துப் பாரு இயல்புள்ளச் சுண்ண மாகுங்
கன்றிதைக் கண்ட பேர்க்குக் கலியெல்லாம் நீங்கிப் போகும்
பன்றிதை ரசத்துக் குக்கால் பணவெடை யளவ தாக
மன்றினிற் கொன்று போடு வாயினி லுமிழ்நீ ராலே.

வாயினி லுமிழ்நீ ராலே மத்தித்து யுருட்டிக் கொண்டு
காயினி உமியோட் டுள்ளே கரியினி லுருக்கிக் கொண்டு
மாயினி யாயி பாதந் தன்னையே வணங்கி நித்த
மாயினி யிதனைக் கொண்டு யாடலாங் கவர்கள் கோடி.

கோடியென் றுரைத்தேன் கோடா கோடியு மிதுக்குள் ளாகும்
வாடியே மயங்க வேண்டாம் வைத்திடு துருசு சுண்ணந்
தேடியுங் கிடையா தப்பா தெருவெல்லாங் கிடங்குமோசொல்
பாடியும் படித்து வென்ன பாருமிந் நூல்கிட் டாதே.

கிட்டாதே போன தேதோ கிடைத்தவர் கொடுக்க மாட்டார்
கட்டாகத் தந்த பேர்கள் காலினில் விழுந்து போற்றிச்
செட்டாக யிருக்க லாகாத் திரவியஞ் செய்வ தென்ன
முட்டாளாய்ப் போகா மல்தான் முதுகூற முறையாய் வாங்கே.
(சு.13. பா. 92-98)

செய்முறை : வங்கமும் இரதமும் சமஎடை வாங்கி இந்த எடைக்குச் சம அளவாக வெடியுப்பும் கூட்டி வாய் நீராலே அரைத்து உலர்த்திடவும். ஓட்டில் வைத்துச் சீலை செய்து புடம் போட்டுச் சிவந்தபின் வெடியுப்பைக் கூட்டி மீண்டும் அரைத்து துரிசுக் கட்டியின் மேல் பூசிக் காய வைத்தெடுத்துச் சீலை செய்து புடம் போடச் சுண்ணமாகும்.

அளவு : கால் பணவெடை (122 மி.கி).

# சூரணம்

## அனலாதிச் சூரணம்

கேளப்பா மேல்நோக்கும் வாய்வுக் கெல்லாங்
கிருபையினா லனலாதிச் சூர ணந்தான்
நாளப்பா பிரண்டைத்தூள் படியும் நாலு
நலமான சதுரக்கள்ளிப் பட்டை நாழி
ஆளப்பா புளித்தோலின் படிதா னாழி
அப்பனே அரைப்படிதா னுப்புத் தானும்
நீளப்பா யிவையெல்லாந் தூளா யாட்டி
நேராக வடிகட்டிக் கரகத் துட்டே.

கரகத்திற் பொடியங்கே வெருகடிதான் தூக்கிக்
கர்த்தாவை தியானித்து உண்ணச் சொல்லு
வரவத்துத் திண்ணாமல் பத்தியமாய்த் தின்னு
மைந்தனே யுப்பன்றி மற்றொன் றாகா
விரவத்த சன்னிமுத லுன்மத்தம் விகற்பமிகு
விடங்களொடு குமரகண்டன் காமாலை வேர்வை
எரவத்த முசல்வலியும் பித்த சோகை
எண்ணெயிலே பறந்துபோ முண்மை பாரே.

(சு.1.பா. 413-414)

செய்முறை : பிரண்டைத்தூள் 4 படி (5.2 லிட்), சதுரக் கள்ளிப்பட்டை 1 நாழி (1.3 லிட்), புளித்தோல் 1 நாழி (1.3 லிட்) உப்பு அரைப்படி (650 மி.லிட்) இவற்றைச் சேர்த்துத் தூளாக ஆட்டி வடிகட்டிப் பொடியாக்கிக் கொள்ளவும்.

அளவு : வெருகடி அளவு.

தீரும் நோய்கள் : சன்னி, விடங்கள், குமரகண்டன், காமாலை, முசல்வலி, பித்தசோகை தீரும்.

பத்தியம் : உப்பைச் சேர்த்து மற்றவற்றைத் தள்ளவும்.

## ஏலாதிச் சூரணம்

அய்யாசொல் லேலாதி சூர ணத்தை
அறையிறேன் ஏலமில வங்கந் திரிகடுகு
எய்யாத வால்மிளகு யிலவங்க மிரண்டு
இயலான சாரணை அரத்தை மதுரம்
பொய்யாகச் செவியமொடு வெட்டிலா மிச்சு
புகழ்மீறு அதிவிடயந் திப்பிலியின் ஏலம்
நைய்யாகேள் திரிபலையுந் தாளிசபத் திரியு
நற்கடுகு ரோகணியு நன்னாரி கூட்டே.

கூட்டடா குரோசாணி அக்கிராக் காரம்
கொத்தமல்லி தொடரவுங் கோரோசனை குங்குமப்பூக்
கூட்டடா முத்தங்காய் கிராம்புசிறு நாகங்
கொடியசா திக்காயும் பத்திரியுங் கூட்டு
கூட்டடா கற்கடக சிங்கிபொரி காரம்
புனிதமுறும் பேரீச்ச முந்திரிகைப் பழமுங்
கூட்டடா அதில்நல்ல சீனிகற் கண்டு
கூகைநீறு மாதுளத்தின் பழத்தோடு மாமே.

ஆமப்பா கூவிளத்தின் விளாம்பழத் தின்தோடு
அழகான தாமரைப்பூத் தாதுடன்நெற் பொரியும்
ஆமப்பா நல்லகெந்தி பருத்திவிதைப் பருப்பும்
அமிர்தசர்க் கரையுடனே நிலப்பனையின் கிழங்கு
ஆமப்பா தயிர்க்கட்டி தெற்றினுட வித்தும்
அப்பனே வகைக்கொன்று கழஞ்சு ரெண்டு
ஆமப்பா சீனியிந்த எடைதான் சேரு
அனல்படா ரவிமுகத்தில் யுலரவே உலர்த்தே.

உலத்தியிந்த மருந்தெல்லா மிடித்துவடி கட்டி
ஒக்கவே சீனியிட்டு கலந்துசூரண மாக
நலத்தவொரு புதுக்கலசத் திட்டுவண்டு கட்டி
நாயுகர்க்குந் பூசைசெய்து நல்லதினம் பார்த்து

புலத்தியனே அந்திசந்தி வெருகடி சூரணத்தைப்
    பூட்டடா இஞ்சிதட்டிப் பிழிந்தசா றதிலே
சலத்தைபிற மண்டலந்தா னருந்தி னாற்கால்
    திசைகெட்டு ஓடுமந்த வாதமொடு வாய்வே.

வாய்வென்ற தெல்லாம் பொருமல் தீரும்
    வயிற்றுவலி யுப்பிசம்போம் பசியுண் டாமே
நேயமுட னறுந்தேனி லிப்படியே அருந்த
    நிலைகெட்டுப் பிரிந்தோடுஞ் சயமே லீளை
மாயமாய்ப் பறத்திவிடு மக்கினிமந் தத்தை
    வயிற்றுளைச்சல் சிலேற்பனத்தில் வந்தடுத்த தெல்லாம்
பாயுமுன்னே விட்டோடுந் தேகசுக மாகும்
    பசுவின்நெய் வெண்ணெயிலே பாய்ச்சக் கேளே.

கேளப்பா யிப்படியே அருந்தி னாற்கால்
    கிளர்பித்த வத்தனையு மேகவெட்டை தீருங்
கேளப்பா தேகவறட்சி வற்றி யிருந்த
    கேடுடலாம் பூரிக்கு மேகநீர் நிற்கும்
கேளப்பா சூட ாறுந் தாகம் போக்குங்
    கிருபைபெறு தசையத்தி வெதுப்பும் போக்குங்
கேளப்பா பச்சரிசிக் கழுநீரி லூட்ட
    கதிகெட்டு ஓடுமடா நீர்க்கடுப்பு வெப்பே.

வெப்படங்குந் தாதுநட்டம் விளங்கிக் காணும்
    வீரியமா மாதுளத்தின் பழச்சாற்றி லருந்து
ஒப்பரிய முலைப்பா லிலமிர் தமுறு
    மோகோகோ ஊப்புசங்க ளெல்லாந் தீருஞ்
செப்பரிய முத்தி காயத் தேற்றி
    செய்கிராணி மூலத்து யிரைச்சலோடு கழிச்சல்
தப்பாமல் நின்றுபோம் பழச்சாறு தேனில்
    தப்பாமல் தின்றிடவே காமாலை போமே.

போமப்பா தலைநோவு பித்தங்க ளனைத்தும்
    பொடிதூளாய்ப் போவதற்கு அனுபானஞ் சொன்னோம்
நாமப்பா யின்னம்வெகு அனுபான முண்டு
    நயங்கண்டு மேற்றினால் குடைச்சல் மலம்பித்தம்

வேமப்பா நெஞ்செரிப்பு கால்கை வயிறெரிவு
மேலேற்ப மத்தியோடு மூட்சை போக்கும்
ஆமப்பா கணங்காந்த லாயாசந் திரட்சி
அடிவயிற்றுக் கனங்களும்போ மமிர்த மாமே.

அமிர்தமென்ற மருந்துக்குப் பத்தியத்தைக் கேளு
அசடான புளிகசப்பு புகையிலையு மாற்று
திமிர்தமெனும் பச்சைமீன் மாங்கிசங்கள் தள்ளு
தெளிவதற்குச் சுத்திசெய்த உப்புக் கூட்டு
குமுர்தமெனும் பசுவின்பால் நெய்துவரை யாகுங்
கூறரிய அவரைபுடல் பீர்க்கமுருங்கைப் பிஞ்சாகுங்
கமுர்தாத முளைத்தண்டு கத்திரிப்பிஞ் சாகுங்
கருவாடு மாங்சிசங்க ளுலர்ந்தையுங் கூட்டே.

கூட்டியது மிளகுமஞ்சள் வெங்காயம் வெள்ளுள்ளி
கூறரிய அண்டமொடு சுடு மீனும்
கூட்டியது வெந்தயமுங் காயஞ் சீரகமும்
குறிப்பான கருவேம்பு தூதுவளை சமூலங்
கூட்டியது யிவ்வண்ணம் பத்தியமுஞ் சொன்னோம்
கூட்டாத பதார்த்தத்தைக் கூட்ட வேண்டாங்
கூட்டியிந்தப்படி நடக்கத் தேக்கங் காணுஞ்
சொல்லாத கருவிடைய மெல்லாஞ் சொன்னோமே.
(சு.1.பா.919-928)

செய்முறை : ஏலம், இலவங்கம், திரிகடுகு, வால்மிளகு, சாரணை, இலவங்கம், அரத்தை, அதிமதுரம், செவ்வியம், வெட்டிவேர், இலாமிச்சு, அதிவிடயம், திப்பிலி, ஏலம், திரிபலை, தாளிசபத்திரி, கடுகுரோகணி, நன்னாரி, குரோசாணி ஓமம், அக்கிராக்காரம், கொத்தமல்லி, கோரோசனை, குங்குமப்பூ, முத்தங்காய், கிராம்பு, சிறுநாகம், சாதிக்காய், சாதிபத்திரி, கற்கடகசிங்கி, பொரிகாரம், பேரீச்சம், முந்திரிகைப்பழம், சீனிகற்கண்டு, கூகைநீறு, மாதுளம் பழத்தின்தோடு, கூவிளம்பழத் தோடு, விளாம்பழத்தின்தோடு, தாமரைப் பூத்தாது, நெற்பொரி, நல்லகெந்தி, பருத்திவிதைப் பருப்பு, அமிர்தசர்க்கரை, நிலப்பனைக் கிழங்கு இவை வகைக்கு இரண்டு கழஞ்சும் (10.2 கிராம்), இந்த எடைக்குச் சீனியும் சேர்த்து, சூரியவெளிச்சத்தில் உலர வைக்கவும். உலர்ந்த இந்த மருந்துகளை இடித்து வடிகட்டி, சீனியிட்டுக் கலந்து, சூரணமாக வைத்துக் கொள்ளவும்.

அளவு : வெருகடி அளவு. காலை, மாலை ஒரு மண்டலம்.

துணைமருந்து : இஞ்சிச்சாறு, தேன், பசுவின்நெய், வெண்ணெய், பச்சரிசிக் கழுவிய கழுநீர், மாதுளம் பழச்சாறு முலைப்பால்.

தீரும்நோய்கள் : வெருகடி சூரணத்தை காலை, மாலை இஞ்சிச்சாற்றில் ஒருமண்டலம் உண்ண,வாதமும். வாய்வும் தீரும்' வயிற்றுவலி, வயிறுப்பிசம் தீரும். தேனில் இப்படி உண்ண சயம், ஈளை, உட்டிணமந்தம், வயிற்றுளைச்சல், சிலேற்பனம் தீர்ந்து உடம்பு சுகமாகும். பசுவின் நெய், வெண்ணெயில் அருந்தினால் பித்தம். மேகவெட்டை, உடல்வறட்சி, மேகநீர் முதலியன தீரும். வற்றியஉடல் பூரிக்கும். உட்டிண தாகந் தீரும். உடல்வெதுப்பும் தீரும். பச்சரிசி கழுவிய கழுநீரில் உண்ண நீர்க்கடுப்புத் தீரும். தாது நட்டம் தீரும். மாதுளம் பழச்சாற்றிலும், முலைப்பாலிலும் உண்ண உப்புசங்களெல்லாம் தீரும். தலைநோவு, பித்தங்கள் நீங்கும். மேலும் குடைச்சல், மலம், பித்தம், நெஞ்செரிப்பு. கால்கை, வயிற்றெரிவு, கணங்காந்தல், ஆயாசம், திரட்சி, அடிவயிற்றுக்கனமும் நீங்கும்.

பத்தியம் : புளி, கசப்பு, புகையிலை, பச்சைமீன், இறைச்சி, தவிர்க்கவும். சுத்திசெய்த உப்பு, பசுவின்பால், நெய், துவரை, அவரை, புடல், பீர்க்கு, முருங்கைப்பிஞ்சு, முளைத்தண்டு, கத்தரிப் பிஞ்சு; கருவாடு, உலர்ந்த இறைச்சியையும் கூட்டலாம். மிளகு, மஞ்சள் வெங்காயம், வெள்ளுள்ளி, அண்டம், சுடுமீன், வெந்தயம், காயம், சீரகம், கருவேம்பு, தூதுவளை சமூலம் சேர்க்கவும்.

## கந்தகச் சூரணம்

கந்தகம் 6 பலம், பசுவின் பாலில் சுத்தி பண்ணி, திரிகடுகு, திப்பிலி, ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, கொடுவேலிவேர், கோட்டம், சணல்விதை, இவை வகைக்கு பலம் கந்தகமுங் கூட்டியிடித்து, சீலை வடிகொண்டுவைத்துக் கொள்ளவும். இது தேனில், நெய்யில், சர்க்கரையில்,பாலில், சீனி இருபங்கு, சூரணமொரு பங்குமாகத் தின்ன ஈளையிருமல் உள்மாந்தை, குட்டம், கவுசிய வாய்வு, கிரந்திப்புண், சூலைக்கடுப்பு, சிரங்கு, படர்தாமரை போகும். (சு.12)

செய்முறை : 6 பலம் (210 கிராம்) கந்தகத்தைப் பசுவின் பாலில் சுத்தி செய்து கொண்டு, திரிகடுகு, திப்பிலி, ஏலம்,

இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, கொடுவேலி வேர், கோட்டம், சணல்விதை இவை வகைக்கு ஒருபலமும், (35கிராம்) கந்தகமும் சேர்த்திடித்துச் சீலையில் வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

அளவு : சீனி இருபங்கு, ஒரு பங்கு சூரணம்.

துணைமருந்துகள் : தேன், நெய், சர்க்கரை, பால்.

தீரும் நோய்கள் : ஈளை, இருமல், உள்மந்தை, குட்டம், கவுசிய வாய்வு, கிரந்திப்புண், சூலைக்கடுப்பு, சிரங்கு, படர் தாமரை தீரும்.

## கருங்குருவைச் சூரணம்

மாதமொன்றில் நல்லெண்ணெய் முழுகும் போது
மகத்தான கிரந்தியொடு சூலை தீரும்
பேதமன்றி யின்னமொரு சூர ணந்தான்
பேசுகிறோம் கருங்குருவை அரிசிபச்சை யாக
வேதமென்ற படிஅரிசி கால்தா னப்பா
வெற்றிலையின் சாற்றி விட்டு மப்பா
நீதமென்ற மறுநாளிற் சாற றித்து
நிழலுலர்த்தி மேல்மருந்து நிகழ்த்து வோமே.

ஓமென்ற நல்லமின்னி முசுமு சுக்கை
ஓரொன்று ஒருபிடி வெற்றிலைதா னெட்டு
நாமென்ற நிழலிலிட்டுச் செருக்க வாட்டல்
நன்றாகச் சூதமுக்கால் கழஞ்சு தூக்கி
தாமென்ற வெற்றிலைச்சாறு தன்னை விட்டு
தான்முறித்து யெல்லாமொன் றாகச் சேர்த்து
ஆமென்றுயிடித்துமைபோற் றூள தாக்கி
அப்பனே நிழலுலர்த்திக் கலசத் தூட்டே.

கலசமிருபது சரக்கும் அதிலே யிட்டுக்
கழச்சிக்காய்ப் பிரமாணம் நாளொன் றுக்கு
நிலைபசுவின் தயிர்தன்னில் குழைத்து மூறா
நீயுருட்டிக் கொடுபத்தியந் தயிருஞ் சோறாம்
நலமிருபத் தோறாநாளும் புளிப்பு கைப்பும்
நல்காதே சலமானவயிறு ளைச்சல்ரெத்தங் கண்டால்
சொல்லரிய தயிரில்வெல்லஞ் சேர்த்துக் கொள்ளச்
சூடுரெத்த கடுப்புளைச்ச லற்றுப் போமே.

தூரப்போம் யேரண்டத் தெண்ணெய் சேர்த்துச்
சுகமாகுங் குளிர்ந்தசலந் தன்னில் மூழ்கு
பாரிப்போம் பத்து முகைப்பா சொன்னேன்
பறக்குமடா சூலைபதி னெட்டுப் புண்கள்
சாரிப்போங் கிரந்திபதி னெட்டுந் தீருந்
தணியாத வாய்வெல்லாந் தான்கெட் டோடும்
பூரிப்போம் உடம்பிறுகிப் பலக்குஞ் சொன்னேன்
பேசாதே வுலுத்தருடன் யின்னங் கேளே.

கேளடா காமத்தால் கெட்டார் கோடி
கிளர்கின்ற கற்பத்தால் மாண்டார் கோடி
நாளடா அனுபவத்தா லழிந்தோர் கோடி
நலமான தீனியினால் மாய்ந்தோர் கோடி
வேளடா நாசத்தால் வீழ்ந்தார் கோடி
வீணாக கொலைசெய்து செத்தோர் கோடி
பாளடா நானென்ற தெல்லாந் தள்ளிப்
பாங்கான தத்துவத்தைப் பரிந்து பாரே.

பரிந்துபா ருனக்குள்ளே பிரம்ம தியானம்
பாராட்டால் தோணாது படுகுழியில் வீழ்வாய்
திரிந்துபார் தாவரங்கள் செடிபூ டெல்லாஞ்
சீவசெந்தி ஊர்வினங்கள் நடப்பி னங்கள்
விரிந்துபார் பறப்பினங் கள்வீட ணங்கள்
வெறும்பாளென் றெண்ணாதே சிவமென் றெண்ணு
சரிந்துபா ரறிதானத்தால் அறிய லாம்பார்
சகலச்ரா சரமெல்லாந் தாயைப் பாரே.

தானான அண்ட சராசர முந்தான்
தாய்பெண்டிர் மக்கள்சுற் றத்தை தானே
ஊனான உடம்பில்லார் தனதென் றெண்ணு
உயிரெல்லாந் தன்னுயிர்போல யெண்ணிக் கொள்ளும்
மானான விழிமடவார் போகத் தாலே
வருகின்ற நோயப்பா மயங்க வேண்டாந்
தேனான மொழிமாதர்க் கிச்சை கொண்டால்
தேகத்தில் நோயெல்லாஞ் சேருந் தானே.

(சு. 21. பா. 280-286)

செய்முறை : பச்சையான கருங்குருவை அரிசி கால்படி (336 மி.லிட்) வெற்றிலைச்சாற்றில் ஒரு நாள் ஊரவைத்து, மறுநாள் அவ்வரிசியை எடுத்து நிழலுலர்த்தவும். முசுமுசுக்கை ஒரு பிடியும், எட்டு வெற்றிலையும் சேர்த்து ஆட்டி, சூதம் முக்கால் கழஞ்சு (3.8 கிராம்) வாங்கி, வெற்றிலைச் சாற்றையும் அரிசியையும் ஒன்றாகச் சேர்த்திடித்து மைபோலத் தூளாக்கி நிழலில் உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

அளவு : கழற்சிக் காயளவு.

துணைமருந்து : பசுவின் தயிர்.

தீரும்நோய்கள் : கழற்சிக்காய்ப் பிரமாணம் பசுவின் தயிரில் குழைத்துண்ணவும். பத்தியம் தயிர்ச்சோறு, 21 நாள் புளிப்பு கைப்பு நீக்கவும். வயிறுளைச்சல், ரத்தம் வந்தால் தயிரில் வெல்லஞ் சேர்த்துண்ணச் சூடு, ரத்தக் கடுப்புளைச்சல் தீரும். ஏரண்டத்தெண்ணெய் சேர்த்துக் குளிர்ந்த நீரில் முழுகவும். இதனால் சூலை பதினெட்டு, புண்கள், கிரந்தி பதினெட்டு, தீராத வாய்வு எல்லாம் தீரும். உடம்பு பலம் கொள்ளும்.

(வேறு)

காணடா சூலைபதி னெட்டுந் தீர
கனலுருவச் சூரணத்தைக் கருதிக் கேளு
ஆணடா கருங்குருவைச் சம்பா வாதல்
அரிசியது பலம்ரெண்டு உலரப் போட்டு
ஊணடா கழஞ்சி நொச்சி முருங்கை மூன்று
உயர்கொழுந்து பலம்முக்கால் வகைக்குப் போடு
நாணடா முன்னரிசி மருந்து மிட்டு
ரசங்கழஞ்சி வொன்றையுங் கூடத் தாட்டே.

தாட்டவே சிவனார் வேம்புச் சூரணமே
செய்துகூட்டு கழஞ்சொன்றை வெற்றிலை யைந்து
நீட்டவே யுரலிலிட்டு யிடிமை போல
நீயெடுத்துப் பொடியாக்கி வைத்துக் கொண்டு
ஆட்டவே வெருகடி ஆழாக்கு வெந்நீ
ரதில்கொடுக்க யெழுபொழு தப்பா கேளு
நாட்டவே ஆறாநாள் அந்தி சந்தி
நாலெட்டுக் குளிர்ந்தசலத் திருக்கச் சொல்லே.

இருக்கவே யேரண்டத் தெண்ணெய் தேய்த்து
 இதமாக ஒன்றேவிட்டு ஒருநாள் மூழ்கு
செருக்கவே யிருபதுநாள் கழித்த பின்பு
 சேருநீ கோழியுட இறைச்சி கூட்டு
உருக்கவே புளியுப்பு கசப்புத் தள்ளு
 உத்தமனே முருங்கைக்கா யிலையு மாகும்
நெருக்கவே கதலியு மவரைப் பிஞ்சும்
 நீகூட்டச் சொல்லுவாய் மாத மொன்றே.

மாதமொன்றில் நல்லெண்ணெய் முழுகும் போது
 மகத்தான கிரந்தியொடு சூலை தீரும்.
... ... ... ... (சு21. பா. 277-280)

செய்முறை : கருங்குருவைச் சாம்பா அரிசி இரண்டுபலம் (70 கிராம்) உலர்த்தி, நொச்சி, முருங்கை இவற்றின் கொழுந்து வகைக்கு ¾ பலமும் (26.2 கிராம்), ரசம் கழஞ்சும் (5.1 கிராம்) சேர்த்து, சிவன் வேம்புச் சூரணம் செய்து, இதில் ஒரு கழஞ்சு (5.1 கிராம்) வெற்றிலை வைத்து உரலிலிட்டுப் பொடியாக்கி வைத்துக் கொள்ளவும்.

அளவு : வெருகடி அளவு, ஏழுபொழுது.

துணைமருந்து : வெந்நீர்.

தீரும்நோய்கள் : வெருகடி அளவு ஆழாக்கு வெந்நீரில் ஏழு பொழுது கொடுக்கவும். ஆறாவது நாள் காலை, மாலை கொடுக்க வும். எட்டாம் நாள் குளிர்ந்த நீரில் ஏரண்டத்தெண்ணெய் தேய்த்து ஒருநாள் விட்டு ஒருநாள் தலை மூழ்கவும். பதினொட்டுச் சூலை தீரும்.

பத்தியம் : இருபது நாட்கள் கழிந்த பின்பு கோழி இறைச்சி கூட்டவும். புளி, உப்பு, கசப்பு, நீக்கவும். முருங்கைக்காய், கீரை' நெய், வாழைப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு இவற்றை ஒரு மாதத்திற் குக் கூட்டவும். ஒரு மாதத்தில் நல்லெண்ணெய் தேய்த்து முழுகும்போது கிரந்தி, சூலை தீரும்.

## கும்மட்டிக்காய்ச் சூரணம்

கேளப்பா பேய்க்கும் மட்டிக் காயில்
 கெட்டியாய் விளைந்ததா யிடித்து மைந்தா
வாளப்பா வரைத்ததனை மயன மாக்கி
 அத்துடனே கொடுவேலி வேரின் பட்டை

நாளப்பா காய்ச்சுப்பு வளைய லுப்பு
நலமான கல்லுப்புச் சுவைச்ச லுப்பு
வேளப்பா சாறணை வேர்திரி கடுகும்
வெற்றிபுரி செவ்வியமுங் கொத்தமல்லி தானே.

தானென்ற பெருங்காயம் வாய்வி ளங்கம்
சத்தியரு ளோமமடா சத்தி சாரம்
தேனென்ற யிவட்சாரம் புளித்தோட் சாம்பற்
சேரப்பா கழஞ்சொன்றாய்ச் செப்பக் கேளு
கானென்ற புளிநடலை மூலந் தானும்
காட்டுக் காருணைக் கிழங்கு தானு
மானென்ற கழஞ்சுநீ மூன்று வாங்கி
மைந்தனே யிவையெல்லா முலர்த்தி டாயே.

உலர்த்தியெல்லாந் தூளாட்டி வத்திர காயம்
ஊட்டியே கரகத்தி லிட்டுக் கொண்டு
சிலத்தையு மாளுடைய பலத்தைக் கண்டு
செய்வதற்குத் தேங்காய்ப்பால் படியும் வாங்கிப்
... — ... ... ...
பாங்கான ஆநீரும் பண்பாய் மைந்தா
நலத்தையிவை மூன்றுபடி நீருக் குள்ளே
நயமாகச் சூரணத்தைப் புரட்டி வையே.

வைத்ததொரு மருந்தெல்லாம் வற்ற வற்ற
மயனம்பொடித் திரட்டிநீ யுண்டை செய்து
உய்த்தவே நீரெல்லா முண்ட பின்பு
உறவுசெய்வாய் கருணையுட மூல மாட்டிக்
கைப்பதமாய் மூன்றுவிரல் கனத்தில் நீயுங்
கவசமந்த வுண்டைக்குக் கட்டிக் கேளு
மெய்த்திடவே காட்டெருவிற் புடத்தைப் போடு
மூதண்ட கசபுடந்தான் மூட்டு மூட்டே.

மூட்டிநீ யெடுத்தனைத் தூளா யாட்டி
மூன்றுவிரற் கொண்டள்ளி யுண்ணச் சொல்லு
தாட்டியெனு மனுப்பான மப்பால்மோ ராகுந்
தண்வெந்நீ ரிவைதனில் சாப்பிட் டாக்கால்

நாட்டியதோ ரெண்குன்ம மாறு சூலை
நலமான தஞ்சுவகைநோவுந் தீரும்
வாட்டியதோர் சிலகுன்ம மகவை வெப்பும்
மோதாம நீராமை பெருவயிறு போமே.

(சு.1. பா. 399-403)

செய்முறை : பேய்க்கும்மட்டிக்காயை இடித்து மயனமாக்கி, கொடுவேலிவேரின் பட்டை, காய்ச்சுப்பு, வளையலுப்பு, கல்லுப்பு, சுவைச்சலுப்பு, சாரணைவேர், திரிகடுகு, செவ்வியம், கொத்த, மல்லி, பெருங்காயம், வாய்விளங்கம், ஓமம், சத்திசாரம், இவச்சாரம், புளித்தோல் சாம்பல் இவைவகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) புளிநடலை மூலம், காட்டுக் கருணைக்கிழங்கு இவை வகைக்கு 3 கழஞ்சு (15.3 கிராம்) சேர்த்து இடித்துலர்த்தி, தேங்காய்ப்பால், பசு நீர் இவற்றில் சூரணத்தைப் புரட்டி வைத்து, நீரெல்லாம் வற்ற வற்றப் பொடியைத் திரட்டி உருண்டை செய்து, காட்டெருவைப் புடம் போட்டு, கசபுடமாக வைத்தெடுக்கவும்.

அளவு : 3 விரலளவு.

துணை மருந்து : வெந்நீர், மோர்.

தீரும்நோய்கள் : குன்மம், சூலை, வெப்பு, நீராம்பல், பெருவயிறு தீரும்.

## சிவதைச் சூரணம்

சிவதை வராகனெடை 14, பசுவின் பால் விட்டவித்துலர்த்தி மிளகு, திப்பிலி, வாய் விளங்கம், கடுக்காய், முத்தக்காசு, ஏலயில வங்க பத்திரி வகைக்கு வராகனெடை 3, சிவதை கூட்டி இடித்து வடிகொண்டு வெருகடி வெந்நீரில் கொள்ளத் தீரும் வியாதி பித்தம் 40, பிரமேகம் 14, சூலை 18, வாதம் 80, வயிற்றிலுண்டான வியாதி 108 தீரும். (சு. 21)

செய்முறை : சிவதை 14 வராகனெடையை (58.8 கிராம்) பசுவின்பால் விட்டவித்து உலர்த்தவும். மிளகு, திப்பிலி, வாய் விளங்கம், கடுக்காய், முத்தக்காசு, ஏலம், இலவங்கப் பத்திரி இவை வகைக்கு மூன்று வராகனெடை (12. 6 கிராம்) கொண்டு சிவதையைக் கூட்டி இடித்து வடிகட்டிக் கொள்ளவும்.

அளவு : வெருகடி அளவு.

துணைமருந்து : வெந்நீர்.

தீரும்நோய்கள் : பித்தம் 40, பிரமேகம் 14, சூலை 18, வாதம் 80, வயிற்றிலுண்டான வியாதிகள் 108 தீரும்.

## சிவன் வேம்புச் சூரணம்

சொல்லுகிறேன் சிவன்வேம்புச் சூரணமே செய்யச்
சுகமாகப் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
மல்லுறேன் சிவன்வேம்புத் தயிலந் தானும்
வாங்கியே படியொன்று வேறே வைத்து
அல்லுவேன் வாலுளுவை தாளிச பத்திரியும்
அழகான கிராம்பேல மதிமதுரங் கோட்டம்
கல்லுறேன் சாதிக்காய் சாதிபத் திரியும்
கருஞ்சீ ரகமிளகு கடுக்காய் திப்பிலியே.

திப்பிலியு மதிவிடயம் பறங்கிப் பட்டை
சிறுநாகப் பூவோடு வால்மிளகு சிங்கி
இப்படியே வகைவகைக் குக்கால் பலமே
இடித்துநீ சிவன்வேம்புச் சூரணத் தோட
தப்பாதே சமபாகம் பாதி சீனி
சாரித்து ஒன்றாகச் சேர்த்துக் கொண்டு
செப்பாதே தினமொன்று வெருகடி தூளப்பா
சிவன்வேம்புத் தயிலத்தில் குழைத்துக் கொள்ளே.

கொள்ளப்பா பதினெட்டுக் குட்ட ரோகம்
குலைந்தோடும் மேகசூலை மேக வாய்வு
கள்ளமாங் கரைப்பனொடு சொறிசிறங்கு வெட்டை
கடிவிடங்கள் சில்விடங்கள் விரணங் கிரந்தி
துள்ளியே நோயெல்லா மோடிப் போகும்
சொல்லரிது காயசுத்தி சுருக்கு மெத்தக்
கள்ளமில்லை சொல்லிவிட்டேன் சிவனார் வேம்பு
கற்பத்துக் காதியாங் கண்டு பாரே. (சு. 19)

செய்முறை : சிவன்வேம்பு பத்துபலம் (350 கிராம்) வாங்கி வாலுளுவை, தாளிசபத்திரி, கிராம்பு, ஏலம், அதிமதுரம், கோட்டம், சாதிக்காய், சாதிபத்திரி, கருஞ்சீரகம், மிளகு, கடுக்காய், திப்பிலி, அதிவிடயம், பறங்கிப்பட்டை, சிறு நாகப்பூ, வால் மிளகு, சிங்கி இவை வகைக்குக் கால்பலம் (8.7 கிராம்) வாங்கி இடித்து, சூரணமாக்கிக் கொள்ளவும்.

அளவு : வெருகடி அளவு.

துணைமருந்து : சிவன் வேம்புத் தயிலம்.

தீரும் நோய்கள் : பதினெட்டு குட்டம், மேகசூலை, மேக வாய்வு, கரப்பான், சொறி சிரங்கு, வெட்டை, கடிவிடங்கள், சில்கடி விடங்கள், இரணங்கள், கிரந்தி முதலியன தீரும்.

## திப்பிலாதிச் சூரணம்

திப்பிலி, சாதிக்காய், ஓமம், இந்துப்பு, கடுகு, சித்திரமூலம், பெருங்காயம், தாளிசபத்திரி, திப்பிலிமூலம், சவுக்காரம், அதிமதுரம், வெட்பாலரிசி, அதிவிடயம், வாய்விளங்கம், கத்தூரி மஞ்சள், நற்சீரகம், சுக்கு, கிராம்பு, கொத்தமல்லி, இலவங்கப் பத்திரி, சதகுப்பை, வால்மிளகு, கல்நார் சரியெடை இடித்து வடிகட்டிச் சீனியுங் கூட்டித் தின்று வரத் தீரும் பிணி குன்மம் 72, சன்னி 13, சூலை 14, மாந்தம் 11, வாய்வு பித்தம் 40, வாதம் 80, வயிற்றெரிப்பு, செமியாக் குணம், வயிறுப் பொருமல் இவையெல்லாம் தீரும். (சு. 19)

செய்முறை : திப்பிலி, சாதிக்காய், ஓமம், இந்துப்பு, கடுகு, சித்திரமூலம், பெருங்காயம், தாளிசபத்திரி, திப்பிலிமூலம், சவுக் காரம், அதிமதுரம், வெட்பாலரிசி, அதிவிடயம், வாய்விளங்கம், கத்தூரிமஞ்சள், நற்சீரகம், சுக்கு, கிராம்பு, கொத்தமல்லி, இலவங்கப் பத்திரி, சதகுப்பை, வால்மிளகு, கல்நார் வகைக்கு ஒரு கிழஞ்சு எடை(5.1 கிராம்) நிறுத்திடித்து, வடிகட்டிச் சூரணமாக வைத்துக் கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : சர்க்கரை.

தீரும் நோய்கள் : குன்மம் 72, சன்னி 13, சூலை 14, மாந்தம் 11, வாய்வு பித்தம் 40, வாதம் 80, வயிற்றெரிவு, செறியாக் குணம், வயிறுப் பொருமல் இவை நீங்கும்.

## நிலவாகைச் சூரணம்

பாரேநீ நிலவாகைச் சூரணத்தைக் கேளு
பரிவாக நிலவாகைக் கொண்டு வந்து
சேரேநீ நிழலுலர்த்தி யிடித்துத் தூளாய்
சிறப்பாகப் பலம்பத்து நிறுத்துக் கொண்டு

சேரேநீ மிளகொடு கடுக்காய்த் தான்றி
சீரகமு மல்லால் பூவைசிறு நாகப்பூ
காரேநீ யேல மிலவங்கப் பட்டை
கடுகுரோகணி சிவதை தாளிசப் பத்திரியுஞ்
சேரேநீ சாதிக்காய் கிராம்பு திப்பிலியுஞ்
செவ்வியு மிந்துப்புக் கூகை நீறே.

நீறான சுக்கொடு வகைக்குக் காற்பலமும்
நிறுத்திடித்து முன்மருந் தோடே காய்ச்சே
சீரான யிவ்வகைச் சூரணமுஞ் சமனாய்ச்
சீனிசர்க் கரைபாதி சேர்த்துக் கொண்டு
நேருநீ நாளொன்றுக் கந்தி சந்தி
நெய்தனிலே வெருகடிதூள் குழைத்துக் கொள்ளு
சேரேநீ மண்டலந்தான் கொள்ளும் போது
தீராத நோயேது செப்பக் கேளே.

செப்பவே மேகமொடு பித்தம் போகும்
சிறப்பான அரோசிகமும் வாய்நீ ரூறல்
துப்பவோ மலக்கட்டு வாய்வு காந்தி
சூடுகொள்ளல் சொறிசிரங்கு மூல வாய்வு
முப்பொழுதும் மலசுத்தி யாகும் பாரு
மூலத்தில் நோயெல்லாம் முறிந்து போகும்.
... ... ... ... (அ. 19)

செய்முறை : நிலவாகைத் தழையை நிழலில் உலர்த்தி இடித்துத் தூளாக்கி, பத்துபலம் (350 கிராம்) நிறுத்துக் கொள்ளவும். அத்துடன் மிளகு, கடுக்காய், தான்றிக்காய், சீரகம், சிறுநாகப்பூ, ஏலம், இலவங்கப்பட்டை, கடுகுரோகணி, சிவதை, தாளிசப்பத்திரி, சாதிக்காய், கிராம்பு, திப்பிலி, செவ்வியம், இந்துப்பு, கூகைநீறு, சுக்கு இவை வகைக்குக் கால் பலம்(8.7 கிராம்) வாங்கி இடித்துத் தூளாக்கிச் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ளவும்.

அளவு : சூரணமும் சர்க்கரையும் ஓரளவாய்ச் சேர்த்து வெருகடி அளவு அந்திசந்தி ஒரு மண்டலம் உண்ணவும்.

துணைமருந்து : நெய்.

தீரும் நோய்கள் : மேகம், பித்தம், அரோசிகம், வாய்நீரூறல், மலக்கட்டு, வாய்வு, உட்டிணம், சொறிசிரங்கு, மூலவாய்வு, மூலநோய் தீரும். மலசுத்தி யாகும்.

## மேகாதிச் சூரணம்

பாரப்பா முந்திரிகை பேரீச்சம் பழமும்
பருநெல்லி யதிமதுரம் ஏலவங்கம் வாரே
நேரப்பா திப்பிலியுஞ் சிறுபீளை வேரும்
நேறான சந்தனமுங் கொத்த மல்லி
வேரப்பா வெள்ளரி வித்துங் கூட
மீறாமல் சமபாக சூரணத்தைச் செய்து
வாரப்பா வெருகடிதான் தண்ணீரிற் கொள்ள
மைந்தனே கடுப்பெரிப்புக் கிரிச்சனங்கள் தீரும்
ஆரப்பா அறிந்துசெய்வோர் சித்தர் புத்தர்
அப்பனே மற்றோர்க்கொடுத் தறிந்தி டாதே.

(சு.9. பா.19)

செய்முறை : முந்திரிகை, பேரீச்சம்பழம், நெல்லி, அதிமதுரம், ஏலம், இலவங்கம், திப்பிலி, சிறு பீளைவேர், சந்தனம், கொத்த மல்லி, வெள்ளரிவித்து இவை ஓரளவாய் நிறுத்து இடித்துத் தூளாக்கிச் சூரணம் செய்யவும்.

அளவு : வெருகடி அளவு.

தீரும் நோய்கள் : கடுப்பெரிப்பு, கிரிச்சனங்கள் தீரும்.

## சூரணம்-பொது

சொல்லுவேன் நூலாற் சூரணந்தா னப்பா
துடியான வாதமெல்லாந் தொலைந்து போகும்
கொல்லுமே கொடிவேலி புங்கம் வேரும்
கெடிதான ஆயிலியம் வேருங் கூட
நில்லுமே வேருடப் பட்டை வாங்கி
நிழலுலர்த்தி ஒருபலமாய் வகையொன் றுக்கு
வெல்லுமே யிடித்துச் சூரணமே செய்து
மேல்மருந்து வாய்விளங்கங் கடுக்காய்ச் சுக்கே.

சுக்குத் திப்பிலி கடுகுகரிய சீரகஞ்
சுகமாக வகைக்கு அரைப்பலமே கூட்டு
மிக்க வெதும்பி பொடிசெய்து கொண்டு
மென்பொடியு முன்பொடியுங் கலந்து பின்பு

தரிக்க வெருகடிதான் தேனிற் கொள்ள
வாயு வோடு வாதந் தீரும்
நிற்குமொரு மண்டலத்தில் பட்சி வாதம்
நிர்சன்னி வாதமுதல் நில்லாது காணே.

(சு. 21. பா. 275-276)

செய்முறை : கொடிவேலி, புங்கம், ஆயிலியப்பட்டை இவற்றின் வேர்ப்பட்டை வகைக்கு ஒருபலம் (35 கிராம்) வாங்கி நிழலுலர்த்தி, இடித்துச் சூரணம் செய்யவும். வாய் விளங்கம், கடுக்காய், சுக்கு, திப்பிலி, கடுகு, கருஞ்சீரகம் இவை வகைக்கு அரைப்பலம் (17.5 கிராம்) வாங்கிப் பொடிசெய்து மேற்கண்ட பொடியுடன் சேர்த்துக் கொள்ளவும்.

அளவு : வெருகடி அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : வாய்வு, வாதம் நீங்கும். ஒரு மண்டலம் உண்ண பட்சிவாதம், சன்னி தீரும்.

# பதங்கம்

## கும்மட்டிக் காய்ப் பதங்கம்

கூறவே கும்மட்டிக்காய்ப் பதங்கஞ் சொல்வேன்
கூறியதோர் வாதமென் பதுந்தான் போக
கூறவே தழுதாழை ஆயிலியப் பட்டை
கொடுவேலிப் பட்டை அமுக்கிரா வேரும்
மூரியவே வெண்சாரணை சத்தி சாரணையு
முடக்கொற்றான் பெருவாகை தூதுவளை சடைச்சி
தெரியவே தைவேளை குப்பை மேனி
சிவன்வேம்பு பிரம்பினுட கிழங்கு சங்கு
மாரிவிடு மவுரியொடு வில்லை வேரும்
மாவிலங்கு வகைக்குவகை பலந்தான் ஒன்றே.

ஒன்றான யிவையெல்லாஞ் சூரணமே செய்து
உத்தமனே அத்திதிப்பிலி கிராம்பு ஓமம்
தின்றான வால்மிளகு தாளிச பத்திரியுந்
திப்பிலியும் வாலுளுவை திப்பிலி மூலம்
மன்றான சதகுப்பை பறங்கிப் பட்டை
அரத்தைசுக்கு அதிவிடயம் சிறுதேக்கு நாகப்பூவே.

பூவான கருஞ்சீரகம் வகைக்குநாற் கழஞ்சு
போட்டிடித்து முன்மருந்தோ டொக்கச் சேரு
சேரவே கல்வத்தி விட்டுக் கேளு
திருகுகள்ளிப் பாலொடுஉத் தமதாளிச் சாறும்
பாலொடு பார்த்த ரைத்து லர்த்தி
பக்குவமாய்ப் பேய்க்குமட்டிக் காய்தான் கேளு
கோவொடு வேண்டியது கொண்டு வந்து
குடைந்துள் ளேவி தையைப் போக்கே.

போக்கியே மருந்தெல்லாங் காயி னுள்ளே
பந்தத் தோட்டாலே மிகவே புகட்டி
போக்கியே பாண்டத்தி லிட்டு நீயும்
மேல்மூடிச் சீலை செய்து குழியும்
தாக்கவே வெள்ளாட்டின் புழுக்கை மைந்தா
கீழ்மேலும் விட்டுசர் பாண்டம் வைத்து
போக்கியே புடம்போட்டு ஆற விட்டு
பாருபரு மாங்காயெல்லாம் சிவந்து காணும்.

காணுவது கருகாம லப்பா வாங்கி
காயெல்லா மாறவிட்டு மருந்தைக் கொட்டி
போணியே குங்குமப்பூச் சாதிக் காயும்
போட்டுநீ பொடிசெய்து வைத்துக் கொண்டு
கா ணுவது வயிறுளைந்தால் நிறுத்திப் போடு
கலங்கிகா யெருமைமோர் சோறு முண்ணே.

உண்ணவே வாதமெல்லா மோடிப் போகும்
உத்தமனே கைப்புளிப்புப் புகையுந் தள்ளு
மன்னியே வாதத்துக் காகா தெல்லாந்
தள்ளிவிட மற்றதெல்லா மிச்சா பத்தியம்
கண்ணுவது உப்புதனை வறுத்துக் கூட்டு
கண்காணா தோடுமடா வாதமொடு சூலை
ஒண்ணுவது கால்கை முடக்கிழுப்பு வாதம்
உத்தமனே பக்கவாத மோடும் பாரே.

(சு. 19. பா. 211-216)

செய்முறை : தழுதாழை, ஆயிலியப் பட்டை, கொடுவேலிப் பட்டை, அமுக்கிராவேர், வெண்சாரணை, சத்தி சாரணை, மூடக் கொத்தான், பெருவாகை, தூதுவளை, சடைச்சி, தைவேளை, குப்பைமேனி, சிவன்வேம்பு, பிரம்பினுடகிழங்கு, சங்கு, அவுரி, வில்வம், மாவிலங்கு இவற்றின் வேர்கள் வகைக்கு 1 பலம். (35 கிராம்) வாங்கி இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். அத்தி திப்பிலி, கிராம்பு, ஓமம், வால்மிளகு, தாளிசபத்திரி, திப்பிலி வாலுளுவை, திப்பிலி மூலம், சதகுப்பை, பறங்கிப்பட்டை, அரத்தை, சுக்கு, அதிவிடயம், சிறுதேக்கு, சிறுநாகப்பூ, கருஞ் சீரகம் இவை வகைக்கு 4 கழஞ்சு (20.4 கிராம்) வாங்கி, முன் மருந்தோடு சேர்த்து, கல்வத்தில் போட்டு, திருகுகள்ளிப்பாலும், உத்தமதாளிச் சாறும் விட்டரைத்துலர்த்திக் கொள்ளவும். பேய்ச்

குமட்டிக் காயைக் கொண்டு வந்து, அதனுள்ளே இருக்கும் விதையைத் தள்ளிவிட்டு மருந்தை அதனுள்ளே வைத்து மூடி, பாண்டத்தில் வைத்துமூடிச் சீலைசெய்து,வெள்ளாட்டுப் புழுக்கை யினால் பக்குவமாகப் புடம் போட்டெடுக்கவும். காய் நன்கு ஆறின பிறகு மருந்தைக்கொட்டி, குங்குமப்பூ, சாதிக்காய் சேர்த் திடித்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

தீரும் நோய்கள் : வாதம், சூலை, கால்கை முடக்கிழுப்பு வாதம், பக்கவாதம் தீரும்.

பத்தியம் : கைப்பு, புளிப்பு, புகை ஆகாது. உப்பை வறுத்துக் கூட்டவும். இச்சாப்த்தியம். வயிறுளைந்தால் மருந்தை நிறுத்தி எருமை மோருஞ் சோறுஉண்ணவும்.

## சூதப்பதங்கம்

சுறுக்கான பதங்கமொன்று சொல்லக் கேளு
சூதந்தான் பலமொன்று கல்வத் திட்டு
மறுக்காக வெள்ளையது கழஞ்சு ரெண்டு
மாசற்ற வீரமது கழஞ்சு ரெண்டு
குறுக்காகக் கல்லுப்புக் கழஞ்சு ரெண்டு
குலமானத் துருசியது கழஞ்சு ரெண்டு
தறுக்கான சூடனது கழஞ்சு ரெண்டு
தருவான சாரமது கழஞ்சு ரெண்டே.

நெண்டான கெந்தியது கழஞ்சு ரெண்டு
நேரான சிலையதுவுங் கழஞ்சு ரெண்டு
உண்டான திவையெல்லாம் பலமொன் றாக்கி
உத்தமனே சூதத்தி லொக்கப் போட்டு
குண்டாத லிங்கமது கழஞ்சு ரெண்டு
குலாவியதோர் தாளகமும் பலமும் ரெண்டு
கண்டான நாய்ப்பாகல் விதையி டித்துக்
கசகாமல் முழுப்புடத்தில் தயிலம் வாங்கே.

வாங்கியே முன்மருந்தி லிட்டு நீதான்
மைந்தனே வழலையொரு கழஞ்சி போட்டுப்
பாங்கியே அரைத்துருட்டி மெழுகு போலே
பக்குவமாய்ச் சட்டிதனில் நடுவே வைத்துத்

தாங்கியே அயச்செப்பு கவிழ்த்தி மூடிச்
சந்துவாய் குளுந்தரைத்துச் சீலை செய்து
ஓங்கியே அதின்மேலே சட்டி மூடி
உற்பனமா யடுப்பேற்றி யெரித்தி டாயே.

எரித்திடுவாய் தீபம்போ லாறு சாமம்
இதமான பதங்கமது யேறி நிற்கும்
வரித்திடுவாய் மயிற்குச்சு கட்டி வாங்கி
வளமான செப்பிலே வைத்துக் கொண்டு
தரித்திடவே பதங்கமொரு கழஞ்சு தூக்கித்
தங்கமென்ற ரேக்குமதி னிடையே சேர்த்துக்
கரித்திடவே நவலோகம் நூற்றுக் கொன்று
காட்டினா லத்திசை மாத்துக் கண்டுபாரே.

பாரப்பா ரசபற்பஞ் சுறுக்கு மெத்தப்
பணவெடைதா னனுபானத் தோடே கொண்டால்
தாரப்பா பசுமாத்துப் பொன்னாற் தேகஞ்
சந்திரனுஞ் சூரியனு மொன்றிற் சேருங்
காரப்பா சடத்திலுள்ள நோயெல் லாந்தான்
கண்டுபோம் ரசபற்பங் கண்ட போதே
ஆரப்பா ஆதிகற்ப மறிந்த பேர்கள்
ஆனசபையிலே கொண்டேற்று மதீத மாமே.

(சு. 2. பா. 107-111)

செய்முறை : வெள்ளை, வீரம், கல்லுப்பு, துருசு, சூடம் சாரம், கெந்தி, மனோசிலை இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி, ஒரு பலம் (35 கிராம்) சூதத்துடன் கல்வத்தில் போட்டு, லிங்கம், தாளகம் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) போட்டு, நாய்ப்பாகல் விதையை இடித்துத் தயிலம் எடுத்து முன்மருந்தில் விட்டு, ஒரு கழஞ்சு (5.1 கிராம்) வழலையும் போட்டு, மெழுகு போல அரைத் துருட்டிக் கொள்ளவும். அதை ஒரு சட்டியின் நடுவில் வைத்து அயச்செப்பினால் கவிழ்த்து மூடி சந்து வாய்க்குச் சீலைசெய்து, அதன் மேலும் சட்டிமூடி, பக்குவமாக ஆறு சாமம் (18 மணி நேரம்) எரிக்கவும். பதங்கமானது கவிழ்த்த சட்டியின் மேல் படிந்திருக்கும். அதை மயிற் குச்சு கட்டினால் வழித்தெடுத்துச் செப்பிலே வைத்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு கழஞ்சு (5.1 கிராம்). பணவெடை (488 மி.கி.)

துணை மருந்து: தங்கரேக்கு, இரசபற்பம்,

தீரும் நோய்கள் : ஒரு கழஞ்சு மருந்துடன் தங்கரேக்கும் கலந்துண்ணலாம். பணவெடை மருந்துடன் ரசபற்பமும் கலந் துண்ண உடல் பொன்னாகும். உடம்பிலுள்ள அனைத்து நோய் களும் தீரும்.

## பறங்கிப் பட்டைப் பதங்கம்

போமப்பா யிதற்கிசைந்த பட்டையெனும் பதங்கம்
புலத்தியனே மச்சகேந்திரா புகலக் கேளு
ஆமப்பா பறங்கிப்பட்டை யுழுவா டினதாய்
லேசுளது பார்த்து அஞ்சுப லந்தான்
தாமப்பா பாக்குப்போலத் துண்டாய் வெட்டிச்
சங்கங்குப்பிச் சாற்றிலே பிரட்டிப் பின்பு
நாமப்பா காயவைத்து யோர்கலத் திட்டு
நலம்பெறவே சாம்பிராணி யஞ்சுபலந் தூக்கே.

தூக்கியந்தச் சாம்பிராணி பாக்குப்போல் வெட்டிச்
சூட்டுவாய் ஓர்கலசத் திட்டுத்த மரிட்டு
துக்குவாய் பலமருந்து வகையைக் கேளு
சொல்லுகிறோஞ் சிறுபிரப்பங் கிழங்குகொடு வேலி
தூக்குவாய் அமுக்கிரா வெள்ளறுகு சங்கு
துடியான எருக்கன்வேர் நெய்க்கொட்டான் பட்டை
தூக்குவாய் பூவரசம் பட்டைசிவன் வேம்பு
சொல்லரிய செங்கத்தாரி பூசம னாக்கே.

ஆக்குவது சமன்வகைக்கு அவ்வஞ்சு பலமாய்
அவ்வளவு நறுக்கியொரு பாண்டத் திட்டு
ஆக்குவது தூரிலே சிறுமல்லி போலே
அவ்வஞ்சு தமரிட்டு அப்பாற் பின்னும்
ஆக்குவது புளிப்புறணி யோர்பாண்டத் தடைத்து
அதில்மேலுந் தமரிட்டு விலாவிலோர் தமரும்
ஆக்குவது துருத்திக்கு யேற்ற தமரர்க
அடுக்குமேற் பதங்கிக்க அறையி றேனே.

அறையிறேன் முறைமுறையாய்க் கவிழ்த்து வைத்து
அந்தந்த மருந்துக்குச் சீலைமண்ணுஞ் செய்து
அறையிறேன் புளிப்புறணி விலாத்தமரித் துருத்தி
அடங்கவே தீயைப்போட்டு ஊது அந்திசந்தி

அறையிறேன் ஒன்பதுநா ளிப்படியே யூத
அடைமருந்து புறணிவெந்து அப்பாலு மேறும்
அறையிறேன் சாம்பிராணி யூடே தாக்கி
அப்பனே பட்டைக்குப் பதங்க மாமே.

பதங்கமென்ற பட்டைதனைத் தூளா யாட்டிப்
பாச்சடா கற்பூர கந்தகமாஞ் சீனி
பதங்கமது நாலுபணந் தூக்கச் சேர்த்துப்
பாங்குடனே கடராசி பொட்டிணம தாக்கி
பதங்கமுட னிருபோதுங் காமண்டலந் தானருந்தப்
படரான நோய்களெல்லாம் பகரக் கேளு.

(சு.1. பா. 15-19)

செய்முறை: பறங்கிப்பட்டை ஐந்துபலம் (175கிராம்) வாங்கி, சிறு துண்டுகளாக்கி, சங்கங்குப்பிச் சாற்றிலே பிரட்டிக் காயவைத்துக்கொள்ளவும். சாம்பிராணி ஐந்துபலம் (175 கிராம்) வாங்கி நறுக்கிப் போட்டு, சிறுபிரப்பங் கிழங்கு, கொடுவேலி, அமுக்கிரா, வெள்ளறுகு, சங்கங்குப்பி, எருக்கன்வேர், நெய்க்கோட்டான் பட்டை, பூவரசம் பட்டை, சிவனார் வேம்பு, செங்கத்தாரி இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்) வாங்கிப் பாண்டத்திட்டு, பின்னர் புளிப்புறணி ஒரு பாண்டத்திட்டு, முறைப்படி சீலைமண் செய்து பதங்கப் பக்குவமாய் எடுத்துக் கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு, கால் மண்டலம் (12 நாட்கள்) இருவேளை உண்ணவும்.

துணைமருந்து : பதங்கத்தைத் தூளாக்கி, அத்துடன் கற்பூரகந்தகம், சீனி, இவை நாலு பணவெடை (1.9 கிராம்) வாங்கிச் சேர்த்துக் கொள்ளவும்.

தீரும்நோய்கள் : எல்லா நோய்களும் தீரும்.

## பறங்கிப்பட்டைப் பதங்கம்

(உடம்பு, கை-கால்-இடுப்பு பிடிப்புக்கு)

நல்ல பறங்கிப்பட்டை ஒரு பணத்திற்கு வாங்கி சீவி, காய வைத்து இடித்து, தூள் பண்ணி, திருகுகள்ளி ரெண்டெடை போல் கொண்டு வந்து, நறுக்கித்துண்டாடி, பானையில் வைத்து, ஐந்து ஆறுமரக்கால் சலம் விட்டு யெரித்து, பதக்கு சலமாகச் சுண்டி வரும்போது நிறுத்தி வைத்து, இந்தக் கசாயம் பறங்கிப் பட்டைத் தூளிலே விட்டுப் பிசரி, கசாயப் பானையிலே தானே

சீலைவேடுகட்டி. அதுமேலே பிசரின தூளை வைத்து, பிட்டவிய லாக வைத்து, மேல் சட்டிமூடி, சந்துவாய்க்குச் சீலைமண் செய்து, நாலு நாழியலெரித்து, வெந்ததிற்குமேல் எடுத்து வைத்துக் கொண்டு, அந்திசந்தி மூன்று விரல் கொண்ட தூள் சாப்பிடவும். கால்மண்டலம், அரை மண்டலஞ் சாப்பிடவும். கடும் பத்தியம்.

(சு. 11)

செய்முறை: பறங்கிப்பட்டையைத் தோல் சீவிக் காயவைத்து, இடித்துத் தூள் செய்து வைத்துக் கொள்ளவும். திருகு கள்ளியை இரண்டெடை வாங்கி, நறுக்கி, பானையில் போட்டு ஆறு மரக் கால்நீர்விட்டு எரித்துக் கசாயம் வைத்து, மேற்கண்ட பறங்கிப்பட்டைத் தூளிலே விட்டுப்பிசைந்து, கசாயப்பானையில் சீலையை ஏடுகட்டி அதன்மேல் பிசைந்த தூளைப் பிட்டவியலாக வைத்து, சட்டிமூடி, சந்துவாய்க்குச்சீலைமண் செய்து, பக்குவமாக வெந்தபின் எடுத்து வைத்துக் கொள்ளவும்.

அளவு: மூன்றுவிரலளவு. கால்மண்டலம் (அல்லது) அரை மண்டலம். அந்தி சந்தி சாப்பிடவும்.

தீரும்நோய்கள்: கை, கால், இடுப்பு பிடிப்புகள் தீரும்.

பத்தியம்: கடும் பத்தியம்.

# கடுகு

## கும்மட்டிக்காய்க் கடுகு

போகவே கர்ப்ப விப்புருதி தானும்
பொல்லாத மகோதரங்கள் மகவை கெண்டை
ஏகுமே உதிரத்தி லெழுந்த நோய்கள்
என்மக்காள் வாய்வென்ற தெல்லாந் தீரும்
வாகுபெற வன்னமானால் உதிர நோய்க்கு
வகுத்துரைப்பேன் கும்மட்டிக்காய் கடுகை யப்பா
ஆகுமே அன்பதுதான் வைகும் மட்டி
அதைஇடித்துச் சாறுபிழிந்து அப்பா கேளே.

கேளடா தானொன்று கும்மட்டிச் சாறு
கெடியான வெடியுப்பு வளைய லுப்பு
தாளடா யிந்துப்புக் காந்தஞ் சுக்கு
தாக்கடா திப்பிலிவெள் ளுள்ளி கூட்ட
நாளடா வகைக்கரை தான்பலமுந் தூக்கு
நல்லபெருங் காயமது பலமுங் கால்தான்
கேளடா வாளமொடு சாதி லிங்கந்
திறமாகப் பலமொன்று சேர்த்துத் தூக்கே.

தூக்கியே பொடிசெய்து சாற்றில் போடு
சொல்லுமிலைக் கள்ளிப்பால் படிதான் வாரு
தாக்கியே காய்ச்சியெடு கடுகுபத மாகத்
தானெடுத்து ஆட்பலமும் நோய்ப்பல முங்கண்டு

நீக்கியே வராகனெடை உண்ணச் சொல்லு
நீறாகும் வியாதிதனைக் கழற்றக் கேளு
போக்குமே கர்ப்பத்தின் விப்புருதி தன்னை
பொல்லாத கர்ப்பவாய்வு அகலப் போமே.

அகலுமே மகோதரங்கள் கர்ப்ப சூலை
அட்டகுன்மம் வயிற்றுவலி வெப்புப் பார்வை
இகலுமே சுரோணிதத்தால் வாய்வு தானும்
ஏகுமே பீலிகையும் நீராம்ப லோடு
புகலுவேன் கவுசிகெண்டை மலட்டுப் பூச்சி
பொல்லாத வயிற்றுவலி யெல்லாந் தீரும்
பகலிலே சுடுகஞ்சி கொள்ளச் சொல்லு
பத்தியமே யில்லையடா பரிந்து காணே.

(சு. 21. பா. 332-335)

செய்முறை : கும்மட்டிக்காய்ச் சாறு பிழிந்து, அதில் வெடியுப்பு, வளையலுப்பு, இந்துப்பு, காந்தம், சுக்கு, திப்பிலி, வெள்ளுள்ளி இவை வகைக்கு ½ பலம் (17.5 கிராம்), பெருங்காயம் ¼ பலம் (8.7 கிராம்), நேர்வாளம், சாதிலிங்கம் வகைக்கு 1 பலம் (35 கிராம்), இலைக்கள்ளிப் பால் 1 படி (1·3லிட்) இவற்றை முறைப்படிக் காய்ச்சி பதமாக வடித்தெடுத்துக் கொள்ளவும்.

அளவு : வராகனெடை (4.2 கிராம்).

தீரும்நோய்கள் : கர்ப்ப விப்புருதி, கர்ப்ப வாய்வு, மகோதரம், கர்ப்பசூலை, அட்டகுன்மம், வயிற்றுவலி, வெப்புப் பார்வை, பீலிகை, நீராம்பல், கவுசி, கெண்டை, மலட்டுப் பூச்சி போன்றவை தீரும்,

# இலேகியம்

## கண்டா மலக லேகியம்

கண்ட சர்க்கரை பலம் 15, நெல்லிக்காய் சாறுபலம் 15, இவை யெல்லாம் கூடத்திலே எடுத்து, தேன் போலப் பக்குவமாகக் காய்ச்சி, கரகத்திரவியம், தாளிசபத்திரி, மிளகு, சீரகம், கருஞ்சீரம், நெதுப்புக் கொடுவேலி, ஏலம், இலவங்கப்பத்திரி, கூகைநீறு, திப்பிலி, சுக்கு, கொத்தமல்லி, சிவதை இரண்டுபலம், காட்டுத் திப்பிலி ஒருபலம், இவையெல்லாங் கூட்டிச் சூரணம் பண்ணி லேகியத்தில் போட்டுக் கிளறி, நெய் ஒரு பலம் விட்டுக் கிளறி ஆறினபின்பு ஆறுபலந்தேன் விட்டுக் கிளறி, இதுவின் பேர் கண்டா மலகலேகியம் என்று பேர். காலத்தாலே எழுந்திருந்து ஒரு கழஞ்சு மாத்திரமங்கொன்று வெந்நீர் குடிக்க சகலரோகத்தையும் போக்கும் பித்தம், பைத்தியம், மூலஞ் சிலேற்பனம், பைத்திய குன்மம், சூலை, உட்டிணம், காமாலை, பாண்டுரோகம், விடதோடங்கள் இவையெல்லாஞ் சாந்தமாம். அதிமதுரம், இலுப்பைப்பூ அரத்தை, சந்தனம், செஞ்சந்தனம், நெரிஞ்சில் இவை கசாயமிட்டு திப்பிலி மென்பொடி போட்டுக் குடிக்கச் சீதபித்தஞ் சாந்தமாம்.

(சு. 3)

செய்முறை : கண்டசர்க்கரை, நெல்லிக்காய்ச்சாறு வகைக்கு 15 பலம் (525 கிராம்)எடுத்து, தேன்போலப் பக்குவமாகக் காய்ச்சி, கரகத் திரவியம், தாளிசபத்திரி, மிளகு, சீரகம், கருஞ்சீரகம், கொடுவேலி, ஏலம், இலவங்கப்பத்திரி, கூகைநீறு, திப்பிலி, சுக்கு, கொத்தமல்லி, சிவதை இவை வகைக்கு இரண்டு பலமும் (70 கிராம்), காட்டுத்திப்பிலி ஒரு பலமும் (35 கிராம்) கூட்டிச் சூரணம் செய்து, மேற்கண்ட லேகியத்தில் போட்டுக்

கிளறி, நெய் 1 பலம் (35 கிராம்) விட்டு, இவை ஆறியபின் தேன் 6 பலம் (210 கிராம்) விட்டுக் கிளறி வைத்துக் கொள்ளவும்.

அளவு : காலையில் எழுந்தவுடன், ஒரு கழஞ்சு (5.1 கிராம்) உண்டு, வெந்நீர் குடிக்கவும்.

தீரும் நோய்கள் : பித்தம், பைத்தியம், மூலம், சிலேற்பனம், குன்மம், சூலை, உட்டிணம், காமாலை, பாண்டு, விடதோடம் போன்ற அனைத்து நோய்களும் தீரும்.

அதிமதுரம், இலுப்பைப்பூ, அரத்தை, சந்தனம், செஞ் சந்தனம், நெரிஞ்சில் இவற்றைக் கசாயமிட்டு, திப்பிலி மென்பொடி போட்டுக் குடிக்க சீதபித்தம் தீரும்.

## சடாதார செந்தூரலேகியம்

தானென்ற சடாதார செந்தூ ரங்கேள்
தாரணியில் மானிடற்கு நோய்தீரும் வண்ணங்
கோனென்ற பூரணசந் திரோதைய மொன்றுங்
கொடுஞ்சுறுக் காஞ்சூத கெந்திசெந் தூரமொன்று
யானென்ற அப்பிரகச் செந்தூர மொன்று
அப்பனே பவளம்வெள்ளி வங்க பற்பம்
தேனென்ற சண்முகத்தா யறுமுக வாரனாள்
திறமான முகமாறுஞ் சிவசத்தி யாமே.

ஆமிந்தச் செந்தூரம் சத்தி மாறுந்
தனித்தனியே கழஞ்சியொன்று நிறுத்தி வாங்கிக்
காமிந்தக் கல்வத்தில் கலசப்பால் விட்டுக்
கலந்தரைத்துக் கடலையள வுண்டை செய்து
போமிந்த பூசணிக்காய் சீந்தி மாவும்
புகழான அசுவமா யிஞ்சி மாவே.

மாவென்ற கருவேலங் காயும் பூவு
மன்னவனே யுலர்த்திடித்து மாவாய்ச் செய்து
ஆவென்ற பஞ்சகோலிய மஞ்சுங் கூட்டி
அதனுடனே கசாயவகை யறைந்தேன் முன்பே
காவென்ற கடைச்சரக்கு யிளநீர் பாலுங்
கடிதான யேரண்ட நெய்தானுங் கூட்டித்
தேவென்ற லேகியமாய்ச் செய்வாய் சொன்னேன்
சகத்திலுள்ள லேகியங்க ளிதுக்கொவ் வாதே.

ஒவ்வாது ஆயிரத்து ஐநூற்றி லப்பா
உறுதியாம் பஞ்சகெவிய லேகியத்தின் போக்குச்
செவ்வாகச் சொல்லவில்லைப் பலன்போ ராதுத்
திரும்பியிந்த அறுநூற்றில் சேர்த்தேன் மானவை
நவ்வாக நவரத்தினமணி கோர்த்தாப் போலே
நாட்டிவிட்டேன் லேகியந்தா னினிப்பொய் யாது
முவ்வாகச் செய்துகொண்டு லேகியத்தை மைந்தா
முருகனென்ற சடாதார செந்தூரங் கூட்டே.

கூட்டிடுவாய் லேகியந்தான் கழஞ்சி ரெண்டு
குடோரமடா யறுவகையும் பணந்தா னிரண்டு
ஊட்டிடுவாய் போதொன்றுக் கிப்படியே மைந்தா
உத்தமனே யிருபோது மண்டலந்தான் கொள்ள
நாட்டிலுள்ள பிணிகளெல்லா மேகத் தாலே
நலம்பெரிய நோய்வருதல் நவிலக் கேளு
தாட்டிகமா யூண்விடுதல் பசித்தல் மோகஞ்
சஞ்சரித்தல் முழுக்குவிடல் கிலேசங் கோபம்.

கோபமிஞ்சில் பொறிகலங்கிக் கிலேச மானாற்
கூர்மனங்கே சேற்றுமத்தில் புகைஞ்சு சாடித்
தாகமிஞ்சி அத்திக்குள் ரத்தம் வற்றித்
தசைவற்றிச் சுக்கிலமுந் தண்ணீ ராகி
மோகமிஞ்சிச் சஞ்சரித்தால் கடுப்பெரிவு தோன்று
மூக்கில்ரெத்தம் வெள்ளைவிழுந் தயிர்போ லாகும்
ஆகமெல்லா மடித்தோடி அடக்கிப் போடு
மதுகுமஞ்சள் நெய்மீன்கள் கழுவும் வாறே.

(சு. 2. பா. 327-332)

செய்முறை : பூரண சந்திரோதயம், சூதகெந்தி செந்தூரம், அப்பிரகச் செந்தூரம், பவளம், வெள்ளி, வங்க பற்பம் இவை தனித்தனியே வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) எடுத்துக் கல்வத்தி விட்டு, கலசப்பால் விட்டு அரைத்து, கடலையளவு உருண்டை செய்து, பூசணிக்காய், சீந்தில், அசுவமா, இஞ்சி, கருவேலங்காய், பூ சேர்த்து, பஞ்சகவ்வியம் ஐந்துங்கூட்டி, கடைச்சரக்கு, இளநீர், பால், ஏரெண்டெண்ணெய் இவற்றையும் வேண்டியளவு கூட்டி லேகியமாகச் செய்து கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு. இருபோது. ஒருமண்டலம்.

தீரும்நோய்கள் : மேகம், வறட்சி, கடுப்பெரிப்பு, மூக்கில் ரத்தம், வெள்ளை, மயக்கம் போன்ற பல நோய்களும் தீரும்.

## சுக்கு இலேகியம்

சுக்குபலம் 15 சலத்தில் எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து பனைவெல்லம், ஏலம், ஓமம் கால்படி, கருவேப்பிலை அரைப்பலம், நெய் அரைக்கால்படி இவைகளை லேகியமாய்க் கிளரி புன்னைக் காயளவு சாப்பிடவும். கிராணிமூலம், வாய்வு, அதிசாரம், கடுப்பு, ரத்தவீக்கம், பாரிசவாய்வு, மந்தம், புளித்த யேப்பம் தீரும். இச்சாபத்தியம். (சு. 22)

செய்முறை : சுக்கு 15 பலத்தை (525 கிராம்) நீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து, பனைவெல்லம், ஏலம், ஓமம் இவை வகைக்கு கால்படி (336 மி. லிட்), கருவேப்பிலை அரைப் பலம் (17. 5 கிராம்), நெய் அரைக்கால்படி (168 மி. லிட்) இவை களைப் போட்டு லேகியமாய்க் கிளரி வைத்துக் கொள்ளவும்.

அளவு : புன்னைக் காயளவு.

தீரும் நோய்கள் : கிராணிமூலம், வாய்வு, அதிசாரம், கடுப்பு, ரத்தவீக்கம், பாரிசவாய்வு, மந்தம், புளித்த யேப்பம் தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## திப்பிலி இலேகியம்

திப்பிலிபலம் 25 கூட்டி தண்ணீரில் கசாயம் எட்டொன்றாய்க் காய்ச்சி, கற்கண்டு பலம் $2\frac{1}{2}$ சுக்கு, கடுக்காய், அக்கிராகாரம், அரத்தை, ஓமம், சீரகம், கொத்தமல்லி சமமாக ஆட்டி, கோட்டம், வெட்பாலை அரிசி இவைகள் வகை பலம் 1, தேன் படி $\frac{1}{8}$, நெய்படி $\frac{1}{8}$, மேற்படி கசாயத்தில் சகலமும் இட்டு லேகிய மாய்க் கிண்டி, கழற்சி அளவு சாப்பிடத் தீரும் வியாதி, சிலேற்பன வாதம், இருமல், உப்பிசம் நீங்கும். பத்தியம். இச்சாபத்தியம். (சு.22)

செய்முறை : திப்பிலி 25 பலத்தை (875 கிராம்) தண்ணீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, கற்கண்டு $2\frac{1}{2}$ பலம், (87.5 கிராம்) சுக்கு, கடுக்காய், அக்கிராகாரம், அரத்தை, ஓமம், சீரகம், கொத்தமல்லி இவை ஓரளவாய் எடுத்தாட்டி, கோட்டம், வெட் பாலை அரிசி இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்), தேன்படி $\frac{1}{8}$ (168மி லிட்), நெய்படி $\frac{1}{8}$ (168 மி.லிட்) இவற்றைக் கசாயத்திலிட்டு லேகியமாய்க் கிண்டி, வைத்துக் கொள்ளவும்.

அளவு : கழற்சிக் காயளவு.

தீரும்நோய்கள் : சிலேற்பன வாதம், இருமல், உப்பிசம் நீங்கும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## மதன காமேசுர இலேகியம்

சுக்கு, பெருஞ்சீரகம், அதிமதுரம், கிராம்பு, மிளகு, வால் மிளகு, திப்பிலி, சிறுநாகப்பூ, திரிபலை, சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கப்பட்டை, இலவங்கபத்திரி, கோட்டம், கொத்தமல்லி, தாளிசபத்திரி, கருஞ்சீரகம், அசுவகெந்தி, சண்பகப்பூ, கத்தூரி மஞ்சள், தக்கோலம், கசகசா, நிர் முள்ளி வித்து, உளுந்து, முள் வேலம், சிறுபாளிலை, பனைக் கிழங்கு, திராட்சை, அபின் இவை வகைக்கு அரைப் பலமாய் எடுத்துவறுக்க வேண்டியது. தூள் செய்து வஸ்தறாளிதம் செய்து, இதற்குச் சரியெடையாய் கஞ்சாவை நிறுத்துயெடுத்து, நல்ல சலத்தில்-7-தரம் கழுவி விதை, காம்பு முதலானதுகளை நீக்கிக் கொண்டு, இரண்டுபடி சலத்தில் இப்படி பசுவின் நெய்விட்டு அதில் கஞ்சாவைப் போட்டு நன்றாகக் காய்ச்சி வடிகட்டி எண்ணெயைப் பிழிந்து, மத்த நெய்யையும் நன்றாய்ப் பிழிந்துகொண்டு,பசுவின்பால் உழக்கு சர்க்கரை பலம் 3 ஒன்றாய் ஏற்றிப் பாகுபதத்தில் சூரணங்களைக் கொட்டி நெய்யை விட்டுவெந்து சமபதத்தில் தேன் பலம் 8 விட்டு, பதமாகக் கிளரி இறக்கவும். இரவில் புசித்தபிறகு 1 கழஞ்சுமுதல் 3 கழஞ்சு வரையில் புசிக்கலாம். வீரியம் அதிகரிக்கும். தேகம் சிவந்து வரும். கண்குளிர்ந்து பிரகாசமாய் இருக்கும். ஈளை, இருமல், மந்தம், பழைய சுரம், சூலை, சயம் இவை போகும். தேக ஆரோக்கியமும், மனதிடமும் உண்டாகும். (சு.22)

செய்முறை : சுக்கு, பெருஞ்சீரகம், அதிமதுரம், கிராம்பு, மிளகு, வால்மிளகு, திப்பிலி, சிறுநாகப்பூ, திரிபலை, சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கப்பட்டை, இலவங்கப் பத்திரி, கோட்டம், கொத்தமல்லி, தாளிசபத்திரி, கருஞ்சீரகம், அசுவகெந்தி, சண்பகப்பூ, கத்தூரி மஞ்சள், தக்கோலம், கசகசா, நீர்முள்ளி வித்து, உளுந்து, முள்வேலம், சிறுபாளிலை, பனைக்கிழங்கு, திராட்சை, அபின் இவை வகைக்கு ½பலம் (17.5 கிராம்)வறுத்துத் தூள்செய்து கொள்ளவும். இவற்றிற்குச் சமயெடை கஞ்சாவை வாங்கிக் கழுவி இரண்டுபடி (2·6 லிட்) நீரில் பசுவின் நெய் விட்டு, கஞ்சாவைப் போட்டுக் காய்ச்சி, எண்ணெயைப் பிழிந்து கொண்டு, நெய்யையும்

பிழிந்து, பசுவின் பால்உழக்கு (336மி லிட்), சர்க்கரை 3 பலம் (105 கிராம்) போட்டு, பாகுபதத்தில் மேற்கூறிய சூரணத் தூளைப் போட்டுக் கிளறி, பக்குவமான பதத்தில் 8 பலம் (280கிராம்) தேன் விட்டு இறக்கிக் கொள்ளவும்.

அளவு : இரவில் உணவு உண்டபின் 1 கழஞ்சு (5.1 கிராம்) முதல் 3 கழஞ்சு (15 3கிராம்) வரை உண்ணலாம்.

தீரும் நோய்கள் : வீரியம் அதிகரிக்கும். தேகம் சிவந்து வரும். கண் குளிர்ந்து பிரகாசமாக இருக்கும். ஈளை, இருமல், மந்தம், பழையசுரம், சூலை, சயம் இவை தீரும். தேக ஆரோக்கியமும், மனதிடமும் உண்டாகும்.

## மாணி இலேகியம்

வெள்ளாட்டின் மாணி, 50 வாங்கிப் பொடியாய் நறுக்கி வெய்யிலில் உலரவைத்து, தூள்செய்து வஸ்தறாளிதம் செய்து வைத்துக் கொண்டு, அமுக்கிராக்கிழங்கு பலம் 1, கசகசா, திரிகடுகு, ஓமம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அதிமதுரம், கோட்டம், அக்கிராகாரம், இலவங்கப் பட்டை, இலவங்கப்பத்திரி, நீர் முள்ளி விதை, பூனைக்காலி விதை, முருங்கவிதை, நத்தைச் சூரி விதை ஆலவித்து, அரசம்வித்து, சாரப்பருப்பு, பாதாம் பருப்பு வகை பலம் 4 இளவறுப்பாக வறுத்துச் சூரணம் செய்து வைத்துக் கொண்டு, கஞ்சா 2 பலம் எடுத்து 7-தரம் நல்ல சலத்தில் கழுவி விதை, காம்பு முதலானதுக்களை நீக்கி உலர்த்தி நெய்யில் வறுத்துச் சூரணம் செய்து கொள்ளவும். பசுவின்பால் கால்படி, அடுப்பின் மேல்வைத்து, சர்க்கரை பலம் ½ போட்டு, பாகுபதத்தில் சூரணம் கலந்து கொஞ்சம் கொஞ்சமாகக் கிளரி நெய்பலம் 20, தேன் பலம் 10 விட்டுக் கிளரி, கிண்டி இறக்கி இலேகியம் கொட்டைப்பாக்குப் பிரமாணம் இரவில் புசித்த பிறகு உண்ணவும்

(சு 22)

செய்முறை : வெள்ளாட்டின் மாணியை 50 வாங்கி நறுக்கி, உலரச்செய்து, தூளாக்கிப்பொடிசெய்துகொள்ளவும். அமுக்கிராக்கிழங்கு 1 பலம் (35கிராம்), கசகசா, திரிகடுகு, ஓமம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அதிமதுரம், கோட்டம், அக்கிராக்காரம், இலவங்கப் பட்டை, இலவங்கப்பத்திரி, நீர்முள்ளிவிதை, அரசம், வித்து முருங்கைவிதை, பூனைக்காலிவிதை, நத்தைச் சூரி விதை, ஆலம்வித்து, சாரப்பருப்பு, பாதாம்பருப்பு இவை வகைக்கு 4 பலம் (140கிராம்) வாங்கி வறுத்துச் சூரணம் செய்யவும்.

கஞ்சா 2 பலம் (70 கிராம்) வாங்கி 7 முறை கழுவி உலர்த்தி பக்குவமாகச் சூரணம் செய்து கொள்ளவும். பசுவின்பால் கால்படி (336 மி.லிட்) பாகுபதமானவுடன் மேற்கண்ட சூரணங்களைக் கொட்டிக் கிளரி, நெய் 20 பலம் (700கிராம்) தேன், 10 பலம் (350கிராம்) விட்டுக் கிளறி லேகியமாக்கிக் கொள்ளவும்.

அளவு : கொட்டைப் பாக்களவு. இரவில் உணவு உண்டபின் உண்ணவும்.

தீரும்நோய் : இருதயவலி தீரும்.

## மிளகு இலேகியம்

மிளகு பலம் 1, பசுவின் வெண்ணெய் பலம் 1, சீனா கற்கண்டு பலம் 1, மிளகைச் சூரணித்து ஒரு சட்டியை அடுப்பில் வைத்து நெய்யை ஊற்றி, உருகினவுடன் மிளகுச் சூரணத்தைப் போட்டு சிவந்து வருமளவும் கிளரி லேகியமாய் வைத்துக் கொண்டு கழற்சிக் காயளவு சாப்பிடவும். இச்சாபத்தியம். (சு.22)

செய்முறை : ஒருபலம் (35கிராம்) மிளகைச் சூரணித்து, 1பலம் பசுவின் நெய்யில் போட்டு, சிவக்கும் படியாகக் காய்ச்சி, 1 பலம் (35 கிராம்) சீனா கற்கண்டு போட்டு லேகியமாய்க் கிளரி வைத்துக் கொள்ளவும்.

அளவு : கழற்சிக் காயளவு.

தீரும்நோய்கள் : பலநோய்கள் தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

(வேறு)

மிளகு பலம் 15, இரண்டரைப்படி தண்ணீர், கசாயம் எட்டொன்றாக்கி வடித்து, கற்கண்டு பலம் 2½, அக்கிராகாரம், கிராம்பு, ஏலம், சீரகம், கோட்டம், அதிமதுரம், சிறுதேக்கு, வாய் விளங்கம், நறுக்குமூலம் வகைக்குக்கால் பலமாய் எடுத்துச் சூரணித்து, நெய் கால்உழக்கு விட்டு லேகியம் கிளரி, கழற்சிக் காயளவு சாப்பிடவும். 64 சிலேற்பனம், சயங்கள், நீர்த்தோடம், விடம், சுரம், வாதமுந்தீரும். இச்சாபத்தியம். (சு. 22)

செய்முறை : மிளகு 15 பலம் (525கிராம்) தண்ணீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து, கற்கண்டு 2½பலம்,(87.5கிராம்) அக்கிராகாரம், கிராம்பு, ஏலம், சீரகம், கோட்டம், அதிமதுரம் சிறுதேக்கு, வாய்விளங்கம், நறுக்குமூலம் இவை வகைக்கு¼ பலம் (8.75கிராம்) வாங்கிச் சூரணித்து, நெய் கால் உழக்கு (84மி.லிட்) விட்டு லேகியமாகக் கிளரிக் கொள்ளவும்.

அளவு : சுழற்சிக் காயளவு.

தீரும்நோய்கள் : 64 சிலேற்பனம், சயங்கள், நீர்த்தோடம் விடம், சுரம், வாதம் தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம்.

## இலேகியம் (பொது)

கண்டுபார் சூதகத்தி லுதிரம் போக
    காலொடு கைமேலும் கடுத்தி குற்றி
சென்றுபார் வயித்திலே வுதிர மாச்சு
    குன்ம வாய்வாகிச் சூலை யாச்சு
அன்று பார் குசிகர வாய்வு வாச்சு
    அபான லுதிரங் கட்டி
யுண்டுதா னுதரத்தில் வாய்வு சேர
    உள்ளங்கால் நகக்கண்கள் குத்த லாச்சே.

ஆச்சென்ற சூதகத்தின் வாய்வுபொல் லாது
    ஆருந்தான் தீர்க்கறியார் அப்பா கேளு
பேச்சென்ற கொடுவேலி யமுக்கி ராவேர்
    பெருமருந்து கோபிரண்டை நொச்சி சங்கு
வேச்சென்ற மாவிலங்கு மிளகறணை கொழுஞ்சி
    வெள்ளைச்சா ரணையுடன் கண்ணுப் பீளை
ஆச்சென்ற நிலவாகை யிவற்றி னோடு
    அப்பனே பலம்வகைக்குப் பலந்தான் தூக்கே.

தூக்கியே யிடித்ததனைச் சீலைவடி கொண்டு
    சூரணமாய்ச் செய்தினியே சொல்லக் கேளு
ஆச்சென்ற வால்மிளகு கடுக்காய் தானி
    ஆனத்திப்பிலி ஓமம் அரத்தை சுக்கு
தாக்கியே சாதிக்காய் கிராம்புஇஞ்சிப் பெருங்காயங்
    கண்டத்திப்பிலி சதக்குப்பை குரோசாணி திப்பிலி
தாக்கியே சாதிக்காய் கிராம்பு பத்திரி
    தாளிச பத்திரியோடு சிறுநாகப் பூவே.

பூவொடு திப்பிலியு மதிவிடைய மாஞ்சி
    புகழான சேங்கொட்டை ரசகற் பூரம்
கோவொடு வகைக்குகால் பலமே தாக்கு
    கொள்ளிலைச்சாறு தேங்காய்ப்பால் விட்டு ஆட்டி

ஆவொடு முன்மருந்தி லொக்கச் சேரு
அடுப்பேற்றிச் சட்டிதனைக் காய வைத்துக்
கோவொடு நல்லெண்ணெய் படிதான் வாரு
கொதிக்கையிலே வெள்ளுள்ளி ரெண்டுபலம் போடே.

போடவே தோல்போக்கி நெரித்துப் போடு
புகழான பனைவெல்லம் நாலுபலம் போடு
ஆடவே ஆவின்பால் படிதான் வாரு
அப்பனே முங்கிலிலை யரைத்து நன்றாய்
தேடவே தேசிக்கா யளவு போடு
சேர்த்துக் கிண்டி பேர்பாகு போலாங்
காடியே சூரணத்தைக் கொட்டிக் கிண்டு
சம்பாநெல் பொரியதிலே சேரைப் போடே.

சேரையே போட்டுநீ கிண்டி நன்றாய்ச்
சேர்த்துமே லேகியம்போல் பண்ணிக் கொண்டு
ஆரைநீ நாளொன்றுக் கந்தி சந்தி
அப்பனே கொட்டைப்பாக் களவு கொள்ளு
சேரேநீ வயித்திலே உதிர மேது
திரட்சியொடு வாய்வேது கன்ம மேது
கோரையென்ற உதிரமெங்கே கட்டி யெங்கே
சூதக வாய்வுகுத்தல் வீழ்ந்து போச்சே.

போச்சென்ற பத்தியந்தான் சொல்லக் கேளு
புளியொடு புகையிலையுங் கைப்புந் தள்ளு
கூச்சென்ற அரைக்கீரை முருங்கைப் பிஞ்சு
கருவத்தல் வெள்ளாட்டு வத்தல் கூட்டு
மாச்சென்ற புளியில்லாத வித்துக் கூட்டு
அப்பனே உப்பதனை வறுத்துக் கூட்டு
கூட்டுவது மருந்துகொள் ளும்போது தள்ளிக்
கொண்டுமறு பத்தியந்தான் கேளே நீயும். (சு.19)

செய்முறை : கொடுவேலி, அமுக்கிராவேர், பிரண்டை, நொச்சி, சங்கு, மாவிலங்கு, மிளகறணை, கொழுஞ்சி, வெள்ளைச் சாரணை, கண்ணுப்பீளை, நிலவாகை இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்) வாங்கி இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். வால்மிளகு, கடுக்காய், தான்றி, ஆனைத்திப்பிலி, ஓமம்' அரத்தை, சுக்கு, சாதிக்காய், கிராம்பு, இஞ்சி, பெருங்காயம்,

கண்டத்திப்பிலி, சதகுப்பை, குரோசாணி, திப்பிலி, சாதிக்காய், கிராம்புபத்திரி, தாளிசபத்திரி, சிறுநாகப்பூ, அதிவிடயம், சடாமாஞ்சி, சேங்கொட்டை, ரசகற்பூரம் இவை வகைக்குக் கால்பலம் (8.75 கிராம்) வாங்கி, கொள்ளிலைச்சாறு, தேங்காய்ப் பால்விட்டு ஆட்டி, முன் மருந்தில் சேர்த்துக் கொள்ளவும். சட்டியை நன்கு காயவைத்து 1 படி (1.3லிட்) நல்லெண்ணெய் விட்டுக் கொதிக்கும் போது 2 பலம் (70கிராம்) வெள்ளுள்ளியை நசுக்கிப்போட்டு, பனைவெல்லம் 4 பலம் (140 கிராம்) போட்டு, ஆவின்பால் 1 படி (1.3லிட்) சேர்த்து, மூங்கிலையை அரைத்துத் தேசிக்காயளவு போட்டு, மேற்கண்ட சூரணத்தைக் கொட்டிக் கிண்டி, சம்பா நெல்பொரி 1 சேர் (280கிராம்) போட்டு லேகியம்போல் செய்து கொள்ளவும்.

அளவு : கொட்டைப் பாக்களவு, காலை, மாலை உண்ணவும்.

தீரும்நோய்கள் : வயிற்றில் உதிரத்திரட்சி, வாய்வு, சூதகம் வாய்வுகுத்தல் தீரும்.

பத்தியம் : புளி, புலக்கயிலை, கைப்பு நீக்கவும். கருவற்றல், வெள்ளாட்டு வற்றல், அரைக்கீரை, முருங்கைப்பிஞ்சு கூட்டவும், உப்பை வறுத்துக் கூட்டவும்.

# மருந்துப் பொருள்-சுத்தி முறைகள்

மிளகுசுத்தி : புளித்த மோரில் 3 நாள் ஊறி ஓட்டில் வறுக்கவும்.

திப்பிலி சுத்தி : பழச்சாற்றில் ஊறியெடுத்துக் கொள்ளவும்.

ஓமம் சுத்தி : ஓமத்தைச் சுண்ணாம்பு நீரில் ஒரு சாமம் ஊறி உலர்த்தி எடுக்கவும்.

சிவதை அமுக்காரி சுத்தி : மேல் தோல் சீவி, சுண்ணாம்பு பூசி எடுத்துக் கொள்ளவும்.

இஞ்சி ரசம் சுத்தி : இஞ்சி ரசம், சுண்ணாம்பு நீரில் ஊற வைத்து எடுத்துக் கொள்ளவும்.

எட்டிக் கொட்டை சுத்தி : எட்டிக் கொட்டையை நெல்லில் அவித்து, சிறுக்கீரை ரசத்தில் ஒரு சாமம் ஊறினப் பின் தேத்தாங் கொட்டை ரசத்தில் வேகவைத்து எடுத்துக் கொள்ளவும்.

கொம்பரக்கு சுத்தி : நல்ல ரசத்தில் போட்டு அடுப்பெரித்து எடுக்கவும். இப்படி 12 தரம் எடுக்கவும்.

மாசிக்காய் சுத்தி : பசுநெய்யில் வறுத்து, வெடித்த பிறகு எடுக்கவும்.

சகல எண்ணெய்களும் சுத்தி : நல்ல சலத்தில் நாலு நாழிகைச் சென்றெடுக்கவும்.

அமுக்கிரா சுத்தி : ஆவின்பாலில் கொஞ்சம் அவித்து எடுத்துக் கொள்ளவும்.

கருடபச்சை சுத்தியும் சீனம் படிகாரம்: கருட பச்சையைப்பரு போலரைத்து மேனிச்சாற்றில் 30-நாழிகை ஊறியெடுத்துக் கொள்ளவும்.

சீனத்தை பில்லை, 4-சாமம் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

படிக்காரத்தை எருச்சாணத்தில் கிழிகட்டி வைத்துக் கொள்ளவும். அல்லது சிறுநீரில் 3 நாள் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

வெண்காரம் சுத்தி : வெண்காரம் பொரித்துக் கொள்ள வேணுமென்றால், காடியிலாவது சுத்தசலத்தில் அரைத்து ஊறவைத்து எடுத்துக் கொண்டு, பனங்கள்ளு அரைத்து ஊற வைத்து எடுத்துக் கொண்டு, பனங்கள்ளு படிகார அடுப்பில் வைத்து எடுத்துக் கொள்ளவும்.

இசல் துத்தம் சுத்தி : 3 நாள் துத்தத்தைக் கிழிகட்டிச் சிறுவர் மூத்திரத்தில் 7 நாள் ஊறினபின்பு பசுவின் பாலில் இரண்டு சாமம் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும.

துருசு சுத்தி : துருசைத் தயிரில் அரைத்து அடைதட்டி, ஓடு காய வைத்து அதில் பிரட்டி எடுத்துக் கொள்ளவும்.

மயில்துத்தம் : சுண்ணாம்பு அல்லது கற்றாழை, தயிர் இந்த நீரில் ஊர வைத்து எடுத்துக் கொள்ளவும்.

கல் நார் சுத்தி, சிலாசத்து : கல்நாரைக் கழுதை மூத்திரத்தில் ஊறின பிறகு யெடுத்துக் கொள்ளவும் சுத்தியாகும்.

சிலாசத்தைப் பழச்சாற்றில் கொதிப்பித்து யெருக்கம் பாலில் 3 குளிகை, ஊறினபின் அல்லது ஆவின் பாலில் எடுத்துக் கொள்ளவும்.

நாகம் கருவங்கம் : கருவங்கத்தை வெள்ளாட்டுக் கோமியத்தில் பிரண்டைவேர் அரைத்துப் போட்டு நல்லெண்ணெய் விட்டு கலக்கிக் கொண்டு, அதில் பத்துதரம் உருக்கிச் சாய்க்கவும்.

மூதாதி சிங்கு (வீரசுத்தி வங்கம்) : மூதாதி சிங்கை வெள்ளாட்டுக் கோமியத்தில் ஒரு நாழிகை கொதிக்க வைத்து யெடுத்துக் கொள்ளவும் சுத்தியாகும்.

வெள்ளை விளரியைக் கொண்டு வந்து, பசுவின் அல்லது சாணிப்பால், பசுவின் நீர், சுண்ணாம்பு நீர் இதுகளில் எதிலாவது போட்டு நிறமாய்க் கூட்டி எடுத்துக் கொண்டு, மிளகு பன்றிப் பாலில் கிழிக்கட்டி யெடுத்துக் கொள்ளவும். வெள்ளாட்டுக் கோமியத்தில் நிறமாய் எடுத்துக் கொள்ளவும். சூதத்தை

எருக்கம் பாலில் ஊற வைத்து, ஒரு நாள் செங்கல் தூள், சேங் கொட்டை, சர்க்கரை இதுகளில் அரைக்கவும். வங்கத்தைஇலுப்பை எண்ணெயிலாவது, தேங்காய் எண்ணெயிலாவது, நவச்சாறு தூள் தூவி அதில் 7 தடவை உறுக்கிச் சாய்க்கவும். 7 அல்லது மோர்-காடி, கோமயம் இதுகளிட்டுருக்குச் சாய்க்கலாம். இப்படியே நாலைந்து சுத்தி.

லிங்கம் வீரம் சுத்தி : லிங்கம் ஒரு படியா வாங்கிதேனில் ஒரு நாளூறப் போட்டு மறுநாள் எடுத்து, எலுமிச்சம் பழச்சாறு, குப்பைமேனி, முத்துப்பால் சமமாய்க் கலந்து அடுப்பின் மேல் சட்டி வைத்து, லிங்கம் வைத்துப் புகையாமல் சுருக்குக் கொடுக்கவும் சுத்தி.

ஒரு இளநீரில் வராகனெடை வீரத்தைப் போட்டுக்கலக்கி ஒருசட்டியில் ஊற்றி வீரகட்டியை அடுப்பில் வைத்து எடுக்கவும் சுத்தியாகும்.

ஆறு வெத்திலை, மிளகு கசாயம் விட்டு அதில் மேற்படி கிழிகட்டி 3 நாளும் வைத்து யெடுத்துக் கொள்ளவும். சுத்தி யாகு.ம்

பச்சை துருசு: கோமியத்தில் எரித்து எடுத்துக் கொள்ளவும். பவளசுத்தி பசுவின் மோரில் கிழிகட்டி விட்டு 4 நாழிகை எரித்து எடுக்கவும்.

அஞ்சனக் கல் சுத்தி: அஞ்சனக் கல்லைப் புளியாரை ரசத்தில் ஒரு நாள் ஊறி எடுக்கவும்.

கல்மதம் சுத்தி: கலமதத்தை நீரில் கழுவி எடுத்துக் கொள்ளவும்.

நாவி சுத்தி: பருத்தியிலை ரசத்தில் ஊறி, ஊமத்தம் இலைக்குள் வைத்துக் குப்பியில் சொருகி 7 நாழிகை பொதித்து கொடுக்கவும். சீந்தில் கிழாயத்தில் நிறமாய் எரிக்கவும். எருக்கம் பாலில் சற்று ஊறி கோமியத்தில் கழுவி எடுக்கவும்.

நேர் வாளம்சுத்தி : எருமைச் சாறு, நீர், காடி விட்டுக் கலந்து அதில் வாளத்தைப் போட்டுக் கொதிக்க வைத்து எடுத்துநஞ்சு நீக்கிக் காடி மோர் சமம் கலந்து, அதில் கொதிக்க வைத்து எடுத்துக் கொள்ள வேண்டியது.

பாடாண சுத்தி: அருபத்திநாலு பாஷாண சுத்தி செய்ய குப்பைமேனிரசம், சிறுநீர், பழரசம், செம்பரத்தைப்

பூ. வெத்திரசம் வகைப்படி 1, முலைப்பால் படி $\frac{1}{4}$ இவை பாண்டத்தில் விட்டு அதில் பாஷாண வுப்பு,வெடிகாரம், படிகாரம் நவசாரம் இவை வகைக்குப் பலம் $\frac{1}{4}$ தூள் செய்து கலக்கிக் கிழிக்கட்டி நிழலாகக் கரத்தில் வைத்து, காற்றில்லாத இடத்தில் 15 நாள் வைத்து எடுத்து, காடியில் ஊற வைத்து எடுத்துக் கொள்ளவும்.

காந்த சுத்தி: காந்தத்தை பழரசத்திலும், காடிப் பாலும், குமரியிலும் கொதிக்க வைத்து எடுத்து, பிறகு சாணி நீரிலும், 7 தரம் காய்ச்சி, துவைக்கவும். பசுப் பாலிலும், நெய் போன்ற இவை களில் 8 நாள் ஊறி எடுக்கவும். சிறுப் பூளைக்காய் இலையை அரைத்துப் புடம் போடவும் நசியம்.

தொட்டி சுத்தி: தொட்டி நாலு பலம், 'வெள்ளாட்டுப் பாலிலும், முலைப் பாலிலு மாட்டி நாழிகை ஆற வைத்து எடுத் துக் கொள்ளவும். துண்டு துண்டாக நறுக்கிக் கிழிக்கட்டி நெல்லில் அவித்து எடுத்துக் கொள்ளவும்.

பொன்நிமிளை சுத்தி: பொன் நிமிளையை 3 நாள் காடியில் ஊற வைத்துக் கொள். 3 படி கோமியத்தில் வேக வைத்து எடுத் துலர்த்தி, நெல்லு செறித்து கிழிக்கட்டிக் கொள்ளவும்.

பேதி சுத்தி: நார்த்தங்காய் ரசத்தில் ஊற வைத்து யெடுத்து கோர்த்துக் கொள்ளவும்.

சேங்கோட்டை சுத்தி: சலத்தில் ஊற வைத்து மறுநாள் மூக்கைப் பொடி எடுத்துக் கொள்ளவும். (சு. 22)

சரக்கு சுத்தி:

சாதிலிங்கத்தை வாங்கி, கிழிக்கட்டி எலுமிச்சம் பழச் சாறுடனே படி $\frac{1}{4}$, பால் படி – $\frac{1}{4}$, மேனிச்சாறு படி $\frac{1}{4}$ இந்த மூன்று மொன்றாய்க் கலந்து, கிழியை அதில் போட்டு மூன்று நாழிகைக் கொதிக்க வைத்து எடுத்துக் கழுவி ரவி யுலர்த்திப் போடவும் சுத்தியாச்சு.

சவ்வீரத்தை வாங்கி, கிழிக்கட்டி இளநீர் தண்ணீரில் போட்டு மூன்று நாழிகை கொதிக்க வைத்து எடுத்து; கழுவி ரவியுலர்த்திப் போட சுத்தியாச்சு. இது கவிந்து விடும். கூடாது.

கற்பூரத்தை வாங்கி, கிழிக்கட்டி இளநீர் தண்ணீரில் மூன்று நாழிகை போட்டு வைத்து எடுத்து வெற்றிலையும் மிளகுங் கசாயஞ் செய்து, அதில் மூன்று நாழிகை போட்டெடுத்துக் கழுவி ரவியுலர்த்தி வைக்கவும். சுத்தியாச்சு. சுருக்குக் கொடுக்கவும். கரையாது.

வெள்ளைப் பாடாணத்தை வாங்கி, கிழிக்கட்டி ஒரு படிய முரியில் காற்பலம் மிளகரைத்துக் கலக்கி அதிற் போட்டுழட்டி வற்றக் காச்சி எடுத்து, கழுவி ரவியுலர்த்தச் சுத்தியாச்சுது.

கவுரியை வாங்கி, கிழிக்கட்டி பன்றிப் பாலிற் போட்டு ஒரு குளிகை தீ யெரித்தெடுத்துக் கழுவி ரவியுலர்த்த சுத்தியாச்சுது.

குதிரைப் பல்லுப் பாடாணத்தை வாங்கி, கிழிக்கட்டி உமிழ் நீரிலொரு நாழிகை போட்டுஊரவைத்து ரவியுலர்த்தி ,சுத்தியாச்சு.

மனோசிலையைக் கிழிக்கட்டி நாழி காடித் தெளிவிற் போட்டு வைத்து அப்புறம் எடுத்துக் கழுவி ரவியுலர்த்தி சுத்தியாச்சு.

பவளப் புற்றைக் கிழிக்கட்டி ரெண்டுபடி ஆவின்மோரில் நாலு நாழிகை போட்டு வைத்து எடுத்துக் கழுவி ரவியுலர்த்த சுத்தி.

அரிதாரத்தைக் கிழிக்கட்டி நாழி யமுரியில் கால்பலக் கல்லுச் சுண்ணங் கரைத்து அதனுடனே மேனிச் சாறும் பழச் சாறுங் கூடக் கலந்து அதில் போட்டு, ஒரு நாழிகை கொதிக்க வைத்து எடுத்துக் கழுவி ரவியுலர்த்த சுத்தியாச்சு.

இரசத்தைக் கிழிக்கட்டி எலுமிச்சம் பழச் சாற்றில் மூன்று குளிகை போட்டெடுத்து உலர்த்தி, அப்புறம் எருக்கலம் பாலில் ரெண்டு நாட் போட்டெடுத்து, கழுவி ரவியுலர்த்த சுத்தியாச்சு.

கல்நாரைக் கிழிக்கட்டி ஒரு படி கழுதை நீரிற் போட்டுக் காய்ச்சி எடுத்துக் கழுவி ரவி யுலர்த்த சுத்தியாச்சு.

கருட பச்சையைப் பயறு போல் தட்டிக் கிழிக் கட்டி ஒருபடி குமரிச் சாற்றில் முப்பது நாழிகை காய்ச்சி எடுத்துக் கழுவி ரவி யுலர்த்தச் சுத்தியாச்சு.

சீனக் காரத்தை வாங்கி, கிழிக்கட்டி ஆவின் பாலிலூறவைத்து நாலு நாழிகை கழித்தெடுத்து உலர்த்திப் போடச் சுத்தியாச்சுது கரைந்துபோம்.

பொரி காரத்தை வாங்கிக் கிழிக்கட்டி எருமைச் சாணியைக் கரைத்துக் கொதிக்க வைத்து அதில் முக்கி எடுத்து,எருமைமோரிற் கழுவி வுலர்த்திப் போடச் சுத்தியாச்சுது.

குந்திருக்கும் வாங்கி, கிழிக் கட்டிச் சாராயத்தில் ஒருநாள் போட்டு மறு நாளெடுத்துக் கழுவி ரவி யுலர்த்தி வைக்கச் சுத்தியாச்சுது.

வெண்காரத்தை வாங்கி, கிழிக் கட்டி மூத்திரத்தில் மூன்று நாளூர வைத்து அப்புறமெடுத்துக் கழுவி ரவி யுலர்த்தி வைக்கச் சுத்தியாச்சுது.

கந்தகம் வாங்கியே திரண்ட வெண்ணையிற் போட்டு இருப்புக் கிண்ணத்தில் காய்ச்சி, பாலில் அஞ்சு தரஞ் சாய்த்து எடுத்துக் கழுவி ரவியுலர்த்த சுத்தி.

இரசத்தை வாங்கி, அதைப் புகையூறல் மஞ்சள் போட்டு செங்கல் பொடி உப்பும் போட்டரைத்து அலசி, கழுவிப் போட்டு அப்புறம் மேனிச்சாறு, பிரண்டைச் சாறு, அத்திச் சாறு, தேன் இஞ்சிச் சாறு, ஆவரையின் பட்டைச் சாறு, சிதிர் மூலச் சாறு யிதுகளில் சேர்த்தரைத்து, அப்புறம் திரிபலாதிக் கசாயத்தில் போட்டெடுத்து, அப்புறம் அமுரியில் போட்டெடுத்து, அத்தி நவ்வல் பட்டைக் கசாயத்தில் போட்டெடுத்து, அப்புறம் நார்த்தங்காய்க் கசாயத்தில் போட்டெடுத்து, கழுவிப் போட நல்ல சுத்தியாச்சுது.

மிருதாரத்தை வாங்கி, கிழிக் கட்டி இரண்டுபடி பனங்கள்ளில் போட்டு மூன்று நாழிகை தியெரித்தெடுத்துக் கழுவி ரவியுலர்த்த சுத்தி யாச்சு.

சங்கு முடிதாரத்தை வாங்கி, கிழிக் கட்டி வெள்ளாட்டு நீரிற் போட்டு, பத்து நாழிகை தியெரித்தெடுத்து முலைப் பாலிலும், வெள்ளாட்டின் பாலிலும் ஒவ்வொன்றுக்குப் பத்து நாழிகை ஆறப் போட்டுக் கழுவி எடுக்க சுத்தியாச்சு.

தொட்டியப் பாடாணம் வாங்கி, சத்துச் சத்தாக வெட்டி கிழிக் கட்டி, நெல்லில் அவித்துக் கழுவிப் போட்டு, உரிய வெண்ணெயில் இரண்டு நாளைக்குப் போட்டெடுத்து, அப்புறம் தயிருக்குள்ளே இரண்டு நாள் வைத்து, அப்புறம் குமரிச் சாற்றிலும் மஞ்சள் தண்ணீரிலும் ஒரு நாள் போட்டெடுத்து யுலர்த்திப் போடவும்.

துருசை வாங்கி, கிழிக் கட்டி பசுவின் கோமியம் இரண்டு படியிற் போட்டு எரியிட்டு, கழுவிப் போடச் சுத்தியாச்சு. மூன்று நாழிகை எரிக்கவும்.

சகத்திர வேதிகை வாங்கி, கிழிக் கட்டி நார்த்தங்காய்ச் சாற்றினிற் போட்டுக் கழுவி, இரவி யுலர்த்திப் போடச் சுத்தி யாச்சு. நாலு நாழிகை போட்டு வைக்கவும்.

அஞ்சனக் கல்லை வாங்கித் தட்டி கிழிக் கட்டி, புளியினாரைச் சாற்றி லூறப் போட்டு, ஒருநாள் கழித்தெடுத்துக் கழுவிப் போட சுத்தி யாச்சு.

நவலோகத்தை வாங்கி, நல்லெண்ணெய்க்குள் போட்டு ஒரு நாள் கழித்தெடுத்து, பழச்சாற்றில் அறுபது நாழிகை போட்டெடுத்துக் கழுவி வெயிலில் வைக்க வெண்மையாம்.

தாம்பிரத்தை அமுரி படி 1, பழச்சாறு இது இரண்டும் ஒன்றாக விட்டு, கால் பலக் கல்லுச் சுண்ணங் கூடக் கலந்து அதிற் போட்டு, ரவியிலுமதையும் வைத்து,சாயங்காலம் கழுவிப் போடச் சுத்தியாச்சு. வெள்ளெருக்கம் பாலில் ஏழு தடவை காயவைத்து போட்டெடுக்கவும்.

காந்தத்தை வாங்கி, கானச் சாற்றில் ஆட்டு நெய் விட்டு அதில் போட்டுக் காய்ச்சி எடுத்துக் கழுவி ரவியிலும் வைத்தெடுக்க சுத்தியாச்சு.

காரீயத்தை வாங்கி, வெள்ளாட்டு நீரில் பிரண்டை வேரரைத்துப் போட்டுக் கலக்கி, அதில் நல்லெண்ணெய்க்குத் தீயத்தை உருக்கி மூன்று தரஞ் சாய்த்தெடுத்துக் கழுவிப் போட சுத்தியாச்சு.

பொன்னி மிளையை மூன்று நாளைக்குக் காடித் தெளுவில் காய்ச்சிக் கழுவி உலர்த்த சுத்தியாச்சு.

அப்பிரகத்தைப் பத்து நாளைக்குக் காடித் தெளுவி லூறப் போட்டுக் கழுவிப் போடச் சுத்தியாச்சு.

கல்மதத்தை அமுரியில் பத்து நாழிகை போட்டு வைத்து அப்புறம் கழுவி எடுக்க சுத்தி.

நேர்வாளம் வாங்கித் தோட்டை யுடைத்துப் பருப்பை கிழிக் கட்டி, மேதிச் சாணிப் பாலிற் போட்டுக் கொதிக்க வைத்து யிறக்கி, பருப்பிலிருக்கிற முளையை எடுத்துப் போட்டுக் கழுவி யுலர்த்த சுத்தியாச்சு.

சிவதையைப் பாலில் அவித்து, கழுவி யுலர்த்தச் சுத்தியாச்சு.

அமுக்கிராவேரைப் பாலிலவித்துக்கழுவி உலர்த்தச் சுத்தியாச்சு.

ஏக சுத்தி, மேனிச் சாறு, குட்டித் தக்காளிச் சாறு, கையான் சாறு, ஊமத் தஞ்சாறு, பழச் சாறு, அமுரி, காடி யிதுகளில் உப்புச் சுண்ணாம்பு, வெடியுப்பு, சாரஞ்சினம் ஒரு பலம் வீதம் கரைத்து அதிற் போட்டு, பத்து நாழிகைக் கழித்து எடுத்துக் கழுவிப் போடச் சுத்தியாச்சு.

செம்பு சல்லியுருக்கி மூன்று தர மேதிச் சாணியைக் கரைத்து அதில் சாய்த்துக் கழுவிப் போட நல்ல சுத்தியாச்சுது.

(சு. 15)

பகுதி-2

# நோயும் மருந்தும்

## நேத்திர ரோகத்திற்கு

போடுதற்கு நேத்திரத்தின் வியாதிக் கெல்லாம்
பூட்டுறேன் கனகரத்தி னாதி தன்னை
ஆட்டுதற்கு இதுவென்றால் கண்ணோய்க் கெல்லாம்
அதீதமா மாச்சரியம் விபரங் கேளு
நீடுதற்கு நீலமொடு செம்பு வச்சிரம்
நேரான மரகதமும் புட்ப ராகங்
கோடுதற்குக் கோமேதகம் பவளம் பச்சை
கொடியவை டூரியத்தோ டொன்ப தாச்சே.

ஆச்சப்பா ரத்தினங்க ளொன்ப தாகும்
அப்பனே லோகங்க ளொன்பதையுங் கேளு
வாச்சப்பா தங்கமோடு வெள்ளி செம்பு
மைந்தனே பித்தளையுந் துத்த நாகம்
ஒச்சப்பா வெள்ளீயம் அயம்கா ரீயம்
உத்தமனே ஒன்பதையு மொக்கக் கூட்டு
நீச்சப்பா துருசோடு துத்தஞ் சங்கு
நீலாஞ்சனம் பீதாஞ் சனமும் பாரே.

பாரப்பா கடல்நுரையும் பீத ரோகணி
பரிவான மஞ்சளோடு கடுகு ரோகணி
நேரப்பா திப்பிலியுங் கோட்டந் தானும்
நிறையான நீர்புங்கம் விதையி னோடு
காரப்பா அண்டோடு ஆமை யோடு
கபாலோடு யிந்துப்புக் கற்பூரந் தானுந்
தாரப்பா சந்தனமுஞ் செம்பஞ்சு கடுக்காய்
தாமரைக் கிழங்குடனே நெல்லி காணே.

காணப்பா மருந்துவகை நாற்பத் தஞ்சுங்
கட்டாகக் குறையாமல் தூக்கி வாங்கி
ஊணப்பா கல்வத்தி லிட்டு நீயும்
உத்தமனே பழச்சாற்றா லோர்நா ளாட்டிப்
பூணப்பா கொடுப்பைச்சாறு மறுநா ளாட்டிப்
புகழான மூன்றுநாள் சிறுகீரைச் சாறு
தோணப்பா நாலாநாட் கரிப்பான் சாறு
சுகமாக ஐந்தாம்நாள் பொடுதலையின் சாறே.

சாறுகே ளாறாநாள் பிச்சிப்பூச் சாறுஞ்
சாதகமா யேழாநாள் மல்லிகைப்பூச் சாறும்
வாறுகே ளெட்டாநாள் சண்பகப்பூச் சாறு
மைந்தனே நவநாளில் நந்திப்பூச் சாறு
வீறுகேள் பத்தானாள் அல்லிப்பூச் சாறு
மேலான முலைப்பாலா லப்பதினோ ராநாள்
வேறுகே ளாட்டிநன்றாக் கயிறு போல
விபரமுடன் கட்டியே நிழலில் வையே.

வைத்ததொரு கயிறெடுத்து நேத்திர நோய்கள்
வந்ததென்றால் தொண்ணூற் றாறுந் தீர
நைத்ததொரு அனுபானம் பார்த்துக் கொண்டு
நயமாகத் தீட்டிடவே யருந்ததியுங் காணும்
மொய்த்ததொரு சூத்திரத்தில் சொன்னமருந் தெல்லாம்
மொழிக்குற்றம் வாய்க்குற்ற மொன்று மில்லை
எய்த்ததொரு ஏழுவகைச் சாறு கொண்டு
இடுகனக ரத்தினத்தை யெல்லாம் போமே.

(சு.1.பா.850-855)

(செய்முறை: நவரத்தினங்கள், நவலோகங்கள், துத்தம், துருசு, சங்கு, நீலாஞ்சனம், பீதாஞ்சனம், பீதரோகணி, கடல் நுரை, மஞ்சள், கடுகுரோகணி, திப்பிலி, கோட்டம், புங்கம் விதை, ஆமையோடு, அண்டோடு, தலையோடு, இந்துப்பு, பச்சைக் கற்பூரம், சந்தனம், செம்பஞ்சு, கடுக்காய், தாமரைக் கிழங்கு, நெல்லிக்காய் இவற்றை ஓரளவாய் எடுத்துக் கொள்ளவும். இவற்றை எலுமிச்சம் பழச்சாறு, கொடுப்பைச்சாறு, சிறுகீரைச் சாறு, கரிப்பான்சாறு, பொடுதலைச்சாறு, பிச்சிப்பூச்சாறு, மல்லிகைப் பூச்சாறு, சண்பகப்பூச்சாறு, நந்தியா வட்டப் பூச்சாறு, அல்லிப்பூச்சாறு, முலைப்பால் என வரிசையாக இவை

ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாளாட்டி எடுத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும், கண்நோய்கள் தீரும்.)

## கண்ணிலிடும் பொடி

வாகுபோம் சொல்லிவிட்டேன் யின்னங் கேளு
    மைந்தனே கண்ணிலிடும் அஞ்ச னத்தைப்
போகுமே துருசு துத்த மிந்து வாளம்
    புகழரிய மிளகுசுக்கு திப்பிலியுஞ் சூதம்
ஆகுமே பொரிகாரங் காயங் கெந்தி
    அரிதாரங் கடுகுபதி மூணு ந் தானே.

தானென்ற நேர்வாளம் எருமைச் சாணி
    தான்கரைத்துக் கொதிக்கவைத்துச் சுத்தி யாக்கி
மானென்ற பாதிசு ட்டுப் பாதி பச்சை
    மைந்தனே நேர்வாளம் நஞ்சு போக்கி
ஏனமுடன் சரியாக அரைத்து ருட்டி
    இட்டிடுவாய் செப்பினிலே யிக்கு ழம்பை
நானென்று யென்னாமல் கூறு சற்றே
    நயனத்தில் வரும்பிணிக்கு வரைந்தி டாயே.

வரையவே விடங்களெங்கே சன்னி யெங்கே
    வயிறுபேதி யாகுமடா பனைவெல் லத்தில்
விரையவே யெழுதாதே கண்ணில் நீயும்
    விழிகுருடாங் கடிவாயில் வார்நீ ரப்பா. (சு.4)

(செய்முறை : துருசு, துத்தம், இந்துப்பு, நேர்வாளம், மிளகு, சுக்கு, திப்பிலி, சூதம், பொரிகாரம், காயம், கெந்தி, அரிதாரம், கடுகு இவற்றை ஓரளவாய் வாங்கிக் கொண்டு அத்துடன், நேர்வாளத்தை எருமைச் சாணியில் கரைத்துக் கொதிக்க வைத்துச் சுத்தியாக்கிக் கொண்டு, பாதிசுட்டுப் பாதி பச்சையாக வைத்து நஞ்சைப் போக்கி, மற்றவற்றையும் அரைத் துருட்டி, குழம்பாக்கிப் பக்குவமாகச் செப்பில் வைத்துக் கொள்ளவும். கண்ணில் வரும் நோய்களுக்கு அளவாக இடவும்.

---

பாடல்களை அடுத்துவரும், அடைப்புக் குறிக்குள் உள்ள செய்முறைப் பகுதிகள் பதிப்பாசிரியரால் எழுதிச் சேர்க்கப் பெற்றவை. உரைநடையாக அமைந்துள்ள சுவடிப் பகுதிகளுக்கு விளக்கங்கள் கொடுக்கப்படவில்லை.

இதனைப் பனைவெல்லத்திலுண்ண விடம், சன்னி தீரும். வயிறு பேதியாகும். மிகுதியும் கண்ணிலிட்டால் கண் குருடாகும். எனவே அளவாக இடவும்.)

## மாலைக் கண்ணிற்கு

... ... ... ...

மாலைக்கண் காணா தென்றா லுற்ற
யெட்டிவேர் முலைப்பா லூட்டி யாட்டே.
முலைப்பாவில் ஆட்டியங்கே கண்ணிற் றீட்ட
மோசமன்றி மாலைக்கண் காணு மைந்தா
இலைப்பாலில் பழமிளகுநல் லெண்ணெய்க்குள் ளிட்டு
ஈரஞ்சு தினமூன்றி லெடுத்துக் கொண்டு
நிலைப்பாக யெண்ணெய்குத்தி யுரைத்துத் தீட்டு
நேர்ப்பாக மாலைக்கண் நிவர்த்தி யாகு
மலைக்காம லெட்டுநாள் தீட்டி னாக்கால்
மயங்காம விருட்டறுத்து வழிசெவ் வாமே.

(சு.1.பா.439)

(செய்முறை : எட்டிவேரை முலைப்பால் விட்டு ஆட்டி எடுத்துக் கண்ணில் தீட்டவும். மாலைக் கண் நீங்கும்.

பாலில் ஊரவைத்த பழைய மிளகை நல்லெண்ணெயில் 10 நாட்கள் ஊறவைத்தெடுத்து, எண்ணெய்விட்டு உரைத்து மாலைக் கண்ணிற்கு எட்டு நாட்கள் விட்டுவர நோய் நீங்கும்)

(வேறு)

நொச்சிக் கொழுந்து முப்புங் கசக்கிக் கண்ணில் பிழியவும். மாலைக்கண் தீரும். (சு.20)

(வேறு)

மின்னுப் புழுவை வெற்றிலையுள் வைத்துக் கசக்கிக் கண்ணில் பிழிய மாறும். (சு.20)

(வேறு)

சின்ன குதிரைவலத்திப் பச்சைப் பிதிர்த்து உலர்த்திப் பொடி செய்து, சீலை வடிகட்டி, ஈரவெங்காயச் சாற்றில் எட்டு நாட்கள் கொடுக்கத்தீரும். கை கண்டது. உப்பு, புளி தவிர்க்கவும். (சு.5)

(வேறு)

வெள்ளாட்டு உதப்பியை உலர்த்தி இடித்து, மிளகு பலம் 1, வெள்ளாட்டு யிறைச்சி 4 பலம், குள்ளை கரும் சீரலை 4 பலம்,

கார்போகலரிசி 4 பலம், சாறு 2பலம். மருந்தை நாழிக்கு அரைத்து அவித்துக் கொடுக்கவும். கை கண்டது. மண்ணீரவிலையுமிப்படி அவித்துக் கொடுக்கவும். (சு.15)

## கண்ணிற்கு மருந்து

இந்துப்பு திப்பிலி யிதபீத ரோகணி
நந்திப்பூச் சாற்றில் நயந்தே யுரைத்திட
அந்தகன் கண்ணுக்கு அருந்ததி தோன்றிடும்
நந்திக்கு நாதன் நயந்துரைத் தாரே. (சு.15)

(செய்முறை: இந்துப்பு, திப்பிலி, பீதரோகணி இவற்றை நந்திப் பூச்சாற்றில் அரைத்துக் கண்ணிடக் கண்நோய் நீங்கும்.)

(வேறு)

சங்குபலம் 1, துருசுபலம் 1, சீனக்காரம் பலம் 1, மூன்று கோழி முட்டை வெள்ளைக்கரு வார்த்தரைத்து, உண்டை செய்து நிழலுலர்த்திக் கொள்ளவும். அம்மியில் மருந்தைச் சீலையிலூட்டி யுலர்த்தி முலைப்பாலில் கசக்கி வெதுப்பி, கண்ணில் பிழியவும். உண்டை முலைப்பாலிலுரைத்து வெதுப்பிக் கண்ணிலெழுதவும். (சு..0)

## கற்பூராதி உருண்டை

கற்பூரம் கழஞ்சு 1, ரோகணி கழஞ்சு 1, அதிமதுரம் கழஞ்சு 2, தான்றிக்காய் கழஞ்சு 1 இந்த மருந்தெல்லாம் பன்னீர் செம்பில் நனைத்துச் சேர்த்து முலைப்பால் சேர்த்துக் கண்ணிலிடவும். பித்தகாசம், புகைச்சல், கண்ணீர் விழுகிறது இவையெல்லாம் தீரும். (சு.6)

## கண்ணில் பூ பட்டால்

பச்சை மூங்கிற் கிழங்கில் மேற்தோலியிடக்கி முலைப்பால் விட்டரைத்து, குளிகையாகத் தட்டிக் காய வைத்து, தேனிலுரைத்துக் கண்ணிலிடத் தீரும். (சு.5)

## கண்சிவப்பு, காந்தலுக்கு, தலைமுழுக விளக்கெண்ணெய்

(தலைப் பொடிவு தீர எண்ணெய்)

சொன்னோம்நாம் கண்சிவப்புக் கண்காந்தலெரிவு
கூட்டோடே போவதற்கு விளக்கெண்ணெ யோர்படி
சொன்னோம்நா மிளகிரண்டு பலம்வடிய அரைத்துச்
சுருளவே கிண்டியதை யடுப்பேற்றிக் காய்ச்சச்

சொன்னோம்நாம் பதத்திலே வடித்திறுத்து முழுகச்
சுகமாகுந் தலைப்பொடிப்புத் தீரக் கேளு
சொன்னோம்நாம் நல்லெண்ணெய் படிதா னிரண்டு
சூட்டுதற்குக் கற்கவகை சூட்டு றேனே.

சூட்டுறேன் நல்லகொடி மிளகுவகைக்கு ரண்டுபலமுஞ்
சொல்லரிய ஏலமொடு தேவதா ரமுந்தான்
சூட்டுறேன் வகைக்கு ரண்டு கழஞ்சு
சுறுக்குடைய அரைக்கீரை வித்தரைக் காற்படியுஞ்
சூட்டுறேன் பசுவின்பால் விட்டரைத்துச் சேர்த்துச்
சுகமாக அடுப்பேற்றி மூன்றுநா ளூறிச்
சூட்டுறேன் நாலாநாள் பதத்திலே வடித்துச்
சொன்னபடி முழுகிவர புலத்தியனே நல்லதைய்யா.

(சு.1.பா.929-930)

(செய்முறை : விளக்கெண்ணெய் 1 படியில் (1.3 லிட்) மிளகு 2 பலம் (70 கிராம்) அரைத்துக் கிண்டிப் பக்குவமாகக் காய்ச்சி, பதத்தில் வடித்திறுத்து முழுகவும்.

நல்லெண்ணெய் 2 படி (2.6 லிட்)யில், நல்ல கொடிமிளகு 2 பலம் (70 கிராம்), ஏலம், தேவதாரம் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்), அரைக்கீரை விதை $\frac{1}{4}$ படி (336 மி. லிட்) சேர்த்து, பசுவின் பால் விட்டரைத்து அடுப்பேற்றி, பதத்தில் வடித்து முழுகவும்.

தீரும் நோய்கள் : கண்சிவப்பு, காந்தல், தலைப்பொடிவு தீரும்.)

## நேத்திர நோய் 46க்கும் தயிலம்

கீழாநெல்லி, முசுமுசுக்கை, பொன்னாங்கண்ணி, ஓரிலைத் தாமரை, கையாந்தகரை, விலாமிச்சம் வேர், வெட்டிவேர், கோரைக்கிழங்கு, கத்தாழை வகை சாறுபடி $\frac{1}{8}$, நல்லெண்ணெய் படி 1 விட்டு, மிளகு பதம் காய்ச்சிக் கொள்ளவும். (சு 22)

## காமாலைக்குப் பொடி

இருப்புக் கிட்டம் சிவக்கக் காய்ச்சிகையாந் தகரைச் சாற்றில் போட் டுப் பொடியாயுதிர்ந்தால் அரைபொடியும் சமன் கூட்டி அரைத்து வடிகொண்டு, கையாந்தகரை நிழலிலுலர்த்திப் பொடி செய்து சரிகூட்டி, எருமை மோரில்தேனில் கொடுக்கவும். (சு.20)

## ஊது காமாலைக்கு

செந்நாயுருவி யுண்ட சாம்பல் தண்ணீர் கலக்கி, இராத்திரி ஊற வைத்துக் காலையில் ஊறிய தண்ணீர் கொடுக்கவும். இந்தப்படி மூன்று நாள் கொடுக்கவும். (சு.20)

(வேறு)

இரும்புக் கிட்டம் பொடி செய்து உழக்கு, அரப்பொடியுழக்கு இரண்டுஞ் செருப்படிச் சாகத்தில், நாழிச்சாகத்தில் போட்டுக் காய்ச்சிக் குறுக்கி, வற்றினால் அதை அரைத்துச் சீலை வடிகொண்டு, கலசத்தில் கட்டி வைத்து, எருக்கிலைப் பழுப்பு நூறு பழுப்பு நிழலுலர்த்திப் பொடி செய்து முன் மருந்தில் கூட்டி நன்றாய் வறுத்துப் புடமிட்டு, வெருகடிப் பிரமாணந் தேனில் கொடுக்கவும். உப்பு, புளி தவிர்த்துப் பத்தியங் காக்கவும். பொறுக்கும். (சு 20)

## எரிகா மாலைக்கு

வெள்ளாட்டுப் பித்து மீரலும் நாவல் கொழுந்து மரைத்துத் தின்னவும். பொறுக்கும். கீழ்வாய் நெல்லிச் சமூலமரைத்துப் பசுவின் பாலில் கொடுக்கவும். வெல்லங் கூட்டிக் கொடுக்கவும். (சு.20)

## மஞ்சள் காமாலைக் குணம்

மெய்யெல்லா மஞ்சட் போலும் விறகென உலர்ந்து தோன்றி
கையொடு கண்ணு நாவுங் கால்களும் வலிக்கு மஞ்சள்
செய்யநீ ரதுபோ லாகுந் தீவன முண்டா காது
தையலீர் மஞ்சள் நோவு தானென வுரைக்க லாமே. (சு.15)

(வேறு)

சங்கு நுணுக்கி, பால்விட்டுக் கலக்கி, மூன்று போது கொடுக்கவும். கீழாநெல்லி, கரிப்பான் அரைத்துக் கொடுக்கவும், (சு.4)

(வேறு)

மஞ்சள் நோக்காட்டிற்குச் சுணைப் பருத்திவேரை எலுமிச்சங் காயளவு அரைத்து, நாழி பசுவின் பாலில் குடிக்கவும். இந்தப்படி மூன்று நாளஞ்சுநாள் குடித்து, உப்பு, புளி தவிர்த்துப் பத்தியங் காக்கவும். பொறுக்கும். (சு.20)

## சோகை, காமாலை, பாண்டு ரோகத்திற்கு

இரும்பு வைக்கக்கரப்பொடியுங் காந்தமுஞ் சமன்கொண்டு, கையாந்தகரைச் சாற்றிலரைத்து, எருவிலஞ்சுப் புடம்

போட்டுச் செந்தூரமாக்கித் திரிகடுகு நொந்திச்சு, தேனில் பணவெடை கொடுக்க ஏய்ப்பிளைக்குமாம். சோகை, காமாலை, பாண்டு ரோக மிதுவெல்லாந் தீரும். (சு.20)

## சோகை, வீக்கம் மருந்து

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகு, காயம், மஞ்சள், இஞ்சி, ஓமம் வெள்ளுள்ளி, கரிப்பான் இலையைப் பிடுங்கி இடித்திட்டு, சட்டியில் வண்டுகட்டி, இடித்த இலையை வண்டுமேல் வைத்து, மருந் தெல்லாம் அரைத்து வைத்து, மேல் இலை கொண்டுமூடி, மேல் கவுசட்டி போட்டுமூடி, சட்டிக்குள்ளே உழக்கு தண்ணீர் ஊற்றி, வெந்த பருவம் பார்த்து இறக்கி விட்டு, இலையை இறுக்க மருந்து பிழிந்து, மூன்றுநாள் மூன்றுபோது சாப்பிடவும் தீரும். இதுகை கண்டது. மூன்று நாளைக்கு உப்பு ஆகாது. விளக்கெண்ணெய் ஊற்றிக் கொடுக்கவும். (சு.4)

## பெருவயிறு தணிய

கொண்டெழுந்த பெருவயிறு கரைந்து போகக்
கூறுகிறேன் மருந்தொன்று குடில மிட்டு
அண்டமா துளைமேனி யிலைசிறுகாஞ் சோரியிலை
ஆடுதின்னாப் பாளையிலை யிவைதா னெல்லாங்
கண்டிதமாய்ச் சாதிக்கா யளவ ரைத்துக்
கரைத்திடுவாய் மூன்றுபடி பழச்சாறு தன்னில்
விண்டுநிறத் துருசுகெந்தி லிங்க மொக்க
மீறாம லரைக் கழஞ்சி வகைக்குச் சேரே.

வகைசேர்த்து யடுப்பேற்றி மயன மாக்கி
மைந்தனே ரெண்டுதின மாற வைத்து
வகையாகத் தான்றியெடை யருந்தி னாக்கால்
மகத்தான பெருவயிறு வற்றிப் போகும்
வகைகேளு அந்திக்குக் கசாயந் தானும்
மைந்தனே காட்டுமல்லி சுரைப்ப ழுத்தல்
வகையான கரிப்பானுஞ் சமூலம் வாங்கி
வரிக்கடுக்காய் முப்பதுடன் பர்திரியின் சருகே.

சருகுடனே மிளகுழக்குக் கட்டிப் போட்டுத்
தனிச்செலந்தா னாலுபடி தயவாய் விட்டுச்
செருகுடைய யடுப்பேற்றி யெட்டொன் றாக்கித்

அருகிருந்த கசாயத்தில் கலக்கி நீயும்
அடவாகக் கொடுத்திடவே பக்க மொன்று
பெருவயிறு சொடிந்துபோங் கடுக்காய்ப் பத்துப்
பிரளவே பொடியாக்கிக் கரகத்தி லூட்டே.

கரகத்திற் பொடியிட்டு அரைப்பட நீயும்
கறுத்தவெள் ளாட்டு நீரு மிட்டு
வரவத்து மூன்றுநா ளூற வைத்து
மைந்தனே பத்துமுறை யிப்படியே யூட்டு
புரவத்த பெருவயிறு தணிந்து மாறும்
... ... ... ...

(சு.21.பா.452-455)

(செய்முறை : மாதுளம், குப்பைமேனி, சிறுகாஞ்சோரி, ஆடுதின்னாப் பாளை இவற்றின் இலைகளெல்லாம் சாதிக்காய் அளவு அரைத்து, பழச்சாறு மூன்றுபடி (3.9லிட்) யில் கரைத்து, துருசு, கெந்தி, லிங்கம்இவை வகைக்கு அரைக்கழஞ்சு (2.55கிராம்) சேர்த்துக் காய்ச்சவும். இரண்டு நாட்கள் ஆறவைத்து அருந்தவும்.

அளவு : தான்றி யெடை.

தீரும் நோய் : பெருவயிறு வற்றும்.

(வேறு)

கசாயம் : காட்டுமல்லி, பழுத்தசுரை, கரிப்பான் இவற்றின் சமூலம், 30 வரிக்கடுக்காய், பாதிரியின் சருகு இவற்றை நாலுபடி (5.2லிட்) நீரில்போட்டு, அதனுடன் 1உழக்கு (336 மி.லிட்) மிளகைத் தட்டிப் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி யெடுத்து, அம்மிளகை லேகியமாக்கி, அந்தக் கசாயத்தில் கலக்கிக் குடிக்கப் பெருவயிறு நீங்கும்.

கடுக்காயைப் பொடியாக்கி வெள்ளாட்டு நீர் விட்டரைத்து மூன்று நாளூறவைத்து உண்ணவும். பத்துமுறை இப்படி உண்ணவும். பெருவயிறு தணியும்.)

## மகோதரத்துண்டை

கேளப்பா மகோதரத் துண்டை தன்னை
கெட்டியாய்ச் சொல்லுகிறே னிரும்புச் சல்லி
நாளப்பா செம்புதுத்தம் நாகம் மூன்று
நயமாக வெவ்வேறே சல்லி யாக்கி

நீளப்பா வகையொன்று கழஞ்சி யொன்று
நேராக யிந்துப்பு நிமிளை கெந்தி
வாளப்பா மனோசிலை கெவுரி தானும்
மாறாம லொவ்வொன்று கழஞ்சி தூக்கே.

தூக்கியே பொடிசெய்து வைத்துக் கொண்டு
சொல்லுகிறேன் கட்டையெருக் கலம்பாலில் தாக்கு
தாக்கியே கருவுள்ளே நீயு மந்த
தயவாக மூன்றுதின மூறிய பின்பு
ஆக்கியதோ றமுர்தகொடி பொடியங் கூட
அமைத்திதுக்கு யெருக்கலம்பால் சிறுக விட்டு
வீக்கியே பழச்சாறு அரைக்கால் விட்டு
விரவியொரு கரகத்தி லடைத்தி டாயே.

அடைத்ததொரு மருந்தாம் ரவியில் வைத்து
அன்றாடங் கிண்டிவரத் தியங்குங் கேளு
அடைத்ததொரு ரவிபட்டு வெந்து நீயும்
அப்பனே மெழுகுபோ லிருக்குமொன்ப தாநாள்
புடைத்ததொரு வுண்டையப் பாசுண் டைக்காய்
போலுருட்டு நீயுலர வைத்துக்குழ விட்டு
மடைத்ததொரு வியாதிக்கு அனுபா னங்கள்
வகைசொல்வேன் மைந்தனே கண்டி டாயே.

கண்டிட்டாய் வியாதிகண்டு அனுபானஞ் செய்துக்
காட்டினாற் றீருகிற வியாதி கேளு
மண்டிட்டாய் முட்டஞ்சலக் கோர்வை யருவை
மதியே நீராமை கவுசி பாண்டு
மண்டிட்டாய் வலிகுன்மம் யெரிகுன்மந் தானும்
மகத்தான சத்திகுன்மம் வெப்புப் பார்வை
தெண்டிட்டாய் கடிகுன்ம மெரியுங் குன்மம்
திரிகுன்மம் விடபாகஞ் சேரப் போமே.

(சு.9.பா.69-72)

(செய்முறை : இரும்பு, செம்பு, துத்தநாகம் இவற்றின் சல்லி வகைக்கு 1கழஞ்சு (5.1கிராம்), இந்துப்பு, நிமிளை, கெந்தி, மனோசிலை, கெவுரி இவை வகைக்கு 1கழஞ்சு (5.1கிராம்) வாங்கிப் பொடிசெய்து, எருக்கலம் பாலில் போட்டு மூன்று நாளூறியபின், அமுர்த கொடி பொடியும்போட்டு, எருக்காலம்பால்

சிறுகவிட்டு, பழச்சாறு அரைக்கால் விட்டுக் கரகத்தில் அடைத்து, நாள்தோறும் ரவியில்வைத்துக் கிளரி மெழுகுபோலானவுடன் சுண்டைக் காயளவு உருட்டி உலரவைத்துக் குழலில் வைக்கவும்.

அளவு : தேவையான அளவு.

தீரும் நோய்கள் : சலக்கோர்வை, நீராமை, கவுசி, பாண்டு, வலிகுன்மம், எரிகுன்மம், சத்தி குன்மம், வெப்புப் பார்வை, கடிகுன்மம், திரிகுன்மம், விடபாகம் அனைத்தும் தீரும்.)

## பெருவயிறு தீர்க்க

சாதிக்காயைப் பேயகத்திப் பாலிலூறப் போட்டு வெற்றிலை தின்னும் போது பருத்திக் கொட்டையளவு கூட்டித் தின்னவும். (சு.20)

(வேறு)

அப்பைக் கிழங்கையரைத்துப் பசுவின் பாலில் குடிக்கவும். (சு.20)

(வேறு)

குப்பை மேனிச் சாறும் கடுக்காய்ப் பொடியும் வெள்ளைக் குந்திருக்கமும் கல்தூரில் தடவி, முன் மருந்தையும் கூட்டி' கலங் கொண்டு தேய்த்துக் குழம்பாக்கிச் சிமிழிலடைத்துக் கண்ணிலெழுதவும். (சு.20)

(வேறு)

வடக்கு போன இலைக் கள்ளிப் பட்டையை எலுமிச்சங் காயளவரைத்து மூன்று பங்கிட்டு, மிதிபாகல் சாகத்தில் மூன்று நாள் கொடுத்தாலதினுட செய்தி கண்டு மேலுங் கொடுக்கவும். (சு.20)

(வேறு)

மிளகு 3 பலம், வெள் வெங்காயம் 3 பலம், சீரகம் 3 பலம், பறங்கிப்பட்டை 4 பலம் இதுவெல்லாமரைத்து முற்றின கோழிப் பித்தையுங் குடலுந் தலையுங் காலும் போக்கி, கோழி வயிற்றில் வைத்து மூடித்தைத்து, தாழிச் சட்டியில் வைத்து, குறுணித் தண்ணீர் விட்டு அவித்து, நாவுரித் தண்ணீர்சுருக்கா இறக்கி, ஆறுநாள் கொடுக்கவும். மறுபடி கோழி எலும்பைப் போக்கி, மாங்கிசத்தை யூத்திப் பொடி செய்து, தேனில் தின்னக் கொடுக்கவும். பெருவயிறு தீரும். உப்பு, புளி தவிர்த்துப் பத்தியங் காக்கவும். (சு.20)

(வேறு)

கொடுவேலித்தோல், தழுதாழைவேர், புங்கவேர்ப்பட்டை நொச்சிவேர்ப்பட்டை, வெப்பூலாத்திவேர், தைவேளைவேர், குளச்சுண்டில்வேர், வேப்பம்பட்டை இதுவெல்லாந் திருமேனிச் சாற்றிலரைத்து, இலைக்கள்ளிப் பாலில் வெந்து, தேத்தானளவு உண்டை செய்து கொள்ளவும். அனுபானம் தேனில் கொடுக்கவும் பொறுக்கும். (சு.20)

## உப்புசத்திற்கு

எருக்கிலைப்பால் நாழி கொண்டு வந்து, செங்கற்கட்டி எலுமிச்சங் காயளவு மூன்று கல்லுஞ் சிவக்கக் காய்ச்சி, அந்தப் பாலில் ஒவ்வொரு கல்லாகப் போட்டு, கட்டில் மேல்குப்புறப் படுத்துக் கொண்டு, கட்டிலுக்குக் கீழே கலசத்தைப்பிடிவேகம் பிடிக்கச் சீலைகள் ஆறும். இப்படி மூன்றுநாள் பிடிக்கவும். (சு.10)

(வேறு)

ஓமம் ஒருபடி கொண்டு இளவறுப்பாய் வறுத்து இடித்து மாவாக்கி, இரண்டு வராகனெடை இரதங் கூட்டிக் குறுவை நெல்லரிசி ஒருபடி கூட்டி இடித்து, நொச்சிக் கொழுந்துந் துளசியுங் கையாந்தகரையுங் கூட்டி, நன்றாயிரதஞ் சுவற இடித்து, கலசத்தில் வண்டு கட்டி வைத்துக் காலமே வெருகடிப் பிரமாணம் கொடுக்கவும் உப்பு, புளி தவிர்த்து வெந்நீர் பரிமாறி, பத்தா நாள் முழுகவும். (சு.20)

(வேறு)

கருங்குறுவையரிசி ஒருபடி, இரதம் மூன்று கழஞ்சு. புதுச்சட்டியில் விட்டு, எலுமிச்சம்பழச்சாறும் விட்டு மத்திச்சு, நெல்லு மாவுடனே கலந்து, பதினஞ்சு எலுமிச்சம் பழச்சாறு விட்டு, நன்றாயிடித்துறவு செய்தால் வெருகடிப் பிரமாணம் வெந்நீரில் கொடுக்கவும்.

பத்தியம் : கோழி, வெள்ளாடு, உடும்பு, கவுதாரி, உப்புப் போடாமல் கறி கூட்டிக் கொள்ளவும். (சு 20)

## இருமலுக்குக் கசாயம்

... ... ... ... ...

நீரிலிட்ட வாய்வுக்கு முதலிருமல் போக
நேராவேர்க் கொம்புதிப் பிலியுங் கூட
நீரிலிட்டு கரிப்பானுஞ் சமூலம் வாங்கி
நேரான சங்கம்வேர் தோடை வேரே

தோடையுடன் தேள்கொடுக்குச் சிறுதேக்குத் தானுஞ்
செப்பமுட னேநாழி நீரிற் போட்டு
ஏடையுட னெட்டொன்றாய்க் குறுக்கி வாங்கி
இடுபொடியுந் திப்பிலியு மூல மாட்டி
ஆடையுடன் கசாயத்தைக் கொண்ட போது
அலத்திருமல் விட்டோடு மப்பா கேளு
சாடையுடன் சோற்றுமேல் கசாயஞ் சொல்வேன்
சாதகமா யிலவங்க மேலந் தானே.

தானென்ற சேருசந்தம் பூலா விருவிடம்
சாதகமாய்ப் பூலாவேர் நீர்த்தாளி வித்து
மானென்ற யிவையெல்லாஞ் சமந்தூ ளாட்டி
மைந்தனே ஆழாக்கு அளந்து கொண்டு
ஊனென்ற ஆவினெய்யில் வுழக்குக் கூட்டி
உறவுசெய்து சேர்த்தெடுத்து உண்ட போது
தேனென்ற குழம்பெடுத்து நக்கி னாக்காற்
திராத யிருமலெல்லாம் தீருந் தானே.

(சு.9.பா. 90-92)

(செய்முறை : சுக்கு, திப்பிலி, கரிப்பான் இவற்றின் சமூலம், சங்கம்வேர், ஆடாதோடைவேர், தேள்கொடுக்கு, சிறுதேக்கு இவற்றை ஓரளவாய் 1 நாழி (1.3 லிட்) நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, திப்பிலியின் மூலம் சேர்த்துண்ண இருமல்போகும். இலவங்கம், ஏலம், பூலாவேர் நீர்த்தாளிவித்து, இவை ஓரளவாய்த் தூளாக்கி ஆழாக்கு (168 மி.லிட்) அளந்து, பசுநெய் 1 உழக்கில் (336மி. லிட்) சேர்த்துப் பக்குவமாகக் குழம்பாக்கி உண்ணத் தீராத இருமல் தீரும்.)

(வேறு)

சுக்குநறுக் கேல மோடு துலங்கு முசுமுசுக்கை வேரிவை
ஒக்கவகைக் கோர்கழஞ்சு தட்டி ஒருபோ தருந்த யோர்படிநீர்
தக்கதா ழாக்கெனக் குறுக்கித் தாகப் பஞ்ச தாரையிட்டு
விக்கக்குடிக்க நெஞ்சுநோ யிருமல் வேறாஞ் சுரமாந்தை
யும்போமே. (சு. 1.பா. 332)

(செய்முறை : சுக்கு, ஏலம், முசுமுசுக்கை இவற்றின் வேர் வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) வாங்கி, 1 படி (1.3லிட்) நீரில் போட்டு ஆழாக்காகக் காய்ச்சி, சர்க்கரையிட்டுக் குடிக்கவும்.

தீரும்நோய்கள் : நெஞ்சுநோய், இருமல்,சுரமாந்தை போகும்.)

(வேறு)

அறுகச் சாறு யிருநாழி யதிய மதுர மீராறு
நறுநெய் நாழி பால்நாழி நல்ல மாம்பிசி னுங்கூட்டிக்
குறுக வெந்து நெய்நக்கக் கோடா கோடி சிலேற்பனமும்
வெறுமை கண்ட வேசையைப்போல் விட்டா ராசை
கெட்டாரே. (சு. 20)

(செய்முறை : அறுகின்சாறு 2 நாழி (2.6 லிட்), அதிமதுரம், ஆவின்நெய், பால் வகைக்கு 1 நாழி (1.3 லிட்), இவற்றுடன் அதிமதுரம்,மாம்பிசின் இவற்றை வேண்டிய அளவு கூட்டிப் பக்குவ மாக நெய்யாக்கி உண்ண எல்லாசிலேற்பனமும், இருமலும் தீரும்.)

(வேறு)

ஆடா தோடை தூதுவளை ஆன கண்டம் சிறுவங்கம்
வாடா தியங்கு பேர்முட்டி வளரு மிலந்தை பொடுதலையுங்
கோடா வேலிப் பருத்தி சாரடை கீழ்வாய் நெல்லி
தாடா திலைகள் பன்னிரண்டுஞ் சாகங் கொள்வீ
ரோரொன்றே.

ஓரான் றுழக்கு நெய்நாழி யுவந்த கடுகு திரிகடுகு
வாரமுடைய கடுகு ரோகணி மருவும் வெளிச்சிப் பிசினிவையுங்
கூர்மையுட னொன்றிரு கழஞ்சாய்க் கூட்டி யரைத்து
வெந்திறுத்தால்
பார யிரும லிளைப்பதுவும் பதறி யோடுங் கண்டீரே.

பத்தியம் : விரால், கொடுப்பை, சுறா, நெத்திலி, உடும்பு, முசலிவை கூட்டவும். (சு.20)

(செய்முறை : ஆடாதோடை, தூதுவளை, கண்டங்கத்திரி, சிறுவங்கம், பேராமுட்டி, இலந்தை, பொடுதலை, வேலிப்பருத்தி, சாரடை, கீழ்க்காய்நெல்லி இவற்றின் இலைச்சாறு வகைக்கு ஓர் உழக்கு (336மி. லிட்), நெய் ஒரு நாழி (1.3 லிட்), கடுகு, திரிகடுகு, கடுகுரோகணி, வெளிச்சைப்பிசின் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) சேர்த்து அரைத்துக் காய்ச்சி, வெந்த உடன் உண்ண இருமல், இளைப்புந் தீரும்.)

## இருமலுக்குப் புகை

... ... ... ...

பூளித்த பொன்தாரஞ் சுத்தியாய்ப் பொடிசெய்து
புதியகொம் பரக்கும் அவ்வண்ண மாமே.

அவ்வண்ண முருக்கியே பாவட்டங் கம்பால்
அப்பனே சாலித்து உண்டை செய்து
அவ்வண்ணம் புளியந்தோ லாகத் திட்டு
அனலிட்டுத் தழலாக்கி யவர்முன் வைத்து
அவ்வண்ணம் புகைவெளி யில்போ காமல்
ஆடைசுத்திக் குளிகையொன்று அனலிற் போடு
அவ்வண்ண மிருமலும்போம் பக்க மொன்று
அப்படியே புகைபிடிக்க அண்டி டாதே.

(சு.1. பா. 473-474)

(செய்முறை : பொன்னரிதாரம், புதிய கொம்பரக்கு இவற்றைச் சுத்தி செய்து பொடியாக்கி உருக்கி, பாவட்டங்கம் பால் சேர்த்து உருண்டை செய்யவும். புளியந்தோலைக் கொட்டி அதில் நெருப்பிட்டு அனலாக்கிக் கொண்டு, புகை வெளியே போகாமல் ஆடையைச் சுற்றிக் கொண்டு, மேற்கண்ட உருண்டை ஒன்று போட்டுப்புகை பிடிக்க இருமல் நீங்கும்.)

(வேறு)

வேலிப்பருத்தி இலையும் வேரும், ஆடாதோடை இலை, இசங்கமிலை, இலந்தை இலை, தூதுவளைஇலை, குறிஞ்சாஇலை, மணித்தக்காளி இலையும் வேரும், இலவங்கம், அரிதாரம், திப்பிலி, கடுகு, மிளகு, அந்த சரக்கெல்லாந் தண்ணீர் விட்டு வேகவைத்து, அந்த சரக்கெல்லாம் சாகத்தில் போட்டு வேகவைத்து, நாழி நெய்யும் விட்டு வேக வைத்து, பிடிவே நக்கிவர இருமல் தீரும். கைகண்டது. (சு. 5)

(வேறு)

பிரண்டைவேர், முருங்கை வேர் மோர்விட்டரைத்து, மோரில் கொடுக்க இருமல் தீரும், முற்றின தேங்காய்ப் பாலில் சர்க்கரை, நெல்லுப் பொரி, ஏலம், சுக்கு5, அரைத்து, சுக்கு, மிளகு, திப்பிலி மேல் பொடி போட்டுச் சாப்பிடத் தீரும். (சு. 5)

(வேறு)

வேப்பெண்ணெய் உழக்கில் முசிறு முட்டையும், அதிமதுரம் 1 பலம், தூதுவளைவேர் 1 பலம் வெந்து கொடுக்கவும். பொறுக்கும். (சு. 20)

(வேறு)

நறுநெய் நாழி, பால் நாழி, இஞ்சிச்சாறு இரு நாழி, செவ்வியம், சிறுமூலம், முத்தக்காசு, திரிகடுகு, கொடுவேலிவேர், இந்துப்பு வகைக்கு 5 பலம் அரைத்து நெய்யிலே வெந்து நக்கவும். அதிசுர இருமல் தீரும். (சு. 12)

(வேறு)

சுக்கு பலம் 1, மாம்பட்டை பலம் 1, அதின் வேர் பலம் 1, நாலு மரக்கால் தண்ணீர்விட்டு நாலொன்றாய்க் காய்ச்சி வடித்து, அதில் திரிகடுகு, திரிபலை, அதிவிடயம், விளாவரிசி, இந்துப்பு, சடாமாஞ்சி, சவுக்காரம், அதிமதுரம், செவ்வியம், கொடுவேலி வேர், இலவங்கம், மஞ்சாடி, தேவதாரம், பெருமரப்பட்டை, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அபின் வகைக்குப் பசுவின் பால் படி 2, முன் கசாயம் விட்டு, கடை மருந்தெல்லா மரைத்துக் கரைத்து, மெழுகு பதத்தில் வடித்து, நாளொன்றுக்கு கழஞ்சு நக்க இருமல், காசநோய், கிராணி, வயிற்றில் வலிப்பு இது முதலான பல பல வியாதியுந்தீரும். (சு. 12)

(வேறு)

கற்கடக சிங்கி, அதிவிடயம், திப்பிலி, இந்துப்பு, பொரிகாரமுங் கூட்டித் தேனில் தின்ன சேற்பனம், சத்தி, விக்கல், இருமல், நெஞ்சில் கபமுந்தீரும். (சு. 12)

(வேறு)

உடல் மடையில் காயுலர்த்தும். காயும் இருமும் புகையும், நெஞ்சுநோம், இரண்டு விலாவும் நன்றாய் நோகும். வாயாலே சத்தியும் இரத்தமும் விழும். இதுக்கு மருந்து. சியக்காய் பச்சைப் பாக்களவு அரைத்து இளவெந்நீரில் கொடுக்கவும். உடையும். பத்தியம், பாலுஞ் சோறு முண்ணவும். (சு.12)

(வேறு)

ஆண் நண்டு பரு நண்டாகப் பிடித்து வந்து, கால்கள் முறித்துப் போட்டு, மேல் தோட்டை வாங்கிப் போட்டு, அது மேலே எருக்கிலைப் பாலைத்தடவி, மேல்தோடு கொண்டு மூடி

கருகச்சுட்டு, மேல்தோட்டை வாங்கிப் போட்டுத் தின்னவும். இப்படி மூன்று நாள் தின்னவும். பால் நெய் கூட்டவும். இருமல் இளைப்பு தீரும். (சு. 10)

(வேறு)

ஆவாரை யிலைச் சாறு படி1, பால்படி 1, நெய்1 படி, பதத்தில் வடித்து நக்க மேலுக்குமுடச் சோகை, ஈளை, இருமல், அரிகுரல் பலவுந் தீரும் (சு. 12)

(வேறு)

முதலைக் கறியைப் பலசம்பாரமிட்டுச் சமைத்து அசனத்தில் கூட்டிக் கொடுக்க உள் மாந்தை, சயம் பலவுந்திரும். தப்பாது. இது கை கண்டது. (சு. 12)

(வேறு)

திரிகடுகு, கடுக்காய், கடுகுரோகணி, அரத்தை, கற்கடகசிங்கி, இந்துப்பு, பொரிகாரம் இவை வகைக்கு இருசரியாகத் தாளிச பத்திரி இவை அரைக்கிறது. ஆடாதோடையிலை, கண்டங்கத்திரி இலை, தூதுவளையிலை, துளசியிலை பிட்டவியலாயவித்துப் பிழிந்து, இந்தச் சாறு விட்டரைக்கவும். சூரணமாவது, குளிகை யாவது தின்றுவரச் சேற்பனமறும். நெஞ்சில் கபந்தீரும். இருமலிளைப்புத் தீரும். (சு. 12)

(வேறு)

நாகத்தை இரும்பு கரண்டியிலே வைத்து, நரியுடையிலை ஒரு பிடிபோட்டு, நாயுருவியும் போட்டு வறுக்கவும். ஒவ்வொரு பிடி போட்டு இருபத்தஞ்சு நாழிகை வறுக்க. கற்றாழை கொண்டு பற்பம் பொடி செய்து, சீரகம், கடுக்காய், ஓமம் வறுத்துப் பொடி செய்து, பற்பம் ஒருகூறு, பொடி ஒருகூறு தேனிலே இரண்டு நேரமுங்கொடுக்க இருமல், உள்மாந்தை, இரப்புத் துரப்பு, கோழை, விப்புருதியுந் தீரும். கைகண்டது. (சு. 12)

(வேறு)

கைப்பருமன் கோவைத் தண்டு முற்றினது ஒரு முழந்தரித்து, கண்டங்கண்டமா கத்தரித்து, புழுப்பார்த்து, நன்றாக இடித்து, ஒரு படி பழமோரில் போட்டுப் பிசைந்து, சீலை வடிகொண்டு கொடுக்க ஈளை, இருமல், மருந்தீடு, சயம் தீரும். (சு. 12)

(வேறு)

நத்தைச்சூரிவேர் எலுமிச்சங்காயளவு அரைத்து நல்லெண்ணெயில் குழப்பி முழுங்கவும். இப்படி மூன்று நாள் தின்ன ஈளை, இளைப்புத் தீரும். (சு. 12)

## இருமல் சோகைக்கு

சிற்றாமணக்கம் வேரும், கடுகும், நெல்லிக்காய், தான்றிக்காய் நெய்யுடன் குடிக்கத் தீரும். (சு. 10)

## ஈளை, இருமல், இளைப்பு, பித்தமந்தாரகாசம், பல வியாதிக்கு

தூதுவளை, சுக்கு மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிப்பருப்பு, வால்மிளகு, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, நாகப்பூ, ஏலம், இலவங்கம், அரத்தை, தாளிசபத்திரி, கற்கடக சிங்கி, சீனப்பாகு, சீரகம், கருஞ்சீரகம், கோரோசனை, தூதுவளைப்பொடி, நெற்பொரி, சீனிக் கற்கண்டு, அசுவம், அதிமதுரம், நெய், தேன் இவை மருந்து 28 இவை ஒருபலம் வீதம் இந்தப் பொடி 5, ரெட்டிப்பு தூதுவளைப் பொடி 9, இவ்வளவும் நெய் தேன் விட்டுக் கிண்டி, தான்றிக்காய்ப் பிரமாணமாவது, கழற்சிப் பிரமாணமாவது, அந்தி விடிவேளை சாப்பிடவும். தீரும் வியாதி ஈளை, இருமல். இளைப்பு, பித்தமந்தாரகாசம், பல வியாதிகள் தீரும். புளி, புகையிலை தள்ளவும். பத்தியம். இச்சாபத்தியம்.

(சு. 51)

## எலும்புருக்கிக்குக் கருநவ்வல் நெய்

அறையிறே னெலும்புருக்கி மேக வெட்டை
அடர்ந்தோடும் பெரும்பாடு நீரிழிவு தானு
நிறைநிற்கும் பெரும்பாட்டுக் கின்னஞ் சொல்வோம்
நெய்யடா நிலப்பனைவே ருதியம் பட்டை
மறையாத கருங்காலி பட்டை தானும்
வாய்கடங்கா கருநவ்வல் பட்டை யொன்று
குறையாமல் வகைநாலு பலமும் நூறு
குறுகவிடித் திருதூணி நீரி லூட்டே.

ஊட்டியே யெட்டொன் றாய்க் காய்ச்சி வைத்து
உற்றுர யிருநாழி ஆவி னெய்யில்
நீட்டியே யிருநாழி பாலும் வாரு
நினவான புளியாரைச் சாறவ் வண்ணம்

நாட்டியே நீர்வள்ளிக் கிழங்குச் சாறும்
நயமாக யிருநாழி கூட விட்டு
வீட்டுவாய் பொன்முசுட்டை சிறுகாஞ் சோரி
விளாம்பழமுந் திரிபலையுங் கொத்தமல்லி காட்டே.

கொத்தமல்லி மாங்கொட்டை பேரீச்சம் பழமுங்
கூறான முந்திரிகை பெருங்குமிழம் பழமும்
கொத்தமல்லி யரத்தைசுக்கு வெரிமலர் தாது
மென்னிலவம்பிசின் கொற்றான் காட்டாத்திப் பூவும்
மத்தமல்லி கீழ்க்காயும் முதிர வெல்லாம்
மாதுளம் பழத்தோடும் யிலவம் பிஞ்சும்
வித்தவல்லி அதிவிடயம் விளாம்பிசினுங் கூட
வேரதிரா துய்ய முத்தக் காசே.

முத்தக்கா சஞ்சனக்கல் சகத்திரி வேதி
மூலமா மழுக்கிரா நன்னாரி கலர
மத்தக்கா ராமிச்சு மத்தித்திப் பிலியு
மைந்தனே சிறுநாகல் புளியவிதைத் தோடு
முத்தக்கா விதவங்கப் பட்டைபத் திரியு
மேதேசக் குறாசாணி குங்கிலிய மேலஞ்
சுத்தக்கா வகையொன்று கழஞ்சு ரண்டு
சூட்டிநீ யாட்டுவா யாவின் பாலே.

பாலினா லாட்டியப்பா நெய்க்குள் விட்டுப்
பதமாக வடித்திறுத்துப் பரணி சேர்த்துச்
சாலவே கழஞ்சுரெண்டு காலத்தி லூட்டு
சாயரெட்சை வேளைக்குக் கசாயஞ் சொல்வேன்
நீலவே பருத்திவிதை நிலப்பனையின் கிழங்கு
நீர்வள்ளி மொசுமொசுக்கை வேருங் கூட
நாலவே பேரீச்சம் பழமுமொக்க ரண்டு
காசெடை நாழிப் பாலிற் போடே.

போடப்பா யுழக்காக வடித்துக் கொண்டு
புகட்டடா நெய்யதனில் காலா ழாக்கை
நீட்டப்பா சர்க்கரைதான் வராகன் ரெண்டு
நீவிட்டுக் கொடுத்திடவுந் தீரும் நோய்கேள்

பூட்டப்பா யெலும்பு ருக்கிபொரு மலுடன்
தாபமுறு சோப காசம்
பாட்டப்பா பிரமியமுஞ் சுவாச காசம்
பாண்டுரத்த மேகமெல்லாம் மாறுந் தானே.
(சு. 1. பா. 247-252)

(செய்முறை : நிலப்பனைவேர், ஓதியம்பட்டை, கருங்காலி கருநவ்வல் இவற்றின் பட்டை 100 பலம் (3. 500 கி. கி) வாங்கி இடித்து 2 தூணி (43லிட்) நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சவும். இவற்றில் ஆவின்நெய், பால், புளியாரைச்சாறு, நீர் வள்ளிக்கிழங்குச்சாறு இவை வகைக்கு 2 நாழி (2.6லிட்) சேர்த்து, பொன்முசுட்டை, சிறுகாஞ்சோரி, விளாம்பழம், திரிபலை, கொத்தமல்லி, மாங்கொட்டை, பேரீச்சம்பழம், முந்திரிகை, பெருங்குமிழம் பழம், கொத்தமல்லி, அரத்தை, சுக்கு, இலவம் பிசின், கொத்தான், காட்டாத்திப்பூ, கீழ்க்காய் நெல்லி, மாதுளம் பழத்தோடு, இலவம்பிஞ்சு, அதிவிடயம், விளாம்பிசின், முத்தக் காசு, அஞ்சனக்கல், திரிவேதி, அமுக்கிரா, நன்னாரி, இராமிச்சு, அத்திதிப்பிலி, சிறுநாகல், புளியவிதையின் தோல், இலவங்கப் பட்டை, சாதிபத்திரி, குறாசாணி ஓமம், குங்கிலியம், ஏலம் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி ஆவின்பாலில் ஆட்டி. நெய்யில் விட்டுப்பதமாக வடித்துப் பரணியில் வைத்துக் கொள்ளவும்.

அளவு : இருவேளை, 2 கழஞ்சளவு, (10.2 கிராம்) உண்ணவும்.

துணை மருந்து : பருத்திவிதை, நிலப்பனையின் கிழங்கு, நீர்வள்ளி, முசு முசுக்கை வேர், பேரீச்சம் பழம் இவை 2 காசெடை (330 மி.கி) 1 நாழி (1 3 லிட்) பாலிற் போட்டு. உழக்களவு (336 மி.லிட்) காய்ச்சி வடித்து, நெய் காலாழாக்கு (42 மி.லிட்) விட்டு, சர்க்கரை 2 வராகன் (8.4 கிராம்) சேர்த்து அருந்தவும்.

தீரும்நோய்கள் : எலும்புருக்கி, காசம், பிரமியம், சுவாச காசம், பாண்டு, ரத்தமேகம் தீரும்.)

## சயநோய்க்கு மருந்து

பாரேநீ சயந்திர ஆடா தோடை
பாடுகிறேன் தூதுவளை சிறுகாஞ் சோரி
காரேநீ மொசுமொசுக்கை கண்டாங் காரி
கரிசாலை முள்ளங்கி மணித்தக் காளி

சேரேநீ முருங்கைவழு தலையுஞ் சங்குஞ்
சேர்த்துநில ஆவரையுஞ் சூரணமே செய்து
காரேநீ கடுக்காயுங் கோட்டந் திப்பிலி
கருஞ்சீரக மிளகு வசம்பிந் துப்பே.

உப்பான சித்தரத்தை பேர ரத்தை
உத்தமனே வாலுளுவை கூகை நீறுஞ்
செப்பாதே சீரகமுங் கற்கடக சிங்கி
சிறுநாகப் பூவோடு நெல்லி முள்ளி
ஒப்பாத வகைக்குக் கால்பலமே கூட்டு
உத்தமனே யிடித்துநன்றாய் முன்மருந்தில் சேரு
செப்பாதே ஆவினெய் படிதான் வாரு
சிறப்பான வெள்ளாட்டின் பால்படிதான் வாரே.

வார்த்துமே யெருக்கம்பால் சாறுபடி வாரு
வளமாக யடுப்பேற்றிக் கொதியிடும் போது
பார்த்துமே பனங்கற்கண்டு பலந்தா னாலு
பழையவெல்லம் பலம்நாலு போட்டுக் காய்ச்சு
கோர்த்துமே பாகுவரில் சூரணத்தைக் கூட்டி
கொட்டிக்கிண்டு கொம்புத்தே னொருசேரைக் கூடவாரு
ஆர்த்துமே லேகியமாய்ப் பண்ணிக் கொண்டு
அந்திசந்தி நாளொன்றுக் கிருநேரங் கொள்ளே.

கொள்ளுவது பவளபற்பம் அரிதார பற்பம்
கூட்டியே நேரமொரு பாக்களவு கொள்ளு
தள்ளாதே மண்டலமே கொள்ளும் போது
சயமீளை கபமிருமல் மந்தார காசம்
விள்ளாதே யோடிவிடும் சயரோக மேழு
மேகவகை கிரந்திகுட்ட முட்டிண வாய்வு
கள்ளாது சொல்லாமல் வியாதி யெல்லாங்
கரைந்தோடும் கைகண்ட வித்தையிது பாரே.

பாரேநீ கைப்பொடு புளிப்புத் தள்ளு
பசுவினெய் வெள்ளாட்டு மாங்கிசமுங் கூட்டு
சேரேநீ ஆவின்பால் வெள்ளாட்டின் பாலுந்
தினந்தோறுஞ் சீனியிட்டுக் காய்ச்சிக் கொள்ளு

சாரேநீ பத்தியந்தான் இம்முறையே செய்து
சார்ந்துபார் சண்டாள ரோகம் போகும்
ஏரேநீ தலைமுழுக ஆவின் நெய்யும்
இல்லாட்டால் முக்கூட்டுத் தயில மூழ்கு.

(சு.19.பா 217-222)

(செய்முறை : ஆடாதோடை, தூதுவளை, சிறுகாஞ் சோரி, முசுமுசுக்கை, கண்டங்காரி, கரிசாலை, முள்ளங்கி, மணித் தக்காளி, முருங்கை, வழுதலை, சங்கு, ஆவாரை இவற்றை வாங்கிச் சூரணம் செய்து கொள்ளவும். கடுக்காய், கோட்டம், திப்பிலி, கருஞ்சீரகம், மிளகு, வசம்பு, இந்துப்பு, சிற்றரத்தை, பேரரத்தை, வாலுளுவை, கூகை நீறு, சீரகம், கற்கடக சிங்கி, சிறு நாகப்பூ, நெல்லிமுள்ளி இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் (8.75 கிராம்) வாங்கி இடித்து முன் மருந்தில் சேர்த்து, ஆவினெய், வெள்ளாட்டுப் பால், எருக்கம் பால் வகைக்கு 1 படி (1.3 லிட்) சேர்த்து அடுப் பேற்றிக் கொதிக்கும் போது பனங்கற்கண்டு, பழைய வெல்லம் வகைக்கு 4 பலம் (140 கிராம்) போட்டுக் காய்ச்சி, பாகு வரும் பதத்தில் சூரணத்தைக் கொட்டிக் கிண்டி, கொம்புத்தேன் 1 சேர் (280 கிராம்) சேர்த்து லேகியமாகச் செய்து கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு காலை, மாலை இருநேரம் உண்ணவும். 1 மண்டலம் (48 நாட்கள்) உண்ணவும்.

துணைமருந்து : பவளபற்பம், அரிதாரபற்பம் சேர்த்து ஒரு வேளைக்குப் பாக்களவு உண்ணவும்.

தீரும் நோய்கள் : சயம், ஈளை, கபம், இருமல், மந்தார காசம், சயரோகம் ஏழு, மேகம், கிரந்தி, குட்டம், உட்டிணம், வாய்வு அனைத்தும் தீரும்.

பத்தியம் : கைப்பு, புளிப்பு நீக்கவும். பசுவின்நெய், வெள்ளாட்டு இறைச்சி, ஆவின்பால், வெள்ளாட்டின் பால் காய்ச்சி, சீனியிட்டு உண்ணவும். ஆவின்நெய் அல்லது முக்கூட்டுத் தயிலத்தில் தலை முழுகி வரவும்.)

## சயம், பீனிசத்துக்குக் கசாயம்

... ... ... ...

பேராக யின்னமொரு கசாயங் கேளு
பெருந்திராய் சுழலா வரையின் மூலஞ்
சேராய்நீ சிறுதேக்கு சுக்கு நல்ல
திப்பிலியின் வகையொன்று கழஞ்சி மூன்றே.

மூன்றாகத் தூக்கியப்பா நொறுக்கி வாங்கி
முதிரவே ரெண்டுபடி சலத்தில் விட்டு
ஊன்றிநீ தீயெரித்துழக் காகக் காய்ச்சி
உண்டிடவே தேன்விட்டு உறவு சேர்த்து
தான்றியே யின்னமொரு கசாயஞ் சொல்வோம்
தனிச்சுக்கு பொன்முசுட்டை வேரி னோடே
தூன்றியே சிறுதேக்கு தேவ தாரம்
தூ துவளை பெருங்குரும்பை சீந்தி தானே.

காணப்பா வழுதலைவேர் கண்டங் காரி
கழஞ்சிரெண்டு வேரொன்றுக் கசாயம் முன்போல்
தோணப்பா திப்பிலியை மேல்பொடிய தாகத்
தூவியே சுகமாகக் கொள்ளச் சொல்லு
நீணப்பா பத்தியந்தான் நெய்யும் பாலும்
நேர்துவரை யண்டமா முருங்கைப் பிஞ்சாம்
பூணப்பா பீர்க்கிலாம் புடலு மாகும்
புகழான முருங்கைமுதல் முயலாகும் பாரே.

முயலாகுங் கவுதாரி யுள்ளா னாகு
முதுவிரால் கயல்மீனாஞ் சுடுமீ னாகும்
பொயலானக் கொடுப்பையா முப்பு மாகும்
புகழ்ந்துநீ நோய்க்கெல்லாம் பூட்டு நன்றாய்
மயலாகு மர்க்கடங்கள் பார்க்க வேண்டாம்
மாந்தவகைக் கெல்லாம்நெய் வைக்கக் கேளு.

(சு.1.பா.235-238)

(செய்முறை : சுழலா வரைமூலம், சிறுதேக்கு, சுக்கு, திப்பிலி இவை வகைக்கு மூன்று கழஞ்சு (15.3 கிராம்) வாங்கிப் பொடி செய்து 2 படி (2.6 லிட்) நீரிலிட்டு, உழக்களவு (336 மி.லிட்) காய்ச்சி, தேன்விட்டு உண்ணவும்.

சுக்கு, பொன்முசுட்டைவேர், சிறுதேக்கு, தேவதாரம், தூதுவளை, பெருங்குரும்பை, சீந்தில், வழுதலைவேர், கண்டாங் காரி, இவற்றின்வேர் வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி நீரிட்டுக் காய்ச்சி, திப்பிலியின் பொடியைத் தூவி உண்ணவும்.

தீரும் நோய்கள் : சயம், பீனிசம் தீரும்.

பத்தியம் : நெய், பால், முருங்கைப்பிஞ்சு, பீர்க்கு, புடலங் காய், முயல், கவுதாரி, உள்ளான், விரால், கயல் மீன், சுடு மீன், கொடுப்பை, உப்பு ஆகும்.)

**சயத்திற்கு எண்ணெய்**

தயவான பூவந்திப் பட்டை தானுந்
தரித்திடித்து நூறுபலஞ் சலமீ ரெட்டு
நயமான யெட்டொன்றாய்க் குறுக்கி வாங்கி
நல்லயே ரண்டெண்ணெய் படிதான் ரெண்டு
இயமான யெண்ணயொடு கசாயஞ் சேர்த்து
இரண்டுபலங் கத்தூரி மஞ்சள் தானும்
மயமான கடுக்காயும் பலந்தான் ரெண்டு
முள்ளிவேர் பலமரைத்து யெண்ணெய்தனிற் போடே.

அரைத்திட்டு மெழுகுபதந் தன்னில் வாங்கி
அதில்கரிய சீரகமும் பலந்தா னொன்று
நிரைத்திட்டுப் பொடித்திட்டு வைத்துக் கொண்டு
நோயிமிரு காசெடைதான் அந்தி சந்தி
கரைத்திட்ட சயரோகம் யிரும லீளை
காசமொடு சகலஉள் மாந்தை ரெண்டு
குரைத்திட்டுக் கபமீதல் சுவாச காசங்
கொடுஞ்சயந் தொண்ணூற்றாறுங் குடிபோம் பாரே.

போமப்பா பாலருட சுழிக ணங்கள்
பொல்லாத குரைப்புடனே கக்கு வானும்
நாமப்பா விலாவிரும்பு சுழியாந் தங்கள்
நமின்றிரைக்கு மாத கோழைக் கட்டும்
தாமப்பா கோழையென்ற விப்புருதி யோடு
தான்ரத்த மாந்தையொடு பீனி சங்கள்
ஓமப்பா மோருடனே புளியுந் தள்ளி
உன்குற்ற நோயெல்லா மோடுந் தானே.

(சு.21, பா.419 42 )

(செய்முறை : பூவந்திப் பட்டை எடுத்து இடித்து, நீர்விட்டு எட்டொன்றாகக் குறுக்கியெடுத்து, அத்துடன் ஏரண்டெண்ணெய் 2 படி (2.6 லிட்) சேர்த்து, கத்தூரி மஞ்சள், கடுக்காய் இவை வகைக்கு 2 பலம் (70 கிராம்), முள்ளிவேர் 1 பலம் (35 கிராம்) அரைத்துச் சேர்த்து, மெழுகு பதமாகக் காய்ச்சி யெடுத்து, கருஞ் சீரகம் 1 பலம் (35 கிராம்) வாங்கிப் பொடி செய்து போட்டுக் கொள்ளவும்.

அளவு : இருகாசெடை (330 மி.கி) காலை, மாலை உண்ணவும்.

தீரும் நோய்கள் : சயரோகம், இருமலீளை, காசம், உள்மாந்தை, கபம், சுவாசகாசம், சயம் 96, பாலரின் சுழிகணங்கள், கக்குவான், சுழியன், கோழைக்கட்டு, பீனிசங்கள், விப்புருதி, இரத்தமாந்தை நீங்கும்.

பத்தியம் : மோரும், புளியும் நீக்கவும்.)

## மேகவெட்டை, அந்திரதாகத்திற்கு எண்ணெய்

அணுகாது மேகவெட்டை அந்திர தாகம்
அகற்றிவிக்கும் யின்னமொன்று அறையக் கேளு
பிணியேது யேரண்டத் தெண்ணெய்படி ரெண்டு
பெரும்பூ சணிக்காய்ச் சாறுபடி ரெண்டு
நணுகாத யீருள்ளிச் சாறுபடி ரெண்டு
நாட்டெலு மிச் சம்பழச்சாறு படிதா னொன்று
தணியாத ஓரிதழின் சாறுபடி யொன்று
தானிதனி விடுகறக்ஞ் சாற்றக் கேளே.

கேளுநீ வெந்தயமோ பலந்தான் ரெண்டு
கெடியாக அரைத்திட்டு மயன மாகில்
நாளுநீ வடித்திடுவாய் கலசந் தன்னில்
நல்லகோ ரோசனை யுங்குங்கு மப்பூ
தானநீ சிரகமும் வகையொன் றுக்குத்
தப்பாமல் வாரா தெண்ணே.

வாராது மேகசுரம் சூரி வெட்டை
வளர்மூல கிராணியொடு பிரமி யங்கள்
சேராது அக்கினியாய் மந்த வாய்வு
செப்பரிய நீர்க்கட்டுத் தீர்ந்து போகும்
நேராது சீமூலம் ரத்த மூலம்
நெடுநாளை மலக்கட்டும் வறட்சி மூலஞ்
சாராது இன்ன மொன்று யெண்ணெய்ச்
சாற்றுகிறேன் சயந்தீரத் தயவாய்த் தானே.

(சு. 21. பா. 416-418)

(செய்முறை : ஏரண்டத்தெண்ணெய், பூசணிக்காய்ச்சாறு, ஈருள்ளிச்சாறு இவை வகைக்கு 2 படி (2.6 லிட்), எலுமிச்சம் பழச் சாறு, ஓரிதழ்த் தாமரைச்சாறு இவை வகைக்கு 1 படி (1.3 லிட்) வாங்கி, வெந்தயம் 2 பலம் (70 கிராம்) வாங்கி அரைத்துச் சேர்த்

துக் காய்ச்சி வடிக்கவும். வடிகலசத்தில் கோரோசனை, குங்குமப் பூ, சீரகம் இவற்றைச் சேர்த்து வடித்துத் தேவையான அளவு கொள்ளவும்.

தீரும் நோய்கள் : மேககரம், வெட்டை, மூலகிராணி பிரமியங்கள், மந்தவாய்வு, நீர்க்கட்டு தீரும்.)

## சுவாசகாசம், மந்தார காசத்திற்கு

நெல்லிக்காய்க் கந்தகம் இரண்டு பலத்துக்கு பதினெட்டு முட்டை வெண்கருவிட்டு அரைத்து, சேங்கொட்டை பனிரெண்டு கொட்டையை ஒவ்வொரு கொட்டையை எட்டுத் துண்டாக நறுக்கி வெட்டி, எல்லாக் கொட்டையும் அப்படியே வெட்டி அரைத்த மருந்திலே போட்டுப் பிசரி, ரவியிலே வைத்துக் காயப் போட்டபின் கலையத்தில் போட்டு, சில்லுவிட்டு, குழித் தயிலம் வாங்கி, குப்பியிலடைத்து வைத்துக் கொண்டு, மந்தாரகாசம், சுவாசகாசத்திற்குக் கொட்டைப் பாக்களவு பசுவின் வெண்ணெயில் ஒருவராகனெடை தயிலங்குத்தி மத்திச்சுச் சாப்பிடவும். பத்து நாள் அந்திசந்தி சாப்பிடவும். பசுவின்பால், நெய் அதிகமாகக் கூட்டவும். இச்சாபத்தியம். கட்டின உப்பு கூட்டவும். பச்சைப் பயறு கூட்டவும். பத்தியமா சாப்பிடவும். மறுபடி பசுவின்நெய் தேய்த்து முழுகவும். நாலு முழுக்கு முழுகி மறுபடி வெண்ணெய் தேய்த்துக் கொள்ளவும். மந்தார காசந் தீரும். கைகண்டது. (சு. 11)

## மண்டைப்பீனிசம், சிலேற்பனநீர்ச் சதிமூர்சைக்குத் தயிலம்

தயிலங்கே ளிலுப்பைப்பூ வில்வமிலா மிச்சுத்
தனிவேங்கைச் சிராயுடனே அமுக்கி ராவும்
பயிலான நிலப்பனைவேர் முத்தக்காசு நன்னாரி
பங்கயமாம் வளையமொடு நீர்வள்ளிக் கிழங்கு
ஒயிலான குறுந்தொட்டி பூமிசர்க் கரையின்
உடன்கிழங்கு வகையொன்று பலம தஞ்சு
அயிலாகத் தறியிட்டு யிடித்துப்பாண் டத்தில்
அயராமல் சலமஞ்சு மரக்கா லூட்டே.

ஊட்டியே யடுப்பேற்றித் தீயையெரி யிட்டு
ஒடுங்கவது யெட்டொன்றாய்க் குறுக்கிப் பின்பு
நீட்டியே நல்லெண்ணெய் படியு மஞ்சு
நேரான ஆவின்பா லவ்வண்ணஞ் சேர்த்து

முட்டுவாய் கற்கவகை ஏலமில வங்கம்
மதிமதுரஞ் சீரகங்க ளிரண்டுமர மஞ்சள்
கூட்டுகெந்த மகிலுடன் செஞ்சந்தஞ் சிட்டி
கூறியசாதிக் காய்ப்பத்திரி கிராம்புசத குப்பை.

சதகுப்பை கோட்டமொடு செவ்வள்ளிக் கொடியும்
சரதேவ தாரம்வெட்டி நெல்லிப் பருப்பு
மிதமாக வகையொன்று கழஞ்சி அஞ்சு
வெயிலிலே காயவைத்து யிடித்தாட்டுப் பாலில்
விதம்பலது செய்யாதே வெண்ணெய் சேர்த்து
வேகவைத்து அறுநாளில் வடிக்கும்போ தப்பா
பதமெழுகு பதங்கண்டு பச்சைக்கற் பூரம்
பலமுக் கழஞ்சு போட்டுவடித் திடுமே.

வடித்திடுவாய் விநாயகனைப் பூசை செய்து
வைத்திடுவாய் நைவே தினமுந் செய்து
கடித்தவாய் தொடுத்தாப்போல் கலசமொன்றில் விட்டுக்
கனிவாக வண்டுகட்டி தானியபுட மாத்தி
முடித்திடவே பத்துநாள் கழிந்த பின்பு
முறையாக நாலுநாட் கொருகால் முழுகப்பா
படித்தரமாய்ச் சீயக்காய ரப்பு வெந்நீர் கொண்டு
பருவமாய் முழுகன்று பத்தியத்தைக் கேளே.

பத்தியங்கேள் பால்தயிர்மோர் புளிகசப்பு மல்லால்
பட்ரான புகையிலையும் பச்சைமாங் கிசங்கள்
சத்தியமாய் விட்டுமறு நாளைக் காகுஞ்
சாத்துறேன் நோய்போற வியனந் தன்னை
முத்திநீர்ப் பீனிசமோர் பீனிசஞ்சீ ரெத்த
மூக்கிலே சிராய்ப்பருத்தி விதைபோ லுஞ்சீதல்
இத்தனையோ செம்பித்தஞ் செங்கால் நோயும்
இதிற்பிறந்த மேகமொடு யெல்லாம் போமே.

போமப்பா ஒருதலைநோய் கபால வாய்வு
பித்தமிஞ்சு சிரசுநோவு மண்டைவரு கரப்பன்
போமப்பா யித்தயிலத்தால் சொன்னேன்
பொல்லாத விடமுட்டித் தயிலஞ் சொல்வோம்.

... ... ... ... ...

(சு. 1, பா. 396-402)

(செய்முறை : இலுப்பைப்பூ, வில்வம், இலாமிச்சு, வேங்கைச் சிராய், அமுக்கிரா, நிலப்பனைவேர், முத்தக்காசு, நன்னாரி தாமரைவளையம் நீர்வள்ளிக்கிழங்கு, குறுந்தொட்டி, சர்க்கரை வள்ளிக்கிழங்கு இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்) இடித்துப் பாண்டத்தில் போட்டு, ஐந்து மரக்கால் நீர்விட்டு எட்டொன் றாகக் காய்ச்சவும். நல்லெண்ணெய், ஆவின் பால் வகைக்கு 5 படி (6.5 லிட்) சேர்த்து, ஏலம், இலவங்கம், அதிமதுரம், இருசீரகம், மரமஞ்சள், கெந்தம், அகில், செஞ்சந்தம், மஞ்சிட்டி, சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு, சதகுப்பை, கோட்டம், செவ்வள்ளிக் கொடி, தேவதாரம், வெட்டிவேர், நெல்லிப் பருப்பு இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1 கிராம்) வாங்கி, வெய்யிலில் காயவைத்து இடித்து, ஆட்டுப்பாலில் வெண்ணெய் சேர்த்து வேகவைத்து, மெழுகு பதமாக வடிக்கவும். அப்போது பச்சைக்கற்பூரம் மூன்று கழஞ்சு (15.3 கிராம்) போட்டு வடித்துக் கொண்டு, கலசத்தில் விட்டு வடிகட்டி, பத்து நாட்கள் தானியபுடம் வைத்தெடுத்து நான்கு நாட்களுக்கொரு முறை சீயக்காய், அரப்புத் தேய்த்து, வெந்நீரில் முழுகவும்.

பத்தியம் : பால், தயிர், மோர், புளி, கசப்பு, புகையிலை, பச்சைமாங்கிசம் இவற்றை அன்றைக்கு ஒரு நாள் நீக்கவும்.

தீரும்நோய்கள் : பீனிசம், மூக்கிலே ரத்தம் விழுதல், பித்தம், செங்கால்நோய், மேகம், ஒருதலைநோய், கபாலவாய்வு, பித்தம், சிரசுநோய் மண்டைக் கரப்பன் அனைத்தும் தீரும்.)

## சிலேற்பனத்திற்கு

ஆடா தோடை யதிமதுரம் அஞ்சு கடுக்கா யிந்துப்பு
தேடாய் கண்டங் கத்திரிவேர் திசிய திரவி நாயுருவி
ஏடாய்ச் சேர்த்த மருந்தெல்லாம் எட்டொன் றாக்கிக்
குடித்திடுகில்
கோடா கோடிச் சிலேற்பனமுங் குடிபோய்க் கெடியில்
விழுந்திடுமே.
(சு. 20, பா. 19)

(செய்முறை : ஆடாதோடை, அதிமதுரம், கடுக்காய், இந்துப்பு, கண்டங்கத்திரிவேர், நாயுருவி இவற்றை இடித்து நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சிக் குடிக்கச் சிலேற்பனம் தீரும்.)

## மண்டைப் பீனிசம் தீர

கருஞ்சீரகம் பலம் 1, நிலாவாரை, கருஞ்சேமட்டை, பச்சை மஞ்சள் வகைக்கு சாறு படி ¼, நல்லெண்ணெய் படி 1 காய்ச்சி உதயத்தில் முழுகவும். (சு.14)

(வேறு)

மண்டைப் பீனிசம், சிளயப் பீனிசம், இரத்தப் பீனிசம், ஒருதலைப் பீனிச மிது நாலுக்கும், குன்ம மண்டையிடிக்கும் ஒரு புறமா இடிக்கும், மண்டையே இரத்தம் விழும், பிடரி கடுக்கும், முகம் வெளுக்கும் இதற்கு மருந்து.

நெல்லிக்காய்ச்சாறு படி 1, கரிப்பான் சாறுபடி 1, வீராணிக் கிழங்குச்சாறு படி 1, நெய்படி 1, பால்படி 1, சீரகம், கோட்டம், அதிமதுரம், ஏலம், கருஞ்சீரகம், மனோசிலை, அக்கிரா, இந்துப்பு, குரோசாணி, சண்பகப்பூ வகைக்கு 1பலம் அந்தச்சாற்றிலரைத்துக் காய்ச்சி வடித்து, ரசம் விட்டு, நாலு நாளைக் கொருக்கால் முழுகவும். இந்த வியாதி நாலுந் தீரும். (சு.12)

(வேறு)

அழிஞ்சில் பட்டை பொடித்து ஊரு யெண்ணெய் காய்ந்து வருகிற வேளையிலே போட்டிறக்கி முழுகத்தீரும். நீர்த்தோடம், பீனிசம் தீரும். (சு. 12)

(வேறு)

மண்டை வியாதிக்கும், பீனிசத்திற்கும் தலை சூடிக்கொடி பலம் 10, அமுக்கிரா வேர் பலம் 10, கரிப்பான் சாறுஉரி, பொடு தலைச்சாறு உரி, மிளகு உரி, எண்ணெய் படி2 மருந்தெல்லா மரைத்துக் கரைத்துக்காய்ச்சிக் கொதிக்கிறபோது மிளகுபோட்டு, மிளகு வெடிக்கிற பருவத்திலிறக்கி வடித்துக் கொள்ளவும். நான்கு நாளைக் கொருகால் முழுகவும். பீனிசமுதல் சருவமுந் தீரும். (சு. 12)

(வேறு)

மிளகு 3 பலம் ஒரு சட்டியில் போட்டு, குப்பைமேனிச் சாறு விட்டு, அந்தச்சாறு வற்றின பிறகு நிழலுலர்த்தி, பசுவின் பாலில் நான்கு நாள் ஊறப் போட்டு, மறுபடியும் நிழலுலர்த்தி, தினம் ஒரு பலம் மிளகு பசுவின் பாலிலரைத்து, காலையில் தேய்த்து, சாயங்காலம் வெந்நீரில் முழுகி, நாலா நாள் சீனிக்காரமும், சுண்ணமும் நசுக்கி முகரவும். (சு.6)

## வாய்வுக்கு

உரைக்கிறேன் குக்கிலொடு திரிகடுகு சேர்த்து
ஒடுங்குதற்குச் சாரணைச்சாறு மேனிச் சாறு
உரைக்கிறேன் வேலிப்பருத்திச் சாற்ற ரைத்து
ஓட்டிலே வெதுப்பியந்தச் சூட்டுடனே பூச
உரைக்கிறேன் வாதவாய் வுடன் பிடிப்புத் தானும்
ஒதுங்காமல் நின்றுபோ மின்னமொரு பத்து
உரைக்கிறேன் நெல்லிக்காய் கந்தகமும் வசம்பும்
ஒப்பில்லாத் திரிகடுகு ஒன்றாகக் கூட்டு.

கூட்டியே சமனாகச் சாறுக ளரைத்து
கொதிக்கவைத்துப் பிடிப்பதி வெகுளை யப்பூ
சூட்டியே யிப்படித்தான் பூசிவந்தால் கூட
சூட்டோடே வாயுவருங் குத்து நிற்குங்
கூட்டியே யிதற்குமொரு கசாயஞ் சொல்வோங்
குறும்பொடுக்குச் சாறணைவேர் ........
கூட்டியே திரிகடுகு ........
குறுவேப் பீர்க்கில் குறிஞ்சா வேரே.

வேரான நீலிவேர் சிறுபிரப்பங் கிழங்கு
வேகமுள்ள கொடுவேலி திப்பிலியின் மூலம்
நேரான பறங்கிப்பட்டை நொச்சி வேரும்
நிலவேம்புச் சமனாக நீர்படியு மிரண்டு
ஓராம லெட்டொன்றாய்க் குறுக்கி வாங்கி
உத்தமனே அந்திசந்தி பட்டையரைத் தூட்டு
சீரான கசாயத்தால் மேக வாதஞ்
சேர்ந்துநின்ற வாயுமுதல் சூலை போமே.

(சு.1.பா.103-105)

(செய்முறை : குக்கில், திரிகடுகு இவற்றுடன் சாரணைச் சாறு மேனிச்சாறு, வேலிப்பருத்திச்சாறு இவற்றைச் சேர்த்தரைத்து, ஓட்டிலிட்டு வெதுப்பிச் சூட்டுடன் பூச வாத வாய்வுப் பிடிப்புத் தீரும்.

நெல்லிக்காய்க் கந்தகம், வசம்பு, திரிகடுகு இவை சம அளவுச் சேர்த்து, மேற்கூறிய சாறுகளிட்டு அரைத்துக் கொதிக்கவைத்துப் பூசிவர, சூட்டினால் வரும் வாய்வுக்குத்து நீங்கும்.)

## வாய்வுக்குளிகை

நாவி முக்கடுகு சூதம் நற்கடுகு தான்றி லிங்கம்
மேவிய கடுகிந் துப்பு வெண்கா ரங்கெந் தகமும்
தாரமடு விழியி னாளே தானரைக் சழஞ்சாய்க் கொண்டு
நீயினிச் சுத்தி செய்தே நேர்வாளஞ் சரியாய்க் கூட்டே.

கூட்டியே கிஞ்சு கத்தின் றோலிலை குளுந்த நொச்சி
நாட்டமா யவித்துப் பிட்டாய் நைப்புடன் வெந்த நீரால்
சேட்டமோ டரைத்துக் குன்றி யளவுசெய் சுக்கு நீரில்
போட்டிடக் குன்ம வாய்வும் பொருமலுஞ் சுத்தி யாமே.
(சு.20)

(செய்முறை : நாவி, முக்கடுகு, சூதம், நற்கடுகு, தான்றி, இலிங்கம், கடுகு, இந்துப்பு, வெண்காரம், கந்தகம் இவை வகைக்கு ½ கழஞ்சு (2.55 கிராம்) வாங்கி, சுத்தி செய்த நேர்வாளத்துடன் சேர்த்து, கிஞ்சுகம், நொச்சியிலை இவற்றைப் பிட்டாய் அவித்த நீரால் அரைத்து, குன்றி அளவு குளிகை செய்யவும். சுக்கு நீரிலுண்ண குன்மவாய்வு, பொருமல் தீரும்.)

(வேறு)

வச்ச நாக மரிதாரம் வசம்பு கெந்தகம் வெண்காரம்
கச்சி யிரதஞ் செவ்வாலங் கடுகு திரிபலை திரிகடுகு
மெச்ச கலக்கிக் கொண்டு மிகவும் பொடித்துத் தின்பீரால்
கச்ச முலைமட வாய்கேள் நீத்தறிக் கொடுபோ வாயுவதே.
(சு.20)

(செய்முறை : நாகம், அரிதாரம், வசம்பு, கந்தகம், வெண்காரம், இரசம், செவ்வாலங்கொட்டை, திரிபலை, திரிகடுகு இவற்றைச் சேர்த்துப் பொடி செய்து உண்ணவாய்வு நீங்கும்.)

## வாய்வுக்குத் தயிலம்

கோடியென்ற வாய்வுக்குத் தயிலஞ் சொல்வேன்
    கூர்ந்துகேளு புலத்தியனே கறுக்குத் திட்டந்
தேடி நல்லு வாய்வேர் நொச்சி வேருஞ்
    சிற்றா மணக்குவேர் வகையே கேளு

கேடில்லாப் பலமொன்று சேர்த்து வாங்கிக்
    கிருபையுடன் சலம்பத்துப் படியும் விட்டு
நாடியெட் டொன்றாய்க் குறுக்கி வாங்கி
    நாட்டுசிற் றாமணக்கெண் ணெய்படியு மொன்றே.

ஒன்றான கள்ளிப்பால் படியு மொன்று
உத்தமனே வெள்ளுள்ளி பலமு ரெண்டு
நன்றான கோசலமும் படியு மொன்று
நலமான திரிபலையும் பலமும் மூன்று
குன்றாம லாட்டியந்தத் தயிலக் கட்டுக்
குருபதந் தப்பாமல் பதம றிந்து
நின்றான ஈசனுக்குப் பூசை செய்து
நினவோடே காசெடைதா னுண்ணச் சொல்லே.

உண்டவுடன் வாயுவென் றிளைத்துப் போகும்
ஒழியாத வாயுவென்றால் கோடாக் குடிகுடி
உண்டையிட்டு உண்ணச் சொல்லுந் திருந் தீரும்
... ... ... ... (சு. 9. பா. 47-49)

(செய்முறை : நொச்சிவேர், சிற்றாமணக்கு வேர் இவை வகைக்கு ஒரு பலம் (35 கிராம்) வாங்கி இடித்து, பத்துப்படி (13 லிட்) நீரில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சவும். அதனுடன் சிற்றா மணக்கு எண்ணெய், கள்ளிப்பால் இவை வகைக்கு ஒருபடி (1.3லிட்), வெள்ளுள்ளி இரண்டு பலம் (70 கிராம்), பசுநீர் ஒருபடி (1.3 லிட்), திரிபலை மூன்றுபலம் (105 கிராம்) வாங்கி, ஆட்டிச் சேர்த்துக்காய்ச்சி, பக்குவமாக இறக்கிக் கொள்ளவும்.

அளவு : காசெடை (165 மி.கி) உள்ளுக்குச் சாப்பிடவும்.

தீரும்நோய் : வாய்வு நீங்கும்.)

## பாரிச வாய்வுக்கு

விரைந்துவரும் பாரிச வாய்வுக் கப்பா
வெள்ளுள்ளி பருப்பங்கே சிறங்கை ரெண்டு
விரைந்தமுளை யெடுத்தனை யோட்டி விட்டு
விரவிநீ பொன்னிறம்போல் வெதுப்பி வாங்கி
விரைந்துடனே விளக்கெண்ணெய் கழஞ்சி ரெண்டு
விட்டப்பா பனைவெல்லங் கட்டி யொன்று
விரைந்தேர்க்கத் துடுப்பினால் பிரளக் கிண்டி
வெதுவெதுக்க மூன்றுதின முண்ணச் சொல்லே.
(சு 1. பா. 467)

(செய்முறை : வெள்ளுள்ளிப்பருப்பை இரண்டு பிடி எடுத்து, ஓட்டிலிட்டுப் பொன்னிறமாக வறுத்து, விளக்கெண்ணெய் 2

கழஞ்சு (10.2 கிராம்), பனை வெல்லம்ஒரு கட்டி சேர்த்து, துடுப் பினால் கிளறிக்கிண்டி, வெதுவெதுப்பாக மூன்று தினமுண்ணப் பாரிச வாய்வு நீங்கும்.)

### அண்ட வாய்வுக்கு மருந்து

நெல்லிக் கெந்தி வராகன் 2, ஐந்து கழக்கொட்டிப் பருப்பும் இது இரண்டையும் நன்றாக அரைத்து, ஒரு கோழிமுட்டை உடைத்து ஒரு சட்டியில் விட்டு, விளக்கெண்ணெயாகிலும் இலுப்பை எண்ணெயாகிலும் இரண்டு மூன்று கரண்டி எண்ணெய் கூடவிட்டு, முன் அரைத்த இரண்டு மருந்தையும் கூடப்போட்டு, நன்றாக வறுத்தெடுத்து வைத்துக் கொண்டு, கொட்டைப் பாக்களவு எடுத்து, அந்தி சந்தி மூன்று நாள் சாப்பிடவும். கடும் பத்தியம். வெந்நீருஞ் சோறும் சாப்பிடவும். (சு.11)

### குடகரி வாய்வுக்கு

சிவதை பலம் 1, வெள்வெங்காரம் பலம் 1, உலுவாயரிசி பலம் 1, சுக்கு பலம் 1, திப்பிலி பலம் 1, கருஞ்சீரகம் பலம் 1, காயம் பலம் 1, சுத்தி செய்த நேர்வாளம் பலம் 1 இதுவெல்லாம் தேங்காய்ப் பாலிலரைத்து, தேங்காய்ப் பாலில் பொடியரிசியும் போட்டு, கஞ்சி வைத்துக் குடிக்கவும். இதுவெல்லாங் கூட்டி அரைத்துக் கஞ்சியில் நெல்லிக்காயளவு பொடி கலக்கி வைக்கவும். (சு.20)

### சர்வவாய்வுக்கும் உருண்டை

நெல்லிக்காய்கந்தகம், பச்சைநாவி, அரிதாரம், திப்பிலி, சுக்கு, மிளகு, பொரிகாரம், சுத்தி செய்த நேர்வாளம், பெருகாயம் இவையெல்லாம் கையாந்தகரைச் சாற்றிலரைத்து, பருத்திக் கொட்டை அளவுவுண்டை செய்து வெற்றிலையில் தின்னவும். இராசகாரம், கைவெளுப்பு. கால்வெளுப்புப் பொறுக்கும். சர்க்கரையில் தின்னப் பொறுக்கும். பசுவின் கோமியத்தில் தின்ன சர்வ வாய்வும் பொறுக்கும். (சு. 20)

### வாதத்திற்கு வேது

கொத்தான் பிரண்டை வெண்ணொச்சி குருந்து கொழுஞ்சி
சிவன்வேம்பு
சிற்றா மணக்கிலை யோடே சேர்த்து வச்சு காடியுடன்
உத்தார் தனக்கொரு வேதுவிட உடல்வாத மென்பதும்போம்
அத்தராணை பொய்யில்லை ஆன மருந்து செய்வாயே. (சு. 15)

(செய்முறை : முடக்கொத்தான், பிரண்டை, வெண்ணொச்சி, கொழுஞ்சி, குருந்து, சிவனார் வேம்பு, சிற்றாமணக்கு இவற்றின் இலைகளைச் சேர்த்து, காடியுடன் வேது கொடுக்க உடல்வாதம் என்பதும் போகும்.

## கோரை வாதத்திற்கு எண்ணெய்

கொடுவேலி தழுதாழை புங்கு நொச்சி
கூறியதை வேளையின் சாறொன்று நாழி
ஒடிபான குழச்சுண்டில் வேம்பூ ஆவதும்
ஒருபல மாம்நல் லெண்ணெ யாலே
வடிவான நிம்பவெண் ணெயே ரண்ட
யெண்ணெய் வகைக்கு கால்தான் கூட்டி
வடித்துநக்க வுடனே தான் தோற்றோடுங் கோரை
வாதமுடலி லுள்ளவாத மெல்லாமோடுந் தானே.

(சு.20)

(செய்முறை : கொடுவேலி, தழுதாழை, புங்கு, நொச்சி, தை வேளை இவற்றின் சாறு வகைக்கு 1 நாழி (1.3லிட்) சேர்த்து, வேம்பு 1 பலம் (35 கிராம்) போட்டு, நல்லெண்ணெய், நிம்ப வெண்ணெய், ஏரண்டெண்ணெய் ஒரளவு கூட்டி வடித்து உண்ண கோரை வாதமும், அனைத்து வாதமும் நீங்கும்.)

## இளம் பிள்ளை வாதத்திற்கு

எருக்கிலை இருநூறு நறுக்கிக் கொட்டைத் தேங்காய் திருகி வறுத்து, எருக்கிலையுங் கூட வறுத்து, சருக வறுத்தரைத்துகால், மேலெல்லாம் பூசி, அந்திக்கு வெந்நீர், நொச்சியிலை, நாயுருவி, காஞ்சிரை இலை, கழச்சியிலை இதுவெல்லாம் வேது வைத்துக் குளிக்கவும். (சு.20)

## கழல்வாதத்திற்கு

நொச்சிக் கொழுந்து, அத்திக்கொழுந்து, கொழுஞ்சிக் கொழுந்து, அருகம் புல்லும், முடக்கொத்தான் கொழுந்தும், கொழுஞ்சித் தழையுமரைத்துப் பசுவின் வெண்ணெயில் கொள் பிடி விழுங்கவும் பொறுக்கும். (சு. 20)

(வேறு)

நொச்சிக்கொழுந்தும் மிளகுஞ் சேர்த்துக் கொட்டைப் பாக்களவு விழுங்கவும். (சு. 20)

(வேறு)

கொத்தான் சாகமும், ஆட்டுப் பாலும், நல்ல வெல்லமுங் கூட்டிக் கொடுக்கவும். (சு. 20)

(வேறு)

கழற்சிக் கொழுந்தும், துத்திக் கொழுந்தும், அறுகம்புல்லும், மணிக் கொத்தானுமரைத்துப் பசுவின் வெண்ணெயில் குழப்பி விழுங்கவும். (சு. 20)

## பக்கவாத சூலைக்கு

குமிளவேர் வடக்கே போனவேரை வாய்பேசாமல் பிடுங்கி அரைத்து மோரில் கொடுக்கவும். (சு. 20)

## முழங்கால் வாதத்திற்கு

முற்றின கொழுஞ்சியைத் துவைத்துப் பிழுந்து, நல்லெண்ணெயும் நெய்யும் மருந்துச் சாகமும் சமன் கொடுக்கவும். (சு. 20)

## முட்டுவாதத்திற்கு

நத்தைச் சூரிவேர் நிழலிலுலர்த்தி இடித்துத் தூளாக்கி, நல்லெண்ணெய் இரு நாள் ஈஞ்சையிலை நிழலிலுலர்த்தி இடித்துத் தூள் நாழி, இது மூன்றுஞ் சூரியபுடமாக ஏழுநாள் வைத்துக் காய்ந்தால் கிண்ணியளவு தினந்தோறுங் கொள்ளவும். பத்தியங் காக்கவும். (சு. 20)

## சர்வாங்கி வாதத்திற்கு

முன்னை வடக்குப் போன வேரைத் தோலியை எலுமிச்சங் காயளவரைத்து வெண்ணெயில் கூட்டி மத்திச்சுக் கொடுக்கவும் பொறுக்கும். (சு. 20

## வாதத்திற்கு

வெள்ளை வெங்காயம் பலம் 2, மிளகுபலம் 2, கழற்சிப் பருப்பு பலம் 1, இலுப்பைக்காய் படி 3 இதுவெல்லாம் பச்சிலையோடே அரைத்து விளங்காய்ப் பிரமாணம் உண்டை பண்ணி, நிழலுலர்த்தி, நேரத்திற்கு 3 உண்டை இரண்டு நேரமும் கொடுத்து, இப்படி மூன்று நாள் கொடுத்து, 6 நாள் பத்தியம் பிடிக்கவும். (சு. 6)

(வேறு)

மலைநெல்லு, கொட்டைப் பருப்பு 1 எடுத்து நல்லெண்ணெயில் பொரித்து, ஒரு பொழுது உள்ளுக்குக் கொடுத்து அந்த எண்ணெயும் குடித்து, மூன்று பொழுது பத்தியம் இருக்கவும். (சு.12)

(வேறு)

நுணா இலைச்சாறு இரண்டு சிறங்கை, காடி இரண்டுசிறங்கை, இரண்டுஞ் சமன்கூட்டி, மூன்றுநாள், ஆறுபொழுது சாப்பிடவும். உப்பு, புளி தவிர்க்கவும். சருவாங்க வாதந் தீரும். (சு.12)

(வேறு)

வர்ண வாத மெடுத்தால் வேப்பம் பூவுஞ் சிறுபயறும் சரி கொண்டு, இரு நாழி நீர்விட்டு உழக்காகக் காய்ச்சிக் கொடுக்கவும். அறுகஞ்சாறை நெய்யுங் கலந்து கொடுக்கவும். எள்ளுமரிசியும் வெவ்வேறே அரைத்து, பாலில் மூன்று நாள் கொடுக்கவும். இப்படி மோரிலும் கொடுக்கலாம். (சு.12)

(வேறு)

ஆமணக்கு, எருக்கு, புங்கு, வீழி, பாலை, வெள்வேல், கள்ளி, நொச்சி, பொடுதலை, முருங்கை, மாவிலங்கை, காட்டுமல்லிகை, அமுக்கிரா, இவையுடைய வேரையும் இலையையும், காடி, ஆனை மூத்திரம், குதிரைமூத்திரம், ஒட்டகை மூத்திரம், மனுசாள் மூத்திரம், பசுவின் பாலும்விட்டு அரைத்து, கொதிக்கசாயம் வார்த்தரைத்து, நெய் நாழிவிட்டு. பதத்தில் வடிக்க. உள்ளுக்குங் கொடுத்து நசியமும் பண்ணி மேலும் பூச. வாதசன்னிக்குக் குடார மென்னும் பேர். சருவ வாதங்களும் சாந்தமாம். (சு. 3)

## வாதத்திற்கெண்ணெய்

வாதமடக்கிவேர், கொடுவேலி வேர், வேப்பம்பட்டை, புங்க பட்டை, சென்னக் கரைப்பட்டை, சென்னைப் பட்டை, புனல் முருங்கைப்பட்டை, அழிசப்பட்டை, குனலாதண்டைப் பட்டை, செங்கத்தாரிப் பட்டை, நொச்சிவேர் பட்டை, கொன்றைப் பட்டை, சிற்றாமணக்கின்வேர், அவுரிவேர், தாணிப்பட்டை, வேங்கைப்பட்டை, அத்திப்பட்டை, மாவிலிங்கப்பட்டை யிவை ஒரோன்று பலம் 3 கொண்டு, இருதூணி நீரில் மசியத்தகத்திட்டு, நாலொன்றாகக் காய்ச்சி வடிகொண்டு, இதற்குப் பஞ்சதயிலம் ஒரொன்றுநாழி விட்டுறவு செய்து, இதற்குப் பச்சிலைச்சாறு, கையாந்தகரை, குப்பைமேனி, வேப்பெண்ணெய், புங்கெண்ணெய், சிற்றாமணக்கெண்ணெய், நல்லெண்ணெய், சென்னைக்காய் எண்ணெய்விட்டு, பஞ்சதயிலம் ஒரொன்று நாழி விட்டுறவே செய்து, இதுக்குப் பச்சிலைச்சாறு, கையாந்தகரை, குப்பை மேனி, வாதமடக்கி, சங்கக் குப்பி, சிற்றாமணக்கிலை, நொச்சி, ஊமத்திலை

நாரகத்திலை, ஆடாதோடை, கொத்தான், கொழிஞ்சி, நாக கள்ளி, அழிசிலை, முருக்கிலை, சீந்திற்தண்டு, தைவேளை, கொழிஞ்சி, அவுரி. உத்தமதாளி, வெள்ளறுகு, பிரமி, பொடுதலை ஆக இவை ஒரொன்று சாகம்நாழியிது முன்கிளரசமு முறவுசெய்து காய்ச்சி, கடைச்சரக்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, கடுகு, கடுகுரோகணி, அத்திதிப்பிலி, செங்கழுநீர், கோட்டம், ஏலம், இலவங்கம், பச்சிலை, நாகப்பூ, செண்பகப்பூ, செவ்வள்ளிக்கொடி, சித்தரத்தை, பேரரத்தை, தக்கோலம், சவ்வீரம், சிறுமூலம், கார்போகலரிசி, வெட்பாலை, வாளுலுவாயரிசி, விளாலரிசி கொத்தமல்லி, சிறுதேக்கு, வெந்தயம், செஞ்சந்தனம், நற்சீரகம், கருஞ்சீரகம், சாதிக்காய், சாதிபத்திரி, காராம்பூ, மஞ்சள், மரமஞ்சள், சன்னி நாயன், குக்குலு பஞ்சவனப் பருக்கை, கல் மதம், அதிவிடயம், தேவதாரம், சீரகம், இட்வகம், சதகுப்பை, அசமோதகம், வெள்வெங்காயம், கச்சோலம், அடவி கச்சோலம், அமுக்கிராவேர், சிவதை, கார்லோலரிசி, சீரகம், கார்கோலி, காரகில், கத்தூரி மஞ்சள், தில்லை முருகு, ஆதரவரிசி, இராமிச்ச மிருவேர், கொடுவேலி, நன்னாரி ஆக மருந்தொன்று பலம் 3 அரைத்துக் காய்ச்சி, மூன்று நாள்காய்ச்சி, பூநாகங்கூட்டி, மெழுகு பதத்தில் வடித்து, உள்ளுக்குக் கொடுத்து, மேலே சருவாங்கம் போட்டுப் பிடித்து, வேது வைத்து விட்டுக் குளிக்கவு மிதுக்குத் தீரும். வாதம், வாதசன்னி, முக வாத சன்னி, முகவாதம், துடி வாதம், மடக்குவாதம், வாதசூலை, குதிவாதம், எரிவாதம், திரவாதம், கன்னவாதம், உள்ளடி வாதம், பக்க வாதம், சுரோணி வாதமிது வெல்லாம் பொறுக்கும்.

இதுக்கொத்தலிட, கொடுவேலி வேரை வாய்பேசாமல் வெட்டி வந்து, தோலியை யெடுத்து, வெள்வெங்காயம் பலம் 1 தேங்காய்த்துருவலும் வசம்பு பலம் 1, திருகு கள்ளிச் சோறெடுத் துச் சட்டியில் போட்டு, நீரற அறுத்து, மருந்தெல்லாம் விரவிச் சீலையில் பொட்டணமாகக் கட்டிப் பஞ்ச தயிலம் விட்டொத் தடம் போடவும். (சு.20)

## விடபாக சுரத்திற்குக் கசாயம்

தீர்ந்திடுமே விடபாகம் வீக்கஞ் சோபஞ்
சிக்குமல சலக்கட்டுந் தெளிந்து போகுந்
தீர்ந்திடுமே விடபாக சுரத்துக் கின்னஞ்
செப்புறேன் திப்பிலிதிப் பிலியின் மூலந்

தீர்ந்திடுமே வேர்க்கொம்பு ஓமம்வெள் ளுள்ளி
சீரகங்கள் மூன்றுடனே கிராம்பு சேரு
தீர்ந்திடுமே யிலவங்கங் கடுகு ரோகணி
திகையாமல் வகையொன்று கழஞ்சி யொன்றே.

வகைக்கொரு கழஞ்சியாய் வகுத்த பின்புதான்
பகைத்திடா சாதிக்காய்ப் பத்திரிதி ராட்சமுந்திரி
இகைக்க யோர்பண வெடைசேர யிடித்திட்டு
நகைத்தி டாதிரு நாழி நீரிடே.

இட்டஓர் கூறையு மெட்டொன் றாக்கியே
கட்டுடன் ராப்பகல் கசாயங் கொள்வது
விட்டிடா திப்படி விரும்பி மூன்றுநாள்
தட்டிலா தருந்திடத் தகர்ந்து ஓடுமே.

ஓடுமே விடசுர மொட்டிய கணைச்சுரம்
பாடிய உள்சுரம் பணைப்புத் தோன்றுதல்
கூடிய மலங்கட்டிக் கொண்டதுஞ்
சாடிடுஞ் சவ்வீர வைப்புக் கல்லுப் போடே.

(சு. 1. பா. 344-347)

(செய்முறை : திப்பிலி, திப்பிலிமூலம், வேர்க்கொம்பு, ஓமம், வெள்ளுள்ளி, சீரகம், கிராம்பு, இலவங்கம், கடுகுரோகணி இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1 கிராம்), சாதிக்காய், சாதிபத்திரி, திராட்சை, முந்திரி இவை வகைக்கு ஒரு பணவெடை (165 மி. கி) சேர்த்து இடித்து, மூன்று கூறாக்கி, ஒரு கூறில் 2 நாழி (2.6 லிட்) நீரிட்டுக் காய்ச்சி இரவும் பகலும் மூன்று நாட்கள் அருந்தவும்.

தீரும்நோய்கள் : விடசுரம், கணைச்சுரம், உள்சுரம், பணைப்புத் தோன்றுதல், மலக்கட்டு அனைத்தும் தீரும்.)

## நடுக்கல் சுரத்திற்குக் கசாயம்

மலைதாங்கி திரிகடுகு புங்கம் பட்டை
வகையஞ்சுக் கொன்றைவேர் கனத்த பட்டை
நிலையாக நெட்டியிதை யிடித்துக் கூறாய்
நேராக மூன்றாக்கி ஒருகூ றுக்குச்
சலமுமிரு நாழிதனை எட்டொன் றாக்கித்
திவசமூன் றாறுபோ துண்ணத் தீரும்
பலவிடங்க ளழியுமே சுரமும் போகும்
பண்டுரைத்த நடுக்கெல்லாம் பறக்குங் கொத்தமல்லி.

கொத்தமல்லி திரிகடுகு பேரா முட்டி
கோலத்தோ வியும்வகைக்கு ஒருகழஞ்சு கூட்டி
பத்தறவே யரைத்துஒரு நாழி நீரில்
பரிவுடனே கலக்கியதை எட்டொன் றாக்கி
வத்தியே வொவ்வொரு போத ருந்த
வர்தவீறொடு நடுங்கலென்ற வெப்புந் தீருஞ்
சத்தியமாய் மிளகுக சாயந்தா னுண்ணத்
தானடுக்கல் சுரந்தீருஞ் சத்தியஞ் சுக்கே.

## உள் சுரத்திற்கு

சுக்கொடு கொத்த மல்லி
துலங்குதே சாபுர மூன்றும்
ஒக்கத் திருமொரு படிநீ
ருடனெட் டொன்றாய்க் குறுக்கி
மிக்க வந்தியம் பொழுது
விரைந்துண்ணக் கழிச்சல் பின்பு
அக்கய மொருபோ தாக
அசதிவருந் தோறுங் கொண்டிடுமே

கொண்டுவர வேவிட மழியுங்
குறுவேர்வை யும்போம் பசியெடுக்கும்
பண்டு வந்த உள்சுரமும்
பறக்கு மேதும் பணையாது
விண்டார் வெறுவே ரதுயிஞ்சி
வெதுப்பிமிள கிட்டொரு படிநீர்
உண்டாம் படிக்கே யெட்டொன்றா
யுண்ணு மிரவி லிப்படியே,

இப்படி யஞ்சுநாளி வியல்புடன் கொண்டிட
வெப்பொடு உள்சுர மந்தவேர் வையுங்
குப்பெனக் குதித்திடுங் குடல்கு ளிர்ந்திடுஞ்
செப்பினோ மினிச்சுர மாந்தை சுக்கோடே,

(சு.1.பா,327-331)

(செய்முறை : மலைதாங்கி, திரிகடுகு, புங்கம்பட்டை கொன்றைவேர், கனத்தபட்டை இவை ஓரளவாய் எடுத்து இடித்து, மூன்றுகூறாக்கி, ஒருகூறுக்கு 2 நாழி (2.6லிட்) நீரிட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, மூன்று வேளை அருந்த விடசுரம் தீரும். நடுக்கமும் தீரும்,

கொத்தமல்லி, திரிகடுகு, பேராமுட்டி. இவை வகைக்கு 1கழஞ்சு (5.1கிராம்) வாங்கி அரைத்து, 1நாழி (1.3லிட்) நீரிலிட்டுப் பக்குவமாகக் காய்ச்சி ஒவ்வொரு வேளை அருந்த நடுங்கல், வெப்புசுரம் தீரும். மிளகுக் கசாயம் உண்ண நடுக்கல் சுரம் தீரும்.

சுக்கு, கொத்தமல்லியை 1படி (1.3லிட்) நீரிலிட்டுக் காய்ச்சி அருந்திவர வேர்வை நீங்கி, விடசுரம் நீங்கும். பசியெடுக்கும்.

இஞ்சி, மிளகை இடித்துப் பொடித்து 1படி (1.3லிட்) நீர் விட்டுப் பக்குவமாகக் காய்ச்சி, இரவில் ஐந்து நாட்கள் உண்ண உள் சுரம் தீரும். வேர்வை கண்டு உடல் குளிர்ந்திடும்.)

### சுரத்திற்கு ஏலாதிக் கசாயம்

மயிலில் சன்னி தோடமுதல்
வாரித்த சிலேற்பன சுரமுங்
குயில்போ லிரைச்சல் மலப்பந்தங்
கூறுஞ் சலக்கட் டிவையெல்லாம்
பயிலாத் தீரும்விட பாகமழியப்
பண்பாய்க் காட்டுஞ் சீரகத்தான்
ஒயிலாய் மூன்று கழஞ்சுதனை
ஒவ்வோர் கழஞ்சு நீரிலிடே,

இடுவாய் சலந்தா னிரண்டுபடி
யெட்டொன் றாக்கி யந்திசந்தி
விடுவாய் மூன்று தினத்தாலே
விடமு மழியுஞ் சுரம்போகும்
கெடுவா யின்னநற் சுரையினங்
கேடில் லாம லுலர்ந்ததண்டு
நடுவாய் மூன்று துண்டிருநாழி
ற் பதமாய் வற்றவைய்யே.

வற்றவை யப்பா யெட்டொன்றாய்
மறுத்து மந்திசந்தி யுண்ணு
அற்றே போகும் விடபாகம்
அறையக் கேளு யின்னம்வகை
பச்சைச் சுரைதன் தழைப்பச்சை
பரிந்து கழுநீர் படியொன்றில்

வெற்றி பெறவே வேகவைத்து
மிளகு யுள்ளி தட்டியிட்டு
சித்தி யாக யூனுடனே
சேர்த்து அருந்தத் தீர்ந்திடுமே. (சு.1.பா.341-344)

(செய்முறை : சீரகம் மூன்று கழஞ்சு (15.3கிராம்) வாங்கி2படி (2 6லிட்) நீரிலிட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, காலை, மாலை மூன்று நாட்கள் அருந்த விடசுரம் தீரும்.

சுரைக்காயின் உலர்ந்த தண்டு மூன்றை 2நாழி (2.6லிட்) நீரிலிட்டுக் காய்ச்சி, காலை, மாலை உண்ணவும். விடபாகசுரம் தீரும்.

பச்சைச் சுரைத்தழையைப் பறித்து 1படி (1.3லிட்) கழுநீரி விட்டு வேகவைத்து, மிளகு, உள்ளியைக் கட்டிப் போட்டு அருந் தவும். விடசுரம் தீரும்.)

### சுரவிடமழிய பால்கஞ்சி

கோரங் கிழங்கு கொடித்தூவி
கோட்டஞ் செவியங் கொத்தமல்லி
வீர முடைய தூதுவளை
விட்டுணுக் கிரந்தி லாமிச்சுச்
சார முடைய அதிமதுரந்
தனித்த சுக்கு யிலவங்கம்
பாரப் புடோல் முள்ளிவேர்
பற்படா கம்பக ரேலம்.

ஏலந் திப்பிலி மூலமொடு
மிசைந்த கண்டங் கத்திரியு
ஞாலத் தாடா தோடையிலை
நன்னாரிவேர் சீந்தி யோடு
சீலத் துடனே யிருகழஞ்சிச்
சேர யிருபத் தொன்றிடித்து
காலத்துடன் முக்கூறு செய்து
கசாயம் போட்டுக் கொள்வீரே.

கொள்வீ ரொருகூறுக் கிருநாழி நீர்விட்டுக்
கூறா யெட்டொன் றாக்கியதை
உள்ளே குடிக்க மூன்றுதின
மொடுங்குஞ் சுரவீ ரற்றுவிடுந்

கள்ளந் தீரு நாகசமேறுங்
காலா கால மருந்திவர்
வள்ளல் போலே விருந்தொடுண்டு
மயக்கந் தவிற்கு மாமயிலே. (சு.1.பா.339-341)

(செய்முறை : கோரங்கிழங்கு, கோட்டம், செவ்வியம், கொத்தமல்லி, வீரம், தூதுவளை, விட்டுணுக்கிரந்தி, இலாமிச்சு, அதிமதுரம், சுக்கு, இலவங்கம், முள்ளிவேர், பற்படாகம், ஏலம், திப்பிலி மூலம், கண்டங்கத்திரி, ஆடாதோடையிலை, நன்னாரி வேர், சிந்தில் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) இடித்து, மூன்று கூறாக்கி அதில் ஒரு கூறுக்கு 2 நாழி (2.6 லிட்) தண்ணீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சிக் குடிக்கவும். சுரம் நீங்கும். மூன்று நாட்கள், இருவேளை அருந்தவும்.)

## விடபாக சுரத்திற்குக் கசாயம்

இன்னமொரு கசாயங்கேள் விடபாக சுரத்துக்கு
இயம்பிறே னீர்முள்ளி சிறுபூளை வேரும்
பின்னமில்லா அமுக்கி ராநன் னாரி
பெருங்குமிள வேர்சிந்தி யொடுமுன்னை பாதிரியுஞ்
சன்னயில வங்கமொடு வீழிகுறுந் தொட்டி
தாமரையின் வளையமொடு நெரிஞ்சிமுத்தக் காசு
நன்னயஞ் சீர் கறிமுள்ளி சிறுகாஞ் சோரை
நல்லசித் தாமணக்கம்வேர் கற்றாழஞ் சருகே.

சருகுடனே யிலைதாங்கி பற்ப டாகஞ்
சாரணைவேர் தோடைவேர் கூவிளம்வே ரோடு
மருவுசித் தாமல்லிவேர் பேரா மல்லி
வாதமடக்கி வேர்திரி கடுகு செவியம்
பெருகுதிப் பிலிமூலஞ் சித்தரத்தை கோட்டம்
பேர்பெரிய சிறுதேக்குத் தேசாபுர மெல்லாம்
உருவாக வகையொன்று கழஞ்சு ரண்டு
ஒன்றாக யிடித்தத்தூள் முக்கூ றாக்கே.

ஆக்கியதோ ரொருகூறுக் கிருநாழி நீரும்
அப்பனே எட்டொன்றாய்க் குறுக்கி வாங்கி
தேக்கியதோர் பொரிகாரங் கழஞ்சு மூன்று
திறமான சுத்திசெய்து பொரித்துக் கொண்டு

நீக்கியே அந்திசந்தி பொரிகாரந் தூவி
நினவோடே மூன்றுநா ளருந்தி னாக்கால்
பாக்கியமே செய்வதற்கு யிந்நூலின் படியே
பத்தியமாய்க் கொண்டுவரப் பறக்கும்விட பாகமே.

(சு.1.பா.305-307)

(செய்முறை : நீர்முள்ளி, சிறுபூளை இவற்றின் வேர், அமுக்கிரா, நன்னாரி, பெருங்குமிளவேர், சீந்தில், பாதிரி, இலவங்கம், வீழி, குறுந்தொட்டி, தாமரைவளையம், நெருஞ்சி, முத்தக்காசு, கறிமுள்ளி, சிறுகாஞ்சோரை, சிற்றாமணக்கம்வேர், கற்றாழஞ்சருகு, இலைதாங்கி, பற்படாகம், சாரணைவேர், ஆடாதோடைவேர், கூவிளம்வேர், சித்தாமல்லி வேர், பேராமல்லி, வாதமடக்கி வேர், திரிகடுகு, செவ்வியம், திப்பிலிமூலம், சிற்றரத்தை, கோட்டம், சிறுதேக்கு, தேசாபுரம் இவற்றின் வேர்கள் வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி, இடித்துத் தூளாக்கி, மூன்று கூறாக்கிக் கொள்ளவும். அதில் ஒரு கூறில் இருநாழி (2.6 லிட்) நீர்விட்டு எட்டொன்றாகக் காய்ச்சி, பொரிகாரம் 3 கழஞ்சு (15.3 கிராம்) வாங்கி, சுத்தி செய்து, பொரித்துத் தூவி அருந்தவும். காலை, மாலை 3 நாட்கள் அருந்தவும்.

தீரும் நோய் : விடபாக சுரம் தீரும்.)

### சீத சுரம்

பறந்துபோம் சீதசுர மதிலோர் பாகம்
பாடுகிறேன் வெருகிலையுந் தண்டு மூணும்
சிறந்தவில்லை சாரணைவேர் பேரா முட்டி
சித்தாமுட்டி யமுக்கிரா விண்டு மூலி
கறந்தபடி பலமொன்று பிடித்து வாங்கிக்
காய்ச்சடா யிருகுறுணி சலந்தான் விட்டு
மறந்திடா தெண்ணெய்படி ஒன்று விட்டு
வறட்காவி வெள்ளையுட பால்தான் ரண்டே.

பால்விட்டு ஆவின்மோர் படியும் ரெண்டு
பாய்ச்சியே மரமஞ்சள் மதுரஞ் சிட்டி
காவிட்ட ராமிச்சம் நன்னாரி அரத்தை
சந்தனமு மங்கூவிளத்தின் தசையு மிக்க
சேவிட்ட கோட்டமுடன் திரிகடுகு பலையுந்
தேவதா ரக்கட்டை சேர நீயும்
கோவிட்ட வராகனொன்று வகைக்குத் தூக்கி
குழையாட்டி வடித்துமைந்தா கொள்ளச் சொல்லே,

கொள்வதெல்லாம் நசியமிடு மேலும் பூசி
குளிர்காய்ச்சல் சீதசுரங் குதித்துச் சாடு
விள்வதொன்று வெருகெண்ணெய் வெள்ளைக் காரன்
விதித்தபடி சமூலந்தான் துலாமுத் தூக்கு
தள்வதன்றிச் சித்தாமுட்டி பேரா முட்டி
கடுஞ்சீந்தி வில்லைவேர் அமுக்கி ராவேர்
தள்வதென்ன சமூலமப்பா விண்டு மூலி
சாரணைவேர் சீந்தித் தண்டு தானே.

தண்டுடனே பலமஞ்சு வகைதா னொன்று
தரித்திடித்து தூணிநீர் தன்னிற் போட்டு
மண்டிடவே குறுணியாய்க் குறுக்கி வாங்கி
மாட்டுநீ குறுணியெண்ணெ யதற்குள் விட்டு
புண்டுவைத்த பழந்தயிர் நீர்படியும் நாலு
பாய்ச்சியதில் மேல்மருந்து பகரக் கேளு
தண்டுடனே வெட்டிவேரை மதுரங் கெந்தம்
தளிர்தேவ தாரமொடு முத்தக் காசே.

காசுடனே குங்கிலியந் திராவோடு குக்கில்
கனத்தசித் தாமுட்டிவேர் திரிகடுகு மிவைகள்
வீசுபல மோரொன்று வகையு மொன்று
விரைந்தாட்டு மூன்றுநாள் வடித்துக் கொள்ளு
ஆசிடவே மேலுமிட முள்ளே கொள்ள
அப்பனேநீ கொடுப்பாய் திராட்சை
தேசுடைய சாது ரக்கநீ யருட்சை
சீதசுரம் பூதசுரம் சேரப் போமே.

(சி.1.பா.391-395)

(செய்முறை : வெருகிலைத்தண்டு மூன்று, சாரணைவேர், பேராமுட்டி, சிற்றாமுட்டி, அமுக்கிரா, விண்டுமூலி இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்), இரு குறுணி (10.6 லிட்) நீர்விட்டு, எண்ணெய் 1 படி (1.3 லிட்), வறட்காலிப் பால், ஆவின் மோர் இவை வகைக்கு 2 படி (2.6 லிட்) விட்டு, மரமஞ்சள், மதுரம், சிட்டி, இராமிச்சம், நன்னாரி, அரத்தை, சந்தனம், கூவிளம், கோட்டம், திரிகடுகு, திரியலை, தேவதாரம் இவை வகைக்கு 1 வராகன் (4.2 கிராம்) வாங்கி ஆட்டிவடித்து, அனைத்தும் சேர்த்துப் பக்குவமாக்கிக் கொள்ளவும். நசியமிட்டு மேலுக்கும் பூச, குளிர்காய்ச்சல், சீதசுரம் தீரும்.

வெருகு சமூலம் 1 துலாம், சிற்றாமுட்டி, பேராமுட்டி, சீந்தில் வில்லைவேர், அமுக்கிராவேர், சமூலம்,இண்டுமூலி, சாரணைவேர், சீந்திற்தண்டு இவை வகைக்கு 5 பலம் (175 கிராம்) வாங்கி இடித்து, 1 தூணி (21.5 லிட்) நீர் விட்டு, குறுணி அளவாகக் காய்ச்சி, குறுணி (5.3 லிட்) எண்ணெயும் அதனுள்விட்டு, பழந் தயிர், நீர் 4 படி (5.2 லிட்) விட்டு, வெட்டிவேர், மதுரம், கெந்தம், தேவதாரம், முத்தக்காசு, குங்கிலியம், திராய், குக்கில், சிற்றா முட்டிவேர், திரிகடுகு இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்) வாங்கிச் சேர்த்து ஆட்டி, மூன்று நாட்கள் பக்குவமாக்கி வடித்துக் கொள் ளவும். இதனை உள்ளுக்கும் உண்டு, மேலுக்கும் பூசவும் சீதசுரம், பூதசுரம் தீரும்.)

## குளிர் நடுக்கல், விடதோட சுரத்திற்குக் கசாயம்

சூட்டக்கேள் குளிர்நடுக் கல்விட தோட்ச்
சுரத்தைச் சொல்லுறோ முடல்வேர்க்குந் தாக்குஞ்
சூட்டக்கே ளிடுப்புச்சந்து தலைநோயு நோகுஞ்
சூடெழும்பிக் குளிர்ந்தபின்பு குளிர்சுரமு முண்டாஞ்
சூட்டக்கேள் வாந்தியொடு மலசலமுங் கட்டுந்
துயரமாய் நாவறண்டு சோகம் போடுஞ்
சூட்டக்கேள் சதியுண்டாங் கசாயந் தன்னைச்
சூட்டுறேன் வகைகேளு சீந்தித் தண்டே.

சீந்திமுத்தக் காசுபற்ப டாகத் தோடு
சிறந்தகொடித் தூவிவெட்டி லாமிச் சம்வேர்
ஆந்திகொத்த மல்லிசுக்கு நிலவேம் போடு
அதுவகைக்கு யிருகழஞ்சு வகையாய்க் கூட்டி
பாந்தமற யிடித்துமுக் கூறு செய்து
பண்புடனே ஒருகூறுக் கிருநாழி நீர்தான்
சாந்தமாய் விட்டுநீ எட்டொன்றாய்க் காய்ச்சித்
தானருந்து தேன்விட்டு யிருபோதிப் படியே.

இப்படியே மூன்றுதினங் கொண்டா யாகில்
எடுத்தசுரங் குளிர்சுரமும் விடபா கம்போம்
வெப்படரா திருத்திவிடும் வாய்நீர் போக்கு
மெய்நீரும் வாந்தியும்போம் வீறுந் தீருந்

தப்பாதே கைப்புடனே புளிப்பு மோருந்
தள்ளிவிடு ஆறுதினந் தாண்டு மட்டும்
அப்படியே கொண்டுநின்ற பேருக் கெல்லாம்
அளிசுரமு மாறலும்போ மறைகின் றோமே.
(சு. 1. பா. 409-411)

(செய்முறை : சீந்தில், முத்தக்காசு,பற்படாகம், கொடித்தூவி வெட்டிவேர், இலாமிச்சம்வேர், கொத்தமல்லி, சுக்கு, நிலவேம்பு இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி இடித்து, மூன்று கூறாக்கி, அதில் ஒரு பாகத்தையெடுத்து, நீர்விட்டுக் குறுக்கிக் காய்ச்சி, தேன்விட்டு, காலை. மாலை இருவேளை, மூன்று நாட்கள் உண்ணவும்.

குளிர்சுரம் தீரும். வாந்தி நீங்கும். விடபாகசுரமும் தீரும்.

பத்தியம் : ஆறு நாட்களுக்குக் கைப்பும், புளிப்புமோரும் நீக்கவும்.)

## அதிசார சுரத்திற்கு

கூவிளை யதிவிடைய குடமிரு வேரும்
மாதளை முத்தக்காசு மருவியே யொருவிநீர்
நாவிடை வைக்கும்போது நலமுடைய திருசுரங்கள்
போய்விடு மறி வீரந்தப் புவியிடையோர் தாமே. (சு.20)

(செய்முறை : கூவிளை, அதிவிடயம், இருவேலிவேர், மாதளை, முத்தக்காசு இவற்றை நீரிலிட்டுக் காய்ச்சிக் குடிக்க அதிசாரசுரம் தீரும்.)

## சுரத்திற்கு

செஞ்தொட்டி தூதுவளை யாடா தோடை
சீந்திதா மரைவளை யம்பற்ப டாகம்
பிஞ்சிட்டா னாரிவேர் கண்டங் கத்திரிவேர்
பெருங்கடுக் காய்நெல்லிக் காய்தான்றிக் காய்சுக்கு
பஞ்சிட்ட அடிநீ ரொன்றுகால் பலமாய்ப்
பன்னிரண்டு படியிரண்டு படியாக வற்றி
மஞ்சிட்ட குடிநீரில் தேன்விட்டு திப்பிலி
மேல்பொடி யிட்டுக்குடிக்க விடுமூன்று சுரமே.

சீந்திற் தண்டுங் கடுக்காயுஞ் சிவதை வேருங் களிப்பாக்கும்
காந்த சுக்கும் ரோகணியும் காயும் நீரில் கலந்திட்டு
ஏந்து முலையீ ரிம்மருந்தை எட்டொன் றாக்கி யேகுடிக்க
மாந்த மான சுரமுவிட்டு வயிறுங் கழியுங் கண்டீரே. (சு.20)

(செய்முறை : செஞ்தொட்டி, தூதுவளை, ஆடாதோடை, சீந்தில், தாமரைவளையம், பற்படாகம், நன்னாரிவேர், கண்டங் கத்திரிவேர், பெருங்கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுகசு இவை வகைக்கு ¼ பலம் (8.75 கிராம்) வாங்கி இடித்து, 12 படி (15.6 லிட்) நீரிட்டு 2படியாக (2.6 லிட்) வற்றக் காய்ச்சி, தேன் விட்டு, திப்பிலிப்பொடி போட்டுக் குடிக்க மூன்று சுரங்களும் நீங்கும்.

சீந்தில்தண்டு, கடுக்காய், சிவதைவேர், களிப்பாக்கு, காந்தம், சுக்கு, கடுகுரோகணி இவற்றை இடித்து நீரிலிட்டு வற்றக்காய்ச்சிக் குடிக்க சுரம் நீங்கும். வயிறு கழியும்.)

(வேறு)

நிலவேம்பு, கோரைக் கிழங்கு, சீந்தில், பேய்ப்புடல், ஏலம், பற்படாகம், சுக்கு, கொத்தமல்லி, சிற்றாமுட்டி, வட்டத்திருப்பி, இலாமிச்சம் இவை கசாயமிட மறு காய்ச்சல் சாந்தமாம். (சு.3)

(வேறு)

ஒரு கழஞ்சு திரவியத்தை நாழி தண்ணீரில் போட்டு உரியாகக் காய்ச்சு, இதுகசாயங் காய்ச்சும் விதம். கொத்தமல்லி, சுக்கு இவையொரு பலமாம் கசாயமிட அக்கினிமாந்தம், தருணசுரம், அசீரணம், தாகசுரம் இவை சாந்தமாம். அந்தியிலே இளவெந் நீரில் அரைத்துக் கரைத்துக் குடிக்கச் சுரஞ்சாந்தமாம். (சு.3)

(வேறு)

சிறுகாஞ்சோரி, சுக்கு, கோரைக் கிழங்கு இவை கசாயமிட சுராதிசாரம் சாந்தமாம். சுக்கு, அதிவிடயம், கோரைக்கிழங்கு, நிலவேம்பு, விழாலரிசி, சீந்தில் இவை கசாயமிட தவசுரமும், சுவாதிசுரமும் சாந்தமாம்.

பயத்தங்கஞ்சி காய்ச்சி மோருடன் கூட்டி மத்தாலே மத் திச்சுக் குடிக்க. இது அட்சமென்றுபேர். சர்வசுரமும்போம். துளசி யுஞ்சுக்கும் கசாயமிடக் குளிர் நடுக்கல் இவை நெடுங்காலத்தில் இருக்கிறதெல்லாஞ் சாந்தமாம்.

சிறுகாஞ்சோரி, சுக்கு, வில்லைவேர், வட்டத்திருப்பி, கோரைக்கிழங்கு இவை கசாயமிட சுராதிசாரஞ் சாந்தமாம். பித்தக்கிராணி முதலானதெல்லாஞ்சாந்தமாம். கோரைக்கிழங்கு, கோட்டம், மஞ்சள், மரமஞ்சள், திப்பிலிமூலம், தேவதாரம், சுக்கு இவை கசாயமிட்டு, திப்பிலியின் பொடி போட்டுக் குடிக்க வாத சுரம் சாந்தமாம். (சு 3)

(வேறு)

காட்டுத்துளசிவேர், சிற்றாமுட்டிவேர், சுக்கு, நிலவேம்பு இவை கசாயமிட்டு, திப்பிலி மென்பொடி போட்டுக் குடிக்க் சீதாதிசுரம், சீதசுரம் இவையெல்லாஞ் சாந்தமாம். கோரைக் கிழங்கு, வெட்பாலை, சாறடை, தேவதாரம், சிறுகாஞ்சோறி இவை கசாயமிட வீக்கம், சுராதிசுரம் சாந்தமாம், (சு.3)

(வேறு)

அரசு, திரிபலை, சுக்கு, வெள்ளுள்ளி கசாயமிட்டுக் குடிக்க மறுகாய்ச்சல் சாந்தமாம். (சு.3)

(வேறு)

அரசன் பட்டைக் கசாயமிட, தாகத்தோடே கூட்டினவிச்சுரம் போம். அத்திப்பட்டையைத் தண்ணீரில் அலம்பி உரலில் இடித்து, இரண்டு பலப்பட்டையோடே வாழைப்பழங்கூட்டி, பட்டை நீர் வார்த்துமத்திச்சு, சர்க்கரை, அதிமதுரம், முந்திரிகைப் பழம், நன்னாரி, இலாமிச்சம், சந்தனம், கற்பூரம், பேரீச்சம்பழம், நெல்லி முள்ளி இவையெல்லாம் அத்திப்பட்டைச்சாறு வார்த்து, அம்மி யில் வைத்தரைத்துக் கரைத்துக் குடிக்க, தாகசுரஞ் சாந்தமாம். இவையெல்லாம் நன்றாய் அம்மியில் அரைத்து முலைப்பாலில் கரைத்துக் குடிக்க, எட்டுவகைச் சுரமும், தாகம், உத்திரவமும் சீக்கிரமாகச் சாந்தமாம். (சு.3)

(வேறு)

முடக்கொற்றான், வெள்ளுள்ளி கூட்டிக் கசாயமிட்டு நெய் கூட்டிக் குடிக்கச் சீத்சுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

ஆமணக்கு, சிற்றாமுட்டி, சுக்கு இவை கசாயமிட்டு இந்துப்பு, பெருங்காயம் கூட்டிக் குடிக்கச் சீதசுரஞ் சாந்தமாம், (சு.3)

(வேறு)

தயிர்தண்ணீரில் மிளகுபொடி போட்டுக் குடிக்கச் சீதசுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சந்தனாதி, முந்திரிப்பழம், சந்தனம், இலாமிச்சம், நன்னாரி கோரைக்கிழங்கு, வெட்டிவேர் இவை கசாயமிடச் சீதசுரம், தாகசுரம் இவை சாந்தமாம். (சு.3)

(வேறு)

இலுப்பைப் பூ, அதிமதுரம், இலாமிச்சம், நெய்தல் இவை யரைத்து, தேன் சர்க்கரை கூட்டிக் குடிக்கத் தாகசுரம், பிரமேகம், விடபாகம், மேல்மூச்சு, இருமல், வாந்தி இவையெல்லாம் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சந்தனத்தை இளநீரில் கரைத்துக் காய்ச்சி முலைப்பால் விட்டுத்தான் சர்க்கரை கூட்டிக் குடிக்க தாகசுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சந்தனத்தில் நெல்லிமுள்ளி, பற்படாகம் குழப்பி, காலத்திலே குடிக்கச் சுரம், அந்திரதாகம் இவை சாந்தமாம். (சு.3)

(வேறு)

கருப்பு, நெய்தல், முந்திரிகைப் பழம், சர்க்கரை, வெட்டிவேர் ஆடாதோடை, சுக்கு, கோரைக் கிழங்கு இலை, வேம்பு, பற்படாகம், கோட்டம் இவை கசாயமிடச் சிலேட்டும வாதத்தி லுண்டான சன்னிபாதஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

வெட்பாலை, இலாமிச்சம், கோரைக் கிழங்கு, வேம்பு, நெய்தல். சந்தனம், சீதேவியார் செங்கழுநீர், பெருங்குரும்பை, இலுப்பைபூ, முந்திரிகைப் பழம், மரமஞ்சள், கடுக்காய், வெல்லம், வட்டத்திருப்பி, பேய்ப்புடல், பேரீச்சம் பழம், திப்பிலி, திப்பிலி மூலம், நன்னாரி, சுக்கு, மிளகு, ஆடாதோடை, தண்ணீர் மீட்டான், பற்படாகம், கொன்றை, வசம்பு, கண்டங்கத்திரி, கடுகுரோகிணி, சீந்தில், இஞ்சி, நெல்லிமுள்ளி, சித்தாமுட்டி இவை கசாயமிடச் சீரணசுரம், பித்தசுரம், விடசுரம், சன்னி, வாதசுரம், சீதசுரம் இவையெல்லாம் சாந்தமாம். (சு 3)

(வேறு)

சுக்கு, கொத்தமல்லி, வட்டத்திருப்பி, சீதேவியார், கண்டங் கத்தரி, பெருங்குறும்பை, கடுகுரோகணி, வில்வவேர், வெட்டிவேர்,

இவை கசாயமிட்டு, திப்பிலி மேல் பொடி போட்டு, குறுக்கிக் கொடுக்கச் சர்வதோடமும், சுரமும் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சந்தனாதி, பூசணித்தண்டு, ஆடாதோடை, சுக்கு, கொத்த மல்லி இவை கசாயமிட அந்திர சுரதாகம், அவிச்சுரம் இவை மூன்று நாளையிலே சாந்தமாம். (சு.3)

(வேறு)

வெட்பாலை, சீந்தில், பேய்ப்புடல், பற்படாகம், சிறுகாஞ் சோரி, நிலவேம்பு, சுக்கு, கோட்டம், கண்டங்கத்தரி, கோரங் கிழங்கு இவை கசாயமிடச் சகல பேதத்தினால் வருகிற சுரம் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சித்தாமுட்டி சுக்குக் கசாயத்தில் கொடுக்கத் தாகசுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

கொடுக்காய் புளிவேர் சிறங்கை, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், கடுகு, வெந்தயம், ஓமம், உள்ளி, கடுக்காய் இவை சமன் கொண்டு அரைத்து, தண்ணீரில் கரைத்துக் காய்ச்சி, இறக்கும் போது ஒரு பலம் தூயகருப்புக் கட்டிப் போட்டு இறக்கி, சிற்றாமணக்கெண்ணெயும் வெள்ளுள்ளியும் போட்டுத் தாளித்துக் கொடுக்கவும். சீயக்கழியும், காய்ச்சல் விடும். இது கை கண்டது. (சு.12)

(வேறு)

குளிர்க் காய்ச்சலெடுத்தால் கண்டங்கத்திரியும், வேப்பம் பட்டையுமிடித்துப் பிட்டவியலவித்து, யுள்ளாரிப் போலே பிழிந்து, ஐந்து திப்பிலி, ஐந்து மிளகு வெதுப்பப் பொடி செய்து போட்டுக் கொடுக்கவும். இப்படி மூன்று நாள் கொடுக்கவும். (சு.12)

(வேறு)

சுக்கு, மிளகு, திப்பிலி, சிற்றரத்தை, கருஞ்சீரகம், நற்சீரகம் இதை நன்றாக வெந்நீர் விட்டரைத்துத் திரட்டிக் கொண்டு' கையாந்தகரை சமூலங் கொணர்ந்து, பழுது பார்த்து நன்றாக இடித்து, பிட்டவியலாக வைத்து, பிட்டவியலுக்குள் முன்னரைத்த மருந்தை வைத்து அவித்து யிறக்கிக் கொண்டு, பிட்ட வியலுக்குள்

மருந்தை யெடுத்துக் கொண்டு, அவித்த பிட்டவியலைப் பிழிந்து கொண்டு, அதிலே இந்த மருந்தைக் கரைத்துக் கொடுக்கவும், இப்படி 3நாள் செய்து கொடுக்கவும். கை கண்டது. (சு.16)

(வேறு)

நற்சீரகம், திப்பிலி, சுக்கு, வசம்பு, தக்கோலம், மிளகு, மஞ்சள், கடுக்காய், தான்றிக்காய், சிவதை, வசம்பு, வெள்வெங்காயம், சதகுப்பை, கொத்தமல்லி, கோட்டம், கடுகு ரோகணி, பேய்ப்புடல், கொடுப்பை, குப்பைமேனி, சீந்தில், மொசு மொசுக்கை, சித்திரபாலை, சிறுகீரை, குப்பைக் கீரைவேர், ஆடா தோடை, சன்னி நாயகம், கற்றாழஞ் சருகு, கோரைக்கிழங்கு இதுவெல்லாங் கூட்டி எட்டுப்படி தண்ணீரை மூன்று படியாக்கிக் கொள்ளவும். உள்ளுக்குக் குடிநீர் கொள்ளவும். இந்தப்படி ஐந்து நாள் கொள்ளவும். (சு.20)

## சுரக்கணைக்கு

சுரையிலை, துளசி, வில்வயிலை, கொடுப்பை, வல்லாரை' விரிசிலை, மாதளைப்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, நற்சீரகம், அதிமதுரம், ஈரவெங்காயம், கிராம்பு, பழம்பாசி இதுவெல்லாம் பாண்டத்தில் வைத்து, எருமை மோரு இருநாழி விட்டுக் காய்ச்சி, உரிமோரிருக்க யிறக்கி, மருந்தில் சாகத்தைக் கூடப் பிழிந்து, கடை மருந்தை வேறே யெடுத்து, இந்த பிழிந்த சாகமும் மோரும் விட்டரைத்து, மறுபடி மருந்திலும் மோரிலுங் கலக்கி மூன்றுநாள் கொடுக்கப் பொறுக்கும். (சு.20)

## பயித்திய சுரத்திற்கு

பேய்ப்புடல், சீந்தித்தண்டு, விட்டுணுகிரந்தி, வில்லைவேர், இலாமிச்சம் வேர், ஆடாதோடை, முத்தக்காசு, கூத்தன்' குதம்பை பற்படாகம், கொத்தமல்லி, வேப்பீர்க்கில் இவை சமன்கூட்டி, திப்பிலி, சீரகம் முடிஞ்சு போட்டுக் காய்ச்சிக் கொடுக்கவும்.

(சு.12)

(வேறு)

குளநீருடன் வாழைப் பழங்கூட்டிப் பிசைந்து, குடிக்கத் தண்ணீர் தாகம், மோகம், சுரம் இவை சாந்தமாம். (சு 3)

(வேறு)

சத்திகுன்மத்துக்கு வயிற்றுவலி யுண்டானதிற்கு மருந்து கிளரசமாகக் காய்ச்சிக் கொடுக்கவும். உப்பு, கருப்புக்

கட்டியும், முருங்கைப் பட்டையும், சாரடை வேரும், வெங்காயமும், சுக்கு மரைத்துகிளரசமாகக்காய்ச்சிக் கொடுக்கவும். உடனே விடும், நன்று. உத்தமம். (சு.20)

## சுர குளிகை

தாளகத்தை அரசன்தோல் கசாயத் தூட்டு
தயவாக மறுதினத்தி லெடுத்துக் கொண்டு
மீளகத்தே லுயிரெல்லாம் நோயைத் தள்ளி
விடாதசுர மனைத்து விபரங் கேளு
தாளகத்து வலுவிக்குங் கற்பூராதிக் காயத்
திரிமாத் திரையினங் கட்டு தானுங்
காளத்துக் கற்பூர மிரத மிக்க
கிருபையுடன் சாதிக்காய் சமவா யாட்டே.

ஆட்டியதோர் தூளெடைக் கிரட்டி வாளம்
அப்பனே சேர்த்தங்கே குமரிச் சாற்றில்
தீட்டியதோர் சாமம்நீ யரைத்து வாங்கிச்
சிறுஉளுந்து பிரமாண உண்டை கட்டி
நாட்டியதோர் சர்க்கரையி லருந்தா யானால்
நலமான யெட்டுவகைக் சுரமுந் தீரும்
காட்டியதோ ருடலறிந்து கொடுத்தா யானால்
நின்றுபோங் கடிகையொன்ற மூன்று மூன்றே.

மூன்று நாழிகைக்குள்ளே சுரங்கள் நிற்கும்
மூன்றுபாக பத்தியங்கே ளிச்சா பத்தியம்
... ... ... ...

(சு.9.பா.61-63)

(செய்முறை : தாளகத்தை அரசன்தோல் கசாயத்திலிட்டு மறுதினமெடுத்து, கற்பூரம், இரதம், சாதிக்காய் இவை ஓரளவாய் வாங்கிச் சேர்த்து ஆட்டவும். இத்தூளின் எடைக்கு இரட்டிப்பாக நேர்வாளம் வாங்கி, குமரிச்சாற்றில் அரைத்துச் சேர்த்து, உளுந்து பிரமாணம் உருண்டையாக்கிக் கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

துணை மருந்து : சர்க்கரையிலருந்தவும்.

தீரும் நோய்கள் : எட்டுவகைச் சுரங்கள் தீரும்.

பத்தியம் : இச்சாபத்தியம்)

(வேறு)

பாரப்பா சுருங்கிசத்தை யுரைக்கக் கேளு
பண்பாகப் பிறகருவுட் கருவும்
பாரப்பா பனிரெண்டு லெட்சம் பாட்டில்
பாடினேன் ஐநூற்று அன்பத் தஞ்சிப்
பாரப்பா நோயெல்லாம் பதறி யோடும்
பண்டிதற்கு யிந்தநூல் பழைய தங்கம்
பாரப்பா நாலுதிக்கும் யோகி சித்தர்
பார்த்திருப்பர் பொருளாசை பாரார் காணே.

காணப்பா சூதமொன்று கெந்தி யொன்று
கறுமத்தம் விதைமூன்று சுக்கு நாலு
ஊணப்பா திப்பிலியும் நாலு தூக்கி
உரைக்கயதைத் தூளாட்டி யடைத்துக் கொண்டு
பூணப்பா குன்றியெடை பழச்சாறு தன்னில்
புகட்டினால் விதமந்தம்போம் விபரங் கேளு
தோணப்பா பழச்சாற்றி லிஞ்சிச் சாறில்
துவளவை சாமமி ரெண்டு ரெண்டே.

இண்டாகுஞ் சாமமரைக் கடலை போலே
என்மகளே யிடித்துலர்த்தி வைத்துக் கொண்டு
மிரண்டாகு மஞ்சுவெந் நீரி லூட்டி
வெண்சுரமு மரிதாரமும் சன்னி யின்ன
முண்டாகு மிச்சுரந் தோடந் தானும்
முறாமுரை தன்சுரமு மொழிந்து போகும்
அண்டாகுஞ் சுரமெல்லா மெய்விட் டோட
அரையிறேன் துத்தரசத் தாண்மை பாரே.

(சு.9.பா.75-77)

(செய்முறை : சூதம், கெந்தி, ஊமத்தம்விதை, சுக்கு, திப்பிலி இவை வேண்டியஅளவு எடுத்து ஆட்டி, குன்றிஎடை பழச்சாற்றில், இஞ்சிச் சாற்றில் ஆட்டி உண்ணவும்.

அளவு : குன்றியெடை. வெந்நீரிலுண்ணவும்.

தீரும் நோய்கள் : சுரம், சன்னி, சுரதோடம், அனைத்து சுரங் களும் தீரும்.)

## தாம்பிராதி

அப்பிரகம், வச்சநாபி, வெங்காரம் இவைஎருக்கலம் பால் விட்டு அரைத்து, திருகுகள்ளிப் பாலும் விட்டரைத்துக் குளிகை

பண்ணி பேய்க் கருப்பன் சாற்றிலாகிலும் கொட்டைக் கரந்தைச் சாற்றிலாகிலும் ஒரு குளிகை கொடுக்க சயசுரம் சாந்தமாம்.

**சுரத்திற்கு இங்குணாதிக் குளிகை**

சாதிலிங்கம், பச்சைநாவி, வெங்காரம், இந்துப்பு, ரசங் கெந்தகம், நேர்வாளம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், கொடி வேலிச் சூரணம், சிவதைவேர், எட்டிவிதை இவை சமன் கூட்டிச் சதுரக் கள்ளிப்பால் வார்த்தரைத்து, குளிகை பண்ண எட்டு வகைச் சுரமும், எட்டு வகைக் குன்மமும் சூலையுஞ் சாந்தமாம். (சு.3)

**சுரக்குளிகை**

சுத்தி பண்ணின ரசம் நாலுகழஞ்சு, முருங்கைவிதை நாலு கழஞ்சு, கந்தகமிரு கழஞ்சு, பச்சைநாவி ஒருகழஞ்சு இவை யெல்லாம் முருங்கைஇலைச்சாறு வார்த்தரைத்து, மூன்று சாமம் மை போலே அரைத்துக் குளிகை பண்ணி, முருங்கைப்பூக் கசாயத்தில் கொடுக்க தாபசுரம், சன்னி வாதம், சதுராந்திகம் இவை யெல்லாஞ் சாந்தமாம். (சு 3)

(வேறு)

இரசம் 1, சாதிலிங்கம் 2, நேர்வாளம் 3, இவையெல்லாமல் காட்டா மணக்கு வேர்ச் சாறு வார்த்தரைத்து, குன்றிப் பிரமாணங் குளிகை பண்ணி, ஒரு குளிகை சர்க்கரையுடன் கொடுக்க ஏகாயிக சுரம்போம். காட்டாமணக்கம் வேர் கிடைக் காவிட்டால் குப்பைமேனிச் சாற்றில் கொடுக்கவும். (சு.3)

(வேறு)

இருபத்தொருநாள் வேப்பம் பட்டைச்சாற்றில் மடல் (மயில்) துத்தத்தைப் பாவினை பண்ணி, உலர்த்திச் சூரணம் பண்ணி, அந்தச் சூரணத்தைப் பசுவின் வெண்ணெயில் மத்திச்சு, சர்க்கரையுடன் கொடுக்க உடனே சுரஞ்சாந்தமாம். இது யோக மகா விட்டுணுவால் சொல்லப்பட்டது. (சு. 3)

(வேறு)

... ... ... ...

நாட்டியக் கெவுரியொன்று வெள்ளை யொன்று
நயமாக சுண்ணாம்புக் குள்ளே வைய்யே.
வைத்துநீ பொதிந்ததனை விளாங்காய் போல
வத்திரத்தில் பொதிந்துவைத்துச் சுட்டு நன்றாய்
மொய்த்துநீ கறிப்போ பாடாண மெல்லாம்
முறைஎடுத்து மைந்தா சூத மிரண்டு

வைத்துநீ முறியதனை மத்தஞ் சாற்றில்
சேர வரைநீ சாம மொன்று
எய்த்துப்பின் பதனில் வாள மொன்று
இயல்பான திப்பிலிதான் ஒன்று கூட்டே.

கூட்டியே மைபோலே ஆட்டி வாங்கி
கூறுகிறேன் சிறுபயறு போலே கட்டி
நாட்டியே வுலர்ந்தபின்பு குளிர்காய்ச்சல் தனக்கு
நயமாக ஒருவுண்டை வெந்நீரி லூட்டு
நீட்டியே முலைப்பாலி லுண்டை யூட்டு
நேரில்லாச் சுரமெல்லாந் நெகிழ்த மாகும்
பூட்டியே பத்தியங்கள் பாலுஞ் சோறும்
பூர்த்தியா யுண்டுவரப் பொறுக்குந் தானே,

(சு 9.பா.80-82)

(செய்முறை : கெவுரி, வெள்ளை வகைக்கு 1பலம் (35கிராம்) வாங்கி, சுண்ணாம்பில் பொதித்துச் சுட்டு யெடுத்து, சூதம் இரண்டு வாங்கிச் சுத்திசெய்து, நேர்வாளம், திப்பிலி கூட்டி, மைபோல ஆட்டி, சிறுபயறளவு குளிகையாக்கிக் கொள்ளவும். ஒரு உருண்டை வெந்நீரிலோ, முலைப்பாலிலோ உண்ணச் சுரமனைத்தும் தீரும்.

பத்தியம் : பாலுஞ்சோறு முண்ணவும்.)

## சுரம்போக துத்தரசம்

அண்மையென்ற துத்தமொன்று துருசி யொன்று
அரிதாரந் தானொன்று சூத மொன்று
வண்மையென்ற கெந்தியோர் சீலைதா னொன்று
மைந்தனே யிவைசேர்த்துத் தூளா யாட்டி
தண்மையென்ற சட்டிக்குள் ளிட்டு பின்பு
சாரணைச் சாறு படிகால் விட்டு
கண்மையென்ற வெங்கலக் கிண்ணி யாலே
கரைத்து மூடியே சீலை செய்யே.

சீலைசெய்து மண்செய்து மணலுஞ் சேர்த்துத்
தீபாக்கினி யாலே சாம மொன்று
சீலைசெய்து ஆறியபின் கல்வத் திட்டுத்
தக்காளிச் சாறுவுகை ரண்டுஞ் சேர்த்து

சீலைசெய்து மயனம்போல் வழித்து நீயும்
சிறுபயறு பிரமாண முண்டை செய்து
சீலைசெய்து அனுபானம் பூரஞ் சூடன்கத்தூரி
சீர கத்தில் கலந்து ஊட்டே.

ஊட்டினால் பேதமுரைக் காய்ச்சல் போகும்
உத்தமனே தேனிவிடச் சுரமு மெல்லா
மாட்டினால் அண்டண்டங் கிலிங்கி யாடு
மறுபத்தினாலு சுரம னைத்து மோடுங்
... ... ... ... (சு.9.பா.78-80)

(செய்முறை : துத்தம், துருசு, அரிதாரம், சூதம், கெந்தி இவை ஓரளவாய் வாங்கிச் சேர்த்துத் தூளாய் ஆட்டி, சட்டிக் குள்ளிட்டு, சாரணைச்சாறு $\frac{1}{4}$ படி (336 மி.லிட்) வெங்கலக் கிண்ணியில் விட்டு மூடி, சீலைமண் செய்து, பக்குவமாக எரித்தெடுத்து, ஆறியபின் கல்வத்திலிட்டு, தக்காளிச் சாறு சேர்த்து மைபோல ஆட்டி, சிறு பயறளவு உருண்டை செய்து, பூரம், சூடன், கத்தூரி, சீரகம், இவற்றில் கலந்து கொடுக்க, தேனிவிட அறுபத்தி நான்கு சுரங்களும் தீரும்.)

(வேறு)

கோட்டங் கருடபச்சை கோரோ சினமதுர
மிட்டமுள்ள சந்தனம் கன்னாரேலஞ் சதாவெரி
கட்டுடனே சரிநிறுத்து காரிகையாள் பாலை
விட்டரைத்த போதகலு வெதுப்புங் குளிர்சுரமே.

அனுபானம் முலைப்பாலில் பசுவின் பாலில் கொடுக்கச்சுரந் தீரும். (சு,20)

(செய்முறை : கோட்டம், கருடப்பச்சை, கோரோசனை அதிமதுரம், சந்தனம், ஏலம், சதாவேரி இவை ஓரெடையாய் நிறுத்து வாங்கி, முலைப்பால் விட்டரைத்து முலைப்பாலிலோ, அல்லது பசுவின் பாலிலோ கொடுக்கவும். சுரம் தீரும்.)

(வேறு)

சூதங் காந்தங் கெந்தம் சுக்கு மிளகு திப்பிலியும்
சீத மறுக்கும் சிறுபாலை சிவந்த மனோசிலை யரிதாரம்
காது நாவி நேர்வாளம் கன்னூ மத்தம் விதைசரியாய்
பேத வலம்புரி யாலரைத்து போத உண்டைப் பயறளவே.

சுரத்திற்கு நற்சீரகத்தில் போட்டு, வெந்நீர் வைத்து அதில் கொடுக்கவும். முலைப்பாலிலும் கொடுக்கலாம். (சு.20)

(செய்முறை : சூதம், அயகாந்தம், கெந்தம், சுக்கு, மிளகு, திப்பிலி, சிறுபாலை, மனோசிலை, அரிதாரம், நாவி, நேர்வாளம், ஊமத்தம் விதை இலை ஓரளவு யெடுத்து வலம்புரியாலரைத்து, சிறுபயறளவு உருண்டை செய்து, நற்சீரகத்தில் போட்டு, வெந்நீரிலோ, முலைப்பாலிலோ கொடுக்கவும் சுரம் தீரும்.)

(வேறு)

சூத மனோசிலை கெந்தகஞ்
சொன்ன தாரம் வெண்காரம் ரோகணி
ஓது திரிகடு கோரொன்று கொண்டு
ஒட்ட நேர்வா ளம்விடை கூட்டியே
நீதர முள்ளிச் சாற்றி லரைத்ததை
நேர்மணிக் குன்றிபோ லிஞ்சிச் சாற்றில்
பேத சன்னியும் வாதமும் வாய்வும்
பிடித்த வெற்புஞ் சுரங்களுந் தீருமே.

திப்பிலி ரோகணி யிருக்குங் காரம்
சேர்கெந் தகமிவை சேர்சம னோடு
ஒப்பிடை நேர்வாள மவ்விடை கூட்டி
உறுகை யாந்தகரைச் சாற்றில ரைத்ததை
அப்பொழு துண்டை யளவது குன்றி
அங்கு முப்பா லிஞ்சியி லிடவே
வெப்பொடு குளிரொடு வெச்சுர மெல்ல
வோடும் நில்லாது விடுமது திடனே. (சு.20)

(செய்முறை : 1. சூதம், மனோசிலை, கந்தகம், அரிதாரம், வெண்காரம், கடுகுரோகணி, திரிகடுகு, நேர்வாளம் இவை ஓரளவாய் எடுத்து, நீர்முள்ளிச் சாற்றிலரைத்து, குன்றியளவு இஞ்சிச் சாற்றிலிடச் சன்னி, வாதம், வாய்வு, வெப்புச்சுரங்களுந் தீரும்.

. திப்பிலி, கடுகுரோகணி, காரம், கெந்தகம் இவை ஓரளவாய் எடுத்து, நேர்வாளம் ஓரளவு கூட்டி, கையாந்தகரைச் சாற்றில் அரைத்து, உருண்டை குன்றி அளவாகச் செய்து, முலைப்பாலில், இஞ்சிச் சாற்றிலிட, வெப்பு, குளிர் சுரமெல்லாம் தீரும்.)

(வேறு)

செல்லுவேன் கருடபச்சை நாவி யோடு
துடர்கெந்தி அரிதாரம் லிங்கம் வாளம்
வெல்லுவேன் வெங்காரந் திரிகடுகி னோடு
விளங்குதிரி பலைவகைக்குக் கழஞ்சு வொன்று
சொல்லவே கருப்பஞ்சாறு விட்டு ஆட்டி
சிறுபயிற்றின் அளவுருட்டி நிழலு லர்த்தி
அல்லவே சிமிழில்வைத்துச் சுரத்துக் கெல்லாம்
அனுபானஞ் சொல்லுகிறேன் அறிந்து கொள்ளே.

அறிந்துசுர தோடங்க ளெல்லாம்
அதிசீத சன்னிசுர மளவுபத்து
முரிந்ததொரு முலைப்பாலில் இஞ்சிச்சாற்றில்
மூலிகையின் விட்டுகழித் துளசிச்சாற்றில்
செரிந்ததொரு திரிபாலையின் கசாயந்தன்னில்
சீரகத்தில் திரிகடுகு கசாயமதால்
நிறைந்ததொரு திசைமூலம் பஞ்சமூலம்
நேரறிந்து குளிகையிட நில்லாதென்றே.

நில்லாது வெந்நீ ரன்னமுந் தான்கொள்ள
நிலைகெட்ட சுரமனைத்தும் நீங்கும் பாரு
... ... ... ...

(சு.21.பா.253-254)

(செய்முறை: கருடபச்சை, நாவி, கெந்தி, அரிதாரம், இலிங்கம், வாளம், வெங்காரம், திரிகடுகு, திரிபலை இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1கிராம்) சேர்த்து, கருப்பஞ்சாறு விட்டு ஆட்டி, சிறுபயறளவாக உருட்டி நிழலுலர்த்திக் கொள்ளவும்.

துணைமருந்தும் தீரும்நோய்களும்:

முலைப்பால், இஞ்சிச்சாறு, மூலிகை, துளசிச்சாறு, திரிபலை கசாயம், சீரகம், திரிகடுகு கசாயம், திசைமூலம், பஞ்சமூலம் இவற்றில் உண்ண அதிசீத சன்னி சுரம் தீரும்.

பத்தியம்: வெந்நீருஞ் சோறும் உண்ணவும்.)

(வேறு)

இலுப்பைப்பூ ஒருகழஞ்சு, கடுகுரோகணி இருகழஞ்சு, திப்பிலி நாலுகழஞ்சு, நேர்வாளம் அஞ்சு, இவையெல்லாம் கற்றாழைக் கிழங்குச் சாறு வார்த்தரைத்து, குன்றிப் பிரமாணங் குளிகை பண்ணி, வெந்நீரில் கொடுக்கச் சர்வ சுரமும் சாந்தமாம். (சு.3)

(வேறு)

கற்றாழை மடலில் நேர்வாளம் புடம் வைத்து, பின்பு அந்த கற்றாழஞ் சாறுவார்த்து, பிசரியதின் பின்பு ஒரு பானையில் கஞ்சியை எடுத்து, புடவையாலே வாய்மூடி, அதின் மேல் நேர் வாளம் வைத்து, பிட்டவியலாக அவித்து நேர்வாளததிற்குச் சமன் கடுகுரோகணி கூட்டி, மணமத்தனைக் குளிகை சர்க்கரையுடன் ஒரு உண்டை கொடுக்கத் தண்ணீர் தாகம், தாகசுரம், மோகசுரம் இவையெல்லாம் சாந்தமாம். (சு.3)

(வேறு)

அஞ்சணம், நாகப்பாம்பு இவை யோரொன்று கழஞ்சு கூட்டி, இளநீர் வார்த்தரைத்து, குன்றிப் பிரமாணம் குளிகை பண்ணி, ஒரு உண்டை முலைப் பாலில் கொடுக்க அந்திரத் தாகம், பிரமி சுவாசம், சன்னிவாதம் இவை யெல்லாஞ் சணத்திலே சாந்தமாம் (சு.3)

(வேறு)

இரதம், நாவி, கெந்தகம் இது மூன்றும் 3 பணமாக நிறுத்துக் கொண்டு, சாதிக்காய், திப்பிலிப்பொடி, கடுக்காய் வராகன் 1 நிறுத்துக் கூட்டி, வெற்றிலைச் சாற்றிலும், இஞ்சிச் சாற்றிலும் இரண்டு சாமமரைத்து, குன்றியளவு உருண்டை பண்ணி, சன்னி தோசத்திற்கு இஞ்சிச் சாற்றிலும், சீதசுரத்திற்குச் சுக்குக் கசாயத் திலிடவும் தீரும். (சு.7)

(வேறு)

வெள்ளைப் பாடணம், கெவுரிபாடணம் வராகன் 15, முலைப்பாலிலே சீலையில் முடித்து வேக வைத்து, மூன்று நாள் பொறுத்து வெதுப் படக்கிச் சாற்றிலும் அரைத்து உருண்டை பண்ணி, இஞ்சிச் சாற்றிலும் பழங்காடியிலும், முலைப்பாலிலும் விடவும். (சு.7)

(வேறு)

காயம் கழஞ்சு 1, சுக்கு கழஞ்சு 1, வாலுளுவை கழஞ்சு 1, கடுகு கழஞ்சு 1, வெள்ளுள்ளி கழஞ்சு 1, ஓமம் கழஞ்சு 1 ஆக இவ்வளவும் சமனெடை வைத்து, அமுரியில் மூன்று நாழிகை அரைத்து, மிளகுப் பிரமாணம் உண்டை செய்துலர்த்தி வைத்துக் கொண்டு, சுரத்திற்கு அஞ்சுபோது இஞ்சிச் சாற்றிலுரைத்துக் கொடுக்கவும். (சு.15)

## விடநீருக்கும் சுரத்துக்கும்

கொத்தமல்லி, சிவதை, கருஞ்சீரகம், வாய் விளங்கம், சுக்கு திப்பிலி, திப்பிலிமூலம், சாதிக்காய், கிராம்பு, தக்கோலம், காயம், கடுகு, வசம்பு, பேய்ப்புடல், கொழிஞ்சி, சீந்தில், நீர் முள்ளி, முப்புர மெரித்தான், மூக்கிரச் சாரணத்திவேர், கழச்சிக் கொழுந்து நாயுருவி, நஞ்சறுத்தான்வேர், சித்திரபாலை இதுவெல்லாங் கூட்டி, யெட்டொன்றாக்கிக் கொள்ளவும். (சு.20)

(வேறு)

இரசம், நெல்லிமுள்ளி, கந்தகம், அரிதாரம், தாளகம், மிளகு, வெண்காரம், அக்கிராகாரம், திப்பிலி இதுகள் வகைக்கு ஒரு வராகன் வாங்கி, கல்வத்திட்டு, வாளம் வராகன் 3 சேர்த்து, முசுமுசுக்கை, ஆடாதோடை, கண்டங்கத்திரி, பழரசம் விட் டரைத்து, மிளகுப் பிரமாணம்மாத்திரை செய்து, இஞ்சிரசம், தேன், முலைப்பால் இதுகளில் ஒரு மாத்திரை இழைத்துக் கொடுக் கவும். சுரம் தீரும். 3 நாள் புளி ஆகாது. (சு.22)

## தொத்துக்காய்ச்சல் மாத்திரை

தாளகம் சுத்தி செய்து, சுண்ணாம்பு சமனாய்ச் சேர்த்து, கொம்புப்பாகல் இலையைச் சாறுபிழிந்து மேற்படிச்சாறு விட்டாட்டி, பாசிப் பயறளவாய் மாத்திரை செய்து நிழலுலர்த்தி அனுபானம் சுக்குக்கசாயம் அல்லது எருமை மோரிலும் கொடுக் கலாம். பத்தியம் புளி தள்ளவும். (சு.22)

## சகல சுரத்திற்குச் சீதேவி நெய்

தணிந்திடவே சன்னிமுதற் சுரத்துக் கெல்லாம்
சாற்றுறேன் சிதேவி செங்கழுநீர் நெய்யைத்
துணிந்தெடுத்துச் சிதேவிச் சாறுபடி நாலு
சொல்லுறேன் மஞ்சிட்டி தாமரையின் பத்திரி
கணிந்தேல மிலவங்கங் சடுகு ரோகணி
கனத்தகோட் டம்நன்னாரி மதுரங் கெந்த
மணிந்தசரக் கோரொன்று வராகன் தூக்கி
மைந்தனே யாட்டியதை வடித்துக் கொள்ளே.

வடித்ததொரு நெய்யதனைக் கழஞ்சி யுண்டு
மைந்தனே மேலுமந்த நெய்யைப் பூசிற்
கடித்தசுர மெண்பத்து நாலுந் தீரும்
கண்குளிரும் புண்தீருங் கலருஞ் சித்தி

படித்தினியா மின்னமொரு நெய்யைச் சொல்வோம்
பன்பாகச் செங்கழுநீர் சாறே நாழி
விடித்தேல மிலவங்க மதிமதுரங் கோட்ட
மிக்கசிட்டி செண்பகப்பூக் கடுகு ரோகணி.

ரோகணியுஞ் சந்தனமும் வெட்டி வேரும்
நுணுக்கமுறும் நன்னாரி நீர்வள்ளிக் கிழங்கும்
நாகமுறு ராமிச்சஞ் செங்கழுநீர்க் கிழங்கும்
நரிவிரட்டி முத்தக்காய் வகைக்கோர் காசு
நேகமுடன் தூக்கியதை யாட்டி வாங்கி
நேசிப்பாய் மூன்றுபடி நெய்யுக் குள்ளே
நாகமுறக் காய்ச்சிநீ வடித்துக் கொள்ளு
நயமாகச் சுரங்கள்முதல் சன்னி போமே.
(சு.1.பா.353-355)

(செய்முறை : சீதேவிச்சாறு 4 படி (5.2 லிட்), மஞ்சிட்டி, தாமரையின் பத்திரி, ஏலம், இலவங்கம், கடுகுரோகணி, கோட்டம், நன்னாரி, மதுரம், சுந்தம் இவை வகைக்கு ஒரு வராகன் (4.2 கிராம்) வாங்கி, ஆட்டி வடித்துக் கொள்ளவும். இந்த நெய்யை ஒரு கழஞ்சு (5.1 கிராம்) உண்டு, மேலுக்கும் பூசவும். சுரம் எண்பத்திநான்கும் தீரும். கண் குளிரும். புண் தீரும்.

2. செங்கழுநீர் சாறு ஒரு நாழி (1.3 லிட்), ஏலம், இலவங்கம், அதிமதுரம், கோட்டம், சண்பகப்பூ, கடுகுரோகணி, சந்தனம், வெட்டிவேர், நன்னாரி, நீர்வள்ளிக்கிழங்கு, நாகம், இராமிச்சம், செங்கழுநீர்க் கிழங்கு, நரிவிரட்டி, முத்தக்காய் இவை வகைக்கு ஒரு காசெடை (165 மி.கி) வாங்கி ஆட்டி மூன்றுபடி (3.9 லிட்) நெய்யிலிட்டுக் காய்ச்சி வடித்துண்ணவும். சுரங்களும் சன்னியும் தீரும்.)

**சுரத்திற்கு நெய் வைக்க**

ஆவின் நெய்யு மிளநீரும் அடுக்கும் பூச்சதா வேரி
மேவும் ஆவின் பாலுடனே வேறே யோரொன் றிருநாழி
தாவுங் கோட்ட மதிமதுரம் சந்தனம் பச்சிலை கச்சோலம்
கூவுங் கூவிளை வேருடனே கூறுங் குறுந்தொட்டி
வேரிவையும்
தாகந் தீர்க்கும் பொன்முசுட்டை தானே யோரொன்
றிருகழஞ்சு

பாவித் தரைத்துத் தான்கலக்கிப் பதத்தில் வெந்து
நெய்நக்கத்
தாவுஞ் சுரமு முள்சுரமுந் தாப்பும் வெப்பு மிவைஎல்லாம்
கோவிந் தாஅரி யென்றோடும் கொள்வீர் நெய்யைக்
கொள்வீரே. (சு.20)

(செய்முறை : ஆவின் நெய், இளநீர், சதாவேரி, ஆவின்பால் இவை வகைக்கு 2 நாழி (2.6 லிட்) சேர்த்து, கோட்டம், அதிமதுரம், சந்தனம், பச்சிலை, கச்சேலம், கூவிளைவேர் குறுந்தொட்டிவேர், பொன்முசுட்டை இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கி அரைத்துக்கலக்கி, பக்குவமாக வெந்தபின் இறக்கி உண்ணவும். சுரம், உள்சுரம், வெப்பு அனைத்தும் தீரும்.)

(வேறு)

ஆவின் நெய்யு மிளந்தளிரு மதிதென் னம்பூ மருதம்
கோலமிளகு திப்பிலியுங் கூட்டி யாவின்பால் வார்த்தரைத்துச்
சீல முடனே நெய்யில்வெந்து தினமுந் தின்னக்
கொடுப்பீராகில்
பாலருடம்பு மிகவேதான் பருக்குஞ் சொன்னேன் கண்டீரே.
(சு.20)

(செய்முறை : ஆவின்நெய், இளந்தளிர், தென்னம்பூ, மருதம், மிளகு, திப்பிலி, இவற்றை ஆவின்பால் விட்டு அரைத்து, நெய்யுடன் சேர்த்துப் பக்குவமாகக் காய்ச்சி உண்ணவும். சிறுவரின் மெலிந்த உடல் பருக்கும்).

(வேறு)

மிளகு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், கொடுவேலி, சுக்கு, மாதளை, சீரகம், கோரைக்கிழங்கு, எவச்சாரம், அதிவிடயம், பெருங்காயம், மஞ்சள், இந்துப்பு இவையெல்லாம் அரைத்துக் கரைத்து, நெய்விட்டு வடித்து,பதத்தில் வடித்துண்ண அரோசிகம், அக்கினிமாந்தியம், வயிற்றிரைச்சல், சுரம், மேல்மூச்சு தீரும்.
(சு.3)

(வேறு)

நற்சீரகம், கருஞ்சீரகம், திப்பிலி, ஏலம், இலவங்கம், கல்நார், கூகைநீறு, சருடப்பச்சை, துருசு, மாயக்காய், கடுக்காய், செஞ்சந்தனம், சந்தனம், அதிமதுர மிதுவெல்லாம் சமன்கொண்டரைத்து நெய் மூவாழாக்கில் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடிகொண்டு பிள்ளைச் சங்களவு கொடுக்கவும் பொறுக்கும்.

## சுரத்திற்கு நெய்வைக்க-இருமலுக்குமாம்

நெய்நாழி, பால்நாழி, வீராணிக்கிழங்கு சாகம்நாழி, அதுமதுரம் கழஞ்சு 1, ஏலம் கழஞ்சு 1, இலவங்கம் கழஞ்சு 1 இது வெல்லாங் கூட்டிக் காய்ச்சிறக்கும்போது ஒரு கழஞ்சு சீனிபோட்டு இறக்கிக் கொள்ளவும். கடுகினோடே கரண்டியளவு கொடுக்கவும். பொறுக்கும். (சு.20)

## சுரத்திற்கு வெருகெண்ணெய்

நாடினதோர் வெருகம்வேர் சித்தா முட்டி
நல்லசிறு காஞ்சோரி யவுரி வேரும்
பீடுபுகழ் சீதேவி துளசி நொச்சி
பெருங்கரந்தை யிவைவகைக்குப் பலந்தான் பத்து
நீடியிவை தூளாக்கிப் பாண்டத் திட்டு
நீர்தாகு யறுகுறுணி நிரம்ப விட்டு
வாடியன லூட்டியே யெட்டொன் றாக்கி
வாங்கிநீ கோலரக்குக் கசாயங் கேளே.

கோலரக்குப் பலமொன்று நாழி நீரிற்
குவித்திட்டுப் படியாக வடித்துக் கொண்டு
காலரக்கு எண்ணெய்படி ரண்டு விட்டு
கனத்தமோ ரிருகுறுணி கலர விட்டு
வேலரத்தை யதிவிடய முத்தக் காசு
வெட்பாலை யரிசிகோட்டம் வாய்வி ளங்கம்
வால்மஞ்சள் திரிகடுகு கொடுவேலி ஓமம்
மரமஞ்சள் கருவேம்பு கடுகுரோ கணிதானே.

கடுகுரோ கணியகிலுங் கெந்தஞ் சிட்டி
கத்தூரி மஞ்சளொடு யிலவங்கப் பட்டை
அடுகுசெவ் வியந்தக் கோலப் பிட்டில்
அப்பனே வெள்ளுள்ளி திப்பிலி மூலம்
தடுகுபுகை யூறல்சிறு தேக்குத் தானும்
தனித்தனி காற்பலந் தானே தூக்கி
முடுகவே கோதினா லாட்டி வாங்கி
முறையோடே நாலுதினங் கொதிக்கச் செய்யே.

கொதிப்பிட்டு அஞ்சாநாள் வடித்து மைந்தா
கூசாம லுள்ளுக்குக் கொள்ளச் சொல்லு

கதிகெட்ட மாறல்பேர் முறைக்காய்ச்சல் போகும்
 கடுங்காய்ச்சல் தீராத சுரமும் போகும்
விதிகெட்ட தேவீக்கஞ் சுரமும் போகும்
 மிக்கவசீ ரணசுரமும் பூதசுரம் போகும்
பதிகெட்ட விடசுரமு மாச்சார சுரமும்
 பலசுரமு மிவற்றாலே பறந்து போமே.

(சு.1 பா. 387-390)

(செய்முறை : வெருகம், சித்தாமுட்டி, சிறுகாஞ்சோரி, அவுரி இவற்றின்வேர், சீதேவி, துளசி, நொச்சி, பெருங்கரத்தை இவை வகைக்கு 10 பலம் (350 கிராம்) வாங்கி, தூளாக்கி, அறுகுறுணி நீர் விட்டு எட்டொன்றாகக் காய்ச்சவும். கோலரக்கு 1 பலம் (35 கிராம்), நாழி (1.3 லிட்) நீரில் போட்டு வடித்து, அரக்கெண்ணெய் படி 2 (2.6 லிட்) விட்டு, மோர் இருகுறுணி (10.6 லிட்) விட்டு, வேல், அரத்தை, அதிவிடயம், முத்தக்காசு, வெட்பாலையரிசி, கோட்டம், வாய்விளங்கம், மஞ்சள், திரிகடுகு, கொடுவேலி' ஓமம், மரமஞ்சள், கருவேம்பு, கடுகு ரோகணி, அகில், கெந்தம், மஞ்சிட்டி, கத்தூரிமஞ்சள், இலவங்கப் பட்டை, செவ்வியம், தக்கோலம், வெள்ளுள்ளி, திப்பிலிமூலம் புகையூறல், சிறுதேக்கு இவை கால்பலம் (8.75 கிராம்) வாங்கி ஆட்டி, நான்கு நாட்கள் கொதிக்க வைத்து வடித்து, உள்ளுக் குக் கொள்ளவும்.

தீரும் நோய்கள் : முறைக்காய்ச்சல், கடுங்காய்ச்சல், தீராத சுரம், வீக்கசுரம், அசீரணசுரம், பூதசுரம், விடசுரம், மாச்சார சுரம். பலசுரமும் தீரும்.)

## சுரத்திற்கு எண்ணெய் வைக்க

அரக்குமோ ரெண்ணெய் நாழி ஆடா தோடைச் சாறுழக்கு
குருக்கு ராமிச்ச முத்தங் கோட்டம் நன்னாரி மஞ்சள்
சரக்கதி மதுரம் சந்தனஞ் சதகுப்பை தயிலந் தாங்கி
விரித்தசுக் கமுக்கி ராமிளகு வெந்திடச் சுரங்கள் போமே.

(சு.20)

(செய்முறை : அரக்குமோரெண்ணெய் 1 நாழி (1.3 லிட்), ஆடாதோடைச்சாறு 1 உழக்கு (336 மி.லிட்), இராமிச்சம், முத் தக்காசு, கோட்டம், நன்னாரி, மஞ்சள், அதிமதுரம், சந்தனம், சதகுப்பை, சுக்கு, அமுக்கிரா, மிளகு இவற்றைச் சேர்த்துப்பக்குவ மாக்கித் தேய்க்கச் சுரங்கள் தீரும்.)

(வேறு)

ஏல மிலவங்கந் தேவ தார
மிருவேரி ராமிச்சம் செண்பகப்பூச்
சீலமுறு சாதிக்காய் செங்கழுநீர் கோட்டம்
சீரகமுஞ் சந்தனமுந் தேவிச்சாற் றரைத்து
பாலதனில் நாழியெண்ணெய் நாழி விட்டுப்
பண்பான குறுந்தட்டி யதிமதுரங் கலக்கிக்
காலமே வெந்தயெண்ணெய் தேய்ப்பீ ராகில்
கண்குளிரும் பித்தம்போம் காய்ச்சல் போகுமே. (சு.20)

(செய்முறை : ஏலம், இலவங்கம், தேவதாரம், இருவேலி, இராமிச்சம், சண்பகப் பூ, சாதிக்காய், செங்கழுநீர், கோட்டம், சீரகம், சந்தனம் இவற்றை ஓரளவெடுத்து அரைத்து, பால், எண்ணெய் வகைக்கு ஒரு நாழி (1.3 லிட்) சேர்த்து, குறுந்தொட்டியும் அதிமதுரமும் கலக்கி, பக்குவமாகக் காய்ச்சி இறக்கித் தேய்க்க, கண்குளிரும், பித்தம்போகும், காய்ச்சல் தீரும்.)

(வேறு)

சீதேவியார்செங்கழுநீர்க் கிழங்கு, அதிமதுரம், கோட்டம் சந்தனம், கடுகுரோகணி, இலவங்கபத்திரி, இலாமிச்சம், நாகப்பூ இவையெல்லாம் சீதேவியார் செங்கழுநீர் சாறுவார்த்துஅரைத்துக் கரைத்து, நாழி எண்ணெய் கூட்டிப் பதத்தில் வடிக்க, அந்தியிலே நெய், எண்ணெய் கூட்டியாகிலும் பதத்தில் வடித்துத் தோசமறிந்து கொடுக்க, ரத்தபித்தசுரம், சுவாசகாச மருசயம் இவையெல்லாம் சாந்தமாம். உடம்பெரிப்பு, தலையெரிப்பு, காலெரிப்பு இவைகளுஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

பெருமரப்பட்டை, அதிவிடயம், சடாமாஞ்சி, தண்ணீர் மீட்டான் இவையெல்லாம் நாளாழிக் காடியிலரைத்துக் கரைத்து, எண்ணெய் நாழிவிட்டு வடித்து முழுக விடச்சுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

பெருங்குரும்பை, கோட்டம், மஞ்சள், அரக்கு, மஞ்சிட்டி, வாட்சிகை, சுக்கு இவையெல்லா மரைத்துக் கரைத்து,

எண்ணெய்க்கு ஆறுமடங்கு மோரில் கூட்டிப் பதத்தில் வடித்து முழுகச் சுரம் சாந்தமாம். (சு.3)

(வேறு)

இலந்தைவேர், கனங்கிழங்கு, வெருகன்தண்டு, வெருகிலை இவையெல்லாங் குறுக நறுக்கித் தண்ணீரில் போட்டு, நாலொன்றாய்க் காய்ச்சி, பின்பு வெருகன் கிழங்கை இந்தக் கசாயத்திலரைத்துக் கரைத்து, எண்ணெய்க்கு நாலு மடங்கு பசுவின்பால் விட்டுக் காய்ச்சி, பதத்தில் வடித்து முழுக, உள்ளுக்குங் கொடுத்து நசியமும் பண்ணச் சுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

கோட்டம், மஞ்சிட்டி, அரக்கு, பெருங்குரும்பை, மஞ்சள் கோரைக் கிழங்கு இவையெல்லாம் அரைத்துக் கரைத்து எண்ணெய்க்கு ஆறுமடங்கு மோர் கூட்டிப் பதத்தில் வடித்து முழுக சுரம், உட்டிணம், சீதசுரம், தாகசுரம் இவையெல்லாஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

அறுகு, அரக்கு, மஞ்சள், மரமஞ்சள், மஞ்சிட்டி, பேய்த்தும்மட்டி, கண்டங்கத்தரி, இந்துப்பு, கோட்டம், அரத்தை, வனசுரத்தினாலே சீதனாயிருந்தவனைஸ்நானம் பண்ணிவிக்கக் கடவன. நல்ல ஸ்நானம் பண்ணி வித்தானாகில் அதனாலே தேகம் கூடுமென்றறியக் கடவன. (சு.3)

## நளுக்கு சுரத்துக் கெண்ணெய்

மாராணிக் கிழங்குந்தண்டுமிலையும் எட்டுப் பலம், விட்டுணுக் கிரந்தி, நாலுபலம், பன்னிரண்டு படி காடியிலூறப் போட்டு, வெய்யிலில் மூன்றுநாளுலர்த்தியதின் பிறகு இடித்து வடிகொண்டு, நல்லெண்ணெய் நாழி, மோரு முந்நாழி பசுவின்பால் முந்நாழி, யிதுவெல்லாங் கூட்டிக் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்து முழுகவும். (சு.20)

## நெடுநாளைய சுரம் தீரக் குடிநீர்

வேப்பினுக் கொரு பிடி, கற்றாழைச் சருகு ஒரு கழஞ்சு, வல்லாரை ஒரு பிடி, விட்டுணுக் கிரந்தி ஒரு பிடி, மொசு

மொசுக்கை ஒரு பிடி, நற்சீரகம் 3கழஞ்சு, சுக்கு 3கழஞ்சு, ஈரவுள்ளி 3கழஞ்சு இது வெல்லாம் எட்டுப்படி தண்ணீர் வைத்து இரண்டு படியாக்கி, தினமுங் கொள்ளவும். பொறுக்கும். (சு.20)

(வேறு)

நொச்சிக் கொழுந்து அரைப்படி, மிளகு அரைப்பிடி, வெள் வெங்காயம், இரண்டு பூண்டும் நாழி தண்ணீரில் போட்டு உழக் காகக் காய்ச்சிக் குடிக்கவும். காய்ச்சல் நிற்கும். (சு.6)

## நளுக்கு சுரத்திற்க்கு குடிநீர்

*சுக்கு நாரத்திலை யதுவும் நய்யபுடோ லெட்டொன் றாக்கி*
*ஒக்கக் காய்ந்த குடிநீர் லுறுதேன் விட்டுக் குடித்திடுகில்*
*மிக்க வேதுப் பைக்குளிர் மினவிட்டே போகுஞ் சிவனாணை*
*பக்குவத்தி விதுசெய் வீர்கேள் பாழே கிடந்து பதறாதே.*

(சு.8)

(செய்முறை : சுக்கு, நாரத்திலை, பேய்ப்புடல் இவற்றை நீரி விட்டுப் பக்குவமாகக் காய்ச்சி, தேன் விட்டு குடிக்கவும்.

தீரும்நோய்கள் : குளிர், நளுக்கு சுரம் தீரும்.)

## சுரத்துக்குச் சூரணம்

நெற்பொரி சீரகமு மிளகு திப்பிலி
சொற்பெரு மருதமும் சுக்குங் கூட்டி
நற்பொடி செய்துநல்ல தேனி லுண்ணயில்
இக்குடல் வாயுவிட் டேகுங் காணுமே. (சு.20)

(செய்முறை : நெற்பொரி, சீரகம், மிளகு, திப்பிலி, மருதம், சுக்கு இவற்றைக் கூட்டிக் சூரணித்து, தேனிலுண்ணச் சுரம் நீங்கும்.)

(வேறு)

தாளகம் பலம் 9,உப்பை அரைத்துக் கவசம் செய்து, குடபுட மிட்டெடுத்து, ஒரு வராகனெடை வீரம் சேர்த்துப் பொடித்து கரண்டியிலிட்டு, முலைப் பால் விட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சி, மெழுகு போலெடுத்துக் கொண்டு, பணவெடை, சுரத்திற்கு மிளகு கசாயத்திலும், சன்னிக்கும், சூலைக்கும் தேனுடன் 4நாள் கொடுக் கவும். (சு.14)

### பஞ்ச கசாயக் கிருதம்

வசம்பு, ஏலம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லி முள்ளி, வாய் விளங்கம், அதிமதுரம், சுக்கு, கடுகு ரோகணி, முந்திரிகைப் பழம், மஞ்சள், மரமஞ்சள், பெருமுத்தக்காசு, வட்டத் திருப்பி, மஞ்சிட்டி அதிவிடயம், கொடுவேலி இவையெல்லாம் பசுவின் தயிர், பசுவின் பால், பசுவின் சாணம், பசுவின் மூத்திரம், இந்த பஞ்ச கவ்வியத்தில் அரைத்துக்கரைத்துப் பதத்தில் வடித்து நக்க ராசசுரம்போம். தீர்காயுசுண்டாம், புண்ணியமாயிருக்கும். புத்தியுண்டாகும். நல்ல சென்ம முண்டாம். காந்தியுண்டாம். சுரம், உடம்பு வற்றினது, வீக்கம், பவுத்திரம், மாந்தம் இவை யெல்லாஞ் சாந்தமாம். இந்தப் பஞ்ச கவ்வியமானது பிள்ளை இல்லாத பேர் களுக்கும், தூரமன்றியிலேயிருக்கிற ஸ்திரிகளுக்கும், மலடியாய் இருக்கிறஸ்திரிகளுக்கும், புத்திரப் பிரதாபமாய் இருக்கு மென்றவாறு. (சு.3)

(வேறு)

நன்னாரி பொடி பண்ணி நெருப்பிலே போட்டுப் புகைக்க சீதசுரஞ் சாந்தமாம். (சு.3)

### வாத சுரத்திற்கு

வேப்பம் பட்டைத் தண்ணீரில் கத்தூரி, மஞ்சள்பொடி செய்து போட்டு, புகைக்காட்டவும் தீரும். (சு.12)

(வேறு)

கண்டங்கத்தரி வேரையு மசியத்தோடே உடனே திங்கட் கிழமை பிடுங்கி, விட்டுணு கிரந்தி கூட்டிப் புகைக்கச் சகல சுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சுக்கைப் பூசணிப் பூச்சாறு வார்த்தரைத்து நசியம் பண்ணச் சுரஞ்சாந்தமாம். (சு.3)

### வேர்க்குளிசம் – சுரத்திற்கு

விசாக நட்சத்திரத்தில் புளியன்வேர் பிடுங்கி, கையில் கட்ட சுரஞ் சாந்தமாம். அனுஷநட்சத்திரத்தில் எருக்கலம் வேர்ப் பிடுங்கிக்கையில் கட்ட சுரஞ்சாந்தமாம். சர்வ சுரத்திற்கும் இந்த மூவகையினை அறிந்து தனித்தனியே கட்ட சர்வ சுரமும் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சுடுகாட்டில் முளைத்த குழிமீட்டான், வெள்ளைக்காக்கணை வேரை ஞாயிற்றுக் கிழமையில் பிடுங்கி, நெய்யில் தோச்சு நெற்றியில் திலகமிட, திரியாகிக சுரம் சாந்தமாம். சுடுகாட்டில் முளைத்த அவுரிவேரை ராத்திரிக்குப் பிடுங்கிக் கழுத்தில் கட்ட ஆச்சரியமாயிருக்கும் சதுரந்திகசுரம் சாந்தமாம். நாயுருவியாகிலும் அதனுடைய வேராகிலும் பிடுங்கிக் கட்ட சதுரந்திக சுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சுடுகாட்டில் முளைத்த சீதேவியார் செங்கழுநீர், அறுகு, பெருங்குரும்பை வேர் கொண்டு வந்து, நூலாலே சுற்றிக் கையில் கட்ட சர்வமான சுரமும் சாந்தமாம். (சு.3)

(வேறு)

சூரிய வாதத்தின் வேரைக் காதில்கட்ட சர்வமான சுரமும் சாந்தமாம். நண்டினுடைய மண்ணாகிலும், பூனையுடைய மண்ணாகிலும் நெற்றியில் திலகமிட சுரஞ்சாந்தமாம். வெள்ளைக் காக்கணையின் வேர் நசியம் பண்ண ஏகாயிக சுரம் சாந்தமாம். (சு.3)

(வேறு)

குன்றிவேரைக் காதில் கட்ட சர்வ சுரமும் போம். பலமுஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

கருந்துளசிவேர், சீதேவியார் செங்கழுநீர், சிற்றா முட்டிவேர் தான் கழுத்தில் கட்டிவிட்டு, கிரந்தி காதில் கட்ட சுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

பேராமுட்டிவேரை ஏழு கண்டமாக நறுக்கி, சிகப்பு நூலாற் சுற்றி, கையில் கட்ட சுரஞ் சாந்தமாம். நாய் வணங்கி வேரைக் காதில் கட்ட பூதசுரஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

மணித்தக்காளி வேரைக் கழுத்தில் கட்ட ராத்திரி சுரஞ் சாந்தமாம். சந்தேகமில்லை. இருளானது சூரிய உதயத்தினாலே போனாப் போலென்றவாறு. (சு.3)

(வேறு)

நண்டுவலைமண்ணை நெற்றியில் திலகமிட ஏகாயிக சுரஞ் சாந்தமாம். செத்த நண்டோடு பொடி பண்ணிப் புகைக்கச் சீத சுரஞ்சாந்தமாம்.

(சு.3)

## சன்னி 13க்கும் தைலம்

நிம்பத் தோலுந் துளசி நீர்வாத மடக்கி நொச்சி
வன்திராய் படர்ப ருத்தி வளர்ந்திடு முருங்கைப் பட்டை
இன்புறு பிரமி யோரொன் றிடித்த சாறுரிய தாகப்
பின்புசொல் வேனே ரண்டெண்ணெய் பேசிலொன் றுழக்க
தாமே.

ஆகுங் கற்கடக சிங்கி அருஞ்சிறு தேக்கு மஞ்சள்
வாகுடன் கடுகு ரோகணி மரமஞ்சள் முசிறு முட்டை
போக்கிடுஞ் சர்ப்பக் கண்டம் பொரிந்திரி கடுகு நாங்கூழ்
வேகமாம் வசம்பு சித்திர மூலிவேர்ச் சிவனார் வேம்பு.

வேம்புடன் கிலுகி லுப்பை வேர்த்தேளின் கொடுக்கு மூலம்
ஓம்பி யொன்றிரு கழஞ்சி உறைப்புடன் வெந்த வெண்ணெய்
தீம்புசெய் சன்னிக் கெல்லாம் தினமொரு காசெடையே
நாக்கில்
தேம்பிய வவைய வங்கள் சேரயித் தயிலம் போடே. (சு.20)

(செய்முறை : நிம்பத்தோல், துளசி, வாதமடக்கி, நொச்சி, திராய், படர்பருத்தி, முருங்கைப் பட்டை, பிரமி இவை ஓரளவாய் இடித்துச் சாறெடுக்கவும். அத்துடன் ஏரெண்டெண்ணெய் ஓர் உழக்கு (336 மி.லிட்), கற்கடகசிங்கி, சிறுதேக்கு, மஞ்சள், சர்ப்பக் கண்டம், திரிகடுகு,நாங்கூழ், வசம்பு, சித்திர மூலிவேர், சிவனார் வேம்பு, கிலுகிலுப்பை வேர், தேள் கொடுக்கு மூலம் இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) எடுத்து எண்ணெயிலிட்டுப் பக்குவமாகக் காய்ச்சி, அனைத்து சன்னிக்கும் தினம் 1 காசெடை (165 மி.கி) கொடுக்கவும் தீரும்.)

## முகவாத சன்னிக்கு எண்ணெய்

சுத்தியுடை கிலுகிலுப்பை நத்தைச் சூரி
துய்யபே ரிந்து வேர்த்துடைக் கயிறு

பத்தியுட னிலவேருப் பாம்புக் கண்டம்
பரிவுடனே முசிறுமுட்டை கோழிக் காரம்
மெத்த வெளுத்த பிசினுள்ளிக் காயம்
வெண்வசம்பு திரிகடுகுடன் வெந்த எண்ணெய்
நித்தமூன்று காசெடை யுங்கொடுத்துப் பூச
நீண்ட முகவாத சன்னிபேதங் கண்டீரே. (சு.20)

(செய்முறை : கிலுகிலுப்பை, நத்தைச் சூரி, நிலவேர், பாம்புக்கண்டம், முசிறுமுட்டை, கோழிக்காரம், வெளுத்தபிசின் உள்ளி காயம், வெண்வசம்பு, திரிகடுகு இவற்றை வாங்கி, எண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்து, மூன்று காசெடை (495 மி.கி) உண்டு மேலுக்கும் பூச முகவாத சன்னி நீங்கும்.)

## சன்னி வாதத்துக்கு எண்ணெய்

பஞ்சாக்க மாடா தோடை நொச்சிவேலிப்
பருத்தி பஞ்சை குட்டித் தக்காளி
அஞ்சாத வாதமடக்கி யிவைசாறு நாழி
அதிலினிய கருஞ்சீரகம் சன்னி நாயன்
பஞ்சவன்னப் பழுங்காய் வசம்புள்ளி குக்கில்
பால்வெள்ளைக் குந்திருக்கந் தேவதாரம் பலமொரு
மஞ்செண்ணெய் வெந்திடச் சன்னிபதி மூன்று
மடாதடித்து வாத மெண்பது மகற்றிடுமே. (சு 20)

(செய்முறை : ஆடாதோடை, நொச்சி, வேலிப்பருத்தி, குட்டித்தக்காளி, வாதமடக்கி இவற்றின்சாறு வகைக்கு 1 நாழி (1.3லிட்) வாங்கி, அதில் கருஞ்சீரகம், சன்னி நாயகம், பஞ்சவர்ணப்பருக்கை, வசம்பு, உள்ளி, குக்கில், வெள்ளைக்குந்திருக்கம், தேவதாரம் வகைக்கு 1 பலம் (35 கிராம்) வாங்கிப் போட்டு வெந்திறக்கி உண்ண சன்னி பதிமூன்றும், வாதம் எண்பதும் தீரும்.)

## சன்னிக்குக் கசாயம்

... ... ... ...

திட்டான சன்னி கசாயஞ் சொல்வோஞ்
சிறுவழு தலையின்வேர் கழஞ்சி நாலு
கொட்டான சுக்குரெண்டு சிந்தி ரெண்டு
துவளஇடித் திருநாழி நீரிற் போட்டே,

போட்டதனை யெட்டொன் றாக்கிக் கொள்ள
புகழான சன்னியெல்லாம் முறிந்து போகும்
... ... ... ... (சு.9.பா.88-89)

(செய்முறை : சிறுவழுதலையின் வேர் நான்கு கழஞ்சு (20.4 கிராம்) சுக்கு, சீந்தில் வகைக்கு இரண்டு கழஞ்சு (10.2 கிராம்) இடித்து, இரு நாழி (2.6லிட்) நீரிவிட்டுப் பக்குவமாக வற்றக் காய்ச்சிக்குடிக்க சன்னியெல்லாம் முறிந்து போகும்.)

## சன்னி 13க்கும் எண்ணெய்

கையாந்தகரை, குப்பைமேனி, உத்தமதாளி, கொத்தான், கொழிஞ்சி, அவுரி, நொச்சி, இலைக்கள்ளி, காணாங்கள்ளி, தைவேளை, தழுதாழை, எருக்கிலை, சிற்றாமணக்கிலை, ஆடாதோடை, ஊமத்திலை, நாரத்திலை, முருக்கிலை, கமுகிலை, மஞ்சணாத்தி, வன்னெத்திலை, கருஞ்சாவிலை, குறிஞ்சா, வெள்ளறுகு, வீழியிலை ஆக ஓரொன்று சாகம் உரி கொள்ளவும். பஞ்சதயிலம், குட்டி வேப்பம் பட்டை, புங்கம் பட்டை, கொன்றைப் பட்டை, விடத்தலம் பட்டை, அழிசில் பட்டை, கொடுவேலிவேர், செங்கத்தாரிவேர், புனை முருங்கைவேர், சென்னகரைப் பட்டை, சென்னப்பட்டை, குறுந்தொட்டிவேர் நரிமிரட்டிவேர், சிறு புள்ளடிவேர், நொச்சிவேர், குழலாதண்டை, சீந்திற் தண்டு, கருநொச்சிவேர், குமிளவேர், பாதிரிவேர் ஆக வேரொன்று கழஞ்சு 5கொண்டு தகத்திடித்து இரு தூணி தண்ணீரில் போட்டுக் காய்ச்சி, நாலொன்றாக்கி எண்ணெயில் புகட்டி, கடைச் சரக்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, மஞ்சள், மரமஞ்சள், வெட்பாலை, பஞ்சவர்ணப் பருக்கை, கொத்தமல்லி, வாய்விளங்கம், செங்கழு நீர், கோட்டம், கடுகு, கார்கோலரிசி, கடுகு ரோகணி, கருஞ்சீரகம், தகரம், அதிவிடயம், அமுக்கிரா, சன்னி நாயன், குக்குலு, நேர்வாளம், அதிமதுரம், செஞ்சந்தனம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, தக்கோலம், கல்மதம், சிறுதேக்கு, ஏலம், இலவங்கம், தேவதாரம், செவ்வீரம், சிறுமூலம், சிற்றரத்தை, பேரரத்தை, அத்திதிப்பிலி, திப்பிலிமூலம், முட்பன்றிச்சதை, கத்தூரி மஞ்சள், சீரகம், இடவகம், வசம்பு, வெள்வெங்காயம், சதகுப்பை, அயமோதகம், செவ்வள்ளிக்கொடி, நன்னாரிவேர், இராமிச்சம் வேர், நண்டுக் கொழுப்பு, பூநாகம், முசுறுமுட்டை, பேய்க் கொம்மட்டிவேர், புங்கம் விதை, வேப்பம் விதை, வெந்தயம், அகில் இது ஓரொன்று கழஞ்சரைத்துக் கிளரசத்தில் கலக்கி, எண்ணெயும் கிளரசமுங் கூட்டிக் காய்ச்சி

மெழுகு பதத்தில் வடித்து, உள்ளுக்குக் கொடுத்து மேலுந்தடவி, நலஞ் செய்து, நாசியிலுஞ் செவியிலுமடைக்கத் தீரும். (சு.20)

(வேறு)

நத்தைச் சூரிவேர், கிலுகிலுப்பைவேர், ஆமணக்குவேர், முசுறு முட்டை, ஆடாதோடைச் சாறு, வசம்பு, கருஞ்சீரகம், சனி, ஞாயிறு சரி கொண்டரைத்து, வேப்பெண்ணெயில் முதிர வெந்து நக்க, பூச, சன்னி பலதுந் தீரும். (சு.12)

(வேறு)

நொச்சி வேருஞ் சுக்கு மரைத்துக் கொடுக்க சன்னி தீரும், கைகண்டது. (சு.12)

(வேறு)

வசம்பு-2, ஒருள்ளிப் பூடு உழக்கு அரைத்து, எண்ணெயில் துவைத்துக் கொதிக்கவைத்து ஒரு முட்டை போட்டுச் சட்டி கொண்டு மூடினால் முட்டை வெடிக்கும். பிறகு இரண்டு முட்டை உடைச் சுத்திப் பதத்தில் வடித்து யசந்தாருக்கு ஒரு காசெடை உள்ளே கொடுக்கவும், பேசாத பேருக்கு உச்சி, நாடி, பொருத்துக் காலிலுந் தடவிப் பிடிக்கவும். பயித்திய சன்னி, குளிர்சன்னி, மூடுசன்னி, சர்வமுந்தீரும். (சு.12)

(வேறு)

இஞ்சி கழஞ்சு 1, உள்ளி கழஞ்சு 1, வேலிப்பருத்தி வேர் கழஞ்சு ½ அரைத்து, வேப்பெண்ணெயிற் போட்டு, கோழிமுட்டை அவித்து மஞ்சக் கருவுங் கூடப் போட்டு வெந்திடத் தீரும். நாடிவாய் கோணின சன்னிக்கு உள்ளியரைத்து வெள்ளாட்டுப் பாலில் கரைத்துக் காய்ச்சி உடம்பெங்கும் பூசவும். (சு.12)

## நெடுநாள் சென்ற சன்னிக்கு

பெருங்காயம், இந்துப்பு, சுக்கு, திப்பிலி, செங்கழுநீர், கோட்டம், அதிமதுரம், சதகுப்பை, நொச்சி வேர், புன்னை, முருங்கை வேர்ப்பட்டை ஆக ஒரொன்று கழஞ்சு 6கொண்டு நல்லெண்ணெய் படி, உரி மோர் படி 6இதுவெல்லாங் கூட்டிக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்து, உள்ளுக்குக் கொடுத்து மேலுந்தடவி காதிலும் நாசியிலுமடைக்கவும். (சு.20)

## சன்னிக்கு முட்டைத் தைலம்

முட்டை 40 அவித்து, வெள்ளைக் கரு தள்ளி, மஞ்சள்

கருவெடுத்துப் பிதிர்த்து, எண்ணெய் சட்டியிலிட்டு, கைபடாமல் இரும்புக் கரண்டி கொண்டு கிண்டி, தயிலம் வருகிற சமயம் கரண்டி கொண்டு நெருக்கித் தயில மெடுத்து, சன்னிக்கு உள்ளுக்குக் கொடுந்து மேலும் போடவும். (சு.5)

## சன்னிக்கு குளிகை

இரதம் கழஞ்சு 8,வெண்காரம் கழஞ்சு 8,மிளகு 8 கழஞ்சு நாவி கழஞ்சு8, வாளம் 8, பூசணிவிதைப் பருப்பு 8, பூ ச ணி, இலைச்சாறு விட்டரைத்து, ஒரு சாமம் சென்றாலதை உளுந்துப் பிரமாணம் உண்டை செய்து நிழலுணர்த்தி, சுரத்திற்கு முலைப் பாலில் கொடுக்கவும். சன்னிக்கு இஞ்சிச் சாற்றிலிடவும், தினமும் சன்னிக்கு வெள்ளுள்ளியிலிடவும். (சு.5)

(வேறு)

கௌரி பாடாணம் கழஞ்சு 2,வெள்ளைப் பாடணம் கழஞ்சு 2,வீரம் கழஞ்சு 2, அரிதாரம் கழஞ்சு 2 ஆக இவ்வளவும் சரியெடை வைத்து அமுரியில் மூன்று நாழிகை அரைத்து, அப்புறம் குமரிச் சாற்றில் மூன்று நாழிகை அரைத்து, அப்புறம் மூன்று நாழிகை தேன் விட்டரைத்து,மிளகுப் பிரமாண முண்டை செய்து வைத்துக் கொண்டு, சன்னி பதி மூன்றுக்கும் அனுபானங்களி லுரைத்துக் கொடுக்கவும் தீரும். (சு 15)

(வேறு)

ஆடாதோடை, கண்டங்கத்தரி, தூதுவளை, சிறுவழுதிலை, துளசிஇதுவெல்லாம் பிட்டவியலவித்துப் பிழிந்து யிந்தச் சாசத்தில் உண்டை கொடுக்கவும். நீர்ப்பாட்டுக்குத் தேனில் கொடுக்கவும். (சு.20)

(வேறு)

சுத்தி பண்ணின ரசம், கந்தகம், காக்கை முட்டை, இந்துப்பு இவையெல்லாஞ் சமன்கூட்டிச் சிறுபிள்ளைகள் மூத்திரம் வார்த்தரைத்து, ஒருசாம மரைத்து, இலந்தைப் பழம் பிரமாணம் குளிகைப் பண்ணி, நிழலுலர்த்திக் கொடுக்க, சன்னிவாதஞ் சாந்தமாம், இது தேனில் கொள்ள, சன்னிவாதஞ் சாந்தமாம். இவை சிந்தாதி வடகம் என்றுபேர். (சு.3)

## சன்னி முதலானதுக்கு வைரவன்

நாவிகிழங்கு, கந்தகம், சூதம், சாதிலிங்கம், மனோசிலை

வெண் காரம் வகைக்கு வராகன் வாங்கி, எலுமிச்சம் பழரசத்தில் 2சாமமரைத்து, சிறு பயறளவு மாத்திரை செய்து வைத்துக் கொள்ளவும் சன்னிக்கு முலைப் பாலிலும், குளிர்சுரத்திற்கு இஞ்சிச்சாற்றிலும் கொடுக்கத் தீரும். (சு.22)

(வேறு)

முந்திரிகைப் பழம், அதிமதுரம், இலுப்பைப்பூ, திப்பிலி, பேரீச்சம் பழம், சந்தனம், நன்னாரி, வெட்டிவேர், கோரைக் கிழங்கு இவையெல்லாம் முலைப் பால், கருப்பஞ்சாறு, சர்க்கரை, தேன்கூட்டி நசியம் பண்ண பிரமேக சன்னி பாதம் சாந்தமாம். (சு.3)

(வேறு)

பச்சை நாவி யொருபங்கு, மிளகு மூன்று பங்கு, எரு முட்டை பதினாறு பங்கு இதுவெல்லாம் நன்றாய்ப் பொடி செய்து எருக் கலம் பால் விட்டு மத்தித்து, நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ள வும். சன்னி மூடின பேருக்கு நாசியில் பிடிக்கத் தீரும். (சு.12)

## இரத்தக் கட்டு சன்னிக்கு

பழம் புளிப் பிசைந்து, ஓமம், வெள்ளுள்ளி, மிளகு மரைத்துக் கலக்கிக் காய்ச்சிக் குறுக்கி, வெரு கடிப் பிரமாணந் தின்று வரவும் சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம் அரைத்து இரண்டு பாக்களவு கொள்ளவும் தீரும்.

பேயன் வாழைச் சருகு சுட்டு வடித்த நீர் ஊற்றி, எண்ணெய் நெய் கலந்து, நாலு சுழஞ்சு மிளகுப் பொடி போட்டுக் கொடுக்கவும். (சு.12)

## பித்த சன்னிக்கு

ஆத்தாரதாகமுண்டாம், பிரமியுண்டாம், மதமுண்டாம், வாய்பிதற்றும், சித்தப்பிரமியுண்டாம், மோகமுண்டாம், மூர்ச்சை யுண்டாம். இவையெல்லாம் பித்தசன்னி என்று அறியக்கடவன, இதற்குக்கலிக்கம், கலங்கொம்பு, ருத்திராட்சம், சந்தனம் இவையரைத்து முலைப்பாலில் கொள்ள தாகம், மோகம் எட்டு வகையும், சுரமும், பித்தசன்னியும் சாந்தமாம். அருச்சி சாந்தி யுண்டாம். மனோவியாரமுண்டாம், மேல்மூச்சு, இருமல், இளைப்பு, சயம், தண்ணீர்த்தாகம் இவையெல்லாம் சிலேட்டும சன்னி என்றறியக் கடவன. சுக்கு, மிளகு, திப்பிலி, நாகப்பூ

இவைக்குப்பாதி இந்துப்பு, இவையெல்லாம் முலைப்பாலில் அரைத்துக் குடிக்க சிலேட்டும சன்னிவாதம் சாந்தமாம்.

எள்ளுப் பொடியோடே சர்க்கரையும் கூட்டிக் கொள்ள தாகம் சாந்தமாம். இளநீரைக் குடிக்க உட்ணம், காமாலை, சாந்தமாம். சந்தனத்தை இளநீருடங் காய்ச்சிக் குடிக்க தாகம் சாந்தமாம். முலைப்பாலில் சர்க்கரை கூட்டிக் குடிக்க தாகசுரம் சாந்தமாம். முந்திரிகைப் பழம், அதிமதுரம், சுக்கு, திப்பிலி, இந்துப்பு இவையெல்லாம் முலைப்பால் வார்த்தரைத்து நசியம் பண்ண மூர்ச்சை தெளியும். சுக்கை வாயில் போட்டுமென்றுமிழ, நசியம் பண்ண வாதத்தினாலுண்டான சூலை, தலைவலி, மோகம், மதம், பைத்தியம் இவையெல்லாஞ் சாந்தமாம்.

(சு.20)

(வேறு)

தும்பை இலைச் சாற்றில் திரிகடுகு அரைத்து நசியமிடப் பல கட்டு, மூர்ச்சை, பல சன்னியுந்தீரும்.

(சு.12)

(வேறு)

திரிபலை, இலாமிச்சு, பேய்ப்புடல், தாமரை வளையம், சந்தனம், கடுகுரோகணி, வெட்பாலரிசி, முத்தக்காசு, பங்கம் பாளை, தேவதாரம், கடுகு, ஈருள்ளி யெட்டொன்றாகக் காய்ச்சி விடிவேறு கொடுக்கச் சன்னிவாதம், சன்னிவாதசுரந் தீரும். இது கைகண்டது.

(சு.12)

(வேறு)

சன்னிக்குக் கரிச்சான் வேரும், பாகல்விதையும், வகைக்கு எலுமிச்சங்காயளவு அரைத்துப் பாகல் சாறு உழக்கு, வேப்பெண்ணெயுழக்குக் கலந்து, காய்ச்சியிடச் சன்னி தீரும். (சு.12)

## முகவாத சன்னிக்கு

நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், ஆமணக்கெண்ணெய், இதில் முசுறுமுட்டை, நாங்குழு, வெள்ளுள்ளி, வசம்பு, பஞ்சவர்ணப் பழுக்காய், சுக்கு, தைவேளைவேர், இதுவெல்லா மரைத்து வெந்து போடவும். நாங்குழுவைப் பொட்டணமாய்க் கட்டி வேப்பெண்ணெயிலொத்தவிடவும். நச்செலித்துண்டமும் முசிறு முட்டையும் முட்டைத் தயிலமுங் கூட்டி நாசியிலுங் காதிலுமடைக்கவும். (சு.20)

(வேறு)

திப்பிலி, நிலவேர், தேசிக்காயளவு பிண்ணாக்கு, மஞ்சாடி,

தும்பையிலை பாக்களவு, இஞ்சி, முலைப்பால் விட்டரைத்துப் பொட்டணங்கட்டி வெதுப்பி, இரண்டு காதிலும் பிழிந்து, தலையிலுந்தப்ப, பேசாத சன்னி பேசும். இது கை கண்டது.
(சு.12)

## சன்னி வாத லட்சணம்

சன்னி பிடித்தவனுக்குக் கழுத்து, நெற்றி, மார்பு இவை வேர்க்குதல், தந்திரமாவது சித்தப் பிரமை வருதல், சரீரமெல் லாம் நோகுதல், தலை, தொடை, சருவாங்கமுமெரிதல், கண் சிவப்பாயிருக்குமாதல் அல்லது பச்சென்றிருக்குதல், மூக்கை உறுஞ்சுதல், மூர்ச்சை வருதல், பிதற்றுதல்,அடலை புடலையிடு தல், மார்பு வலியெடுக்குதல், சுவாசம் வருதல், மயிர்க்கூச் செரிதல், இந்தப்படி குணங்களுண்டானால் சன்னிவாத குண மென்றறியவும்.

## சன்னி பதின்மூன்றுக்கும் பேர்

(1) சீதாங்க சன்னி
(2) தாந்தரீக சன்னி
(3) தருணகுப்பு சன்னி
(4) கருணீக சன்னி
(5) புக்குநேத்திர சன்னி
(6) கண்டக்குச்சு சன்னி
(7) அப்பினியாச சன்னி
(8) தந்திரீக சன்னி
(9) சித்தபிரம்ம சன்னி
(10) சிங்குவாத சன்னி
(11) தகர் சன்னி
(12) அந்தக சன்னி
(13) இரத்தோட்டகசன்னி

இந்தப் பதிமூன்று சன்னிக்கும் பேரறியவும்.

## சாத்திய சன்னியின் பேர்

(1) தந்திரீக சன்னி
(2) தாந்தரீக சன்னி
(3) பிரலாப சன்னி
(4) சித்தபிரம்ம சன்னி
(5) சிங்குவாத சன்னி
(6) கண்டக்குச்சு சன்னி

இந்த ஆறும் சாத்தியமென்றறியவும்.

## அசாத்திய சன்னியின் பேர்

(1) தகர் சன்னி
(2) அந்தக சன்னி
(3) புக்கு நேத்திர சன்னி
(4) இரத்தோட்டக சன்னி
(5) சீதாங்க சன்னி
(6) அப்பினியாச சன்னி
(7) தருண குப்புசன்னி

இந்த ஏழு சன்னியும் அசாத்தியமென்றறியவும்.

சன்னியின் குணங்களை நன்றாய் நிதானித்துப் பார்த்தால் இந்த ஏழு சன்னியும் திரும்புகிறது கடினமென்று மருந்து கொடுப்

பான். இப்பால் சன்னிக்கு தக்கதாக மருந்தும், குளிகையும், நசியமும், கசாயமும், மத்ததும் மடலிலே சொல்லுகிறார்.

சன்னி பதின்மூன்றும் கண்டு, குணமும் நிதானமும் பார்த்து அவிழ்தம் கொடுக்கவும். திரும்புகிற நாளறியும் படி,

1) தந்திரீக சன்னி நாள் — 7
2) அந்தக சன்னி நாள் — 10
3) சித்த பிரம சன்னி நாள் — 21
4) சீதாங்க சன்னி நாள் — 15
5) தாந்திரீக சன்னி நாள் — 25 (அ) 7
6) தருண குப்பு சன்னி நாள் — 13
7) கருணீக சன்னி நாள் — 90
8) புக்கு நேத்திர சன்னி நாள் — 8
9) இரத்தோட்ட சன்னி நாள் — 10
10) பிரலாப சன்னி நாள் — 14
11) சிங்குவாத சன்னி நாள் — 16
12) அப்பினியாச சன்னி நாள் — 15

ஆக சன்னி பதிமூன்றுக்கும் நாளறிந்து கொள்ளவும். (சு.8)

## அந்தக சன்னி

குணம் : தாகமாயிருக்குதல், பிரமை வருகுதல், எரிகுதல், தலைசுற்றிவருதல், பிதற்றுதல், வாந்தியெடுக்குதல், விக்கல் யெடுக்குதல், சுரம் அடிக்குதல், இதுகளெல்லாம் அந்தக சன்னி யின் குணமென்றறிவான்.

மருந்து : அதிமதுரம், பேய்ப்புடல், கடுகு, கோரோசனை, முத்தக்காசு, வேப்பம்பட்டை, தேவதாரம், முந்திரிகைப்பழம் இவை சரிகூட்டி 12 காசெடையெடுத்து, இருநாழி நீர்வார்த்து, எட்டில் ஒன்றாய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை

இரசம், நாபி, வங்கபற்பம், கருவங்க பற்பம், அப்பிரகச் செந்தூரம் இவையெல்லாம் சமனாகக் கூட்டி, திரிகடுகு கசாயத் திலே இரண்டு சாமம் அரைத்து, பின்பு நாய்ப்பிச்சிலை அரைத்து சணல் விதைப் பிரமாணம் இளநீரில் காய்ச்சிக் கொடுக்கும்போது ஒரு மாத்திரை இழைத்துக் கொடுக்க அந்தக சன்னி தீரும்.

(சு.8)

## அப்பினியாச சன்னி

குணம் : வாத பித்தசேத்தும மங்கும், சுரம் அடிக்கும், சுவாச மெடுக்கும். நாக்கு பல வர்ணமாயிருக்கும். நித்திரை அதிகமாக உடம்பு வேதனையுண்டு, பலவீனமாம், வேர்க்கும், அசைவற்று நித்திரை பண்ணுகிறது போல அசந்து கிடப்பான். வார்த்தை சொல்லமாட்டான். அறிவில்லை. இந்தப்படி குணங்களுண்டாகில் அப்பினியாசமென்றறியவும்.

இதற்கு மருந்து : இலுப்பைப்பூ சாற்றில் சுக்கு, மிளகு, திப்பிலி இவை மூன்றுமரைத்து நசியம் பண்ணவும். முந்திரிகைப் பழம், அதிமதுரம், சுக்கு, திப்பிலி, இந்துப்பு இவையெல்லாம் முலைப்பாலிலே அரைத்து நசியம் பண்ணவும். பூசணிப்பூ சாற்றில் உரைத்து நசியம் பண்ணவும். இஞ்சிச் சாற்றில் நசியம் பண்ணவும்.

இதற்கு மிஞ்சனால் குளிகை : இரசம், பெருங்காயம்,சத்திச் சாரம், எவட்சாரம், இது மூன்றுக்கு விபரமறிந்து, திரிகடுகு, கெந்தகம், பஞ்சலவணம், கொடிவேலிவேர், மருள் எருக்கு, பிரண்டை, காட்டுக் கருணை இது முதலான வேர், பட்டை, திரிபலை, நாபி இவை சரிகட்டி எருக்கம் வேர் கசாயத்திலே இரண்டு நாள் அரைத்து, பாலு காயாந்திரத்திலே இரண்டு சாமம் யெரித்து, பின்பு நாய்ப் பிச்சுவார்த்து அரைத்து, குன்றிப்பிரமாணம் உருட்டி இளநீரில் காசெடை கொடுக்கவும். அப்பினியாச சன்னி தீரும். இதற்கு பத்தியம் தயிருஞ் சோறும் கொடுக்கவும்.

இந்தக் குளிகை அனுபானமறிந்து கொடுக்கவிட சுரம் தீரும். இது காலவயிரவம். (சு.8)

## இரத்தோட்டக சன்னி

குணம் : நாக்கும் உதடும்வெடிக்கும், வயிறு ரத்தமாய்க் கழியும், சுரம் வரும், உட்டிணமாயிருக்கும், உதடு உலரும், சித்தப்பிரமையாம், நினவழிந்து விக்கலெடுக்கும், வயிறு கழியும், சோர்ந்து விழும், காதுகேளாதிருக்கும், தலைச்சுற்றுதல், நாக்குக் கறுத்து முள்ளுப்போலே இருக்கும். கண்சிவந்து இருக்கும். ஆகாசத்தைப் பார்க்கும்பொழுது ரத்த வர்ணமாகவும், கறுப்பு வர்ணமாகவும் காண்பிக்கும். இந்தப்படி குணமுண்டானால் இரத்தோட்டக சன்னியென்றறியவும்.

இதற்கு மருந்து : இருவேலிவேர், கடுக்காய், தாமரை வளையம், பற்படாகம், சந்தனம், சாதிக்காய், இலுப்பைப்பூ, அதிமதுரம், வேப்பம்பட்டை, முத்தக்காசு, விளாமிச்சம்வேர் இவை சரிகூட்டி பனிரெண்டு காசெடை, இருநாழி நீர் வார்த்து உழக்காய்க் காய்ச்சிக் குடிக்கவும்.

இதற்கு நசியம் : மாதளம் பூச்சாறாவது அல்லது அறுகம் புல்லுச் சாற்றிலாவது, ஈரவெங்காயச் சாறாவது நசியம் பண்ணவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : இரசம், நாபி, அப்பிரக செந்தூரம், கந்தக பற்பம், காரீய பற்பம், வெண்காரம் ஆகசரி கூட்டி, ஆலம்பால் வார்த்து, ஒரு நாளரைத்து தோளாந்திரங் கட்டி எரித்து, பின்பு, மீன், கிடா, மயில் இந்த வகைப் பித்திலே தனித்தனியே வகைக்கொரு நாளரைத்து, உளுந்துப் பிரமாணம் உருட்டிக் காயவைத்து, திப்பிலிக் கசாயத்தில் இரண்டு உளுந்துப் பிரமாணமிடவும். இரத்தோட்டக சன்னி மாறும்.

இது சன்னிபாத பயிரவம் (சு: 8)

## உருத்திராங்க சன்னி

குணம் : பிறவாபிக்குதல், எரிதல், சித்தப்பிரமை வருதல், கழுத்து நோகுதல், குத்துதல், கிடைகுடாமல் பிரளுதல், சாட்டியமாகுதல், தலைச்சுற்றுதல், உதடு உலருதல், கண்ட பேருடனே முறையிடுதல், நெற்றி, கழுத்து வேர்க்குதல், மோகமுண்டாம், தாபமுண்டாம் அல்லது பிதற்றல் வரும், வேதனைப்படும், காது கேட்டு கோளாது போலிருக்கும், அறிவு மயக்கமும் உண்டு, உடம்பு வேதனையுண்டு. இந்தப் படிக்குக் குணங்களுண்டாகில் உருத்திராங்க சன்னி யென்றறியவும்.

இதற்கு மருந்து : முத்தக்காசு, சந்தனம், சுக்கு, பற்படாகம், இலாமிச்சு, இருவேலிவேர் இதுஒவ்வொன்றும் இரண்டு காசெடை இருநாழி நீர் வார்த்து உழக்காய்க் காய்ச்சிக் குடிக்கவும். பின்னையும், பிரமி, முந்திரிகைப் பழம், மூத்தக்காசு, வசம்பு, விடத்தலை வேர், கொன்னை வேர்ப்பட்டை, கடுகுரோகணி, நெல்லிமுள்ளி, தான்றிக்காய், சித்தாமுட்டிவேர், வேப்பம் பட்டை, பேய்ப் பீர்க்கு, நிலவேம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கொடிவேலிவேர், தேவதாரம், பாதிரிவேர், முன்னை, கூவிளம்வேர், பெருவாகை.

பெருங்குமிழ் இந்த ஐந்து வகையும் வேர், நரம்பு, சித்தா மல்லி, பேராமல்லி, சிறுவழுது, கண்டங்கத்திரி, நெருஞ்சி இவை யெல்லாம் சரியொக்கக் கூட்டி நிறுத்து இடித்து வைத்துக் கொண்டு, 12 காசெடை, இருநாழி தண்ணீரில் போட்டு, எட்டில் ஒன்றாய்க் காய்ச்சிக் கொடுக்கவும். பின்னையும், கடுக்காய், பற் படாகம், முத்தக்காசு, சுக்கு, திப்பிலி, கொன்னை வேர்ப்பட்டை, முந்திரிகைப்பழம் இவை சரிகூட்டி, 12 காசெடை, இருநாழி நீர் வார்த்து, உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : தாம்புர பற்பம், லோகம், சத்திபடசாரம், எவச்சாரம், படிகாரம் இவை சரிகூட்டி பஞ்ச லோக கசாயத்திலே ஒரு நாளரைத்து, தோளாந்திரத்திலே ஒரு சாமம் யெரித்து, பின்பு கோழி பித்திலே அரைத்து, இரண்டு உளுந்துப் பிரமாணம் தேனும் திப்பிலியும் கூட்டி, அதில் கொடுக்க உருத்திராங்கசன்னி தீரும். இது உக்கிரபயிரவம். (சு.8)

## கருணீக சன்னி

குணம் : வாய் பிதற்றுதல், பிறவாபிக்குதல், நாக்கு கீற்றாக வெடிக்குதல், விக்கலும் இரைப்பும் வருதல், உடம்பு அசைத்தல், காதுகேளாதிருக்குதல், சோம்பல், சுவாசம், நடுக்குதல், அலத்துதல், மார்பு அடைத்தல், உடம்பு வேதனை இந்தப்படி குணமுண்டானால் கருணீக சன்னியென்றறியவும்.

இதற்கு மருந்து : அரத்தை, சிறுவழுதலைவேர், பற்படாகம், முத்தக்காசு, கடுகுரோகணி, சுக்கு, மிளகு, திப்பிலி, செங்கழுநீர், கோட்டம், வசம்பு, கற்கடகசிங்கி, கடுக்காய் நேர்கூட்டி மிளகுப் பிரமாணம் உருட்டிக்காயவைத்து, அனுபான விசேடத்திலிட கருணீக சன்னி தீரும்.

பத்தியம் : சர்க்கரையும், பாலுஞ்சோறும், இளநீர், கரும்பு கூட்டலாம். இது கல்யாணவயிரவம். (சு.8)

## சிங்கிவாத சன்னி

குணம் : சுவாசமிடும், உட்ணமாயிருக்கும், தாகமாயிருக்கும், கைகால் யெரியும், நாக்குக் கறுத்து முள்ளுப்போலே இருக்கும், வாய்திறவாமல் இருக்கும், காதுகேளாது, நாக்கு உள்விழுந்து தோணும், ஊமையாயிருக்கும், தவிப்புவரும். இந்தப்படி குணங் களுண்டாகில் சிங்குவாதசன்னி யென்றறிவான்.

இதற்கு மருந்து : தேவதாரம், கத்தூரி மஞ்சள், வேம்பின் பட்டை, தான்றிக்காய், கடுக்காய், பேய்ப்புடல், மரமஞ்சள், மஞ்சள், சுக்கு, சிறுவழுதலைவேர், செங்கழுநீர், கோட்டம், முத்தக்காசு, சீந்தில் இவை சமனாகக் கூட்டி, பனிரெண்டு காசெடையில் இருநாழி நீர்வார்த்து, உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : இரசம், அரிதாரம், சரிகூட்டி கத்தாழஞ்சாறு விட்டரைத்து, தோளாந்திரத்திலே ஒரு சாமம் எரித்து, பின்பு மீன் பிச்சு வார்த்து அரைத்து, இரண்டு சணல் விதைப் பிரமாணம் குளிகை பண்ணி, தேனும் திப்பிலியுங் கூட்டி யிடவும். சிங்கு வாத சன்னிமாறும். இது சித்தபயிரவம். (சு.8)

## சித்தப் பிரம சன்னி

குணம் : ஆங்காரத்தை யடைந்திருக்கும். மோகத்தையடையும்பித்தம் உண்டாம். சிரிப்பன, பாடுவன, ஆடுவன, அழுவன, தேகபீடையடையும். ஒரு வேளை கடைக்கண்ணினாலே பார்ப்பான். இது சித்தப் பிரமசன்னி யென்றறியவும்.

இதற்கு மருந்து : கடுக்காய், பற்படாகம், முத்தக்காசு, முந்திரிகைப்பழம், தேவதாரம், இருவேலிவேர், நிலவேம்பு, கொண்டைவேர், பட்டை, பேய்ப்புடல், இதுவகை ஒன்றுக்கு இரண்டு காசெடைக் கூட்டி, இருநாழி நீர் வார்த்து, உழக்காய் காய்ச்சிக் குடிக்கவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : இரசம், மனோசிலை, கந்தகம், இந்துப்பு, தாம்புர பற்பம் இவைசரிகூட்டி, கண்டங்கத்திரிப் பழச் சாற்றிலாவது, சிறுவழுதலைப் பழச்சாற்றிலாவது விட்டரைத்து நன்றாயரைத்து, குகையிலிட்டு, கலையத்திலே பாலுகாயாந்திர மாக பண்ணி, குழிவெட்டி, சிறுக ஒரு புடமிட்டு எடுத்து, பின்பு பசுவின் பிச்சிலரைத்து, சணல்விதைப் பிரமாணத்திலே குளிகை பண்ணி, இளநீர் காய்ச்சி, அதிலிட அல்லது திரிகடுருக் கசாயத்தி லிடவும். சித்தப்பிரம சன்னிதீரும். இதுமதனபயிரவம். (சு 8)

## சீதாங்க சன்னி

குணம் : தேகம் பனிப்போலே குளிர்ந்து இருமல் இரைப்புண்டாம், விக்கலெடுக்கும், வாந்தியெடுக்கும், உடம்புநோகும், அழுத்துதல், மூர்ச்சைவரும், வயிறுகழியும், தேகம்ஆடுதல் இந்தக்

குணங்கண்டால் சீதாங்க சன்னி யென்றறியவும். இதற்குப் பிர யோகமில்லை. சத்தியம் திரும்புகிறது. அருமையாயிருக்கும்.

இதற்கு நசியம் : இலுப்பைப் பூ சாற்றில், திரிகடுகு உரைத்து அல்லது வெள்ளாட்டுப்பாலில் உரைத்து நசியம் பண்ணவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : வெண்காரம், லிங்கம், கந்தகம் இரசம், அரிதாரம், லோகம், தாம்பூர பற்பம், வெள்வங்க பற்பம், காரீய பற்பம் இது சரிகூட்டி, திரிபலைக் கசாயத்திலே அரைத்து, பற்படாகக் கசாயத்திலே ஒருநாள் தோளாந்திரமாக யெரித்து, பின்பு நல்ல பாம்புப் பீச்சிலே அரைத்துக் குன்றிப் பிரமாணம் குளிகை. அனுபானம் விசேடத்திலிடவும். சீதாங்க சன்னிதீரும். இது ஆனந்தபயிரம். (சு.8)

## தந்திரீக சன்னி

குணம் : எப்போதும் போலிருக்கிற உடம்பிலே குத்துதல், சோபமாயிருக்குதல், கால் வலிக்குதல், சேட்டுமமாய் இருக்குதல், தந்திரீக சன்னியின் குணமறியவும்.

தூக்கம் வராமலிருக்குதல், உடம்பு யெரிச்சலாக இருக்குதல், சிரிப்பு வராமலிருக்குதல், கண்புகைந்து இருக்குதல், இந்த குணங், களுண்டானாலும் தந்திரீக சன்னி என்றறியவும்.

இதற்கு மருந்து : சீந்தில் தண்டு, கச்சோலம், தேவதாரம், கோங்கு, சுக்கு, திரிபலை, தண்ணீர் மீட்டான் கிழங்கு இவை யெல்லாஞ் சரியாகக் கூட்டி இடித்து வைத்துக் கொள்ளுகிறது. 12 காசெடை, இருநாழி நீரை உழக்காகக் காய்ச்சி இறக்கி, குங்கிலியம் மேல்தூவிக் கொடுக்கவும்.

வேறுமருந்து : சீந்தில்தண்டு, சித்தாமணக்குவேர், சுக்கு, தேவதாரம், அரத்தை, கடுக்காய் இவை சமனாகக்கூட்டி 12 காசெடை, இரு நாழி தண்ணீரில் போட்டு உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

வேறுமருந்து : அரத்தை, சுக்கு, சீந்தில்தண்டு, மழைவண்ணக் குறிஞ்சி, முத்தக்காசு, விடத்தலைவேர், கடுக்காய், சதகுப்பை, கடுகுரோகணி, பேரீச்சம்பழம், ஆடாதோடையிலை, ஆமணக்கு வேர், முன்னைவேர், பெருவாகைவேர், பாதிரிவேர், பெருங்குமிள வேர், பனைமட்டைதள்ளி நரம்பு கூட்டவும், சித்தமல்லிவேர், பேராமல்லிவேர், சிறுவழுதிலைவேர், கண்டங்கத்திரிவேர்,

நெருஞ்சிவேர் இவையெல்லாஞ் சரியாகக் கூட்டி 12 காசெடை யெடுத்து, இருநாழி நீர் வார்த்து, உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்க வும். கடுகு, வேப்பிலை, நறும்பிசின் இவையெல்லாம் முகத்திலே யும் உடம்பிலும் பட தூபம் போடவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : இரசம், சந்தகம், தாம்பிர பற்பம் இவை சரிகூட்டி, கொடிவேலி கசாயம் விட்டரைத்து, குகையிலே அடைத்து, மண் செய்து, பாலுகாயாந்திரத்திலே ஒரு நாள் எரித்து ஆறினவாறே எடுத்து, பூனைப் பிச்சுவிட்டு ரெண்டு சாமம் அரைத்து, குன்றிப்பிரமாணம் உண்டை பண்ணி வைத்துக் கொண்டு அனுபான விசேடத்திலிட, தந்திரீக சன்னிமாறும். இதுவும் தேசுவாரசம், பத்தியம், இச்சாபத்தியம். இளநீர்கொடுக்க லாம். தக்கபடி அறியவும்.

## தருண குப்பு சன்னி

குணம் : பிரமை, தாகம், தலைச்சுற்றுதல், கழுத்து நரம்பை இழுத்துக் கொள்ளும், புலம்பும், பயப்படும், மூர்ச்சைவரும், உடம்பு நோவும், இருமல், வாந்தி, விக்கல், தலைநோவும் இந்தப் படி குண முண்டாகில் தருண குப்பு சன்னி என்றறியவும்.

இன்னும் அதன் குணம் : தொண்டைக் கட்டு, மூர்ச்சை, தாகம், உடம்பு நடுக்கும், சுழலும், தலையெடுக்கப் போகாது. வாதம் அதிகப்படும். உடம்பு அசயப்போகாது. இந்தப்படி குண முண்டாகில் தருணகுப்பு சன்னி என்றறியவும்.

இதற்கு மருந்து : கற்கடகசிங்கி, வெட்பாலைஅரிசி, தாழைக் குருத்து, முத்துக்காசு, கத்தூரி மஞ்சள், நிலவேம்பு, சிறுதேக்கு நுணா, மஞ்சள், கடுகுரோகணி, கோட்டம், சித்திரமூலம், செவ் வியம், சுக்கு, திப்பிலி, பெருங்குமிழின் வேருள் நரம்பு, நெல்லி முள்ளி, தேவதாரு, தான்றிக்காய், மிளகு, கண்டங்கத்திரிவேர், ஆடாதோடை இலை இது வெல்லாம் சமனாகக் கூட்டியிடித்து வைத்துக்கொண்டு, பனிரெண்டு காசெடை, இருநாழி நீர்வார்த்து யெட்டிலொன்றாய்க் காய்ச்சிக்கொடுக்கவும். மேல்பொடி, மிளகுப் பொடி தூவிக்கொடுக்கவும்.

இதற்குமிஞ்சினால் குளிகை : இரதம், வெண்காரம், கந்தகம், நாபி, வங்கபற்பம் இவைகூட்டி, திரிபாலைக் கசாயத்திலே இரண்டுநாள் அரைத்து, குண்டுமணிப் பிரமாணம் குளிகைபண்ணி வைத்துக்கொண்டு, இஞ்சிச் சாற்றிலிடவும். தாகமானால் குளிர்ந்த நீர் கொடுக்கவும்.

பத்தியம் : தயிருஞ்சோறுங் கொடுக்கவும். இதற்கு மருந்து பூர்வச் சந்த பயிரவம். தருண குப்பு சன்னி தீரும். (சு.8)

## தாந்திரீக சன்னி

குணம் : வாய்பிதற்றுதல், நாக்குக்கறுத்து முள்ளுப்போலே இருக்குதல், நாக்கில் தண்ணீர் இல்லாமலிருக்குதல், உதடு உலருதல், தாபரமா இருக்குதல், வயிறுகழிதல், சுவாசமெடுக்குதல், தினவெடுக்கும், கண்படுத்து இருக்குதல், கண்ணீர் பாயுதல், சுரம் அதிகப்படுதல், அதிசார தாகம், தேகம் உப்பி இருக்கும், காது கேளாது, வாய் பேசமாட்டான், தொண்டைக் கட்டாயிருக்கும் இந்தப்படி குணம்உண்டாகில் தாந்திரீக சன்னி யென்றறியவும்.

இதற்கு மாத்து : சிறுதேக்கு, செங்கழுநீர், கோட்டம், கடுக்காய், கண்டங்கத்திரிவேர், சுக்கு, சீந்தித் தண்டு வகை ஒன்றுக்கு இரண்டு காசெடை கூட்டி, இருநாழி நீர்வார்த்து, உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

இதற்கு நசியம் : செங்கழுநீர், கோட்டம், வெள்ளைக் காக்கணைவேர், சுக்கு, நுணா, மஞ்சள், மிளகு, திப்பிலி, வெள்ளாட்டு மூத்திரத்தில் நசியம் பண்ணவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : எவச்சாரம், சத்தியவச்சாரம், படிகாரம், பஞ்சலவணம், தாம்புரம், ரசம் இவை சரிகூட்டி, எருக்கம் வேர்க்கசாயத்திலே மூன்றுநாள் அரைத்து, வச்சிரக்குகை யிலிட்டு மண்செய்து, பாலுகாயாந்திரத்திலே ஒரு நாளெரித்து ஆறின வாறெடுத்து, கழுதைப் பித்துவிட்டு அரைத்து, உளுந்துப் பிரமாணம் உருட்டி நிழலுலர்த்தித் தேனிலிடவும். தாந்திரீக சன்னிமாறும். இது மனோகர பயிரவம். (சு.5)

## பிறவாப சன்னி

குணம் : சரீரமெல்லாம் நடுங்குதல், புலம்புதல், இருமுதல், விக்கலெடுத்தல், உழலை, உட்டணமாயிருக்குதல், தாபசுரமாய் அடிக்குதல், புலத்துதல், தேகம் பயித்தியம் அடையும். அதில் அறிவும் அறியவும். காலனாகயெழாது, பிடரிக்கு வர்து பண்ணுவன். மனத்தாபம் அடைந்து சிந்தை வேற்றுமையாய், சரியான நோகு விருக்கும். இந்தக் குணங்களுண்டாகில் பிறவாப சன்னி யென்றறியவும்.

இதற்கு மருந்து : தகரை, அமுக்கிராவேர், பற்படாகம், சங்கங்குப்பி, தேவதாரம், கடுகுரோகணி, கருங்காலி, நெருஞ்சி

யிலை, முத்தக்காசு, கொன்னை வேர்ப்பட்டை, தாழங்குறுத்து, முந்திரிகைப்பழம் இவை சரிகூட்டி, பனிரெண்டு காசெடை, இரு நாழி நீர் வார்த்து, உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

இதற்கு மிஞ்சினால் குளிகை : இரசம், அப்பிரகம் இவை ரெண்டும் சமனாகக் கூட்டி, கையாந்தகரைச் சாறு விட்டரைத் துருட்டி, குகையிலிட்டு, சில்விட்டுச் சீலை மண்செய்து, பாலு காயாந்திரத்திலே ஒரு சாமம் யெரித்துப் பின்பு காட்டுப்பன்றிப் பிச்சும் இலைப்பிச்சிலையும் அரைத்து, உளுந்துப் பிரமாணம் அனுபானமறிந்து இடவும். பிறவாப சன்னி மாறும். தாகமானால் மோர் கொடுக்கவும் தீரும். இது காருண்ணிய பயிரவம். (சு.8)

## புக்கு நேத்திர சன்னி

குணம் : கண்குறுவாமலிருக்குதல், கண்ணில் நீர்ப் பாயுதல், கண் தெரியாதிருத்தல், பிறவாபிக்குதல், சித்தபிரம்மை வருகு தல், சரீரம் அசைத்தல், தாகம், மோகம், தலைநடுக்கம், சுவாசம் தாகம், உடம்பு நடுக்குதல், சந்தாபம், கண் தளும்பு, கண் இடிய விழுந்து போவது, மோசம் போகாது, சுரம் அதிகப்படும். நித்தி ரையில் இப்படிக் குணங்களுண்டானால் புக்கு நேத்திர சன்னி குணமென்றறியவும்.

இரசம், வங்கபற்பம் சரிகூட்டி எருக்கம் பால் வார்த்தரைத்து, தோளாந்திரங்கட்டி ஒரு சாமம் எரித்து, பின்பு கலைமான் பித்து விட்டரைத்து, ஒரு குண்டு மணிப் பிரமாணம் உருட்டிக் காய வைத்துக் கொண்டு, திரிகடுகுக் கசாயத் திலிடவும், புக்கு நேத்திர சன்னி தீரும். இது விசயபயிரவம். (சு.8)

## குளிருருண்டை

வெள்ளெருக்கம் பட்டை கழஞ்சு 1, வெள்ளைப் பாடாணம் கழஞ்சு 1,அரிதாரம் கழஞ்சு 1,வெளளெருக்கலஞ் சாற்றிலரைத்து சிறு பயறளவு உருண்டை செய்து, இள வெந்நீர் கொடுக்கவும். பொறுக்கும். வாந்தி செய்தால் மிளகுநீருஞ் சோறுங் கொடுக்கவும். (சு 20)

(வேறு)

பூனைக் காலி சமூலந் துவைத்து, காடியில் பிழித்து வடி கொண்டு,சர்க்கரையும் நெய்யும் கூட்டிக் கொடுக்கவும்.(சு.20)

(வேறு)

தைவேளையிலையை வாட்டிச் செவியிற்பிழியக்குளிர்போம். தும்பைச் சாறு கண்ணிலிடத் தீரும். (சு.10)

## சன்னி, குளிருக்கு

உழக்கு வேப்பெண்ணெய், நெல்லிக்காய் கந்தகம் கழஞ்சு 8, வசம்பு கழஞ்சு 8, வெள்ளைப் பூண்டு தோடு நீக்கி, கருஞ்சீரகம் கழஞ்சு 8, இது ஒக்க அரைத்து எண்ணெயில் போட்டு வேகவைத் திறக்கி வடித்து, நாசியிலும் விட்டு, காதிலுமடைத்து, புறமுந் தடவத் தீரும். (சு.5)

## கரப்பன், வெடிசிரங்கு தீர

கட்டாய் சூலைக் கரப்பன்புண்
கடிய கிரந்தி யிதுக்கெல்லாந்
தொட்டா லதனால் விட்டோடச்
சொன்னோம் வெகுஉப ணியங்கேள்
மட்டா யசடு வையாமல்
வகுத்தோங் கரப்பன் வெடிசிரங்கு
குட்டா யோடச் சேங்கொட்டை
கூட்டு மெண்ணெய்க் கொடுங்கிடுமே.

சேங்கொட்டை யிருகூறு நல்ல கெந்தி
தெளிவுள்ள தகட்டரி தாரமி ரண்டு
பாங்குடனே பகுடுபாதி கூட்டி நான்றாய்ப்
பரிவுபொடியு டன்காய்ச்சத் தயில மாகும்
நீங்காத ஒருமிடாத் தண்ணீர் தன்னில்
நீதயிலம் விட்டுவைத்து நேரமஞ்சு சென்று
வாங்குவாய் நீரெண்ணெய் போலெடுத்து ரவியில்
வைத்தெடுத்துப் புண்ணிலிட்டுக் குளிக்க வாங்கும்.
(சு.1.பா.384,385)

(செய்முறை : சேங்கொட்டை இருகூறு, கெந்தி, தகட்டரி தாரம் இவை இரண்டு பங்கு கூட்டிப் பொடியாக்கிக் காய்ச்சத் தைலமாகும். தண்ணீரில் இத்தைலத்தை விட்டுவைத்து, ஐந்து மணிநேரம் சென்றபின் அதையெடுத்து, சூரியபுடம் வைத் தெடுத்துப் புண்ணிலிட்டு, முறைப்படி குளிக்க நீங்கும்.)

## கரப்பன், சிலந்திக்கு

சொல்லுறேன் கரப்பனொடு சிலந்திக் கெல்லாம்
நல்பெரிய நன்னாரி சிறுகு றிஞ்சா
நல்மூலம் நிலவேம்பு நாட்டக் கேளே.

நாட்டவே யந்தரத் தாமரையின் வேரும்
நயமான நெல்லிமுள்ளி ஈசரி மூலி
கூட்டுவாய் கொழிஞ்சிவேர் பருத்தி வேருங்
கூறான பேய்ப்பீர்க்கின் கூடு தானும்
வாட்டமணித் தக்காளி வேருங் கூட
வரைந்திடித்து வெள்ளாட்டு நீரை வார்த்து
நீட்டியே பிசைந்தைதனை வடிதான் கட்டி
நிம்பநெய் நல்லெண்ணெய் தேங்காய் நெய்யே.

நெய்யுடனே புங்கெண்ணெய் நாலும் நேராய்
நீகலந்து மருந்துசாறே நெகிழ வார்த்து
மெய்யாக வடித்திறுத்துக் குடிக்கச் சொல்லு
மேலுக்குப் பூசிடவே விரணந் தீருங்
கொய்யவே அந்திக்கு வெந்நீர் விட்டுக்
குளித்துவரச் சொல்லவே குணமாம் பாரு
எய்யாத சடைக்கிரந்தி கொடிய தாகும்
இயம்புகிறேன் மருந்துவகை யியம்பு றேனே.

(சு.1 பா.469-471)

(செய்முறை : நன்னாரி, சிறுகுறிஞ்சா, நிலவேம்பு, ஆகாயத் தாமரையின் வேர், நெல்லிமுள்ளி, ஈசரிமூலி, கொழிஞ்சிவேர், பருத்திவேர், பேய்ப் பீர்க்கின் கூடு, மணத்தக்காளிவேர் இவற்றைச் சேர்த்திடித்து, வெள்ளாட்டு நீரை வார்த்துப் பிசைந்து வடிகட்டி, இவற்றுடன் நெய், நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய் இவை நாலும் சேர்த்துக் காய்ச்சி வடித்திறுத்துக் குடிக்கவும். மேலுக்குப் பூசிட இரணந் தீரும். மாலையில் வெந்நீர் விட்டுக் குளிக்கவும்.

தீரும் நோய்கள் : கரப்பன், சிலந்தி, கிரந்தி தீரும்.)

## கிரந்தி, கரப்பனுக்குச் சீனப்புகை

சீனப் புகைக்கு வகைகேளாய்
தெளிந்த சாதிலிங் கங்கடுகு
ஊன மில்லா கெந்தகமு
மொவ்வோ ரெடையாய்ச் சரிகூட்டி

ஆன பச்சைப் புகையிலைச்சாறு
அதனில் நன்றா யரைத்துப் பின்பு
யீனமில் லாதே கடலைப்
பிரமா ணமுலர்த் திடுமே.

உலந்த மருந்தை யெடுந்துவைத்து
ஓட்டில் பரப்பிபுளியஞ் சிராய்த்தணலில்
மலந்தே புகைக்கப் புண்மட்டு
மட்டாய்க் கவிய மூடியபின்
சலங்கொப் பளிக்குந் திரைவாங்கிச்
சேர்த்து வந்த பின்னந்தி
புலந்த போது புகையேத்து
பொங்கா ணோடு புகையினுக்கே. (சு.1.பா.353,354)

(செய்முறை : சாதிலிங்கம், கடுகு, கந்தகம் இவை ஓரளவு வாங்கிச் சேர்த்து, பச்சைப் புகையிலைச் சாற்றினால் அரைத்து, கடலையளவு உருண்டை செய்து உலர்த்தவும். பின், ஓட்டில் அம்மருந்தைப் பரப்பி, புளியஞ்சிராய்த் தணலில் அதைப் புகைத்து காலை, மாலை இருவேளையும் புண்ணில் காட்டக்கிரந்தி, கரப்பன் தீரும்.)

## சிரங்கு, கரப்பானுக்கு எண்ணெய்

... ... ... ...

தள்ளுதற்கு நல்லெண்ணெய் படிதான் காலாந்
தனித்தரு ருள்ளிச் சாறு மூக்குத்
தள்ளுதற்குத் துளசியிலைச் சாறு மூக்கு
சமன்கூட்டிப் பாதிதனை உள்ளுக்குக் கொள்ளு
தள்ளுதற்குப் பாதியிந்த மூன்றி னோடே
சழந்திர நெல்லிக்காய் கந்தகந்தான் கூட்டே.

கூட்டடா கந்தகந்தா னிருகழஞ்சு பொடித்திட்டுக்
கூசாமல் ராத்திரிக்கு முழிச்செண்ணெய் போடு
வாட்டடா கணப்பிலே வாட்ட வாட்ட
மறைந்திருந்த சிரங்குகளுங் கரப்பன் வீசு
மூட்டடா பழஞ்சோறு மோரு முண்டு
முளைகருக யெண்ணெய்தளம் போட்டு வாட்டு
தீட்டடா விடியுமட்டு மிப்படியே செய்தால்
சிரங்குமுதல் கரப்பனெல்லாந் தெளிந்து போமே.

போமப்பா உதயத்தி லரைப்பிட்டுக் குளித்துப்
பொசிப்பதுதான் மோருஞ்சோ றுண்ணச் சொல்லுப்
போமப்பா மத்தநாள் முழுகச் சொல்லும்
பொறுத்துப்போ முழுக்கதுதாள் தப்ப வேண்டாம்
போமப்பா சிரங்குபுண் கரப்பனொடு கிரந்தி
புண்பொடிக ளெல்லாம் போட்டுப் போகும்
போமப்பா யத்தோடே வாரா தேகும்
புகட்டுறேன் மண்டைக்கரப் பான்போகத் தானே.
(சு.1.பா. 113-115)

(செய்முறை : நல்லெண்ணெய் ½ படி (336மி.லிட்), ஈருள்ளிச் சாறு, துளசிச்சாறு இவை வகைக்கு ஓர்உழக்கு (336மி.லிட்) வாங்கி ஒன்றாக்கி, இதில்பாதியை உள்ளுக்குக் கொள்ளவும். பாதி எண்ணெயில் நெல்லிக்காய் கந்தகம் இருகழஞ்சு (10.2 கிராம்) பொடித்துப்போட்டு வாட்டி, சிரங்கு, கரப்பான்களுக்கு மேலே பூசி, விடிந்தபின் அரப்பிட்டுக் குளிக்கவும். தலையிலும் தேய்த்து முழுகவும்.

தீரும்நோய்கள் : சிரங்கு, புண், கரப்பான், கிரந்திதீரும்.

பத்தியம் : மோர்ச்சோறு உண்ணவும்.)

## வாதக்கரப்பனுக்கு

கையாந் தகரை நாயுருவி கருங்காலி யங்கு தூதுவளை
நெய்யாய் நிறைந்த யெருக்கலைவேர் வேலிப் பருத்தி யிவையேழும்
நெய்யா காது நல்லெண்ணெயில் நேரா யரைத்தே யடைசுட்டு
கையா லெடுத்துத் தின்பீரால் காணார் வாதக் கரப்பனையே.
(சு.20)

(செய்முறை : கையாந்தகரை, நாயுருவி, கருங்காலி, தூதுவளை, எருக்கலம்வேர், வேலிப்பருத்தி இவற்றைச் சேர்த்து, நல்லெண்ணெயில் அரைத்து, அடைசுட்டுத் தின்ன வாதகரப்பான் தீரும்.)

(வேறு)

எருக்கம் பாலோ டரிதாரம் எலியின் மருந்து கொடுவேலி
திருத்த மான வெள்ளுள்ளி சிறக்கும் வசம்பு சென்னகாரம்
பெருக்க ஓரொன் றறுகழஞ்சி பேணி யரைக்கிலைக் கள்ளியிலை
சுருங்க வாட்டி யிச்சாற்றில் சுகமா யரைத்துக் கொள்வீரே.

கொள்ளு நறுநெய் வேப்பெண்ணெய் குலாவு சிற்றா
மணக்கெண்ணெய்
எள்ளி லெண்ணெய் இவைநாலு இயல்பா யொருபடி
தான் கூட்டி
மெள்ளக் காய்ச்சிப் பதத்திறுத்து விரையக் கலசந்
தனிலடைத்து
உள்ளே கூடாம விடுமேலே உழைக்கும் வாதக் கரப்பனுக்கே.
(சு.20)

(செய்முறை : எருக்கம்பால், அரிதாரம், எலிமருந்து, கொடு வேலி, வெள்ளுள்ளி, வசம்பு, சென்னகாரம் இவை வகைக்கு ஆறு கழஞ்சு (30.6 கிராம்) வாங்கி, கள்ளியிலைச் சாற்றிலரைத்து' அதனுடன் நெய், வேப்பெண்ணெய், சிற்றாமணக்கெண்ணெய், நல்லெண்ணெய் இவை ஒருபடி(1. 3லிட்) கூட்டிக்காய்ச்சி வைத்துக் கொண்டு வாதக் கரப்பனுக்கு மேலிடவும் திரும்.)

## ஊதுக் கரப்பன், கொள்ளிக் கரப்பான், சொறிகரப்பன், சகல கரப்பனுக்கும் விளக்கெண்ணெய்

விளக்கெண்ணெய் ¼, சங்கங்குப்பிச்சாறு 1/16, இசங்கம்வேர் கழச்சியளவு, கழச்சியிலை அந்தளவு, விளக்கெண்ணெயில் காய்ச்சி மெழுகு பதத்திலிறக்கி வைத்துக் கொண்டு, ஆழாக்கு 3 நாள் கொடுக்கவும். முன் சொல்லப்பட்ட கரப்பன் வகையெல்லாந் திரும். (சு.16)

(வேறு)

தேங்காயெண்ணெய் படி ¼, தேங்காய்ப் பாலிலரைத்த இந்துப்புச்சரக்கு, லிங்கம், கந்தகம், தாளகம் கழஞ்சு 2, எல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து, கருஞ்சீரகம் கழஞ்சு 2, அடுப்பிலேற்றிப் பதம் ஈரமில்லாமல் பதமாகச்சுத்தி செய்து, பார்த்திறக்கிக் கொள்ளவும். இந்த ஐந்து சரக்குகளை மேற்படி தேங்காய்ப்பால் விட்டுத்தாளக மாக அரைத்துச் சேங்கொட்டை ஒழுக்குத்தள்ளி, ஒரு சாமம் அரைத்து, எண்ணெயுடன் சேர்த்து, மிச்சப்பாலையும் அதில் சேர்த்துப் பங்கம் பாளைச்சாறு படி ¼, எல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து அடுப்பிலேற்றிப்பதம் ஈரமில்லாமல் பதம் பார்த்திறக்கிக் கொள்ள வும். கடுகை வேறே பிழிந்து கொள்ளவும். மேற்படி கடுகைத் தேங்காயெண்ணெயில் குழப்பி ரவியில் காயவைத்துப் புண்புரை

களுக்கு ஆறக்கொடுப்பது. மேற்படி எண்ணெய், வியாதிக்காரனுக்கு ஒரு போது, சிறுகரண்டி எண்ணெய் உள்ளுக்குக் கொடுப்பது 3 பொழுது 5 பொழுதாகிலும் கண்டு கொடுக்கவும்.

இதற்குப் பத்தியம் : உப்பில்லாமல் பத்தியம். அதற்கு மாச் சலாக இருந்தால் உப்பு வறுத்துக் கூட்டிக் கொள்ளவும். சிறுபயறு வறுத்துக் கொரித்துக்கொண்டு அன்னப்பால் சாப்பிடவும்.

மறுபத்தியங் கழித்து ஆறப்போட்டு, விளக்கெண்ணெய் தேய்த்து முழுகவும். உடம்பிலும் துவாலை போடவும். சாயங் காலம் அரைப்புத் தேய்த்து வெந்நீர்விட்டுக் கழற்றிப் போடவும். (சு.19)

(வேறு)

விளக்கெண்ணெய் 1 படி, சங்கன், முருக்கிலை, நொச்சி, குட்டித்தக்காளி, சின்னியிலை, செப்பு நெருஞ்சி, தவசிமுருங்கை, சிலந்திஞாயிறு, செருப்படி, காட்டுத்துளசி ஆக வகை பத்தும் ஒன்றுக்குச் சாறுபடி அரைக்கால், இந்தச்சாறுபடி $1\frac{1}{4}$, அந்த எண்ணெயிலே விட்டு, கடைமருந்து கருஞ்சீரகம், கடுக்காய், கடுகுரோகணி, கருஞ்சூரைப்பட்டை, பறங்கிப்பட்டை, செவ் வள்ளிக்கொடி, ஈசுரவேர், புடபத்திரி, பூதகரப்பன்பட்டை ஆக இதுவெல்லாம் அரைத்துக்கலக்கிச் சாறும் எண்ணெயும் கூடக் கலந்ததில் கூட அரைத்த மருந்தைக் கலக்கிக் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்துக் கொள்ளவும். வடிக்கிற போது கோரோசனை $\frac{1}{4}$ கழஞ்சு பொடி செய்து கலசத்தில் போட்டு, வடிகொண்ட எண் ணெயைக் கலசத்தில் விட்டு வண்டுகட்டி, கரப்பான், புண், பிள்ளைகள் சீரணமாகாதிருக்கிறதற்கும், மந்தம் முதலான தெல்லாம் தீரும். இந்தப்படி கொடுக்கவும். (சு.10)

(வேறு)

வேப்பிலை கொண்டு வந்து இடித்துச் சுளகிலே போட்டு, புழுங்கலக் கொழியலரிசி கால்படி யெடுத்து அந்தச் சுளகிலே போட்டுத் தேய்த்து, அரிசியாம் படியெடுத்து உலர்த்தி வைத்துக் கொண்டு, அரைக்கால் படி அரிசி எடுத்துக் கஞ்சி வைத்து, இரண்டு சங்கு கொடுக்கவும் குணமாம். (சு.10)

(வேறு)

ஊமத்தஞ்சாறு படி $\frac{1}{8}$, நல்லெண்ணெய் படி $\frac{1}{8}$, துருசு, குற்றி முத்து வகைக்கு கழஞ்சு 3, எண்ணெயிட்டு அரைத்துக் காய்ச்சி,

மெழுகுபதம் பார்த்து இறக்கிக் கொண்டு, சிரங்கு, கரப்பனுக்குப் போடவும். (சு.19)

(வேறு)

சித்தாமணக்கெண்ணெய், வேப்பெண்ணெய் இவை சமன், கருஞ்சீரகம், சவரிக் கொத்தும் அரைத்து, வெந்து தேய்க்கவும் பொறுக்கும். (சு.20)

(வேறு)

கால்படி பசுவின்பாலும் கால்படி தண்ணீரும் விட்டு வேடு கட்டி வேடு மேலே ஒரு குத்து வெள்ளறுகு இலையை வைத்துக் கவுசட்டிமூடி, கால்படி தண்ணியாக வற்றினபிறகு இறக்கி, அந்தப் பாலில் அவித்த இலையை அதில் பிழிந்து, சித்திரைமூலம் ஒரு கழஞ்சு அதில் பொடித்துப் போட்டு உள்ளுக்குக் கொடுக்கவும். மூன்று நாளிந்தப்படி கொடுக்கவும். கரப்பான், சிரங்கு தீரும் பத்தியம். (சு.15)

(வேறு)

ஆடுதீண்டாப் பாளைவேர் 1 கழஞ்சு, பேய்முசுட்டைவேர் 1 கழஞ்சு, சங்கங்குப்பிவேர் 1 கழஞ்சு, பசுவின்பால்½ படி, கோமியம் ½ படி, வெள்ளாட்டுக்கோமியம் ½படி, வெள்ளாட்டுப்பால் ½படி முதல் மருந்தெல்லாம் அவித்துலர்த்திப் பொடி செய்து, பசுவின் நெய்யில் காய்ச்சி, பிள்ளைச்சங்கு அரைச்சங்குப் பிரமாணம், கொள்ளவும். உப்பு, புளி தவிர்த்து பத்தியங் காக்கவும் பொறுக்கும். (சு.20)

## சிரங்கிற்கு

காது காதுங் கயல்விழியீர் காலத் தாலே யெழுந்திருந்து
பாதங் கழுவிச் சாரடைவேர் பச்சை தின்ன வல்லீராய்ச்
சீதங் காதங் காதரைபோஞ் சிரங்கு தேம லிவைதீரும்
வாதங் வாதங் காதரைபோம் மற்ற பிணிகள் வாராதே.

(சு.20)

(குறிப்பு: காலையில் எழுந்த உடன் சாரடை வேரைப் பிடுங்கிக் கழுவி, பச்சையாகத் தின்னச் சிரங்கு, தேமல், வாதம் தீரும்.)

### சிரங்கு, தேமல்தீர்க்க

துன்னாது தூந்த குதமுந் துளையாம
பின்னாகம் பொன்னாகும் பெண்ணேகேள்-தின்னாமே
சாரடைவேர் பாலில் சமன்கொண்டு வெந்தக்கால்
நீருடனே சர்க்கரைதே னெய். (சு.20)

(செய்முறை : சாரடைவேரைப்பாலில் வேகவைத்து, அத்துடன் சர்க்கரை, தேன், நெய் சேர்த்துண்ணச் சிரங்கு, தேமல் தீரும்.)

### மேக சிரங்குகளுக்கு

சோம்பித் திரியு மானிடரே சும்மா சிரங்கைச் சொறிவானேன்
ஆம்பல் கிழங்கு வேம்பாடல் அவுரி கெவுரி பாடாணம்
வேம்புந் தயிலந் தனிற்கூட்டி வெய்யி லுலர்த்தி மெய்யிலிட
சாம்பற் பூத்த சிரங்கெல்லாந் தழும்புங் கூடக் கிடையாதே (சு.15)

(செய்முறை : ஆம்பல் கிழங்கு, வேம்பாடல், அவுரி, கெவுரி பாடாணம் இவற்றை வேப்பந் தைலத்தில் கூட்டி, வெய்யிலிலுலர்த்தி உடம்பில் பூசச் சிரங்குகளெல்லாம் தழும்புகளுடன் மறையும்.)

### கரப்பான், சிரங்கிற்கு மருந்து

நிலவாகைச் சமூலம் எலுமிச்சங்காயளவு மூன்று நாள் காயவைத்ததை அரைத்து, அரைப்படி எருமை மோரில் கலக்கி, ராத்திரி பனியில் வைக்கத் தெளியும். அதை இறுத்துச்சாப்பிடவும், அந்தக் கற்கத்தை மேலே துவாலை போட்டு, சாயங்காலங் குளித்துப் போடவும். இந்தப்படி மூன்று நாள் செய்விக்கவும் தீரும். (சு.15)

(வேறு)

கரப்பானுக்குக் கொடிக் கழச்சி வடக்கே போன வேரைக் கொண்டு வந்து மேல் தோலியை பிச்சு, பால் விட்டரைத்துப் பசுவின் பாலில் குடிக்கவும். இதற்குப் பத்தியம், உப்பு, புளி, புகையிலை ஆகாது. (சு.4)

### சொறி சிரங்கிற்கு

நல்லெண்ணெய் படி ¼, பழச்சாறு படி ¼, கஸ்தூரி மஞ்சள் வாரகன் 1, விடமூங்கில் கிழங்கு வராகன் 2, கருஞ்சீரகம் வராகன்

1, நாகமல்லிகைச் சாறு படி 4, கந்தகம் வாரகன் 1, எண்ணெயெரித்து, பழையது சாப்பிட்டுக் கொண்டு, சாயந்திரம் சுட்ட உப்புப் போட்டு வெந்நீரில் குளிக்கவும். (சு.14)

(வேறு)

பீசம்பட்டை, விளாம்பட்டை, பூவரசம் பட்டை மூணும் சமமாய் இடித்து, ராத்திரி ஊறவைத்து, காலமே தண்ணிஇறுத்து, அதில் தேங்காய்ப் பால் சேர்த்து, நாகம் வராகன் 1,கருஞ் சீரகம் வராகன் 1, சேர்த்து எரித்து எண்ணெயெடுத்து, சொறி சிரங்கிற்குக் காலை சாப்பிட்டு, தடவி, சாயங்காலம் சுட்ட உப்புப் போட்டுக் குளிக்கவும். (சு.14)

(வேறு)

சங்கங்குப்பியிலையும், வெள்வெங்காயமுமரைத்துப் பழங்காடியில் கலக்கி, உடலெல்லாம் துவாலையாப் போட்டு, அந்திக்கு உப்பு மஞ்சளும் போட்டு, வெந்நீர் காய்ச்சிக் குளிக்கவும். சிரங்கு பொறுக்கும். (சு.20)

## கீரை கடிக்கு எண்ணெய்

சித்திரப் பாலாடைவேர், மிளகு, தக்காளிவேர், பழம்பாசிவேர், தகரைவேர், வல்லாரை வேர், ஒருஎலுமிச்சங்காயளவு உழக்கெண்ணெய், வெந்தயம் கழஞ்சு1,ஈரவெங்காயம் அரைச்சிறங்கை, இந்தப்படி மருந்தெல்லாம் எண்ணெயில் போட்டு, ஈரவெங்காயம் சிவந்த பதத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவும். பிராயவேர், பிரண்டைவேர், சீந்தித் தண்டு, சிறுகாஞ்சோரி வேர், கருஞ்சூரைவேர் இதுவெல்லாம் உழக்கு விளக்கெண்ணெய்க்கு அரைச்சது கழஞ்சு ,ஒரு கொட்டைப் பாக்களவு எண்ணெயில், போட்டு, வசம்பு, வெள்ளுள்ளியுங் கூடப் போட்டுக் காய்ச்சி பதத்தில் இறுத்துக் கொள்ளவும். (சு.10)

## கவுசி, நீராமைக்கு

... ... ...

விரவத்த துருசினா லாடக் கேளு
வராக விரண்டு பத்தங்கே துருசு தூக்கே.

தூக்கினிதோர் துருசுதன்னைச் சுத்தி செய்து
சுருட்டிடுவா யேரண்ட யிலையே ழப்பா
தாக்கவே வெள்ளுள்ளி கவசங் கட்டித்தான்
திரும்பயிலை கொண்டு பொதிந்துக் கட்டித்

தேக்கமுட னுமிக்காந்தற் குள்ளே வைத்துத்
திறமாக மறுநாள்நீ யெடுத்து வைத்து
ஆக்கமுறு தேங்கா யில்வெரு கடியுந்
திருகியதி னுடனேவெள் ளுள்ளியரைத்துச் சேரே.

வெள்ளுள்ளி துருசுபற்பம் வராகன் கால்காண்
வெதிச்சு எட்டுநாள் விழுங்கத் தீரும்
வள்ளலே பத்தியங்கேள் சாமைக் கஞ்சி
வாய்கைகால் கொப்பளிக்க வெந்நீ ரல்லால்
எள்ளளவும் பத்தியங்கள் பிசகி னாக்கால்
என்மேலே குறையில்லை யிடுக்கண் ணெய்தும்.
(சு.1.பா.455-457)

(செய்முறை : துருசு 20 வராகன் (84கிராம்) வாங்கிச் சுத்தி செய்து, ஆமணக்கிலை ஏழில் சுற்றி, வெள்ளுள்ளியால் கவசம் செய்து, மீண்டும் இலையில் பொதிந்து, உமிக் காந்தற்குள்ளே வைத்து, மறுநாளெடுக்கவும். வெருகடி தேங்காயும், வெள்ளுள்ளியும் அரைத்து, துருசுபற்பம் கால் வராகன் (1.05 கிராம்) சேர்த்து, எட்டு நாள் உண்ணவும்.

தீரும்நோய்கள் : நீராமை, கவுசி.

பத்தியம் : சாமைக் கஞ்சி உண்ணவும். கைகால் கழுவவும், வாய் கொப்பளிக்கவும் வெந்நீர் பயன் படுத்தவும்.)

## புண்ணிற்கு

சிற்றாமணக்கிலை இரண்டிலை ஒன்றாய்ப் பிடித்து, அதனுள்ளே வேப்பங் கொழுந்தை வைத்து, உமிக்காந்தலில் புதைத்து, வெந்த போது யெடுத்து, வேப்பங் கொழுந்தைப் புண்ணிலே வைத்துக் கட்டவும், ஆறும். (சு.10)

(வேறு)

கறியுப்பு 3 பலம், புழுகு, மஞ்சாடி, செஞ்சந்தனம் 3 பலம் இது வெல்லாம் வெற்றிலைச் சாகத்திலரைத்து, திருமேனிச் சாகத்திலரைத்து, இளவெந்நீரில் 9 பொழுது கொடுத்து, வெந்நீர் பரிமாறி, ஒன்பது பொழுது வெந்நீர் தலைவழி தாரை விட்டுப் பத்தியங் காக்கவும். புண் பொறுக்கும். (சு.20)

(வேறு)

இரதம் 2பலம், சாதிலிங்கம் 2பலம், காந்தம் 2 பலம், நெல்லிக்காய் 1 பலம், கந்தகம் 2 பலம், கருப்புக் கட்டி 2 பலம் ஆக

வெற்றிலைச் சாகத்திலரைத்து, 9 உண்டை செய்து, 9 பொழுது கொடுக்கவும். வெந்நீருமாம். குளிர்ந்த தண்ணீருமாம். உப்பு தவிர்த்து பத்தியங் காக்கவும். (சு. 20)

(வேறு)

பாடாணம், கெவுரி பாடாணம் இரண்டும் பொடி செய்து, புதையை நீக்கிப் பொடியைப் போடவும். பிறகு சீனம், பறங்கிப் பட்டை அரைத்துத் தேய்க்கவும். பிறகு மாதளை இலையைப் பிட்டவியல் செய்து கட்டவும். இந்த மூன்று மருந்தும் மூன்று நாள் செய்யவும். இந்தப்படி 16நாள் செய்யவும். இதற்குத் தீரும் வியாதி கறிப்புத்து, சலப்புத்து, நீர்ப்புத்து, வாத சிகாயப் புத்து, தினப்புத்து, அரிசிப்புத்து இது வெல்லாந் தீரும். இதுகளிலிருந் தால் திருகு கள்ளிப் பாலில் கரிமஞ்சள், ஆமணக்கெண்ணெய் காடி இது வெல்லாங் கூட்டிச் சீலையிலூட்டிப் புண்ணிலிடவும். (சு.5)

## சகல புண்ணுக்கு எண்ணெய்

துத்தம், துரிசு வகைக்கு பலம் 6 பொடித்துப் போட்டுப் பாலெண்ணெய் பலம் விட்டுக் காய்ச்சி, மெழுகு பதத்தில் கடுகோடே புண்ணில் போடவும். (சு.5)

## புண்ணுக்குக் குழம்பு

வெள்ளைக் குந்திருக்கம் கழஞ்சு 3, சுக்காம் பாருக் கல்லுச் சுட்டரைக் கழஞ்சு, இரண்டு நல்லெண்ணெய் விட்டரைத்து, மறுபடி தண்ணீர் விட்டரைத்துக் குழம்பாக்கி, சீலையிலூட்டிப் புண்ணுக்குப் போடவும். பொறுக்கும். உப்பு, புளிதவிர்த்துப் பத்தி யங்காக்கவும். (சு.20)

## பறங்கிப் புண்ணிற்கு

வறட்பூலா யிலையைக் கருக்கிப் பொடி பண்ணி வைத்துக் கொண்டு, அந்திக்கு, விடிவேறு இரண்டு பொழுதும் அந்தப் புண்ணின் பேரிலே தூவவும். இப்படி ஏழுநாள் தூவி எட்டாநாள் முதல் தண்ணீரில் அஞ்சு நாளைக்குக் குளித்து வரவும் புண்துவன்று போம். (சு.10)

## பித்தப் புண்ணுக்கு

நாயுருவிவேரும், நத்தைச்சூரி வேரும், நெருஞ்சி வேரும், வட்டச் சாரணை வேரும் இராமிச்சம் வேரும் சமன் கொண்டரைத்து, எலுமிச்சங்காயளவும், ஆழாக்கு நல்லெண் ணெயில் கலக்கிக் குடிக்கவும்.

அசனஞ் செய்கிறபோது புளியும் கருப்புக் கட்டியும் கலக்கி, உரிச்சாகம் சோற்றில் விட்டுண்ணவும். பொறுத்து முழுகிறபோது உப்பு, புளி தவிர்க்கவும். (சு.20)

## புரை விழுந்த புண்ணுக்கு

சீனக் காரமும், சிறுவழுதிலையும் அரைத்துப் புண்ணில் செலுத்தவும். (சு. 20)

## வெட்டுப் பட்ட புண்ணிற்கு

மருதம் பட்டை உலர்த்திப் பொடி செய்து, நல்லெண்ணெயில் வெந்திடத் தீரும்.

விட்டுணுக் கிரந்தியும், வெள்ளைக் குங்கலியம், சத்து மஞ்சளு மரைத்து, விளக்கெண்ணெயில் வெந்திடச் சகல புண்ணும் புழுத்த புண்ணும் ஆறும். அரளி வேர் நல்லெண்ணெயில் வெந்திடத் தீரும். (சு.10)

## இரணங்களுக்குப் பிளாஸ்திரி

தேங்காய் எண்ணெயில் வெள்ளை மிளகு, வெள்ளைக் குங்கிலியம் வராகன் 1, மஞ்சள் பொடி வராகன் 1 போட்டு, மேற்படி யெல்லாம் போட்டு அரை. துணியில் தடவிப் போட ஆறும். (சு 10)

மேற்படி வியாதிக்கு வீக்கத்திற்கும் பூசமருந்து

மரக்கொன்றை, கார்த்திகைக்கிழங்கு, குன்றிப் பொடி, பட்டை, கஞ்சா, வசம்பு, காயம், வெள்ளுள்ளி வகைக்குச் சமயெடை சேர்த்தரைத்து மேல் பூச வீக்கம் போகும். (சு. 10)

## அரையாப்புக்கு

பெருங்காயம், ஒரு தூதுவிளங்காயளவு கீழ்வாநெல்லி வேர் அரைத்து, ஒரு கொட்டைப் பாக்களவு அவுரியிலையரைத்து அவ்வளவு இதுவெல்லாம் ஒன்றித்து நல்லெண்ணெயில் பிரட்டி விழுங்கத் தெறித்து வற்றிப்போம். (சு.10)

(வேறு)

கீழ்வாநெல்லி வாய் போசமல் பிடுங்கி அரைத்து, நெல்லிக் காயளவு மூன்றுண்டை நல்லெண்ணெயில் பிரட்டி முழுங்கவும். பிறகு ஆழாக்கு எண்ணெய் குடிக்கவும். இப்படி ஐந்து நாள் கொள்ள அரையாப்புத் தெரித்து வற்றிப்போம். இதற்குப் பத்தியம் நல்லெண்ணெயும், நெத்தலிக் கருவாடுமாம். உப்பு, புளி ஆகாது. இது சோதனை. (சு. 10)

(வேறு)

அமுக்கிராவேர் வெட்டி வந்து, நிணலுலர்த்தாயுலர்த்திப் பொடிபண்ணி, நாழிப் பொடிக்கு நாலு வராகனெடை கற்பூர சிலாசத்துப் பொடித்துக்கூட்டித்தின்னவும். ஒரு வெருகடிப் பிரமாணம் தேனில், நெய்யில் குழைத்து நாற்பது நாள் தின்னவும். (சு.10)

(வேறு)

மெழுகு அனலிலே இளக்கி, ஒரு வாரகனெடை வெள்ளைப் பாடாணத்தூள், மோருடன் பாசாணத்தூளைப் பிசரிப் பிசஞ்சு, மறுபடியும் அனலிலே இளக்சி, வில்லையாகத் தட்டி, அரை யாப்புக் கட்டிமேலே வைத்துக் கட்டிப் போடவும். ஒரு கட்டுக் கட்டிப் பார்த்துக் கொண்டு மறுபடியும் ஒரு கட்டுக் கட்டிப் போடவும். சொஸ்த்தமாப் போகும். (சு.11)

(வேறு)

வசம்பு, கடுக்காய்த்தோடு, அபின், களிப்பாக்கு இந்நாலும் கஞ்சித் தண்ணீரில் அரைத்து மூன்று போது பூசவும். வற்றிப் போகும். (சு.15)

(வேறு)

விளக்கெண்ணெய் படி முக்கால், எட்டிவிதை, இலவமஞ்சள் பலம் ¼, எண்ணெயில் வேகவைத்து மெழுகு பதம் பார்த்து இறக்கிக் கொள்ளவும். அரையாப்பு, புண் புரைகளுக்குத் தொட்டுப் போடவும். (சு.19)

(வேறு)

ஞாயிற்றுக் கிழமை உதயத்தில் அவன் பேரைக்கேட்டு அவனுக்கு வலதுபக்கம், இடது பக்க மென்றறிந்து, அவன்பேரைச் சொல்லி, கிழக்கு முகமாக நின்று கொண்டு, சூரியனைப் பார்த்து, கிழக்கே உதித்து வருகிற சூரிய பகவானே இன்னானுடைய அரையாப்புத் தணிய வேணுமென்று வேலிப் பருத்தி வேரைப் பிடுங்கி வெயிலில் போட்டு விடவும். வற்றிப் போகும். (சு.15)

(வேறு)

செவ்வாய்க் கிழமை காலையில் ஆதித்தனை நோக்கி நிற்கச் சொல்லி, நாயுருவி இலையைப் பறித்துப் போட அரையாப்புத் தீரும். (சு.16)

## குட்ட நோய்க்கு எண்ணெய்

மைந்தனே குட்டநோய் கிரந்தி சூலை
மகத்தான விப்புருதி பிளவை தீர
சுந்தரமே யெண்ணெயொன்று சொல்லக் கேளு
துருசுதுத்தம் அரிதாரம் கெந்தி லிங்கம்
முந்துமே வெண்ணெயொடு கெவுரி சூதம்
முழுநாவி எட்டிவிதை கரிய சீரகம்
இந்தவகை மருந்தெல்லாங் கழஞ்சு ரெண்டு
என்மகனே பொடிபண்ணி யெடுத்தி டாயே.

எடுத்திட்டுப் பாண்டத்தில் புங்கி னெண்ணெய்
யேரண்டத் தெண்ணெயொடு நிம்பி னெண்ணெய்
கடுத்திட்ட வகைமூன்று படிதான் மூன்று
மலப்பாம்புக் கண்டமது பலந்தா னாறு
தொடுத்திட்ட சங்கம்வேர் பலந்தா னாலு
தூளாக்கு யெண்ணெயொடு பாண்டஞ் சேரே.

சேர்த்துவிடு மருதோணி அழிஞ்சி வேருஞ்
சேர்த்துநீ குழித்தயிலம் படிகா லப்பா
வார்த்துவிடு பாண்டத்தில் யெல்லா மொன்றாய்
வாகாக யேழுதின மாவியில் வைத்து
நேர்த்தியடா கருடனுட கிழங்கங் கண்டம்
நீபோடு பலம்நாலு ஈருள்ளி நாலு
சார்த்திடிலே சங்கங்குப்பி படிதா னொன்று
தான்விட்டுச் சிறுகொதியாத் தாக்கி மூடே,

மூட்டுவாய் மயிலிறகு கரையு மட்டும்
உத்தமனே யெண்ணெய்தனை வடித்து வாங்கு
நீட்டுவாய் கழஞ்சியரை அந்தி சந்தி
நீபோடு ரெணந் தன்னி யிந்த யெண்ணெய்
காட்டுவாய் பத்தியந்தான் மூன்று திங்கள்
காத்திருக்கில் தீரும்நோய் மானாகக் கேளு
மாட்டுமே குட்டமது யெழுபத்தி ரெண்டு
வருங்கிரந்தி கரப்பனொடு சூலை போமே.

சூலையொடு பிளவைபுத்து கண்ட மாலை
நோய்ம றக்கும் புணர்ச்சி யாகா

வாலையடா இந்தவெண்ணெய் கொள்ளும் போது
வளருமே குறைந்ததெல்லா மைந்தா பாரு
காலுமடா விடகடிகள் கடலே புக்கும்
கனமான பத்தியந்தான் காரு காரே.

காராட்டால் மருந்துதான் யென்ன செய்யும்
கருங்குறுவை அரிசியுடன் சிறுபயறு மாகும்
நேராட்டாற் சூடுகொண்டு வெடிக்கும் மேனி
செப்பினேன் யிதையறிந்து யெண்ணெ யுண்ணு
போராட்டங் கோபத்தை அகலத் தள்ளு
புண்ணியனே களிம்பொன்று புகலக் கேளே.

(சு.21.பா.348-353)

(செய்முறை : துருசு, தூத்தம், அரிதாரம், கெந்தி, லிங்கம், வெண்ணெய், கெவுரி, சூதம், நாவி, எட்டிவிதை, கருஞ்சீரகம் இவை வகைக்கு 2கழஞ்சு (10.2கிராம்) வாங்கிப் பொடிசெய்து, புங்கெண்ணெய், ஏரண்டத் தெண்ணெய், நிம்பவெண்ணெய், இவை வகைக்கு 3 படி (3.9லிட்), மலைப்பாம்புக் கண்டம், சங்கம் வேர் இவை 4பலம் (140கிராம்) வாங்கி, அனைத்தும் தூளாக்கி எண்ணெயில் சேர்க்கவும். அத்துடன் மருதோணிவேர், அழிஞ்சி வேர் இவை சேர்த்து, குழித்தயிலம் ¼ படி (336மி.லிட்) வாங்கி, இவை அனைத்தும் ஒன்றாகச் சேர்த்து, ஏழுநாட்கள் ஆவியில் வைத்து, கருடனுடக் கிழங்கு, ஈருள்ளி இவை வகைக்கு 4 பலம் (140கிராம்), சங்கங்குப்பி 1 படி (1.3லிட்) போட்டுக் கொதிக்க வைத்து வடித்துக் கொள்ளவும்,

அளவு: அரைக்கழஞ்சு (2.55கிராம்).காலை, மாலை. உண்ண வும். இரணத்தில் தடவவும்.

தீரும் நோய்கள் : குட்டம், கிரந்தி, கரப்பன், சூலை, பிளவை புத்து, கண்டமாலை இவை அனைத்தும் தீரும்.

பத்தியம் : மூன்று திங்கள் பத்தியம் காக்கவும். கருங்குறுவை அரிசி, சிறுபயறு இவை ஆகும்.)

(வேறு)

கையாஸ் மஞ்ச ளிலையவுரி கருதும் பொடுதலை யெருக்காலி
மெய்யான் கொன் றைத் திமிர்கள்ளி மேவுங் கானாங் கள்ளித் துழாய்
தொய்ய விடிசா றொன்றுரியாய்ச் சூதங் கெந்தகம் பாடாணம்
மெய்யே யொன்றுக் கொருகழஞ்சாய் மேவு மூன்றெண்ணெய் நாழிவிட்டே,

விட்டே காய்ச்சி வடிகொண்டு விரைவி லடைத்து நாள்தோறும்
கட்டாய் மூன்று காசளவெண்ணெய் கருதி யுள்ளே கொண்டு புண்ணில்
தொட்டே பூசி வெய்யில்நிற்கச் சொன்னேன் குட்டமழு கண்ணி
கெட்டே யோடும் நல்லுடம்பாம். (சு.20)

(செய்முறை : மஞ்சளிலை, அவுரி, பொடுதலை, எருக்காலி, கொன்றை, கள்ளி, கானாங்கள்ளி, துழாய் இவற்றின்சாறு வாங்கி, சூதம், கந்தகம், பாடாணம் இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1கிராம்) வாங்கி, மூன்றெண்ணெயும் 1 நாழி (1.3 லிட்) விட்டுக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

அளவு : மூன்று காசெடை (495மி. கிராம்)உண்டு, புண்ணிலும் பூசி வெய்யிலுலர்த்தவும்.

தீரும்நோய்கள் : குட்டம்தீரும்.)

(வேறு)

... ... ... ...

தீர்த்துவிடும் யெண்ணெயொன்று குட்டத் துக்குத்
திறமான மால்தேவி கழஞ்சு மூன்று
பார்த்துவிடு கந்தகந்தான் கழஞ்சு யொன்று
பாலகனே யிவைரெண்டும் பொடிதான் பண்ணே.

பண்ணியே எண்ணெய்தனில் போட்டுக் கிண்டு
பதறாதே இலுப்பைவிறகெரிக்க வேணும்
எண்ணியே கடுகு பதம்போ லானால்
இறக்கியே நிதமிரண்டு காசெடை கொள்ளு
உண்ணவே புளிப்புகைப்பு கசப்பு மாகா
உற்றாவின் பாலோடு சீனி யாகும்
மண்ணிலே மானிடர்க்கு வந்த குட்டம்
வாரிதனில் புக்குமடா மைந்தா கேளே.

(சு.21. பா.346,347)

(செய்முறை : மால்தேவி 3 கழஞ்சு (15. 3 கிராம்), கந்தகம் 1 கழஞ்சு (5.1 கிராம்) எடுத்துப் பொடிசெய்து, எண்ணெயில் போட்டுக் கிண்டி, இலுப்பை விறகெரித்து, கடுகுப் பதமானவுடம் இறக்கிக் கொள்ளவும்.

அளவு : இரு காசெடை (330 மி.கிராம்).

தீரும்நோய் : குட்டம்.

பத்தியம் : புளிப்பு, கைப்பு, கசப்பு நீக்கவும். பாலும், சர்க்கரையும் ஆகும்.)

(வேறு)

நெய் வடிகிற தேங்காய் முற்றினக்காய் நான்குகாய் திருகி, வெந்நீர் விட்டுப் பிசைந்துப்பிழிந்து, இரண்டு, மூன்றுபடி பால் பிழிந்துச்சட்டியில் விட்டு எரித்து, பால் நன்றாகக் கொதிக்கும் போது ஒரு வராகனெடை பாற்சாம்பிராணி, நெல்லிகெந்தி வராகன் 1, சூடம் வராகன் 1 இது மூன்றுந்தூள் பண்ணி, கொதிக்கிற பாலிலே போட்டுக்காட்டாமணக்கு இலையும் குப்பைமேனி இந்த இரண்டையும் சமனாக நறுக்கி, நாலுகரண்டி சாறு முன் தூள் போட்டவுடனே இந்தச்சாறும் கொதிக்கிற பாலிலே விடவும். நன்றாகக் கைவிடாமல் குழப்பிக் காய்ச்சி, நெய் புறப்பட்ட உடனே நெய்யை ஒரு கலையத்தில் வைத்துக் கொண்டு, கடுகை வழித்து ஒரு கலையத்தில் வைத்துக் கொண்டு, குட்டம், குமுறு தடிப்புகள், மேலே வெடிகள், புண்கள், கண்டதிற்கெல்லாம் கொடுக்கவும். கைகண்டது. கடுகிலே கொட்டைப் பாக்களவு கடுகு சாப்பிடவும். அந்திசந்தி அரைமண்டலஞ் சாப்பிடவும். அந்த நெய்யை உடனே முதல்நாள் போட்டுவைத்து, மேலெல் லாந் துவாலை போட்டு, மறுநாள் அரப்பைச் சுட்டு மேலே தேய்ச்சு, மறுநாள்காலையில்தேய்த்துக் குளிக்கவும். மறுபடியும் உடனே மேலே துவாலை போட்டு, மறுநாள் காலையில் அரப்பைச் சுட்டுக் குளிக்கவும். இந்தப்படி நித்தம் அந்தி, சந்தி மருந்து சாப்பிட்டு, ஒன்று விட்டொன்று நெய் துவாலை போட்டுக் குளித்து வரவும். இந்தப்படி அரைமண்டலம் பார்த்துக் கொண்டு, மறுபடியும் அரைமண்டலம் சாப்பிட்டுத் துவாலை போடவும். பதினெட்டுக் குட்டமுந் தீரும். கைகண்டது. (சு.11)

(வேறு)

கார்போகலரிசி ஒரு சேர், வாய் விளங்கம் ஒரு சேர், இது இரண்டையும் எடுத்து வைத்துத்தூள் பண்ணி வடிகட்டி, மூன்று விரல் கொண்ட தூளெடுத்துப் பசுவின் கோமியத்தில் மத்திச்சுச் சாப்பிடவும். இந்தப்படி கோமியத்தில் அனுபானம் பண்ணி அரை மண்டலஞ் சாப்பிடவும். பின்னையும் பார்த்து இறுத்து, பின்னையும் அரைமண்டலஞ் சாப்பிடவும் குட்டந் தீரும், கைகண்டது.

(சு.11)

(வேறு)

சிற்றாமணக் கெண்ணெயும், வேப்பெண்ணெயும் சரிகூட்டி, நாற்பது நாள் குடிக்கப் பதினெட்டுக் குட்டமுந் தீரும். (சு.10)

(வேறு)

மாவிலங்கு வேரும், மருக்காரை வேரும், கண்டங்கத்தரி வேரும், தூதுவளை வேரும், இசங்கவேரு மிடித்துத் தூளாக்கிக் கூழாக்கித்தின்னவும் குட்டந்தீரும். (சு.20)

## மேகநோய்க்கு

எங்கேயென்ற பவளபற்பம் வங்க பற்பம்
ஏலாதி மாத்திரையு மியம்பத் தின்னு
அங்கமதில் நோய்மிகுந்தால் யெண்ணெய் மூழ்கு
அப்பாலோ சூடுகொண்ட மேகந் தீருஞ்
சங்கையென்ன கொடுப்பைவேர் கசாயங் கொள்ளு
சதாவெரி நறுஞ்சீந்திச் சூரணமே தின்னு
பங்கமில்லை யீத்தனையும் மேகத் துக்குப்
பயித்திய மேகத்துக்கு வில்வ வேரே. (சு.4.பா.7)

(பவளபற்பம், வங்கபற்பம், ஏலாதி மாத்திரை இவற்றை உண்ண மேகநோய் தீரும். எண்ணெய் தேய்த்து முழுகவும் தீரும். கொடுப்பை வேர்க்கசாயம், சீந்திச் சூரணமும் தின்ன மேகந்தீரும். வில்வவேர் தின்ன பயித்திய மேகம் தீரும்.)

## பாலர் கிரந்திக்கு நெய்

பசுவின் நெய்யுழக்கு, சாதிலிங்கம், துருசு, இவை கழஞ்சு ¼ கூட்டி வெந்து, மேலினுந் தடவி, காசளவு உள்ளுக்கும் கொடுத்து, வெந்நீர் காய்ச்சிப் பெரிய தாளில் விட்டு, அதனுள் பிள்ளைத் தலை முங்காமல் பிடிக்கவும் பொறுக்கும். (சு.20)

## விப்புருதிக்கு நெய்

நெய்யுழக்கு, கருஞ்சீரகம் 1 பலம், குறிஞ்சா விலை, வேர ரைத்து, எலுமிச்சங்காயளவு நேர்வாளஞ் சுத்தி செய்து, ஒன்றாக நெய்யில் காய்ச்சி, மூன்று நாள் கொடுக்கவும். (சு.20

(வேறு)

ஆமணக்கெண்ணெய் ஆழாக்கு, பசுவின் மோர் உழக்கு, பழங் காடி ஆழாக்கு, திருகு கள்ளிப் பாலதிலஞ்சிலொன்று, கருஞ்சீரகம்,

கடுக்காய் பத்து இதுவெல்லாம் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்து, அஞ்சுநாள் கொடுக்கவும்.

பத்தியம் உப்பு, புளிதவிர்த்து, இதுகொடுக்கும் போது காய்ச்சிய எண்ணெய் இருபங்கும், வெந்நீர் மூன்று பங்குமாக மத்திச்சுக் கொடுக்கவும்.

## விப்புருதி, கல்விப்புருதி, ஓடுவிப்புருதி, அரையாப்பு, சகலத்திற்கும் மருந்து

பச்சைக் கொடுவேலிவேர் பலம் 5, மிளகறணை வேர் பலம் 3, வெட்பாலை பச்சைவேர் பலம் 2, கருமுள்ளிவேர் பலம் 1, மாவிலங்கம்பட்டை பலம் 1, கொல்லங்கோவை, பச்சிக்கிழங்கு வேர் பலம் 5, தலைச்சுருளிவேர் பலம் 2, கோடகசாலை பலம் 5, கடைச்சரக்கு சாதிக்காய் 2, சாதிபத்திரி வராகன் 1, சாதிப்பத்திரி வராகன் 1, மாசிக்காய் 2, கொத்தமல்லி பலம் 2, வால்மிளகு பலம் 2, கடுக்காய் 5, கருஞ்சீரகம் பலம் 1, சன்ன லவங்கப்பட்டை பலம் 1, மிளகு பலம் 2, நறுக்குத்திப்பிலி பலம் 2, செஞ்சந்தனக்கட்டை பலம் 2, கோட்டம் பலம் 1, மரமஞ்சள் 1, காசுக்கட்டி 2, களிப் பாக்கு பலம் 2, பறங்கிப்பட்டை 5, சிற்றரத்தை 1, பேரரத்தை 1 இதுவெல்லாம் கொண்டு வந்து, பச்சிலையை அரைத்து, புழுங்கலரிசி பலம் 5 ஊறப்போட்டு அரைத்து, நல்லெண்ணெய் விட்டு எரித்து, மெழுகு பதத்தில் வைத்துக் கொண்டு, ஒருகரண்டி எண்ணெயும் கொடுத்து, கடுகில் நெல்லிக்காய்ப்பிரமாணம் ஏழு நாள் தின்னவும். பதிநான்கு நாள் பத்தியம். வெந்நீருஞ்சோறுங் கொடுக்கவும். (சு.6)

## பிளவைக்கு

இலைக்கள்ளியை வாட்டிப் போட்டுக்கட்டவும். (சு.6)

## கிரந்தி, மேகம், வெட்டைக்கு எண்ணெய்

சிற்றாமணக்கு எண்ணெய் படி 1, சேங்கொட்டைபடி ¼, எண்ணெயை அடுப்பில் வைத்து, சேங்கொட்டை இரண்டு துண்டு களாக நறுக்கிப் போட்டு, முருகக் காய்ச்சி, எண்ணெயை இறுத்துக் கொண்டு, நிதம் ஒரு கரண்டி 40 நாளைக்குச் சாப்பிட, சர்வ கிரந்தி தீரும். இச்சாபத்தியம். (சு.22)

## கிரந்தி எண்ணெய்

சிற்றாமணக்கெண்ணெய் படி 1, பழச்சாறுபடி 1, இளநீர் படி 1, பசும்பால் படி 1 இவைகளை ஒன்றாகக் காய்ச்சி, அடுப்பில்

வைத்து மிளகு பதமாய்க் காய்ச்சி இறக்கி, சரக்குதனியாக இலவங்கப்பட்டை, வால்மிளகு, சாதிபத்திரி வகைக்கு பலம் ¼, இளவறுப்பாய் வறுத்து, மேற்படி எண்ணெயில் போட்ட உடனே சற்று பொறுத்து இறக்கி வைத்துக் கொண்டு, கோரோசனை வராகன் 2, குங்குமப்பூ வராகன் 2, கற்கண்டு பலம் 10, செவ்வாழைப்பழம் 10 இவை எண்ணெயில் போட்டுக் கலக்கி வைத்துக் கொள்ளவும். அரைப்பலம் வீதம் 5 அல்லது 7 நாள் சாப்பிடவும். இச்சாபத்தியம். (சு 22)

## பருபடுபவன், கிறுகிறுப்புக் கிரிகை

தானென்ற படுவனுக்கும் பருவுக் கேதான்
　　தலையிலே நாய்ப்பாகல் சாற்றைத் தேய்த்து
மானென்ற துவாலையிடு வச்சு வர்ணம்
　　மதியபித்தங் கிறுகிறுப்பு மயக்கந் தீருந்
தீனென்ற கிரிகைகளும் பார்வைக்குந் தோட
　　செனித்த தற்கும் யிதுபோடத் தீரும்
ஏனென்ற சர்வவிடத் துவாலை யாச்சு
　　எடுத்தெடுத்த விடங்களெல்லாம் யிந்தச் சாறே.

(சு.4.பா. 35)

(நாய்ப்பாகல் சாற்றைத் தலையில் தேய்த்துத் துவாலையிடவும். படுவன், பரு, பித்தம், கிறுகிறுப்பு, மயக்கம், விடங்களும் தீரும்.)

## பருவுக்கு மருந்து

காரையிலையை அரைத்துச் சூழப்பூசவும். அல்லது சிற்றகத்தியிலை யரைத்துப் பூசவும். புளியஞ்சிராய் பொடி செய்து பசுவின் வெண்ணெயும் ஆமணக்கெண்ணெயும் முலைப்பாலுமொன்றாய் மத்திச்சு, பஞ்சு துவைத்து முகத்தில் போடவும். மோகித்தால் ஊமத்திலையைச் சிறுநீர் விட்டுப்பிழிந்து வெதுப்பித் துவாலையிடவும். உடைந்துவலியெடுத்தால் இலந்தை இலையைப் போட்டுக் காடியைக் காய்ச்சிக் கழுவிப் போடவும். தலிடுங் கோழியிறகும் தலைமயிரும் புகைகாட்டவும். (சு 20)

(வேறு)

பருவுக்குத் தைவேளை காதிலடைக்கவும். (சு.20)

## கற்றாழை நாற்றம் போக்க

முத்தக்காசு, கொளுவிந்த மூத்துக்காய், நெல்லி, கடுகு, தான்றி, நாலுகரந்தை இவை பொடி செய்து, தேனில் வெரு கடிப்பிரமாணம் தின்னக் கற்றாழை நாற்றமும் போய்ச்செங்கழு நீர் மணக்கும். (சு.20)

## பேய்பிரமை, வலிப்புக்கு

உண்மை யொன்று விரைந்தோடி மூடிக்கொள்ளு
முருத்திறமாம் விடத்துக்குக் கலிக்கங் கேளு
வெண்மையுறு மேனித்தோல் வராகன் மூன்று
வெந்ததலை யோடப்பா கழஞ்சி யொன்று
திண்மைபுரி தாம்புரத்தூள் கழஞ்சி யொன்று
செய்துருசு கழஞ்சொன்று துத்த மொன்று
வண்மையுறு புளியிலைச்சாறு விட்டு யாட்டி
மைந்தனே பயறுபோ லுண்டை கட்டே.

கட்டியதோர் குளிகைக்கு வயனங் கேளு
கனசன்னிக் ககத்திப் பழுப்புச் சாற்றில்
மட்டில்லா விடத்துக்குச் சாரணையிற் றீட்டு
மயக்கிவிடும் பேய்க்கெல்லாங் கரிப்பான் சாற்றில்
ஒட்டில்லா முன்மத்த முலைப்பா லாகு
முறைத்துவிடு முயல்வலிக்குப் பழச் சாறாகு
மட்டியுறுங் காமாலைக் கிளநீ ராகு
மப்பனே மருளலத்தல் தும்பைச் சாறே.

சாறுகளிற் சொன்னபடி கண்ணில் தீட்டு
தப்பாம லவ்வண்ணம் நிமிர்த்தி யாகும்
வேறுமொரு பேரு கேளு மென்கால
மிதன்கா ரணமென்ற னாமம் கேளு
மேறுபுகழ் குக்கில்துத்தந் துருசு யேல
மிலவங்கப் பட்டையிவை சமன்தான் தூக்கி
பேறுடைய பேய்த்தும்பைச் சாற்றி லாட்டி
பிலக்கவே நெடுங்குளிகை பிடித்தி டாயே.

பிடித்ததொரு குளிகையைநீ கண்ணில் தீட்டப்
பேய்பிரமை வலிப்பெல்லாம் பேத மாகுங்

குடித்திடவே யுள்ளுக்கு மருந்து சொல்வோங்
குறைதீரும் வெறிதீருங் கூறுந் தீரு
மடித்துடைய வெண்புறா வெச்சந் தானு
மதுகாரம் பழமிவைதான் சமன்தான் சேர்த்து
அடித்துடைத்து வெள்ளாடு கறுத்த வண்ண
மாட்டினுட பாலிலே அரைத்தி டாயே.

அரைத்ததொரு மருந்தெல்லாந் திரட்டி நீயும்
அப்பனே கழஞ்சியெடை குளிகை சேர்த்து
உரைத்திடுவாய் குளிகையொன்று வெந்நீர் விட்டு
உள்ளுக்குக் கொடுத்திடவு மொழியு மப்பா
கரைத்ததனை நசியமிடு அறிவு கெட்டாற்
கண்ணிலே திங்களொன்று கலிக்கம் போடு
வரைத்துடைய முலைப்பாலிற் போடு போடு
மைந்தனே மயக்கமறு தெளிவுண் டாமே.

அறிவுகெட்டு விடத்தானுஞ் சன்னி யாலும்
ஆங்கார வெறியாலு மசத்தி யாகி
பிறிவுகெட்டுப் பிணம்போலே சுறோணை யத்தால்
போடுவாய் கண்ணிலேயுங் காது மூக்கிற்
செறியவும்நீ முலைப்பாலி விட்டா யானாற்
செத்தசவம் பிழைத்தெழுந்து திரும்பிப் பேசு
மறுவேது மில்லையப்பா சத்திய மாகு
மத்தமத்த வாகடங்க ளிதற்கொவ் வாதே.

(சு. 1. பா. 415 - 420)

(செய்முறை : குப்பைமேனித்தோல் 3 வராகன் (12.6 கிராம்), வெந்த தலையோடு, தாம்பிரத் தூள், துருசு, துத்தம் இவை வகைக்கு 1 கழஞ்சு (5. 1 கிராம்) வாங்கி, புளியிலைச் சாறு விட்டு ஆட்டிப் பயறளவு உருண்டை செய்து கொள்ளவும்.

துணைமருந்தும் தீரும்நோய்களும் : விடத்துக்குச் சாரணைச் சாற்றிலும், பேய்களுக்குக் கரிப்பான் சாற்றிலும், உன் மத்தத் திற்கு முலைப் பாலிலும், முயல் வலிக்குப் பழச் சாற்றிலும், காமாலைக்கு இளநீரிலும், மருளல், அலத்தலுக்குத் தும்பைச் சாற்றிலும் கலந்து கண்ணில் தீட்டவும்.

(வேறு)

குக்கில், துத்தம், துருசு, ஏலம், இலவங்கப் பட்டை இவை ஓரளவாய் வாங்கிப் பேய்த் தும்பைச் சாற்றிலாட்டிக் குளிகை

யாகச் செய்து கொள்ளவும். இதனைக் கண்ணில் தீட்டப் பேய், பிரமை, வலிப்பு அனைத்தும் தீரும்.

அதற்கு உள்ளுக்கு மருந்து :

வெண்புறா எச்சம், மதுகாரம், பழம் இவற்றைச் சமஅளவு சேர்த்து, வெள்ளாட்டில் கறுத்த ஆட்டின் பால் சேர்த்தரைத்து, ஒரு கழஞ்சு (5.1 கிராம்) அளவாகக் குளிகை செய்து கொள்ளவும். ஒரு குளிகை வெந்நீரிலுண்ணவும். அதைக் கரைத்து அறிவு மயக்கத்திற்கு நசியமிடவும். அதனை முலைப்பாலில் உரைத்து கலிக்கம் போடவும். மயக்கம் தீரும்.

தீரும் நோய்கள் : அறிவு கெட்டது, விடம், சன்னி, ஆங்கார வெறி அனைத்தும் தீரும்.)

## அறிவு மயக்கத்திற்கு

*செவ்வாக மாலைக்கண் சன்னி பேய்க்குச்*
*செப்புகிறே னஞ்சனத்தைச் சிறக்கக் கேளு*
*செவ்வாகுஞ் சூதமொன்று கெந்தி மூன்று*
*தீர்க்கவெள்ளைச் சாரணைவேர் நாலு தூக்கு*
*செவ்வாக நேர்வாளம் நாலைத் தூக்கிச்*
*சம்பீரச் சாற்றினாற் குழைய வாட்டிச்*
*செவ்வாகு மான்கொம்புச் சிமிழில் வைத்துத்*
*தேவையென்றால் பழச்சாற்றில் தீட்டி டாயே.*

*தீட்டினாற் சன்னிவிடம் பேயும் நீங்குஞ்*
*செப்பிறே னூமைபோ லுன்மத்த மானாற்*
*காட்டினா லொழிந்திடவே மருந்தில் லாமல்*
*கடுகவே பிடித்தவனை விலங்கு பூட்டி*
*ஊட்டியதோ ருலையிலிட்டுக் கொளுவைக் காய்ச்சி*
*யொழுகவெடு வாமலே யண்ட யண்ட*
*நீட்டினால் வாய்த்திறந்து பேசு வான்காண்*
*நிராகரித்து கிரிகையைச் செய்தி டாயே.*

*செய்திடவே யொழிந்துபோ மிவத்துக் கெல்லாஞ்*
*செப்புகிறேன் பத்தியங்கள் திறமா யப்பா*
*நெய்யாகும் பாலாகு மற்றொன் றாகா*
*நேராக வடிக்கடிநீ முழுகச் சொல்வாய்*
...... ...... ...... ......

(சு. 1. பா.440 - 442)

(செய்முறை : சூதம் ஒருபங்கு, கெந்தி மூன்று பங்கு, வெள்ளைச் சாரணைவேர், நேர்வாளம் வகைக்கு 4 தூக்கு (6. 8 கி. கிராம்) வாங்கிச் சேர்த்து, சம்பீரச் சாற்றில் குழைய ஆட்டி, மான் கொம்புச் சிமிழில் வைத்துக் கொண்டு, பழச்சாற்றில் கலந்து கண்ணில் தீட்டவும்.

தீரும் நோய்கள் : சன்னி, விடம், பேய், மாலைக்கண் தீரும்.

பத்தியம் : நெய், பால் ஆகும். மற்றவை ஆகாது.)

## அறிவு கெட்டதிற்குத் துவாலை

பாரப்பா துவாலையிட மருந்து கேளு
　　யாங்கான ஆதளையு முத்தெருக்கஞ் செவியும்
நேரப்பா யிவைரண்டு முரவி விட்டு
　　நெடுநாளைக் காடியிட்டு நெகிழ வாட்டி
வாரப்பா பாதமுதற் சிரசு மட்டும்
　　வத்தவத்தத் தடவியே வரிசை யாகச்
சேரப்பா ஒண்ணரைநாட் சென்ற மோரிற்
　　திறமாகத் துவாலையிடு தெளிந்து போமே.

தெளியாத வெறிப்பித்து விட வடக்கந்
　　தீர்த்திடவு முள்ளுக்குத் தின்னக் கேளு
எளிதாக யிஞ்சிச்சாறு கறண்டி ரண்டு
　　இதற்கிரட்டி கழுதைப்பால் ரண்டுஞ் சேர்த்து
ஒளியாத சர்க்கரையுங் கழஞ்சி ரண்டு
　　அப்பனே தினம்பத்து யுண்ணச் சொல்லு
வளியாக பாறிவிடுந் துவாலை யேது
　　மைந்தனேமுன் சொன்ன மருந்து தானே.

(சு. 1. பா. 446, 447)

(செய்முறை : ஆதளை, முத்தெருக்கஞ்செவி இவை இரண்டையும் உரலிவிட்டு, பழைய காடியைச் சேர்த்து ஆட்டி யெடுத்துத் தலை முதல் உடம்பு முழுவதும் சேர்த்துத் தடவவும். உள்ளுக்கு இஞ்சிச் சாறு இரு கரண்டி, கழுதைப் பால் அதற்கு இருமடங்கு, சர்க்கரை இரு கழஞ்சு (10. 2 கிராம்) சேர்த்து, பத்து நாட்கள் உண்ணவும்.

தெளியாத வெறிப்பித்து, விட அடக்கங்களும் தீரும்.)

## அறிவுகெட்ட மயக்கத்திற்குச் சோறு

தானென்ற அறிவுகெட்டு மயங்கி னோர்க்குச்
சாப்பிடவே சோறொன்று சமைக்கக் கேளு
தானென்ற பசுவின்பால் தூணி வாங்கித்
தனலிட்டு அடுப்பேற்றிக் குறுணி யாக்கி
தானென்ற குன்றிச்சாறு நாழி விட்டுத்
தனிமுசுறின் முட்டையிலே யுரியு மிட்டுத்
தானென்ற பனைவெல்ல மூன்று பத்துத்
தகத்திட்டு வைத்தபின்பு சாற்றக் கேளே.

சாற்றக்கேள் பேய்வாழைப் பழந்தா னப்பா
தயவாக நாற்பதங்கே யுரித்துச் சேர்த்துச்
சாற்றக்கேள் சர்க்கரையும் பலமும் ரெண்டு
சம்பாநெல் லரிசியிலே படியும் ரெண்டு
சாற்றக்கே ளிவையெல்லாங் கிண்டிக் கிண்டிச்
சமைத்தங்கே மூன்றுநாள் தாக்கச் சொல்லே.

தாக்கச்சொல் ராப்பகலு மாறு நேரஞ்
சாப்பிடவே யறிவுமயல் தானே தீருந்
தாக்கவே மற்றொன்று மாகா தப்பா
சளந்தீரும் விளந்தீருஞ் சம்பிற தாயம்
... ... ... ...

(சு.1.பா.448-450)

(செய்முறை : பசுவின்பால் தூணி (21.5 லிட்) அளவு வாங்கி, குறுணியாகச் (5.3 லிட்) சுண்டக்காய்ச்சி, குன்றிச்சாறு ஒரு நாழி (1.3 லிட்), முசுறுமுட்டைச்சாறு ஒரு உரி (672 மி.லிட்), பனைவெல்லம் முப்பதும் சேர்த்து, பேய் வாழைப்பழம் நாற்பதை உரித்துச் சேர்த்து, சர்க்கரை இருபலம் (70 கிராம்), சம்பா நெல்லரிசி 2 படி (2.6 லிட்) இவற்றைச் சேர்த்துச் சோறாக்கி நன்றாகக் கிண்டி எடுத்துக் கொள்ளவும்.

இரவும், பகலுமாக ஆறுநேரஞ் சாப்பிடவும். அறிவு மயக்கம் தீரும்.)

## பிரளிக்கு மருந்து

அயமோதகம், பட்டை, கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, கருடபச்சை, திப்பிலி, திப்பிலிமூலம், வெந்தயம், கடுகு, நற்சீரகம், கருஞ்சீரகம், ஓமம், குரோசாணி ஓமம், சூகைநீறு, செஞ்சந்தனம்,

இலவங்கப்பட்டை, சண்பகப்பூ, சிறுநாகப்பூ, நெய்க்கோட்டம் பழம், தேற்றாங்கொட்டை, கடுக்காய், வசம்பு, கருநெல்லிப் பருப்பு, வெள்வெங்காயம், ஈரவெங்காயம், இண்டங்கொழுந்து' விளாவிலை கடைமருந்து எல்லாம் அரைப்பணத்திற்கு வாங்கி, விளக்கெண்ணெயுழக்கி லரைத்துப் போட்டு, பச்சிலைச் சாறும் விட்டு வேகவைத்து, மெழுகு பதத்திலிறக்கிக் கொண்டு, உள்ளுக் குக் குழந்தைக்கு ஒரு துட்டளவும், விடருக்கு ஒரு கரண்டியளவும் கொடுக்கவும். உப்பு, புளி, மிளகு ஒன்றுமாகாது. கைகண்டது.

(சு.20)

## பிரளிக்கெண்ணெய்

விடத்தலைவேர் 1 பலம், கீழ்க்காய்நெல்லிவேர் 1 பலம், ஆவாரையிலைச் சாறுழக்கு, கருஞ்சீரகம் 1 பலம், வெள்ளை வெங்காயம் 1 பலம், பெருங்காயம் 1 பலம், மஞ்சள் 1 பலம், வெந்தயம் 1 பலம் இதுவெல்லாமரைத்து, விளக்கெண்ணெய் உழக்கு எண்ணெயில் கலந்து, மெழுகு பதத்தில் வடித்து, ஒரு துட்டத்தனைக் கொடுக்கவும். பத்தியங் காக்கவும். (சு.5)

## நரம்பு சுளுக்குக்கு

கீழ்க்காய் நெல்லி வேரை வாங்கி, தடவி நொந்த இடத் தில் வேரைக் கொண்டு அழுந்தப் பிடிக்கச் சுளுக்குத் தீரும்.

(சு.6)

## பயித்தியம் தீர மருந்து

முசுமுசுக்கைத் தண்ணீர் அரைப்படி, எலுமிச்சம் பழச்சாறு, பசுவின் பால் நாழி கலந்து மூன்று நாள் கொடுக்கத் தீரும். (சு.4)

(வேறு)

பூசணிக்காயைக் குடலைத் தோண்டிப் போட்டு, அதிலே இளநீர் தண்ணீர் விட்டு மூடி வைத்து, சர்க்கரையும் விட்டு, மூன்று நாள் குடிக்கவும்.

தாழஞ்சோறு கொண்டுவந்து இளநீர் தண்ணீர் கூடவிட்டுப் பிசைந்து குடிக்கவும் மாறும். (சு.12)

(வேறு)

கழுதைச்சடை சுட்டு, பாக்களவு உண்டை பண்ணி வைத்துக் கொண்டு, ஒரு உண்டை இஞ்சிச்சாறில் கொடுக்கவும். இப்படி ஐந்து நாட்கள் கொடுக்கவும். பேய், பயித்தியம், சன்னி பலதுந் தீரும். இதுகைகண்டது. (சு.12)

## பேய்ப்பிடி, பயித்தியத்திற்கு

பேய்ப்புடல், பேய்ப்பீர்க்கு, பேய்க்கும்மட்டி, பேய்முசுட்டை, பேயறிப்பட்டை, மஞ்சள், உப்பு சேரயிடித்து, அதில் கழுதைப் பால் செம்மி, நாழி தண்ணீரிற் கலக்கிக் கொடுக்கப் பயித்தியந் தீரும். (சு.12)

(வேறு)

எலுமிச்சம் பழச்சாறுழக்கு, கொடுப்பை இலைச்சாறு உழக்கு, கையாந்தகரைச்சாறு உழக்கு, முசுமுசுக்கைச் சாறு உழக்கு, நெய்உழக்கு, சிறுபயறுஉழக்கு, நெல்லிப் பருப்புஉழக்கு, கருஞ் சீரகம் வகைக்கு 3 பலம் இந்த மருந்தெல்லாஞ் சூரியப் புடமாக மூன்று நாளைக்கு வைத்து, மூன்று நாளைக்குத் தலையில் தப்பி, வெந்நீர் விட மாறும். (சு.5)

## புத்தியுண்டாக

புண்முருங்கைச் சமூலமரைத்துக் குடிக்கப் புத்தியுண்டாகும். இதுவும் பாலில் குடிக்கவும். (சு.5)

## தலைவலிக்கு

கோட்டம், சந்தனம், சுக்கு இவை முலைப்பால் வார்த் தரைத்து, தலைவலிக்கு நெற்றியில் பூசிடத் தாகசுரம், தலைவலி இவை சாந்தமாம். (சு.3)

(வேறு)

நொச்சி, தைவேளை, தும்பை, முடக்கொத்தான், சாரணை, பொன்னாங்காணி, நெல்லிப் பருப்பு, சீரகம், கோட்டம், ஏலம், இலவங்கம், சண்பகப்பூ, சுக்கு, மிளகு, தாமரை வளையம், நெருஞ்சி, இலந்தை வகைக்கு 2 பலம், நல்லெண்ணெய் நாழியில் காய்ச்சி, பதத்தில் வடித்து முழுகவும். (சு.12)

## தலைவலிக்கும் புழுவெட்டுக்கும்

செஞ்சந்தனம், இலாமிச்சம் வேருமரைத்து முலைப்பாலில் கொதிக்க வைத்துப் பூசவும். நெற்றியிலும், உச்சியிலும் பூசவும்.

வேலிப்பருத்திச்சாற்றில் சாதிலிங்கம் ¼ பலம் அரைத்துச் சீலை யிலூட்டித் திரித்து நாசியில் பிகைபிடிக்கத் தலைக்குத்துத் தீரும்.

ஊமத்தங் கொழுந்தும் மிளகு மரைத்துத் தலையில் தேய்க்கப் புழு வெட்டுத் தீரும். மயிர் முளைக்கும். (சு.12)

(வேறு)

தேவதாரம், குறுந்தொட்டிவேர், கோட்டம், அதிமதுரம், குந்திருக்கம் வகைக்கு 4 பலமரைத்து, நல்லெண்ணெய் 1 படி, பசுவின் பால் 1 படி, கூட்டிக் காய்ச்சி, இறக்கும்போது மிளகு பொடித் தூவி, வடித்து முழுகவும். எப்படிப்பட்ட கோரமான தலை நோவுந்தீரும்.

## ஒருதலைவலிக்கு

பேயத்தி வேர்ப்பட்டையை நல்லெண்ணெயில் காய்ச்சித் தலையில் தேய்க்கப் பொறுக்கும். (சு.20)

## ஒருதலை வாய்வுக்கு

வெள்ளை வெங்காயமும் முட்டை வெள்ளைக் கருவும் தயில மிறக்கி, நாசியிலும் காதிலும் அடைக்கப் பொறுக்கும். இது கை கண்ட மருந்து. என்றும் நல்லதாம். (சு.20)

## சூலைக்குக் கந்தகத் தயிலம்

ஒவ்வாது சூலைமு வாறு போக
    உரைக்கிறேன் கந்தகத்தின் தயிலந் தானுஞ்
செவ்வான கந்தகமோ கழஞ்சு பத்து
    சிவந்தபசு நெய்தனிலே சாம மொன்று
சவ்வாது போலாட்டித் திரியி லூட்டி
    சரிகிழ்ப் பிடித்திடவே தயிலம் வீழுங்
கவ்வாத தயிலத்திற் சூத மூன்று
    கழஞ்சியிட்டு சாமமொன்று ஆட்டு ஆட்டே.

ஆட்டிய தயிலத்தைக் குப்பிக் கூட்டி
    ஆயிபதம் பூசித்து அருள்தா வென்று
நீட்டியொரு காசெடைதான் தினமுங் கூட்டு
    நினவோடே தினம்பத்துக் கொண்ட பேர்க்கு
நாட்டில்வளர் சூலையென்ற தனைத்தும் போகும்
    நலமான பத்தியந்தான் பால்தயிர்நெய் யாகுந்
திட்டியே நல்லெண்ணெய் முழுக லாகா
    செப்பிறேன் யின்னமொரு சூதத் தோடே.(சு.1.பா 30,31)

(செய்முறை : கந்தகம் 10 கழஞ்சு (51 கிராம்) வாங்கி, பசுநெய்யில் ஒருசாமம் (3 மணி நேரம்) சவ்வாது போலாட்டி, திரியில் வைத்துப் பிடிக்கத் தயிலம் வரும். அதனுடன் சூதம் மூன்று கழஞ்சு (15.3 கிராம்) சேர்த்து, ஒரு சாமமாட்டி, குப்பியில் வைத்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு காசெடை (165 மி. கி.) அளவாகப் பத்து நாட்கள் உண்ணவும்.

தீரும் நோய்கள் : பதினெட்டு சூலையும் தீரும்.

பத்தியம் : பால், தயிர், நெய் ஆகும். நல்லெண்ணெய்யில் முழுகக் கூடாது.)

(வேறு)

... ... ... ...

தாளப்பா யிரதமொரு பணந்தான் தூக்கு
நலமான கவுரியொரு பணந்தான் தூக்கு
நீளப்பா கடுக்காயு மெட்டு வாங்கு
நேரான ஒதியம்பட்டை கழஞ்சி யஞ்சே.

அஞ்சான வன்னித்தோல் கழஞ்சி கால்தான்
அப்பனே யிவைசேர்த்து தூளா யாட்டு
தஞ்சான வெல்லமிதில் நேராய் கூட்டுச்
சாதகமா யுரலிலிட்டு யிடித்து நன்றாய்
மிஞ்சாமல் நாழிகைதான் முப்ப தானால்
மெத்தியெல்லாம் வாரியே சுண்டைக்காய்ப் போல
கஞ்சான குளிகைகட்டி நிணலு லர்த்தி
கசத்தில் வைத்தங்கே மூடு மூடே.

மூடினதோர் குளிகையிலே அஞ்சு வாங்கி
முறையாக மூன்றுநாள் பதனஞ் சூட்டு
நாடினதோர் புளியுப்பை மாற்றச் சொல்லு
நலமான வயிற்றிலே தாவித் தானால்
நீடினதோர் நெய்பாலும் வெல்லங் கூட்டி
நேரான பருத்தியிலைச் சாறுங் கூட்டி
கூட்டின தோரு ழக்கு ழக்குள்
கொடுக்கத் தீரும் நோய்தான் பாரே.

(சு.9.பா.84-86)

(செய்முறை : இரதம், கவுரி இவை வகைக்கு ஒருபணவெடை (165 மி.கி.), கடுக்காய் எட்டு, ஒதியம் பட்டை ஐந்து கழஞ்சு (25.5கிராம்), வன்னித்தோல் கால் கழஞ்சு (1.27கிராம்) வாங்கித் தூளாயாட்டி, வெல்லத்தில் சேர்த்து உரலிலிட்டு இடிக்கவும். அவற்றை எடுத்துச் சுண்டைக் காயளவு குளிகை செய்து வைத்துக் கொள்ளவும்.

அளவு : ஐந்து குளிகை, மூன்று நாள் உண்ணவும்.

துணைமருந்து : பருத்தியிலைச்சாறு.

தீரும் நோய் : சூலை.

பத்தியம் : புளி, உப்பு தவிர்க்கவும். நெய், பால், வெல்லங் கூட்டவும்.)

## சூலைக்கு

உரைக்கிறேன் துளசியிலை கரிப்பான் மேனி
உத்தம தாளியிலை காட்டுக் கொழிஞ்சி
நிரைக்கிறே னிவையெல்லாம் நிழலு லர்த்தி
நேராக தூளாக யிடித்த பின்பு
துரைக்கிறேன் சூதமொரு கழஞ்சு வாங்கி
சொல்லுறேன் வெற்றிலையில் முறித்துக் கொண்டு
வரைக்கிறேன் யுடனே கூடாச் சேர்த்து
மைந்தனே பகல்முழுது மிடித்தி டாயே.

இடித்ததொரு மருந்ததனை வடிதானங் கட்டி
இயல்பாகப் புதுக்கரகத் திட்டுக் கொண்டு
மடித்ததொரு பொடியிலே வெருகடிதான் தூக்கி
வாகாகச் சலம்விட்டுக் குழைத்து ருட்டி
பிடித்ததொரு குளிகைமூன் றாக்கி யுண்ணப்
போகுமப்பா தலைச்சூலை பணங்கள் தானுங்
கடித்ததொரு பிணியதிக மாகித் தென்றால்
கலந்துண்ண யனுபானங் காட்டக் கேளே.

கட்டான பூசணிக்காய் கசாய மாதல்
கருவீழிச் சாறா தல்பாலி லாதல்
மட்டான மிட்டுக் கொடுக்கத் திரு
மண்டைநோய் சூலைமுதல் கரப்பான் போகும்.

(சு.9.பா.8௱-88)

(செய்முறை : துளசி, கரிப்பான், குப்பைமேனி, உத்தமதாளி, காட்டுக் கொழிஞ்சி இவற்றின் இலை வாங்கி, நிழலுலர்த்தித் தூளாக இடித்து, அத்துடன் சூதம் ஒருகழஞ்சு (5.1கிராம்) வாங்கி, வெற்றிலையில் முறித்துச் சுத்தி செய்து சேர்த்து இடித்து, வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

அளவு : வெருகடித் தூளெடுத்து நீர்விட்டுக் குழைத்து மூன்று குளிகை செய்துண்ணவும்,

துணைமருந்து : பூசணிக்காய்க் கசாயம், அல்லது கருவிழிச் சாறு அல்லது பாலில் மருந்தைக் கொடுக்கவும்.

தீரும் நோய்கள் : மண்டை நோய், சூலை முதல் கரப்பான் வரை அனைத்தும் தீரும்.)

## வெடிசூலைக்கு

துத்தநாகம் 1 கழஞ்சு கொண்டு, இருப்புச் சட்டியில் வைத்துருக்கி, முற்றின கொழிஞ்சி வேரிடித்துப் பொடி கால் கழஞ்சுகூட்டி, நல்லெண்ணெய்த்துளி விட்டுவறுத்து, பற்பமானால் வெந்நீரில் வெருகடிப் பிரமாணங் கொடுக்கும் போது, திப்பிலிகால் கழஞ்சு, கிராம்பு கால் கழஞ்சு பொடித்து கூடக் கலக்கி, கோழி கூவின முன்னே விடியற் காலங் கொடுக்கவும். பொறுக்கும். (சு.20)

## இரசத்தினாலே, புகையினாலே வெடிச்சுக் கட்டிய சூலைக்கு மருந்து

தைவேளைச் சமூலம் இடித்த சாறு ஆழாக்கு, நல்லெண்ணெய் காலாழாக்கு, இரண்டுங் கலந்து குடிக்கவும். இப்படி ஐந்து நாள் குடிக்கவும்.

பத்தியம் : கைப்பு, புளி பதினஞ்சு நாள் காக்கவும். நல்லெண்ணெய் ஆகும். இதுகை கண்டது. (சு.10)

(வேறு)

நிதம்ப சூலைக்குக் கீழ் வயிறு நொந்து, சோறு, தண்ணீர் குடிக்கிறபோது வயிறு வலி எடுக்கும், மேலேப்ப முண்டாயிருக்கும். இதற்கு மருந்து. பெருங்காயம் 1பலம், வெண்காரம் 1 பலம், வெண்காரத்தைச் சாணாகத் தண்ணீரில் கழுவி, இரண்டும் வெந்நீர் சுடவிட்டு அரைத்து, பிறகு சுக்கு 5 பலம் கூட்டியரைத்து மிளகளவுண்டை செய்து, பசுவின் பாலிலிடவும். (சு.12)

(வேறு)

முருங்கை இலை பிச்சங்காயளவு அரைத்து, மிளகு 2 பலம் வெள்ளை வெங்காயம் 2 பலம், இந்த நாலு பலமும் மூன்று நாளைக்குப் பகுத்துக்கொண்டு, பச்சிலையோடே சேர்த்தரைத்துக் கலந்து கொண்டு, தவிட்டில் பிரட்டி, மூன்று நாள் கொடுத்து, ஆறு நாள் பத்தியம். (சு.6)

## கிராணி யுண்டை

அத்த காந்த மதிவிடயம் அவின்கி ராம்பு சாதிக்காய்
ஒத்த கடுகு திரிகடுகு ஓமங் காய மிந்துப்பு
சித்த மூலிச் சாற்றரைத்துத் தேத்தா னளவு உண்டைசெய்து
பத்தி மேதித் தயிரிலிடப் பறிந்தே போகுங் கிராணிகளே.

(சு. 20)

(செய்முறை : அயகாந்தம், அதிவிடயம், அபின், கிராம்பு, சாதிக்காய், கடுகு, திரிகடுகு, ஓமம், காயம், இந்துப்பு இவற்றை மூலிச் சாற்றிலரைத்து, தேத்தாங் கொட்டையளவு உருண்டை செய்துண்ணவும்.

துணைமருந்து : எருமைத் தயிர்.

தீரும்நோய் . கிராணிகள்.)

(வேறு)

சாதிக்காய் சாதிபத்திரி யோமம் தக்க கிராம்பு குரோசாணி
ஆதி சுக்குதிப் பிலிகஞ்சா அதிலொன் றடியவின் கூட்டித்
தாது மாதிளங் காய்தோண்டித் தன்னுட செலுத்திப் புடமிட்டு
மேதி மோர்வார்த் தரைத்துண்டை விரும்பிச் சுண்டைக் காயளவே.

அளவே பிடித்த வுண்டைதன்னை அத்திப் பட்டைச் சாறதனில்
களவே யில்லை யோருருண்டை கலக்கிக் கொடுக்க மிகநன்றாம்
வளவி மேதித் தயிர்தனிலே வருந்திக் கொடுக்க மிகநன்று
பிளவ நுதல்சேர் மடமாதே பிதறுங் கிராணி போய்விடுமே.

(சு. 20)

(செய்முறை : சாதிக்காய், சாதிபத்திரி, ஓமம், கிராம்பு, குரோசாணி, சுக்கு, திப்பிலி, கஞ்சா, அவின் கூட்டி, அதனுடன் மாதுளங்காய்ச் சேர்த்து, எருமை மோரிட்டு அரைத்து, சுண்டைக் காயளவு மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

அளவு : ஒரு உருண்டை.

துணைமருந்து : அத்திப்பட்டைச்சாறு அல்லது எருமைத் தயிரில் கலக்கிக் கொடுக்கவும்.

தீரும்நோய்கள் ; அனைத்து கிராணிகளும்தீரும்.)

## வாய்வுக் கிராணிக்கு

தக்க திப்பிலி மிளகுசீரகங்
தயங்க மோமங் கழச்சிப்பருப்பு
சுக்கு மாங்கொட்டை கருவேம்பினிலை
சுண்டை வத்தலொடு கருவேப்பந்தண்டு
ஒக்க வோரொன்று ஒருபலமாக
ஒட்டி வெதுப்பிப் பொடித்ததனைத் தேனில்
நக்க வாய்வுக் கிராணிமந்தம்
நாடா தோடுங் கண்டீரே. (சு.20)

(செய்முறை : திப்பிலி, மிளகு, சீரகம், ஓமம், கழற்சிப் பருப்பு, சுக்கு, மாங்கொட்டை, கருவேலிலை, சுண்டை வத்தல், கருவேப் பந்தண்டு இவற்றின் வேர் ஒருபலம் (35கிராம்) வாங்கி, வெதுப்பிப் பொடித்துக் கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

துணைமருந்து : தேன்.

தீரும் நோய்கள் : வாய்வுக் கிராணி, மந்தம் தீரும்.)

## கிராணிக்கு

சாதிக்காய், இந்துப்பு, பொன்னூமத்தம் விதை, திப்பிலி, அவின், கிராம்பு, சாதிப்பத்திரி, அயம தாகம். அதிவிடயம் இவை யோரொன்று 1 கழஞ்சு, ஊமத்தஞ் சாற்றிலரைத்துக் குன்றி முத்துப் பிரமாண முண்டை செய்து கொள்ளவும். அனுபானம் தேனில் கொடுக்கவும். வயிற்றுவலி, பொருமல், சீதக்கட்டு, கழிச்சல் தீரும். எருமைத் தயிரில் கொடுக்கச் சலக் கிராணிதீரும், இரத்தக் கிராணி தீரும். வெள்ளுடைப்புத்தீரும், மந்தந் தீரும். (சு.20)

(வேறு)

பெருமரப் பட்டை கழஞ்சு 50 துவைத்து, தூணிநீர் விட்டு நாலொன்றாகக் காய்ச்சிப் பிசைந்து வடிகொண்டு, நானாழியாகத் துழாவி, சுக்கு, மிளகு, திப்பிலி, அதிவிடயம், சாதிக்காய், கிராம்பு, வசுவாசி, இலவம்பிசின், வேப்பம் பிசின், கருவேலம் பிசின் ஒரொன்று கழஞ்சு 3 இதுவுமரைத்துக் கூட்டிக் காய்ச்சி, இறுகினவாறே சுண்டைக்காய்ப் பிரமாண முண்டை செய்து,

தயிரில், தேனில் கொடுக்கச் சகலகிராணி, மூலக்கிராணி, மருமை, ஊதுதலை, இரத்தக் கிராணி, வெள்ளுடைப்பு இதுவெல்லாம் பொறுக்கும். (சு.20)

(வேறு)

சுக்கு மேல் தோல் சீவி சழஞ்சு 10, ஆயிலியப் பட்டை கழஞ்சு 10, பெருமரப் பட்டை கழஞ்சு 10 ஆகஇவை இடித்து, குறுணி நீரில் கலக்க, மாஞ்சில், சடாமாஞ்சில், அரேணுகம், தக்கோலம், கோட்டம், அதிமதுரம், கல்நார், அதிவிடயம், கூகைநீறு, சாதிக் காய், இலவம்பிசின் ஒரொன்று முக்கழஞ்சு அரைத்துக் கலக்கி வெந்து வடிகொண்டு நக்க கிராணி இதுவும், மூலக் கிராணி. இதுவெல்லாந் தீரும். (சு.20)

(வேறு)

பொடுதலை, பெருந்தும்பையிலை, மஞ்சனாத்தியிலை, முருக்கிலை, கொழுஞ்சியிலை இதுவும், கள்ளுச் சாறு படி ¼, இதில் ஒரு பலம் பழம் புளியை ஆமணக் கிலையில் புடம்வைத்துக் கரைத்துக் கொண்டு, சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம் வகைக்குக்கால் கழஞ்சு வறுத்து, அந்தச்சாறு விட்டு அரைத்துக் கலக்கி, சட்டியை வைத்து விளக்கெண்ணெய் ஒரு கரண்டி விட்டு, கால் கழஞ்சு பெருங்காயம் போட்டுத் தாளிதம் பண்ணி, கம்பிப் பதத்தி விறக்கிக் கொண்டு, தினம் ஒரு கரண்டியாக மூன்று நாளைக்குக் கொள்ளவும். ஒருமஞ்சள் தேனுங் கூட்டிக் கொள்ளவும். (சு.10)

(வேறு)

சிவனார் வேம்பு அரைத்து எலுமிச்சங்காயளவு கோழி முட்டைத்தோடு அரைத்து, எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்துக் கலக்கி, மூன்று பங்கு குடிக்கவும். ஒரு பங்கை மூலத் துவாலை யிடவும். (சு.20)

(வேறு)

பொன்முசுட்டை, சுக்கு, அதிவிடயம் கூட்டி குடிநீரிட்டுக் குடிக்கவும். பொறுக்கும். (சு.20)

(வேறு)

நெய்உரி, முருங்கைப்பூஉரி, நத்தையிறைச்சிஉரி, வெள் வெங்காயம் கழஞ்சு இவைமூன்று மரையாமல் நெய்யில் போட்டு

வெந்து, பூவு முதிர்ந்த பருவத்திலே இறக்கி, கடுகையரைத்து, நெய்யில் கலக்கி, நாளொன்றுக்குக் கிண்ணியளவுநெய் கொடுக்கவும். மூலக் கடுப்பு ரோகமிவையெல்லாம் பொறுக்கும். (சு.20)

(வேறு)

வெள்ளாட்டுத் தலை ஒன்றுக்கு, கடைமருந்து, மிளகு படி ⅛, மஞ்சள் நாலுகழஞ்சு, ஓமம் நாலு பலம், கடுகு வராகன் ⅛, சீரகம் 4 பலம், கிராம்பு 4 பலம், கருஞ்சீரகம் 4 பலம்.

மருந்து பண்ணுகிற விபரம் : வெள்ளாட்டுத் தலையை நாலு யிளநீர் தண்ணீர் விட்டு அவித்து, எலும்பை யெடுத்துப் போட்டு, அந்தக் கறியை அரிந்து, ஈரவெங்காயமும் ஒரு இளநீர் தண்ணீரும் வேகிறபோது மற்றகடை மருந்தை யெல்லாம் பொடிபண்ணி, கறிவெந்து தண்ணீர் வற்றற பருவத்தில் இந்தப் பொடியைப் போட நல்லெண்ணெய் அரைப்படி விட்டுக் கலக்கி, பதத்திறக்கிக் கொண்டு, எட்டு நாளுக்குக் கத்தரிக்காய், பாகற்காய், புளி தவிர்த்து விடவும். (சு.10)

## குதம் வாங்க

சித்திர மூலியரைத்து, சுண்டைக் காயளவு, நல்ல காய் குன்றி முத்தளவு யிரண்டு மத்திச்சு, எருமை மோரில் மூன்றுநாள் கொடுக்கவும். (சு.20)

## கிராணி குன்மத்திற்கு

மாம்பிசின் மாங்காயளவு, திப்பிலி மூல மிரண்டு வாரகனெடை, அவின் மருந்து வராகனெடை, சாதிக்காய்1 கழஞ்சு, வசுவாசி 1கழஞ்சு, குரோசாணி ஓமம் 1 கழஞ்சு, வெடியுப்பு 2 கழஞ்சு, இது வெல்லாம் குப்பை மேனிச் சாற்றில் அரைத்து, வட்டாகத்தட்டி உலர்த்தி, புதுச் சட்டியில்வைத்து, மேலுஞ் சட்டி மூடிச் சீலைமண்செய்து, ஒருவிறகில் எரியிட்டு, பற்பமாக வைத்துப் பணவெடை பற்பம் சர்க்கரையில் தின்னவும், குன்மத்திற்கு வெள்ளாட்டுப் பாலில் கொடுக்கவும் (சு.20)

## குன்மத்திற்குக் கும்மட்டிக் குழம்பு

சேராத குன்மங்க ளனைத்தும் போகச்
செப்புறேன் கும்மட்டிக் குழம்பு தன்னை
ஆறவே கும்மட்டிக் காய்ச்சாறு நாழி
அப்பனே சம்பீரச் சாறு நாழி

வாரமுறும் வெள்ளுள்ளி நொச்சி யிஞ்சி
வகைக்குநீ சாறுபடி நாழி வாங்கிப்
பார்புகழ அஞ்சுபடி ஒன்றாய்க் காய்ச்சிப்
பாச்சிதற்கு குழச்சூற்றே மாவிலிங்கந் தானே.

லிங்கமொடு பெருகாய மிந்துப் போமம்
நேரான வெண்காரங் கடுகு மஞ்சள்
லிங்கமெனும் வெந்தயமு மிளகு காந்தம்
நேர்வாள மோரொன்று கழஞ்சு மூன்று
லிங்கமுற ஆட்டிநீ பாகிற் சேர்த்து
நெருங்கவே விடாமல்நீ கிண்டிக் கிண்டி
லிங்கமுறும் பழம்புளிபோ லிறக்கி மைந்தா
நினவறிந்து உடலறிந்து உண்ணச் சொல்லே.

உண்ணுவது பனைவெல்லம் நல்ல வெல்லம்
ஊட்டுவாய்த் தூதளங்காய்ப் பிரமாணத்தில்
உண்ணையிலே குன்மம்போம் பெருவயிறு போகும்
உதரத்தில் நீராமை மகோதரமும் போகும்
உண்ணையிலே பீலிகையும் வெப்புப் பார்வை
உயராகுவை வல்லியமுங் கவுசி தானும்
உண்ணையிலே வாயுவென்ற தெல்லாம் போகும்
உரைக்கிறேன் கும்மட்டிக்காய்ச் சூரணந்தைக் கேளே.

(சு. 1. பா. 396-398)

(செய்முறை : கும்மட்டிக்காய், சம்பீரம், வெள்ளுள்ளி, நொச்சி, இஞ்சி இவற்றின்சாறு வகைக்கு 1நாழி (1.3லிட்) வாங்கி, ஒன்றாகச் சேர்த்துக் காய்ச்சவும். இத்துடன் பெருங்காயம், இந்துப்பு, ஓமம், வெண்காரம், கடுகு, மஞ்சள், வெந்தயம், மிளகு, காந்தம், நேர்வாளம் இவை வகைக்கு மூன்று கழஞ்சு (15.3கிராம்) வாங்கி, ஆட்டிச்சேர்த்துக் கிண்டி, பழம்புளி போலாக்கி இறக்கவும்.

அளவு : தூதளங்காய் அளவு.

துணைமருந்து : பனைவெல்லம், நல்ல வெல்லம்.

தீரும் நோய்கள் : குன்மம், பெருவயிறு, நீராமை, மகோதரம் பீலிகை, வெப்புப் பார்வை, கவுசி, வாய்வு.)

## அட்டகுன்ம சஞ்சீவி

அய்யாகே ளட்டகுன்மஞ் சஞ்சீவி யொன்று
அறையிறேன் பிரண்டையுட சாறு நாழி
அய்யாகேள் கைவளையின் சாறு நாழி
அப்பனே குப்பைமேனிச் சாறு நாழி

அய்யாகே ளிலுப்பைபுண் ணாக்குப்பல மும்பதினஞ்சு
அனல்மூட்டி வேகவைத்து ஆற்று வீரே
அய்யாகேள் மூன்றுவகைச் சாறும் வத்தவச்சு
ஆழாக்கு உழக்கெனவே குழம்பா யாக்கே.

ஆக்கா யதற்குப் புடமான திடித்து
அதையும் வடிகட்டிய பின்னறயக் கேளு
தாக்காகத் திரிகடுகு ஓமமோர் பலமும்
தாக்காக யதனுடன் கடுகு ரோணி
இரக்கமுடன் பெருங்காயம் சீரகங்க ளிரண்டு
மிந்தவகைக்கு முக்கழஞ் சாகக் கூட்டு
போக்காக விடாமலே அனலிலே வெதுப்பிப்
பொடியாக்கி வடிகட்டிப் புடம்பொடி யுஞ்சேரே.

சேரடா பனைவெல்ல யீரஞ்சு பலமுஞ்
சேகரமாய் உரலிலே குழம்புபொடி ரெண்டுஞ்
சேரடா பனைவெல்ல மிவைமூன்றாய்ப் பிரித்துச்
சேர்த்திடிப்பாய் மேன்மேலுஞ் சேரக் கூட்டிச்
சேரடா யிடிப்பிலே ரண்டு சாமந்
திறமாக யிடிபதத்தி லுண்டை சேரு
சேரடா கொட்டைப்பாக் களவ தாகத்
தினமந்தி சந்தியொடு மண்டலந்தா னருந்தே.

அருந்திவர வட்டகுன்ம மெட்டும் மோகும்
அகுவைமுதல் நீராமை கவுசிவெப்புப் பார்வை
அருந்திவர வாய்வென்ற தெல்லாம் போகும்
அப்பனே கெண்டைமுதல் கணங்கள் போகு
மருந்தினால் செரியாமை வயிற்றுவலி துட்டு
அடங்கலுமே நில்லென்று நிறுத்தி விக்கு
மருந்தினா லேகியத்தால் குன்ம ரோகம்
அப்பனே சஞ்சீவி யாகுங் கேளே.

(சு.1.பா.931-934)

(செய்முறை : பிரண்டை, தைவேளை, குப்பைமேனி இவற்றின் சாறு வகைக்கு ஒருநாழி (1.3 லிட்) வாங்கி, 15 கழஞ்சு (76.5 கிராம்) இலுப்பைப் புண்ணாக்கை யெரித்து, அதில் சாறு களை உழக்களவாகக் குழம்பாக்கிக் கொள்ளவும். அதனை வடி கட்டி யெடுத்துக் கொண்டு, திரிகடுகு, ஓமம் வகைக்கு ஒரு பலம்

(35 கிராம்), பெருங்காயம், சீரகம் இவை 3 கழஞ்சு (15.3கிராம்), கூட்டி, அனலில் வெதுப்பி, பொடியாக்கிச் சேர்க்கவும். இத்துடன் பனைவெல்லம் 10 பலம் (350 கிராம்) சேர்த்து இடித்து, கொட்டைப்பாக்களவு உருண்டை செய்து கொள்ளவும்.

அளவு : வேண்டிய அளவு, காலை, மாலை, 48 நாட்கள் உண்ணவும்.

தீரும் நோய்கள் : அட்டகுன்மம், நீராமை, கவுசி, வெப்புப் பார்வை, வாய்வு, கெண்டை, கணங்கள், செரியாமையினாலுண் டான வயிற்றுவலி முதலியன தீரும்.)

## குன்மத்திற்கு

குன்மங் காணும் வந்ததென்று
குன்னிப் பிடித்துத் திரியாதே
கன்மங் காணும் வந்ததென்று
கட்டி லேகிட வாதே
தென்னங் காயைக் கண்பொருத்துத்
திருகுகள்ளிப் பாலிந் துப்பு
புன்னங் காயில் பாதிதின்னப்
போனார் குன்ம போனாரே,

பத்தியம் : மோருஞ்சோறுங் கொடுக்கவும். வெந்நீர் பரிமாறிக் கொள்ளவும். (சு. 20)

(செய்முறை : தென்னங்காய், திருகுகள்ளிப்பால், இந்துப்பு, இவற்றைச் சேர்த்து, புன்னைக் காயளவு தின்னவும் குன்மந்தீரும்.)

(வேறு)

காயமரி தாரம் பச்சை நாவி
காரங் கடுதான்றிக் காய்முக் கடுகு
மாயுஞ் சூத லிங்கமுடன்
வளரும் நேர்வாள மும்நேர்
தோயுங் கிஞ்சுகச் சாற்றரைத்துச்
சுக்கு நீரி விடுகுன்றி
மாயுங் கோதாம் பீலிகையும்
வலியும் குன்மமு மாய்ந்திடுமே. (சு.20)

(செய்முறை : அரிதாரம், பச்சைநாவி, காரம், கடுதான்றிக் காய், முக்கடுகு, சூதம், லிங்கம், நேர்வாளம் இவற்றை ஓரளவு வாங்கி, கிஞ்சுகச் சாற்றிலரைத்து, சுக்கு நீரிலுண்ணவும்.

தீரும்நோய்கள் : பீலிகை, வலிப்பு, குன்மம் தீரும்.)

## வயிற்றுவலி, குன்மத்திற்கு மருந்து

நாலாங்காய்ச்சல் வெடிப்பு 1 பலம், கல்லுப்பு 1 பலம், இந்துப்பு 1, அட்டுப்பு 1 பலம், வளகிலுப்பு 1 பலம், கழக்கொட்டி பருப்பு 1 பலம் இந்தப் பருப்பை முன்னே அரைத்து, எருக்கம் பூச்சாறு விட்டு அரைத்துக்கொண்டு, மறுபடி செலவனைத்தையுஞ் சேர்த்து முன்பூச்சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை தட்டி, நாழியில் காயவைத்து, அகிலிலே ஆகிலும் ஓட்டிலே ஆகிலும் வைத்துமூடி, சீலைமண் செய்து, இருபது வரட்டியிலே புடம் போடவும். எடுத்து வைத்துக்கொண்டு புளித்த பசுவின் மோர், கால்படி மோரிலே இரண்டு வராகனெடை போட்டுக் கரைத்துச் சாப்பிடவும். எட்டு நாளைக்கு அந்தி சந்தி சாப்பிடக் குன்மந்தீரும. (சு. 11)

## வயிற்றுவலி குன்மத்திற்குக் கசாயம்

வெள்ளைச் சாரணை வேர் இரண்டு வேரும், கொத்தமல்லி, ஒரு இணுக்குப்பிடி, முக்காவளை காற்காசு, சுக்கு ரெண்டு, இந்த சுக்கு, முக்காவேளை, வெள்ளைச் சாரணை வேர் பெரிசா ஒரு வேரும் இது மூன்றும் நறுக்கிப்போட்டு, கொத்தமல்லியும் கூடப் போட்டு, இரண்டுபடி தண்ணீர்விட்டுக் கால்படி கசாயமாக இறுத்துக் கொண்டு, ஒரு பொட்டுக்கரண்டி விளக்கெண்ணெய் யெரியெண்ணெயாய்க் காய்ச்சி, எரிய எரிய கசாயத்தில் விட்டுக் கலக்கிச் சாப்பிடவும். நாலுதரம் மலசுத்தியாகும். புளி, புகையிலை தள்ளி இச்சாபத்தியமாக சாப்பிடவும். முன்படி மூன்று வேளை சாப்பிடவும். மறுபடி நிறுத்தி வைத்து, பத்துநாள் தரிச்சு மூன்று வேளைச்சாப்பிடவும். மறுபடியும் மூன்று பொழுது, பத்துநாள் தரிச்சுச் சாப்பிடவும். குன்மந்தீரும். கைகண்டது. (சு.11)

## வயிற்றுவலி, குன்மத்திற்கு நாகச்சுண்ணம்

சிவப்புநெருஞ்சிச் சமூலமும் ரவையா நறுக்கி, குறுணி போலே வைத்துக் கொண்டு, சிறுநாகக்கட்டி அரைச்சேர் புதுச்சட்டி யிலே உருக்கிக் கொண்டு, உருக்கு முகத்திலே நாலாங்காய்ச்சல் உப்பு அரைச்சேர், அடிக்கடி உருக்கு முகத்திலே போட்டுக் கொண்டு, மூவேறு நலக்கொண்டு, மூலிகையும் அடிக்கடி உப்பும் போட்டு, மூலிகையும் போட்டுப் போட்டு, மூன்று சாமம் வறுத்து,

இருப்புக் கழியாலே வறுக்கவும். ஏழாஞ்சாமம் நெருப்புப்பறக்கச் சும்மா வறுத்து, குளிர் ஆறி எடுக்கவும். வயிற்று வலிக்குக் குறைந்தது ஒரு பணவெடை, அந்தி, சந்தி பத்து நாளைக்கு வெண்ணெயிலே, தேனிலே, சுக்கிலே வைத்து, இஞ்சியிலே வைத்துச் சாப்பிடவும். குன்மந்திரும். கைகண்டது. (சு.11)

## சகல குன்மத்திற்கு

சங்கு கழஞ்சு 10 கொண்டு வந்து பானையிட்டு, முப்புரமெரித் தான் கழஞ்சு 10, சித்திரமூலம் கழஞ்சு 10, வெள்ளைக்காட்டுக் கொடி கழஞ்சு13, கூடப்போட்டு வெந்து, நீறினதின் பிறகு எடுத்து, மருந்து வெந்த சாம்பலும் சங்கு வெந்த சாம்பலும் கூடப்பொடி செய்து, வஸ்த்திரகாயம் பண்ணிக் கொண்டு, அதனுடனே நாழி யுப்பு வறுத்துப் பொடி பண்ணிக் கலந்து கொள்ளவும். கடை மருந்து வெள்வெங்காயம் 10கழஞ்சு, கருஞ்சீரகம் 1கழஞ்சு, பெருங் காயம் 1 கழஞ்சு, ஓமம் கழஞ்சு, மிளகு 3 கழஞ்சு, திப்பிலி 2 கழஞ்சு, சாதிக்காய் 2 கழஞ்சு, சாதிபத்திரி 2 கழஞ்சு, மருந்து எட்டில் வறுத்துக் கொள்ளுகிற மருந்தெல்லாம் வறுத்துக் கொண்டு, கடை மருந்தெல்லாம் கையாந்தகரைச்சாறு விட்டு அரைத்து, அந்தச் சாம்பலுடனே விரவிக் கொள்ளவும் காட்டு மருந்துடனே ஆடுதீண்டாப் பாளை 10 கழஞ்சு, கூட்டிச்சுட்டுக் கொள்ளவும். இந்த பற்பத்தில் ஒரு வெருகடிப் பிரமாணம் தின்று, வெந்நீர் கொள்ளவும். வலிக்குன்மமுந் தீரும். கைப்பு, புளி தவிர்க்கவும் வலிகுன்மக்காரருக்கு வலிக்கிற நேரங் கொடுக்கவும். மற்ற குன்மத்திற்கெல்லாம் உதயத்தில் கொள்ளவும். பதினெட்டுக் குன்மந்தீரும். (சு.10)

## சத்திகுன்மம், வலிகுன்மத்திற்கு

இரண்டுபலம் அரப்பொடி ராவி, பழச்சாற்றிலே மூன்றுநாள் போட்டு எடுத்து, கழுவிப் போட்டெடுத்து, அஞ்சாறு பழத்தை நாலாக்கி, இந்த அரப்பொடியை அதுக்குள்ளே வைத்து, இந்தப் பழத்தை ஒரு கலையத்தில் வைத்து, வாயோடு மூடி, சீலை மண் செய்து, குழியிலே புதைத்து, அதுமேலே விரல்கடை மணல்பரப்பி, அது மேலே அஞ்சாறு கற்றாழை மடல் வைத்து, அதுமேல் பத்து விரட்டி வைத்துப்புடமிடவும். இந்தப்படி ஆனதுக்கு மேல் தள்ளிப்போட்டு, முன்படி கற்றாழை மடல் வைத்து, அதுமேலே பத்து விரட்டி அடுக்கிப்புடமிடவும். இந்தப்படி ஏழுபுடமிட்டு,

மறுபடி கலையத்தை எடுத்துப் பழத்தை எடுத்து, விதையைத் தள்ளிப் போட்டு, அம்மியிலே அரைத்து, மெழுகாக எடுத்து வைத்துக் கொண்டு, கழக்கொட்டிக்காய்ப் பிரமாணம் அந்தி, சந்தி அரைமண்டலம், கால்மண்டலஞ் சாப்பிடவும். இச்சா பத்தியம். புளி, புகையிலை, கடுகு, பூசணிக்காய் ஆகாது.

(சு.11)

## பெரும்பாட்டுக்குக் கதலிகந்த கிருதம்

கதலிகந்த கிருதங்கேள் பெரும்பாட் டுக்குங்
காசங்கள் சயரோக மேகமெல்லாந் தீருங்
கதலிகந்த மூலம்பூ ரெண்டு நேராய்
கனக்கவொரு துலாமிடித்து பதக்கு நீரில்
கதலிகந்தம் நாலொன் றாய்க்கு றுக்கிக்
காய்ச்சிக் கலந்ததற்குள் பசுவின்நெய் படிதானொன்று
கதலிகந்த மானவை படிதா னொன்று
கரும்புநீர் நெல்லிக்காய் தானுந் தானே.

தானென்ற நிலப்பனைவேர் தண்ணீர் மீட்டான்
தனிநீர்தான் வகைநாலு படிதா னாலு
தானென்று கலந்துவைத்து கடைமருந்தைக் கேளு
தலரேல மிலவங்கங் காலாகவாழ் கந்த
மானென்ற சடாமாஞ்சி திரிபலையால் விழுது
மைந்தனே தீயிலிடச் செங்கழுநீர்க் கிழங்கு
தேனென்ற நெய்தலோடு கழஞ்சி மூன்று
திறமாக வாட்டிநீ நெய்யிற் சேறே.

நெய்யையடுப் பேற்றியே யனலை மூட்டி
நேராக நாலுதினஞ் சிறுகொதிப் பித்து
மெய்யாக வஞ்சாநாள் சிவக்கக் காய்ச்சி
மேன்மையுடன் மூன்றுநா ளாற வைநீ
எய்யாம விருநேர மெடைதான் கேளு
என்மகனே யிருகழஞ்சு யியல்பா யதுதான்
அய்யாசேன் கொண்டிடவு மொழியும் நேர்மை
அறையிறே னுள்ளபடி அறையி றேனே.

(சு.1.பா. 244-246)

(செய்முறை : வாழைப்பூ இரண்டு வாங்கி இடித்து, பதக்கு (10.7லிட்)நீர் சேர்த்து, நாலொன்றாகக் காய்ச்சி, அதனுடன்

பசு நெய் 1 படி (1.3 லிட்) சேர்க்கவும். அத்துடன் கரும்புநீர், நெல்லிக்காய், நிலப்பனைவேர், தண்ணீர் மீட்டான் இவற்றின் சாறு வகைக்கு 1 படி (1.3 லிட்) வாங்கிச் சேர்த்து, ஏலம், இலவங்கம், சடாமாஞ்சி, திரிபலை, ஆலம் விழுது, செங்கழு நீர்க் கிழங்கு, தேன், நெய்தல் இவை வகைக்கு 3 கழஞ்சு சேர்த்து, நான்கு நாட்கள் பக்குவமாகச் சிவக்கக் காய்ச்சி எடுத்துக் கொள்ளவும்.

அளவு : இருகழஞ்சு (10.2 கிராம்) காலை, மாலை இரு நேரம் உண்ணவும்.

தீரும்நோய்கள் : பெரும்பாடு, காசம், சயம், மேகம்.)

## கர்ப்ப நோய்க்கு எண்ணெய்

இயம்புறேன் வகைக்குநற் கழஞ்சி வீதம்
எரிகாலன் சாறொடுவெள் ளாட்டு நீரும்
அயம்பாதே வார்த்தரைத்து யெண்ணெயில் வாரு
அடுப்பேற்றி யெரித்துநீ மெழுகுபதம் பாரும்
அயம்பாத வடிகலசந் தன்னில் கேளு
ஆகாசத் தூளொடுவெண் காரம் ரெண்டு
வளமாக வகைக்குரெண்டு கழஞ்சு போடு
வடித்தெடுத்து யெண்ணெயைநீ வைத்துக் கொண்டு
நயம்பாதே விரதட்டி மூந்நூறு நாளும்
நாளொன்றுக் கோர்கரண்டி யெண்ணெய் கொள்ளே.

எண்ணெய்தான் மூன்றுநாள் கொள்ளும் போது
என்னசொல்வேன் கர்ப்பநோ யேழு மெங்கே
துன்னவே சூதகவாய்வுத் திரட்சிக் குன்மந்
துவந்தோடுங் கர்ப்பக்கிராணி வாய்வு சூலை
வின்னவே பத்தியந்தான் மூன்று நாளும்
வெள்ளாட்டின் பாலொழிய வேறொன் றாகா
அன்னபா னில்லா வெந்நீ ராகும்
அப்பனே நாலநோள் தலைநீர் வாரே.

வார்த்த நாள்முதல் மறுநின்று நாளும்
மைந்தனே ஆரையிலை கிளுவையிலை ரெண்டும்
ஆத்துமே அய்விரலி யிலையுங் கூட்டி
அரைத்தாயா வெண்ணெய் தன்னில் கொள்ளு

ஏத்துமே ஆறாநாள் வெண்ணெய் முழுகு
ஏழாநாள் நாயகனோ டிணங்கச் சொன்னோம்
போத்தரிய மலடியுமே பெறுவார் பிள்ளை
பெண்மலடோ வுலகத்தி லில்லை தானே. (சு.19)

(செய்முறை : எரிகாலன்சாறு (காட்டாமணக்கு); வெள்ளாட்டு நீர் 4 கழஞ்சு (20.4 கிராம்) வாங்கி, எண்ணெயில் சேர்த்து மெழுகுபதமாகக் காய்ச்சி, வடிகலசத்தில் ஆகாசத்தூள், வெண்காரம் 2 கழஞ்சு (10.2 கிராம்) போட்டு, எண்ணெய் ஊற்றி வடித்துக் கொள்ளவும்.

அளவு : ஒருகரண்டி, மூந்நூறு நாட்கள் உண்ணவும்.

தீரும்நோய்கள் : கர்ப்பநோய் ஏழு, சூதகவாய்வுதிரட்சி, குன்மம், கர்ப்பக்கிராணி, வாய்வு, சூலை தீரும்.

பத்தியம் : வெள்ளாட்டுப்பால், வெந்நீர் ஆகும். நான்கு நாட்கள் கழித்து ஆரையிலை, கிளுவையிலை, அய்விரலியிலை கூட்டி அரைத்து வெண்ணெயில் கொள்ளவும்.)

## கர்ப்ப நோய்க்கு

மருந்தென்ன நீலியிலைச் சாறு நாழி
வசம்புள்ளி அக்கிரா யிந்து காயம்
இருந்தென்னங் காசித்தே ரண்டத் தெண்ணெய்
இரண்டுபடி முழுப்பாக மெட்டுநா ளுண்ணுப்
பொருந்தென்ன கடைமருந்து கழஞ்சி நாலு
போட்டரைத்து மெழுகுபத மிறக்கிக் கொண்டு
அருந்தென்ன துட்டொன்று பத்து நாளும்
ஆகையிலே கால்படி சிவதை சேரே.

சிவதையிட்டுக் கடுகுரோ கணியு முன்னே
சேர்த்தரைத்து முன்மருந்து போலாம் பாரு
அவதியிலே குழந்தை யுண்டாம் பேர்களை
அத்தாலுத் தாழையடி பூக்குங் காய்க்கும்
நவநிதிய மென்றுசிவ னெனக்குச் சொன்னார்
நாயகியார் குமரனுற்ற நளின மெல்லாஞ்
சபதமுறு மானந்த கர்ப்ப நோய்க்குச்
சஞ்சீவி யென்றுசிவன் தழத்திட் டாரே. (சு.4)

(செய்முறை : நீலியிலைச்சாறு 1 நாழி (1.3 லிட்), வசம்பு, உள்ளி, அக்கிரா, இந்துப்பு, காயம், ஏரண்டெண்ணெய் 2 படி

(2.6 லிட்) சேர்த்து, கடைமருந்து 4 கழஞ்சு (20.4 கிராம்) வாங்கி அரைத்துச் சேர்த்து, மெழுகு பதமாகக் காய்ச்சி இறக்கிக்கொள்ளவும். பத்து நாட்கள் கழித்து, சிவதையும் கடுகுரோகணியும் $\frac{1}{4}$ படி (336 மி.லிட்) வாங்கி அரைத்துச் சேர்த்துக் கொள்ளவும்.

அளவு : ஒரு துட்டளவு உண்ணவும்.

தீரும்நோய் : கர்ப்ப நோய் நீங்கி, குழந்தையுண்டாகும்.)

## மலட்டு வலிக்கு

சாத்திறேன் மலட்டுவலிக் கருந்தக் கேளு
சாதகமாய் வெண்ணையிலே நுணாவிலைச் சாறூற்றி
சேர்த்தங்கே கொடுத்திடவே நிவர்த்தி யாகுஞ்
செப்பக்கேள் திரிகடுகு தூளா யாட்டி
மாற்றமில்லா கழச்சிவிதை யோம மிந்து
வகைநேராய் வறுத்திடித்து முன்பொடியுங் கூட்டி
ஊத்துவாய் நல்லெண்ணெய் விட்டு ருட்டி
உண்ணவே மலட்டுவலி யொழியுந் தானே,

(சு.1. பா. 464)

(செய்முறை : வெண்ணெயிலே நுணாவிலைச் சாற்றைச் சேர்த்துண்ண மலடு நீங்கும்.

திரிகடுகைத் தூளாக்கி, அத்துடன் கழச்சி விதை, ஓமம், இந்துப்பு இவை ஓரளவு எடுத்து வறுத்திடித்துக் கூட்டி, நல்லெண்ணெய் சேர்த்து ருட்டி உண்ண மலட்டுவலி நீங்கும்.)

## கருவுறைக்கும் எண்ணெய்

போமென்ற கருவவழிக்குங் கிரந்தி சூலை
போகவே கருவுறைக்கும் எண்ணெய் கேளு
பாமென்ற அவித்தூத்தும் யேரண் டெண்ணெய்
படியரைதான் பசுவின்பால் படியுங் காலாந்
தாமென்ற யீருள்ளி படியொன் றேகால்
தானூரி தரிந்திட்டுக் காயம் சீரம்
மாமென்று பொடிபண்ணு வராகனெடை ரெண்டு
மாங்கழு தைலத்திப் பால்படியுங் காலே.

காலாகும் யிதுவெல்லாம் யெண்ணெய் சேர்த்து
கலந்தடுப்பி லேத்தியெரி சிறுதீ யாக
மேலாகும் மெழுகுபத மாகும் போது
வேதாது கைஇட்டால் இளவெந் நீரும்
மாலாகும் பதமென்று வடித்துக் கொண்டு
மங்கையர்க்குங் கர்ப்பமுற்ற அஞ்சாந் திங்கள்
வேலாகும் வித்திமட வார்க்கஞ்சு நாளில்
விளங்குமே மூாந்திங் களேழு நாளே.

திங்கள்ஒன் பதுக்கு ஒன்ப தேநாள்
திறமாக அந்திசந்தி ரெண்டு நேரம்
பங்கமில்லா திருகழஞ்சு பகரச் சொல்லு
பத்தியந்தான் புளிப்புகைப் பும்உப்பு மாகா
பொங்கமுடன் மறுபத்தியம் இருக்கச் சொல்லு
புண்ணியனே நீராட்டி உப்பைக் கூட்டி
அங்கமதில் நோய்கழன்று அழிவு மன்றி
அழகுமிகும் ஆயிசுண்டை பிறப்பிக்கும் பாரே.
(சு.21.பா.307-309)

(செய்முறை : ஏரண்டெண்ணெய் ½ படி (672மி. லிட்), பசுவின் பால் ¼ படி (336மி.லிட்), ஈருள்ளி 1¼ படி (1.7 லிட்), காயம், சீரம் இவை 2 வராகன் (8.4 கிராம்) பொடி பண்ணிச் சேர்த்து, கழுதைலத்திப்பால் ¼ படி (336மி. லிட்) சேர்த்து, மெழுகு பதமாகக் காய்ச்சிக் கொள்ளவும்.

அளவு : கர்ப்பமுற்ற பெண்களுக்கு ஐந்தாம் மாதம் ஐந்து நாட்களும், ஏழாம் மாதம் ஏழு நாட்களும், ஒன்பதாம் மாதம் ஒன்பது நாட்களும், காலை, மாலை இருவேளையும் இரண்டு கழஞ்சு (10.2 கிராம்) கொடுக்கவும்.

பத்தியம் : புளிப்பு, கைப்பு, உப்பு ஆகாது.)

## பிள்ளை இல்லாத பேருக்கு ஈசுர நாராயணக் கிருதம்

நறுநெய் 1¼ படி, பால் 2½ படி, இளநீர் 2 படி, தென்னம் பூவின்சாறு ¼ படி, வாழைப்பூச்சாறு ¼ படி, நீர்பூலாச் சாறு ¼படி, செப்பு நெருஞ்சிச்சாறு ½ படி, ஓரிலைச்சாறு ¼ படி, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், சிறுநாகப்பூ, கோட்டம் பலம், ஆரியக்கரை, அதிவிடயம், கிராம்பு, கோரோசனை, குரோசாணிஓமம், வால்மிளகு, சுாளிசபத்திரி, சாதிப்பத்திரி வகைக்கு 1 பலம்,

முந்திரிகைப்பழம் 1 கழஞ்சு, சீனிக்கற்கண்டு 1 கழஞ்சு, நீர்ப் பூலாவேர் 2 கழஞ்சு, பெருமரப்பட்டை 2 கழஞ்சு, தண்ணீர்படி அதிலே விட்டு, மருந்துப் போட்டு இடித்து, காய்ச்சிக் கசாயம் $1\frac{1}{8}$ படி, சாறுகளும் நெய்யும் பாலு மொக்கவிட்டு, மருந்தெல்லா மொக்கப் போட்டு, வெந்தபதத்திலே வடிக்கவும். சீனியும் கற்கண்டுங் கோரோசனையும், முந்திரிகைப்பழமும் கலசத்திற் பொடித்துப் போட்டு வடிக்கவும். இந்த நெய்யை இச்சாபத்திய மாக இருபத்தொரு நாளைக்குக் கொள்ளவும். சகலரோகங் களுந் தீரும். (சு.10)

## புத்திர சஞ்சீவி எண்ணெய்

பசுவின் நெய் 1 சேர், பசுவின் பால் 1 சேர், சித்தாமணக்கு இலைச்சாறு 1 சேர், அதிமதுரம் $\frac{1}{2}$ பலம், சாத்தம்மியில் வைத்து, பசுவின் பால் விட்டு நன்றாக அரைத்து, மறுபடி சீரகம் $\frac{1}{2}$ பலம் கூட்டி அரைக்கவும். சாதிக்காய் $\frac{1}{2}$ பலம், சாதிபத்திரி 1 வராகன், ஏலம் $\frac{1}{2}$ பலம், உசந்த சந்தனத்தூள், வெங்கம்பூர் கட்டை சீவினதூள் $\frac{1}{2}$ பலம் இந்த ஆறு சரக்கும் ஒண்ணரைச் சேர் பால் விட்டு, பதினஞ்சு நாழிகை அரைத்து, முன்நெய் பாலிலே கரைத்து விட்டு, மறுபடி ஒரிலைத்தாமரை இலையும், புளியாரை யிலையும் $\frac{1}{2}$ பலம், இது இரண்டு விழுதும் அரைத்து, நெய் பாலிலே கலக்கிவிட்டு, தூபதீப நெய்வேத்தியம் பண்ணி நெய் யெரித்து, இளம்பதமோடே எல்லாவற்றையும் மறுகலையத்தில் கற்கத்தோடே வழித்து வைத்துக் கொள்ளவும். தலைமுழுகி வந்த உடன் அந்தி, சந்தி ஒரு பொட்டுக்கரண்டிகற்கமும் நெய்யு மாகக் கலந்து, ஒவ்வொரு கரண்டி தலைமுழுகின அன்றுமுதல் பதினோரு நாள் சாப்பிடவும். நெய்சாப்பிட்ட ஏழாநாள் நாயகனோடே சேர்ந்து அனுபோகம் பண்ணி வரவும். பத்திய மில்லை. (சு.11)

## பிள்ளை உண்டாக

ஒருவருடம், இரண்டு வருடம் பிள்ளை இல்லாதிருந்தால், கழுதைலத்திச்சாறுழக்கு, கள்ளிமேற்படர்ந்த ஆட்டிலாங் கொடிச் சாறுழக்கு, பசுவின் பாலுழக்கு, இலுப்பை நெய்யுழக்கு, வேப்பெண்ணெயுழக்கு, கண்டங்கத்தரிச்சாறுழக்கு, வசம்பு, வெந்தயம் நீர் வார்த்தரைத்து; பனைவெல்லமும் அற்றை நாட் படியிருந்து திட்டமான மூன்றாம் நாள் கொள்ளவும். (சு.16)

(வேறு)

தேவாங்கு முதுகெலும்பைக் காராம் பசுவின் பாலிலரைத்து துடக்கான மூன்றாவது நாள் குடிக்கப் பிள்ளை உண்டாகும். (சு.16)

(வேறு)

தவசி முருங்கைவேர் துடக்கான மூன்றாம்நாள் கொடுத்து மூன்று நாள் குடிக்கப்பிள்ளை உண்டாம். (சு.16

## பிள்ளைப்பிணி குடிநீர்

ஆவாரையிலை, பாவட்டைவேர், குப்பைமேனிவேர், வேலிப் பருத்திவேர், தூதுவளைவேர், கொழிஞ்சிவேர், திராய்வேர், முப்புரமெரித்தான்வேர், பொடுதலை, ஆரையிலை, கடுக்காய் இதுவெல்லாம் நானாழி தண்ணீருரியாக்கி, இரண்டு காசளவு கொடுக்கவும். பொறுக்கும். (சு.20)

## பிள்ளைப்பிணி, தண்ணீருழலைக்கு

குட்டிவேலம்பட்டை, விடத்தலைவேர், பூலாவேர்க் கொழுந்து, சிறுபுள்ளடி, கோடகசாலை, சித்திரப்பாலை இதுவெல்லாங்கூட்டி, நல்லெண்ணெயில் உள்ளி, வசம்பிட்டுச் சூரியபுடம்வைத்து, இரண்டு காசளவு உள்ளுங்கொடுத்து, நாடி நரம்பெல்லாந் தடவவும். நாலாநாள் முழுக்காட்டவும்.

இதை மீறினால் அஞ்செண்ணெய் வைக்க

வேப்பெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்' ஆமணக்கெண்ணெய், நறுநெய்கூட்டி, ஆணாவேர், செங்கத்தாரி வேர், தூதளைவேர், அவுரிவேர், குட்டிவிளாவேர், கிளாவேர், குட்டிவேலம்வேர், விடத்தலைவேர், பேய்த்திமிட்டிவேர். நன்னாரி இதுவெல்லாங் கூட்டி வெந்து கொடுக்கவும். பொறுக் கும். நாடி நரம்பெல்லாம் போட்டு நலஞ்செய்யவும். சர்வபிணியும் பொறுக்கும். நாலா நாள் முழுக்காட்டவும். (சு.20)

## கர்ப்ப விப்புருதிக்கு

ஆண் வசம்பை அரைத்து, பாக்களவு நற்கதலிப்பழத்தில் வைத்துக் கொடுக்கவும். (சு.20)

(வேறு)

குறிஞ்சா வடக்குப் போன வேரைப்பிடுங்கி அரைத்து, எலுமிச்சங்காயளவு தேங்காய்ப்பாலில் நாளுமுழுகின அன்று கொடுக்கவும்.

பத்தியம் : உப்பு, புளிதவிர்த்து, பத்தியங்காக்கவும். இது நல்லது. கைகண்ட மருந்து. (சு.20)

(வேறு)

கும்மட்டிக்காய்க்குள்ளே இந்துப்பும், நவச்சாரமுமிட்டு, மறுநாள் காலையில் அதிலிருக்கிற தண்ணீர் ஊற்றிக் குடிக்கவும். மறுநாள் பசுவின் நெய் குடிக்கவும். புழுவிழும். பிள்ளையுண் டாவாள். (சு.5)

## வலிகர்ப்பத்திற்கு

அப்பைக் கிழங்கைக் கொட்டைப் பாக்களவரைத்து, இளவெந்நீரில் சூதகம் வந்து முழுகினன்று கொடுக்கவும். இந்தப் படி மூன்று நாளஞ்சு நாள் கொடுக்கவும். உப்பு, புளி தவிர்த்துப் பத்தியங்காக்கவும். வெந்நீர் பரிமாறிக் கொள்ளவும். (சு.20)

## சலம்படுகிற கர்ப்பத்துக்கு

சங்கைச் சுட்டு, எலுமிச்சம்பழச் சாற்றில் நீத்தி, நன்றாய் மத்திச்சு, மறுபடி எலுமிச்சம் பழச்சாற்றில் கழற்சி அளவு கொடுக்கவும். (சு.20)

## இரத்த சூரைக்கும், கர்ப்ப சூரைக்கும்

கெந்தி 6 கழஞ்சு, இரசம் 1 கழஞ்சு இரண்டுமொன்றாய்ச் சேர்த்து நன்றாய் மைய அரைத்துப் பொடித்துக் கொள்ளவும். மேற்படி ஆவின் நெய்உரி நன்றாய்க் காய்ச்சி நீர்வற்றினால் முன் சேர்த்த பொடி தூத்தி இறக்கிக் கிண்டவும். நன்றாயானால் நெய் வடிக்கவும். பிறகு அந்தக் கடுகையரைத்து, நெய்யில் கலந்து வைத்துக் கொள்ளவும். ஒரு போதைக்கொரு துட்டுக் காசெடை கொடுக்கவும். இந்தப்படி ஐந்து நாள் பத்துப் போது கொடுக்க வும். பிறகு ஆறப்போட்டு, வெந்நீரிலே முழுகி வரவும். (சு.5)

## கர்ப்பம் பிறக்கிறதுக்கு

மெய்நொந்தால் செந்நாயுருவி வேரைச் சுட்டுப் பாசிப் பச்சை பாதி காடி வார்த்தரைத்து உள்ளங்காலில் பூசவும். (சு.20)

(வேறு)

துறைமுகங் கண்டால் முழுகவென்றால் புங்கங்கொழுந்து, சாரணைவேர், கடுகு, மிளகு இவையெல்லாம் இளவெந்நீரி லரைத்து மூன்றுநாள் கொடுக்கத் துறைமுகங்கண்டு முழுகும். (சு.20)

(வேறு)

ஆண்பனைக் குருத்து தோலைச்சுட்டு, பசுவின்பாலில் குடிக்கவும். சூதக முழுகின நாளன்று ராத்திரி சயனம் செய்யாமல் மற்றாநாள் காலையில் குடிக்கவும். ஒரு பிடி தும்பைப் பூவைத் துவைத்து, பசுவின் பாலில் கலக்கி வடிகொண்டு, வடக்கே முகமாக இருந்து குடிக்கவும். இந்தப்படிகுடித்து, துத்தியிலையை வாய்பேசாமல் பறித்து, நெல்லரியில் போட்டிடித்து, நல்லெண்ணெயில் பிசைந்துத்தின்னவும். நெய் வார்த்துப் பிசைந்துத்தின்னப் பெண்பிள்ளையுண்டாம். (சு.20)

(வேறு)

கர்ப்பம் பிறக்க புன்இலையரைத்து இளவெந்நீரில் குடித்து, அடிவயிற்றில் தடவப் பிறக்கும். (சு.20)

(வேறு)

நாரகத்திலையும் சாரடைவேரும் சிறுநீரில் வார்த்தரைத்து அடிவயிற்றில் தடவப் பிறக்கும். (சு.20)

(வேறு)

நாயுருவி வேரைத் துவைத்து வைத்துத் தண்ணீரில் விட்டுப் பிழிந்து குடிக்கப் பிறக்கும். (சு.20)

(வேறு)

செங்க வேரும் இந்துப்பும் காடியிலரைத்துக் குடிக்கச் செத்தபிள்ளை விழும். (சு.20)

## கர்ப்ப நோய்க்கு

மூன்றுபிடி புளியிலை, ஒருபிடி ஈருள்ளியிலை, ஒருபிடி மணலிலை, ஒருபிடி கோவையிலை, ஒருபிடி நன்னாரிவேர், இருநாழி நீர்விட்டு உழக்காகக் காய்ச்சிக் கொடுக்கவும். பிள்ளை பெற்ற பேர்களுக்கு வாய்வு திரட்சி தீரும். (சு.12)

## கர்ப்ப ஸ்திரிகளுக்கு பழைய எண்ணெய்

விளக்கெண்ணெய் 1 வராகன், அடுப்பேத்தி, தாளிவேர் ஒருபிடி கொண்டு வந்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சவும். அந்தவேர், பூகொண்டு, வெடித்தால் எண்ணெய் இறக்கி வைத்துக் கொண்டு, காலையில் அரைப்பலம் எண்ணெய் சாப்பிட்டு, உடனே பழையது சாப்பிடவும். கணச்சூடு தீரும். கர்ப்பத்திலுள்ள சிசுவிற்கு யாதொரு வியாதியுமணுகாது. கர்ப்ப ஸ்திரியானவள் 5வது மாத முதல் ஒன்பதாம் மாதம் வரையில் அந்த மாதம் 3 நாள் சாப்பிடவும். இச்சாபத்தியம், (சு.22)

## செத்த பிள்ளை விழ

ஓரிதழ்த்தாமரை சமூலத்தோடே பிடுங்கி, காடி வார்த்தரைத்து முலையில் தடவி, அடிவயிற்றிலும் கீழ்நோக்கித்தடவ விழும். (சு.20)

(வேறு)

செவ்வாமணக்கு வடக்கே போன வேரைப் பிடுங்கி, கீழ்முந்தியிலும், பெருவிரலிலும் கட்டவும் விழும். (சு.20)

(வேறு)

அதிமதுரம், தேன் வார்த்தரைத்துக் கொடுக்கவும் விழும். (சு 20)

(வேறு)

சாரணைவேரும் நாரத்திலையும் சிறுநீரிலரைத்து அடிவயிற்றில் கீழ்நோக்கித் தடவ விழும். (சு.20)

(வேறு)

பித்தைத் தேன் வார்த்தரைத்துக் குடிக்கக் கொடுக்கச் செத்தபிள்ளை விழும். (சு.5)

## சூதக வாய்வுக்கு

சுக்கு 1 வராகன், மிளகு 10 பலம், திப்பிலி 1 வராகன், ஓமம் 1 வராகன், உள்ளி 2 வராகன், மாவிலங்கைப்பட்டை, பிரண்டை இது சமனாய் ஒன்றாயரைத்து, அதனுடன் கடைச்சரக்கு மூன்று பங்கிட்டு, மூன்று நாளைக்கொருபங்கு, மிளகு பலம், மாவிலங்கைப் பட்டை, பிரண்டை மூன்று பங்கில் ஒருபங்கு ஆக, இரண்டு வகையும் ஒரு எலுமிச்சங்காயளவும் அரைத்துக் கொடுக்கவும். இப்படி மூன்று நாள் கொண்டு, உப்பு, புளி விட்டு மறுபத்தியம். உப்பு வறுத்துக் கூட்டவும். (சு.7)

## வெள்ளை விழுகிறதுக்கு

பழங்காரை யிடித்த பொடியும், பழஞ்சீலை சுட்டகரியும், அந்திக் கலசத்தில், தண்ணீரில் போட்டு வைத்து, காலத்தாலே உரிய தண்ணீரை வடித்துக் கொடுக்கவும். உப்பு, புளி தவிர்க்க பொறுக்கும். (சு.20)

## சலவெட்டைக்கு

மாம்பட்டைச் சாறு $\frac{1}{4}$ படி, ஆட்டுப்பால் $\frac{1}{4}$ படி, 4 எலுமிச்சம் பழச்சாறு இதுவெல்லாம் வெவ்வேறாகச் சாறு வாங்

வைத்துக் கொண்டு, எலுமிச்சம் பழச்சாறு பின்னாலே விட்டுக் குடிக்க. அப்படி மூன்று நாள் சாப்பிடவும். (சு 6)

## வெள்ளைக்கு

வெள்ளாட்டுக்கறி அரைத்துக் கவசஞ் செய்து, கசப் புடம் போட்டு, பற்பமாகும் போது வெட்டைக்குக் கொடுக்க வெட்டை நிற்கும். கடுப்பு, நீரிழிவு, நீர்க்குத்தல் தீரும். (சு.6)

## யோனிச்சூலைகள், வீக்கத்திற்கு

சுக்கு, மிளகு, வசம்பு, உள்ளி, மெழுகு, குங்கிலியம் பொடி செய்து, யோனியிலே எண்ணெய் பூசி, அண்டை பொன்னுரல் கீழ் தணலிட்டுப் புகைகாட்டத் தீரும். (சு.20)

## தீட்டமாக

ஆண்பனை வேரரைத்திட்டுப் பாலில் குடிக்கத் தீட்டமாம். (சு.16)

## மாதவிடை வந்தபேர்களுக்கு

கடுகையரைத்து 3 நாள் குடித்து, சித்துப்புக் கூட்டவும். ஊசிக்காந்த மட்டத் தூள் வாங்கி 3 பங்கிட்டு, ஒரு பங்கு பாதாள மூலிகையரைத்துப் பசுவின் பாலிலாவது, வெள்ளாட்டின் பாலிலாவது 3நாள். உப்பு, புளி யாகாது. (சு.5)

## திருவாகாத பேர்களுக்கு மருந்து

மாவிலங்கைப் பட்டைக் கொண்டு வந்து மேல்புறணி இழைத்துப் போட்டு, நன்றாக உலர்த்தி இடித்து, தூள் வடிகட்டிக் கொண்டு, கால்படி விளக்கெண்ணெயில் ஒரு வெருகடிப் பிரமாணம், இரண்டு வெருகடிப் பிரமாணம், மூன்று வெருகடிப் பிரமாணம் சரீர பலனும் வியாதிப் பலனும் கண்டு, விளக்கெண்ணெயில் போட்டு மத்திச்சாற் பசுவின் நெய் போலாம். அதிலே நாலில் ஒருபங்காய், ஒரு கரண்டி காலையில் கொடுக்கவும். மாதவிடை வராதபேருக்கு மாதவிடை கண்டு பக்குவமாம். இந்தப்படி பிள்ளையில்லாதவளுக்கு முழுக்கு வந்த முன் கொடுத்தால் மறு முழுக்கிலே கர்ப்ப முண்டாம். அந்த முறை தரியாதே போனால் மறு முழுக்கில் இப்படி கொடுக்கவும். கர்ப்ப முண்டாம். ஒரு பிள்ளை, ரெண்டு பிள்ளை பெற்றதின் பிறகு பிள்ளை மாறினால் இப்படி மூன்று முன் முழுக்கில் கொடுக்கவும். கர்ப்ப

முண்டாம். இந்தப்படி மலடியாயிருந்தாலும், வயிற்று வலியாயிருந்தாலும், காணாதிருந்தாலும் இந்தப்படி பண்ணிக் கொடுக்கவும். கர்ப்பமுண்டாம் இதற்கு பத்தியம். (சு.7)

## முலைக்கண் தோன்ற

வெந்தோன்றிக் கிழங்கும் மஞ்சளும் நேகவரைத்து, தயிர் குழப்பிப் பூச முலைக்கண் தோன்றும். (சு.16)

## முலை வளர

உப்பு, அமுக்கிராவேர், இலையும் பொடியாக்கி, அந்தப் பொடியை வெந்நீரில் கொடுக்கவும். முலைவளரும். (சு.12)

## முலை நோவு தீர

மாவிலிங்கம் இலையை அரைத்து, எருமைத் தயிரில் கலக்கிக் கொடுக்க முலை நோவு, வீக்கம் தீரும். (சு.6)

## பால் சுரக்க

பிள்ளைப் பால் சுரக்க, ஆலம் விழுதரைத்து, எருமைத் தயிரில் குழப்பித்தின்னவும். அவரை யிலையைப் பறித்து அரைத்து எருமைத் தயிரில் கலக்கிக் குடிக்கவும். பால் சுரக்கும். (சு.10)

(வேறு)

ஆலம் விழுது வெட்டி, அதினுடைய தோளியை எடுத்தரைத்துப் பசுவின் பாலில் கொடுக்கப் பால் சுரக்கும். (சு,12)

(வேறு)

ஆலந் தோலைப் பால் விட்டரைத்துக் கொடுக்கப் பால் சுரக்கும்.
(சு.5)

## பாலருடம்பு பருக்க நெய்

ஆல விழுது மிளந்தளிரு மதிய தென்னம்பூ மதுரம்
கோல மிளகு திப்பிலியும் கூட்டி யாவின்பால் விட்டரைத்துச்
சீலமுடனே நெய்யில் வெந்து தினமுந் தின்னக் கொடுப்பீரால்
பால ருடம்பு மிகவேதான் பருக்குஞ் சேமங் கண்டீரே

(சு.20 பா.9)

(செய்முறை : ஆலம் விழுது, இளந்தளிர், தென்னம்பூ, அதிமதுரம், மிளகு, திப்பிலி இவை ஓரளவு வாங்கி, ஆவின்பால் விட்டரைத்து, நெய்யில் வேக வைத்துக் கொடுக்கவும். குழந்தைகள் உடம்பு பருக்கும்.)

### மாங்கிசங் கூட்டாத பேருக்கு

மலைச் சேனைக் கிழங்கு நறுக்கி, உப்பில வித்துலர்த்தி, திருகு கள்ளிப்பால் தோய்த்துலர்த்தி, கொட்டைப் பாக்களவு உமிக்காந் தலில் சுட்டுக் கொடுக்கவும். சிறு பயறு போட்டு கஞ்சி வைத்துக் கொடுக்கவும். (சு,20)

### பிள்ளைகளுடம்பு பருக்க

பூசணிவேர், வாளைவேர், ஆலம் விளிறு இது கன்னியழியா பெண்நூல் கொண்டு குளிசமாடிக் கட்டவும். (சு. 20)

(வேறு)

புளிமேல் படர்ந்த புல்லுருவியைக் கன்னி அழியாபெண்நூல் கொண்டு, குளிசமாடித் தீபங் காட்டிக் கட்டவும். (சு.20)

(வேறு)

தண்ணீர் விட்டான் கிழங்கு குளிசமாடித் தீபம் காட்டிக் கட்டவும். (சு.20)

(வேறு)

மாதளை வடக்குப் போனவேரும், சுடலையின் வேரும் குளிசமாடிக்கட்டவும். (சு.20)

(வேறு)

சுடலையின் வேரும், தலையோட்டின் சாம்பலும் சிமிழிலடைத்துக் கட்டவும். (சு 20)

### குழந்தைகளுக்கு உண்டை, சுரமாந்தம், கணைகள், பிணிகள் இதற்குக் குளிகை

மலாக்காய்ச் சந்தனம், பச்சைவெட்டிவேர், இலாமிச்சம், வேர்ப்பூலாங்கிழங்கு, கருடப்பச்சை, இலவங்கப்பட்டை, சிற்றரத்தை, கோரோசனை, சண்பகப்பூ, சீனக்காரம், கோட்டம், அதிமதுரம், நற்சிரகம், கிராம்பு, திப்பிலி இவைகளுக்கு 1 பலம் நிறுத்து, இளவெந்நீர் விட்டு அரைத்துச் சுண்டைக்காயளவு உண்டை பண்ணி வைத்துக் கொண்டு, சிறுபிள்ளைகள் சுரத்திற்கு ஒரு உண்டை முலைப்பாலில், வெந்நீரிலிடத் தீரும். (சு.10)

### குழந்தைகள் வயிறு கழிச்சலடைபடக் குளிகை

சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அவின், அதிவிடயம், குரோசாணி ஓமம், நற்சீரகம், திப்பிலிமூலம், காசுக்கட்டி, கஞ்சாவிதை இதுசரிசமன் கூட்டி, பருத்திக் கொழுந்து

துவைச்சுச் சாறுவிட்டு அரைத்து, மிளகுப் பிரமாணம் உருண்டை செய்து வைத்துக்கொண்டு, குழந்தைகளுக்கு ரத்தசீதம் இதற்குத் தயிரில் ஒரு குளிகை இடவும். மாந்தம், பேராமாந்தங்களுக்கு இளவெந்நீர் விட அடைபடும். அடைபடாவிட்டால் கசாயத்திலிடவும். கசாயத்திற்கு மருந்து சுக்கு 1, வசம்பு 1, வெள்ளுள்ளிப் பூடு 1, ஓமம் இரண்டு காசெடை, கருவேர்ப்பீர்க்கில் 11, மஞ்சனாத்தியீர்க்கில் 21, வேப்பீர்க்கில் 5, முருங்கையீர்க்கில் 38 இதுவெல்லாம் வறுத்து, அதில் இரண்டுபடி தண்ணீர்விட்டு உழக்காக்கி, நாலு போது, நாலுகுளிகை அதிலிடப்போம். (சு.10)

(வேறு)

கிராம்பு 6, சண்பகப்பூ, ஏலம் காசெடை, மலாக்காய்க் கிண்ணிக்கு நாழி தண்ணீர் விட்டு, மருந்துங் கூடப்போட்டு, உழக்காகக் காய்ச்சி, அந்தக் குடிநீர் குடிக்கவும். வயிறு கடுத்தால் வெள்ளாட்டுப் பால் கரந்த உடனே அதில் எலுமிச்சம் பழச் சாறு விட்டு, மூன்று நாள்கொடுக்கவும். (சு.10)

## கணைக்குநெய்

தகரை, பழம்பாசி, கூத்தன் குறும்பை, கணப்பூடு, நீர்ச் சுண்டி, பூசணிப்பூ, சிறுபுள்ளடி, வேலிப்பருத்தி, சுடலையாவரை, முசுமுசுக்கை, வல்லாரை, விரிசிலை, சிறுகீரை, கொடுப்பை, குட்டித் தக்காளி. சிற்றிலைப் பாலாடை, நெய்க்கொட்டான் பட்டை. மருதமபட்டை, அத்தி, நெல்லி, ஆவாரை, அகத்திப் பட்டைகள், கடுச்சாறுழக்கு, மலாக்காய், சந்தனந் தண்ணீர் உழக்கு, சுக்கு, திப்பிலி, வசம்பு, அதிமதுரம், நற்சீரகம், கூகைநீறு, ஏலம், தேவதாரம், திப்பிலிமூலம், வெள்ளைவெங்காயம், ஈரவெங்காயம், பச்சைக்கோட்டம் அரைத்துக்கலக்கி, நாழி நெய்யில் போட்டு வடித்துக் கொண்டு, நாள்தோறும் கரண்டி கொடுக்கவும். (சு.10)

(வேறு)

கீழ்வாய் நெல்லிவேர் விழுதுபட அரைத்து, பாக்களவு எருமைத்தயிரில் கலக்கி, மூன்று நாள் கொடுக்கவும். (சு.10)

## குழந்தைகளுக்கு, மாந்தத்திற்கு எண்ணெய்

உத்தாமணி ரசம் 1½ பலம், விளக்கெண்ணெய் 1½ பலம் இரண்டும் கலந்து அடுப்பேற்றிக் காய்ச்சி, இறக்கின உடன் பூரம்,

ஏலரிசி, இலவங்கப்பட்டை, சுக்கு வகைக்கு $\frac{1}{2}$ வராகன், கடுகு ரோகணி ஒன்றே அரைக்கால் வராகன் இவைகளைத் தூள்செய்து, கல்வத்தில் அரைத்து, எண்ணெயில் கலந்து, வேளை ஒன்றுக்குச் சிறுகரண்டி வீதம் கொடுக்கவும். உப்பில்லாத பத்தியம். தாயார் கூட பத்தியமாய் இருக்க வேண்டியது. (சு.22)

(வேறு)

5 பலம் கொட்டை முத்து எண்ணெயில் துளசி, முசுமுசுக்கை உத்தாமணி, கிரந்தி நாயகம், செருப்படை, கையாந்தகரை, நொச்சியிலை, வெள்ளருகு, பிரமியிலை இவை ரசம் வகை கு $\frac{1}{8}$ படி, கற்றாழை மடல், சாதம், கிச்சிலிக்காய்ப் பிரமாணம் வைத்துவெதுப்பி, கும்முட்டிக்காய் ரசம் சமமாய் மேற்படி எண்ணெயுடன் கலந்துக் காய்ச்சி, பதமாய் இருக்கையில் கருஞ்சீரகம், கோட்டம், வெந்தயம் வகைக்கு $\frac{1}{2}$ பலம். சண்பகமொட்டு 1 வராகன், பூண்டு$\frac{1}{2}$ பலம் போட்டு, பதமாய்க் காய்ச்சி வடித்து, திரேக திடத்தின்படி, கால் அல்லது அரை, முக்கால் வீதம் கொடுக்க. மாலை மிளகு சாம்பலாக்கி, துத்தியிலை, வெந்தயம் சேர்த்துக் கசாயமிட்டுக் கொடுக்கச் சகல மாந்தங்களும் தீரும். இச்சாபத்தியம். (சு.22)

## குழந்தைகளுக்கு அள்ளுமாந்த எண்ணெய்

ஆறுபலம் சிற்றாமணக் கெண்ணெயில் $1\frac{1}{2}$ பலம் வெட்பாலை அரிசி விட்டு, ஒண்ணரை பலம் வெண்காரம் விட்டு, கருஞ்சீரகம், கடுகுரோகணி வகைக்கு $\frac{1}{8}$ பலம் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். பால் குடிக்கும் பிள்ளைகட்குக் கால் பலம் வீதம் குடித்து, தாயாருக்குப் புளியில்லாமல் பத்தியம் வைக்கவும். (சு.22)

## முலைகுடிக்காத பிள்ளைக்கு

வசம்பை வாழைப்பூச் சாகரம் விட்டரைத்து அடிவயிற்றில் பூசவும். (சு.5)

(வேறு)

மாடப்புறா எச்சத்தைத் தண்ணீர் விட்டரைத்து, முலைக் காம்பில் தடவ முலை குடிக்கும். (சு.5)

### பித்தக் குடிநீர்

கடுக்காய் சீந்தி தூதுவளை
கண்டங் கத்தரி முசுமுசுக்கை
அடுக்கம் பற்ப டாகமுடன்
ஆடா தோடை சிறுபயறு
கொடுக்கண் மடவீர் கொடுப்பையுடன்
வற்றக் காய்ச்சிச் சீனியிட்டுக்
குடிக்கும் போது பித்தசுரம்
குடிபோய் கெடியில் வீழுமே. (சு.20)

(செய்முறை : கடுக்காய், சீந்தில், தூதுவளை, கண்டங்கத்தரி, முசுமுசுக்கை, பற்படாகம், ஆடாதோடை, சிறுபயறு, கொடுப்பை இவற்றைச் சேர்த்து, நீரிட்டுப் பக்குவமாகக் காய்ச்சி, சீனியிட்டுக் குடிக்கப் பித்தசுரம் தீரும்.)

(வேறு)

மஞ்சள் பித்த மதுதானு
வயிற்றால் கழியும் வகையதுகேள்
நந்தப் பயறு கொத்தமல்லி
நல்ல கடுக்காய் குறுந்தொட்டிசுக்கு
முந்தக் காய்ச்சி யெட்டொன்றாய்
மூன்று நாளுங் குடிப்பீரால்
வந்தபித்தம் கிறுகி றுப்பு
மார் தான் கண்ட றென்போமே. (சு.20

(செய்முறை : பயறு, கொத்தமல்லி, கடுக்காய், குறுந்தொட்டி, சுக்கு இவற்றில் நீரிட்டு எட்டொன்றாகக் காய்ச்சி மூன்று நாள் குடிக்க, பித்தம், கிறுகிறுப்பு தீரும்.)

(வேறு)

நெற்பொரி பசும்பயறு முன்னைவேர் வில்லைவேர்
நேரிய சீரகஞ் சுக்குவோமம் நெல்லி
முற்படவே யிளநீ ருக்குள் கூட்டி
முந்தியபின் வடித்தெடுத்துக் கொடுப்பீ ராகில்
சொற்பெரிய சத்திகுன்மம் சுரத்தின் சூலை
துயரமுறு கிறுகிறுப்புச் சுனவழச்சி னுலைப்
பத்துமென மிமையோர்கள் முனிவோர்கள் கேட்க
பரிகாரமா முனிவர் பகர்ந்த வாறே. (சு. 20)

(செய்முறை : நெற்பொரி, பாசிப்பயறு, முன்னைவேர், வில்லை வேர், சீரகம், சுக்கு, ஓமம், நெல்லி இவற்றுடன் இளநீருங் கூட்டி வடித்தெடுத்துண்ணவும்.

சத்திகுன்மம், சுரசூலை, கிறுகிறுப்பு முதலியவை தீரும்.)

(வேறு)

பித்தம் சுழற்றிக் கிறுகிறுத்துப்
    பெருக நடுக்கித் தலைகனத்து
ஒத்த சரீர மிகமெலிந்து
    வுவர்ந்தி பார மிகவுண்டாம்
சித்தந் துளங்கா ளிளநீரிற்
    சிறிய பயறு சீரகமும்
இத்தைப் பால்நெல் பொரியு
    மிகவே காய்ச்சிக்கொள் ளிதமாம். (சு.12)

(செய்முறை : இளநீரில் சிறுபயறும், சீரகமும், பாலும், நெல் பொரியுமிட்டுக் காய்ச்சிக் குடிக்கவும். தலைச்சுற்றல், கிறுகிறுப்பு, நடுக்கம், தலைகனம் தீரும்.)

## பித்தத்துக் கெண்ணெய் வைக்க

கையாந் தகரை நெல்லிக்காய் கருதுஞ் சாறு நானாழி
மையா ரெண்ணெய் யிருநாழி வாய்த்த பாலு மிருநாழி
செய்யா மருந்தஞ் சந்தனங் கோட்டம் தேவதாரம் செண்பகப்பூ
அய்யா பித்த காயமும் அடைத்த செவியுங் கேட்டிடுமாம். (சு.20)

(செய்முறை : கையாந்தகரை, நெல்லிக்காய் இவற்றின்சாறு நான்கு நாழி (5.2 லிட்), எண்ணெய், பால் வகைக்கு இருநாழி (2.6 லிட்), இத்துடன் சந்தனம், கோட்டம், தேவதாரம், சண்பகப் பூ இவற்றைச் சேர்த்துப் பக்குவமாய்க் காய்ச்சி உண்ணவும். பித்தம் தீரும். கேட்காத செவியும் கேட்கும்.)

## இரத்த பித்தத்திற்கு

... ... ... ...

நாடிநின்ற ரத்த பித்தம் போக
    வென்றாலன்றி வெட்பூலா மருக்கா ரைவேர்
யோடிநின்ற முசுமுசுக்கை சிறுகீ ளாவேர்
    முப்பிலிவேர் திருநாமப் பாலை வேரே.

பாலையொடு மிளகுகரு கொன்றா கூட்டி
பரிவாக ஆட்டியே நல்லெண் ணெய்விட்டு
ஆலையுட னடுப்பேற்றி யெரித்து நக்க
அப்பனே ரத்தபித்த மனைத்தும் போகும்.
(சு.9. பா. 97,98)

(செய்முறை : வெட்பூலா, மருக்காரை, முசுமுசுக்கை, சிறுகீளா, முப்பிலி, திருநாமப்பாலை இவற்றின் வேர்களோடு, மிளகு, கொன்றை இவற்றைச் சேர்த்தரைத்து, நல்லெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி உண்ணவும். இரத்தபித்தம் தீரும்.)

(வேறு)

சிறுகீரை, தாமரைத்தாது, கடுக்காய் இவை கசாயம் வைத்து, தேன் கூட்டிக் குடிக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

கரும்பு, அறுகு, சீந்தில், நெல்விமுள்ளி, நெருஞ்சில் இவை சாறு, இளநீர், பால் இவை விட்டுக் கற்கம், ஏலம், இலவங்கப் பத்திரி, நாகப்பூ, ஆத்தி, ஆல், அரசு, இச்சில், இலுப்பை இவை, முகிழ்க் கோரைக் கிழங்கு, நன்னாரி, இலாமிச்சு, அதிமதுரம், வெண்தாமரை, சந்தனம், செங்கழு நீர், கோட்டம்இவையெல்லா மரைத்துக் கரைத்து, நெய்விட்டு வடித்து நக்கச்சீக்கிரமாகஇரத்த பித்தஞ் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

சந்தனம், இலாமிச்சம், பற்படாகம், கோரைக்கிழங்கு, வெட்டிவேர் இவை கசாயமிட இரத்த பித்தஞ் சாந்தமாம். இலாமிச்சம், சந்தனம், ஆடாதோடை, முந்திரிகைப் பழம், அதிமதுரம், திப்பிலி இவை கசாயமிட்டு, தேன்கூட்டிக் கொடுக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

நன்னாரி, முத்தக்காசு, தண்ணீர் மீட்டான், அதிமதுரம், முந்திரிகைப் பழம் இவை கசாயமிட்டு, சர்க்கரை, தேன் கூட்டிக் குடிக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

நிலவேம்பு, குட்டிப் பாலைப் பட்டை, முத்தக்காசு, அதிமதுரஞ்சனம் இவை யரைத்துக் கரைத்துக் குடிக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

வெட்டிவேர், அதிமதுரம், நன்னாரி, பெரு நன்னாரி, இலாமிச்சம், தாமரைக்கிழங்கு, கம்பந்திராய், நெய்தல் கிழங்கு, கஞ்சாவிலை இவை கசாயமிட்டு, சர்க்கரை, தேன் கூட்டிக் குடிக்கப் பயங்கரமான இரத்தபித்தஞ் சாந்தமாம். சுவாசகாசம், குன்மம், சுரபேதங்கள், ஆங்காரமானரோகங்கள் இவையெல்லாம் சாந்தமாம். பத்தியம், இதமான போசனம் பண்ணவும். வெகுவாய் இரத்தபித்த மெடுத்தால் தேனுடன் கூட்டிக் கொடுக்கநிற்கும். (சு.3)

(வேறு)

அறுகு, நெய்தல்தாது, மஞ்சிட்டி, எலுவாலுகம், வெள்ளறுகு, இலாமிச்சம், முத்தக்காசு, தாமரை, சந்தனம், முந்திரிகைப் பழம், அதிமதுரம், செஞ்சந்தனம், சர்க்கரை யிவையோரொன்று கழஞ்சுகூட்டிச் சூரணம் பண்ணி, நெய்நாழி, அறுகுச்சாறு நாழி, வெள்ளாட்டுப் பால் நாழி இவை கூட்டி யரைத்துக் கரைத்து, பதத்தில் வடித்து, உள்ளுக்குங் கொடுத்து நசியமும் பண்ணி, காதினாலே விழுகிற இரத்தத்துக்கு, கண்ணில் காட்ட இவை எல்லாம் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

சந்தனத்தைக் கசாயமிட்டு, நன்னாரி, அதிமதுரம் அரைத்துக் கரைத்து, நெய், சர்க்கரை, தேன் விட்டு வடிக்கச் சுரோணிதப் பித்தஞ் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

ஆடாதோடை, சீந்தில், செம்பரத்தம் பூ இவை கசாயமிட்டு, இலுப்பைப்பூ இவை அரைத்துக் கரைத்து, நெய் விட்டு வடிக்க இரத்த பித்தம், உடம்பு வத்தறது, சுவாசகாசம், பித்தம், பிறகோபம், மறுநாள் குடிக்கச் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

தயிர்த் தண்ணீரில் நெய் விட்டுக் குடிக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு.3)

(வேறு)

முந்திரிகைப் பழம், ஆடாதோடைச் சாறு, நெய்யில் காய்ச்சி, சர்க்கரையில் பாவினைப் பண்ணிக் குடிக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

ஆடாதோடைச் சாறுஞ் சர்க்கரையும் தேனும் குடிக்க, அந்தியிலே பொரிமாவும் சர்க்கரை கூடக் கொள்ள இரத்த பித்தஞ் சாந்தமாம். தண்ணீர் தாகம், சுரம், சயம் இவை யெல்லாம் சாந்தமாம். (சு. 3)

(வேறு)

நெல்லிப் பருப்பு சூரணம் பண்ணி, சர்க்கரையில் தின்ன இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு. 3)

## இரத்த பித்தத்துக்கு மருந்து

இரச பற்பம், தாமிர பற்பம் இவை ஆடாதோடைச் சாறு விட்டு ஒரு நாளரைத்துக் கொள்ளமிரகடு சாரமென்று பேர். வெள்ளைக் காக்கணையைத் தேனுடன் கொள்ள இரத்த பித்தஞ் சாந்தமாம். நெய்தல் கிழங்கு, சர்க்கரை, தேன், தாமரைத்தாது இவை சமன் கூட்டி கழு நீரில் கரைத்துக் குடிக்க இரத்தபித்தம் சாந்தமாம். நெருஞ்சியிலை ஒரு பிடி குளிர்ந்த தண்ணீரிலரைத்துப் பசுவின் பாலில் குடிக்க இரத்த பித்தஞ் சாந்தமாம். (சு.3)

## இரத்த பித்தத்திற்குக் கலிக்கம்

தண்ணீர் மீட்டான், நன்னாரி, சந்தனம், உவர்கடகம், வெட்டிவேர், சிறுகீரை, முந்திரிகைப்பழம், வறட்சுண்டு, நெய்தல், அதிமதுரம் இவை கசாயமிட்டு, தேன் கூட்டிக் குடிக்க, மேல் நோக்கிப் புறப்படுகிற இரத்தம், கீழ்நோக்கிப் புறப்படுகிற இரத்தம், உலை மாந்தத் தண்ணீர், விடசுரம் சாந்தமாம். (சு.3)

பெண் பிள்ளைகளுக்கு எலும்புருக்கியைப் போக்கும், மேல் நோக்கி புறப்படுகிற இரத்தத்திற்கு விரோசினம் பண்ணிவிக்க, கீழ் நோக்கிப் புறப்படுகிற இரத்தத்திற்குப் பல மறிஞ்சி வாந்தி பண்ணுவிக்க, கொன்றையினாலே யாகிலும், நெல்லிகாயினாலே யாகிலும், சிவதை வேரினாலே யாகிலும், கடுக்காயினாலே யாகிலும், சர்க்கரை, தேனுடன் அர்ப்பனம், பற்பம் பண்ணிக் குடிக்க சாந்தமாம். உத்தமமாயிருக்கும். கோரைக் கிழங்கு, விளாலரிசி, அதிமதுரம், மருக்காரை இவையோடே பால், தேன் கூட்டி, சிறமான வாந்தி பண்ணிவிக்க இரத்த பித்தம் சாந்தமாம். வாந்தி பண்ணிவிக்கப் படாததுக்கும், விரோசினம் பண்ணிவிக்கப் படாததுக்கும் தம்பனங்களினாலே நிறுத்தி வைக்கவும். (சு. 3)

(வேறு)

மணத்தக்காளிச் சாறும், கரும்புச் சாறும், நெய்யுங்கூட்டி நசியம் பண்ண இரத்த பித்தம் நிதானம். காம காலத்திலே வேப்பிலைச் சாற்றிலேயும், தூக்கத்தினாலேயும், வழிநடையினா லேயும், மிகவும் சாத்திரசயம் கூட்டினத்தினாலேயும் மிகவும் அழன்று வசுத்துக்கள் கூட்டினத்தினாலும், மாத்தஞ் சிறவிக்குங் காதினாலும், மூக்கினாலும், வாயினாலுங், கண்ணினாலும், மூத்தி ரத்தினாலும், ரோமத்தினாலும் சர்வாங்கமுமாகிலும் புறப்படும் ரத்த பித்த மென்று சொல்லப் படும். (சு. 3)

## பித்தவாய்வு, மூலவாய்வு, பாண்டு நோய்க்குக் குழம்பு

சேனைக் கிழங்கு, மாறாணிக்கிழங்கு, மால்கிழங்கு, புளி நடலைக் கிழங்கு இது வேர் ஒன்று அரைத்து விளாங்காயளவு, பிரண்டைச் சாகம் நாழி, அயமோதகம் 1 கழஞ்சு, வெள்ள வெங்காயம் 3 கழஞ்சு, வெடியுப்பு 1 கழஞ்சு, துத்தம் 1 கழஞ்சு, துருசு I கழஞ்சு, காய் 1 கழஞ்சு, பழப்புளி 7 கழஞ்சு, சாறு பிழிந்து கொள்ளவும். இந்துப்பு 1 கழஞ்சு, வளையலுப்பு 1 கழஞ்சு, கரியுப்பு 2 கழஞ்சு, இதுவெல்லாமரைத்து முன் மருந்தும், புளிச் சாறும் பிரண்டைச் சாறும் இதுவெல்லாங் கிளரசமாய்க் காய்ச்சி பதத்திலிறக்கிக் கொண்டு, நெல்லிக் காயளவு கொடுக்கவும், வெந்நீர் பரிமாறிக் கொள்ளவும். வயிறு பேதித்தால் மோருஞ் சோறும் கொடுக்கவும். (சு.20)

## பித்தவாய்வு, சிலேற்பன வாய்வு தீரக் கஞ்சிவைக்க மருந்து

முருங்கைப் பட்டையைச் சூளுக்குத்தியினாலே இழைத்து, வெள்ளிய சீலையில் வைத்து அதில் காந்தம் 1 கழஞ்சு, அமுக் கிராவேர் 1 கழஞ்சு, வெள்வெங்காயம் 1 கழஞ்சு, சிவதை, அமுக் கிரா, சாரணைவேர் 1 கழஞ்சு, இந்த மருந்தெல்லாம் நுணுக்கி, முன் சீலையில் வைத்த மருந்துக்குள் வைத்துக் கிழியாய்க் கட்டி, தேங்கா யொன்றிலே இரு நாழி பால் பிழிந்து, அதில் பொடியரிசியும் போட்டு, அதில் மருந்து கட்டின கிழியும் போட்டுக் கஞ்சிகாய்ச்சிக் கொடுக்கவும். (சு.20)

## பித்தத்துக்கு, தலை மத்திக்க மருந்து

நெல்லிக்காய்ப்பருப்பு, நல்லசந்தனம், நற்சீரகம், அதிமதுரம், தான்றிக்காய் இதுவெல்லாம் பசுவின் பாலுழக்கு விட்டவித்து.

மறுபடி முசுமுசுக்கைச் சாற்றில் கலக்கிக் கொதிக்க வைத்துத் தலையிலும் பிடரியிலும் மத்திக்கக்கண் புகைச்சலுந் தீரும். (சு.20)

## பித்தத்திற்கு

சிற்றாமணக்கந் தோலும், நற்கருப்புக் கட்டியும் பாலில் குடிக்கத் தீரும். (சு.10)

## பித்தத்திற்குக் கற்றாழை எண்ணெய்

கற்றாழஞ்சாறு, பசுவின்பால், இளநீர் நல்லெண்ணெய், இதில் ஏலம், இலவங்கம், சாத்திரபேதி, கிராம்பு, பச்சிலை, கச்சோலம் கோட்டம், மஞ்சிட்டி, மரமஞ்சள், சந்தனம், கலங்கொம்பு, அகில், நன்னாரிவேர், விளாமிச்சம் வேர், இருவேலிவேர், முத்தக்காசு, பொன்னாங் கண்ணி, சிறுகீரை, தாமரை வலையம், தாமரைத் தாது வகை ஒன்றுக்கு நாலு கழஞ்சு அரைத்துக் கரைத்து விட்டு பதத்தில் வடிக்குமுன் இரண்டு புனுகு சட்டம் போட்டு வடித்துக் காலமே ஆளுக்குத் தக்கது உள்ளே கொள்ளவும். பித்த தோடம், கைகாலெரிப்பு, கண்ணில் வியாதி ரோகங்கள் இவையெல்லாந் தீரும். (சு.8)

## பித்தவாய்வுக்கு எண்ணெய்

கிராம்பு, சாதிக்காய், வசுவாசி, கோட்டம், திப்பிலி, சந்தனம் 5 கழஞ்சு, தேவதாரம் 5 கழஞ்சு, அகில் 5கழஞ்சு, சிற்றரத்தை, மிளகு, அமுக்கிராவேர், புழுகுசட்டம், கஞ்சா 1 கழஞ்சு, பேய்க் கரும்புச் சாகம், சிவதை இலைச் சாகம், ஆடுதீண்டா பாளை 1 கழஞ்சு, பற்படாகம் 1 கழஞ்சு, மிளகு, தான்றிப் பட்டை 1 கழஞ்சு, செவ்விளநீர் 1 கழஞ்சு, பசுவின் பாலிலாட்டி, சிற்றா முட்டிச் சாறும் கூட்டி கிளரசமாகக் கடைமருந்தெல்லா மரைத்துக் கிளரசத்தில் கலக்கி, எண்ணெய்இரு நாழி விட்டுக் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்து முழுகவும். வெந்நீரில் முழுக வும். வெந்நீர் பரிமாறி பத்தியங் காக்கவும். (சு.20)

## மூக்கில் இரத்தம் விழுதலுக்கு

மூக்காலே இரத்தம் விழுந்து நாற்றம் எடுத்தால் நெய்தல் கிழங்கு நசியம் பண்ணினால் நாற்றம் போகும். (சு.3)

(வேறு)

மாதளம் பூச் சாற்றிலாகுதல், அறுகுச் சாற்றிலாகுதல், முலைப்பால் வார்த்து நசியம் பண்ண மூக்காலே விழுகிற இரத்தம் சீக்கிரமாய் நிற்கும். (சு.3)

## சதையடைப்புக் கசாயம்

இயம்புறேன் நீரில் காரஞ் சேர்க்கில்
இயல்பான தசைத்தெறிக்கு மின்னங் கேளு
இயம்புறேன் கட்டிரத்த முறிந்து வீழ
இரங்குகிற நீர்த் தாரைக் கட்டுந் தீரும்
இயம்புறேன் கசாய மொன்றுசிறு தேக்கு
மிளகுயெறி சங்கம்வேர் சுக்குகரிப் பான்பத்திரி
இயம்புறேன் தோடைவேர் கொம்மட்டி வேரும்
இவையொன்று கழஞ்சியிரு நாழி நீரே.

நீரதனை யுழக்காகக் குறுக்கிக் கொள்ள
ரத்தடைப்பு சலஅடைப்பு நீரடைப்புத் தீர்க்கும்
வாரதனைக் கிரிசனங்க ளாருந் தீரும்
மற்றொருவற் கிந்நூலை வழங்கி டாதே
போரதனை செய்யாதே வாதா டாதே
பொய்சொல்லிப் புலையாடித் திரிந்தி டாதே
சீரதனை யறியாரைச் சேர்ந்தி டாதே
சிஷவர்க்க மறிந்துகொண்டு தீட்சை சொல்லு
போரதனை யறிந்துநின்றால் வாகடத்தைக் காட்டுப்
பித்தினால் வாயிலே போடு போடே.

(சு. 9 பா. 94, 95)

(செய்முறை : சிறுதேக்கு, மிளகு, சங்கம்வேர், சுக்கு, கரிப்பான் சாதிபத்திரி, ஆடாதோடைவேர், கும்மட்டிவேர் இவை வகைக்கு 1 கழஞ்சு (5.1கிராம்) வாங்கி, இரு நாழி (2.6லிட்) தண்ணீரிலிட்டு உழக்களவாகக் காய்ச்சிக் குடிக்கவும். இரத்தடைப்பு, சலஅடைப்பு, நீரடைப்பு, கிரிசனங்கள் ஆறுந் தீரும்.)

## கல்லடைப்புக்கு

மாநிலத்தில் முளைத்தெழுந்த மாவிலங்க வேரும்
வழிவிலங்க முளப்பாயா நெருஞ்சி வேரும்
பேயிலங்கு சுடுகாட்டில் பிறாமுட்டி வேரும்
பீளையது நிற்கச் சிறுபூளை வேரும்
தாயிரங்க மட்டுநல்லா ளெட்டொன்றாய்க் காய்ச்சித்
தாலாற்றில் விட்டதனை யாத்தி யாத்தி
வாயிலங்கு வைத்திடிலோ கல்தெறிக்கும்
மடித்திடிலோ சாந்திட்டுப் பதித்தகல்லு விழுமே. (சு.20)

(செய்முறை : மாவிலங்கம்வேர், நெருஞ்சிவேர், பிறாமுட்டி வேர், சிறுபூளைவேர் இவற்றை ஒரளவாய்ப் போட்டு, எட்டொன்றாகக் காய்ச்சி, ஆறியபின் அருந்தவும். கல்லடைப்பு நீங்கும்.)

## நீரடைப்புக்கு

திருமே கிருச்சனங்க ளாறுந் தீர
செப்புகிறேன் கசாயத்தைத் திறமாய்க் கேளு
தாருமே காணஞ்சாறு கொடுப்பைச் சாறுஞ்
சாதகமாய் வெந்த சாறது வாங்கி
தேருமே யிவைரண்டு சமனா யாட்டித்
திறமாகக் கால்படி நீருண்ணச் சொல்லு
தூருமே கல்தெரிக்கும் சலதாரை யாகும்
துரந்திடா தசையடைப்புக் கியம்பு றேனே.

(சு.9.பா.93)

(செய்முறை : காணஞ்சாறு, கொடுப்பைச்சாறு ஓரளவாய்ச் சேர்த்து, வெந்தபின் உண்ண, கல்லடைப்பு நீங்கும்.)

## நீரிழிவுக்கு

மூன்றுபடி நெல்லை ஒரு சிறு பானையிலிட்டு, அந்த நெல் நனையுமளவுந் தன்னுட சிறுநீரை மிதக்கவிட்டு, மூன்று நாள் விட்டு யெடுத்து, நெல்லை அவித்து அவல் பருவத்தில் வறுத்து, அதன் கூடத் தூதளை வேரொருவேர் நறுக்கியிட கைகண்டது. (சு.5)

## நீர்க்கடுப்புக்கு

ஒரு குத்து முருங்கை யிலையும், கால்துட்டுச் சீரகமும்போட்டு, ஒருபடி தண்ணீர் விட்டு அவித்து, அரைக்கால் படித் தண்ணீரைக் குறுக்கி இறுத்து, அதில் ஒரு கொட்டைப் பாக்களவு வெண்ணெய் போட்டுச் சாப்பிடவும். இந்தப்படி இரண்டுபோது சாப்பிடவும். அன்னப்பால் சாப்பிடவும் தீரும். (சு. 15)

## நீரடைப்புக்கு

ஆமணக்கிலையை யடுக்கிக் கட்டி, மேலே ஆமணக்கெண் ணெயைத் தடவி முறுக்கிச் சட்டியிலாமணக் கெண்ணெய் விட்டுக் கட்டின இலையை வெதுப்பி ஒத்தலிடவும். உள்ளே கொடுக்கச் செவ்விள நீரிலாமணக் கெண்ணெய் நாலிலொன்று விட்டு மூத்திச்சுக் கொடுக்கவும், (சு.20)

### துன்மாங்கிச நீரடைப்புக்கு, கடுப்புக்கு

பொரிகாரம் 1 கழஞ்சு, சீனக்காரம் 1 கழஞ்சு இது இரண்டையும் புடமிட்டு, துருசு 1 பலம் கூட்டி, எலுமிச்சப் பழச்சாறு விட்டரைத்து, இளநீர்சீவி அவித்து, அந்தத் தண்ணீரில் கொடுக்க நீர் விடும். துன்மாங்கிசமுந் தீரும். கைகண்டது. (சு.5)

### நீரும், பலதசை அடைப்பு, கல்லடைப்புக்கு

முட்டைத்தோடு ஒரு எலுமிச்சங்காயளவும், எலிப்புழுக்கை பாக்களவு, பொரிகாரம் அரை கழஞ்சு பொரித்து, சுரையிலைச் சாறு கால்படி சாற்றில் அரைத்துக் கலக்கி, வெள்ளரி விதை ஒரு எலுமிச்சங் காயளவு அரைத்து அதில் கலக்கி உள்ளுக்குச் சாப்பிடத் தீரும். (சு.5)

(வேறு)

நிலவேர் ஒரு எலுமிச்சங்காயளவு அரைத்து, கருப்புக் கட்டியில் பொதிந்துக் கொடுக்கத் தீரும். வெள்ளரி விதை அரைத்து ஒரு எலுமிச்சங்காயளவு, நீர்முள்ளி அரித்து அரைத்து ஒரு எலுமிச்சங் காயளவு, பொரிகாரம் 8 கழஞ்சு பொரித்து, அதில் சேர்த்துக் கொடுக்கவும். (சு.5)

### நீர்பாட்டுக்கு

நீர்பாட்டுக்குச் சரீர மயங்கிக் கிடந்தால் பழம் புளியைச் சுட்டு, ஒரு மிளகுங் கூட்டியரைத்துக் கண்ணிலெழுத மயக்கந் தீரும். (சு 20)

### கல்லெரிப்புக்கு, நீர்ச்சிறுப்புக்கு, மூத்திரக்கிரிச்சனுக்கும் எண்ணெய்

சிறுநெருஞ்சிக்காய் இரு நாழி நன்றாயிடித்து, குறுணித் தண்ணீரிற் கலக்கி, நாலொன்றாகக் காய்ச்சி வடித்து, மறுபடி நல்லெண்ணெய் நாழியில் நெருஞ்சிக்காய், நாரத்தங் காயளவரைத்துக் கலக்கி, முன் காச்சின கிளரசத்திற் கூட்டிக் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்து, உள்ளுக்குக் கரண்டியளவு எண்ணெய் கொடுக்கவும். கல்லெரிப்பு, நீர் சிறுப்பு, மூத்திரக் கிரிச்சனம் பொறுக்கும். (சு.20)

(வேறு)

மாடப்புறா எச்சம் பசுவின் பாலில் கொடுக்கவும். உடனே கல்செறுப்புத் தீரும். சாரடைவேரும் நெருஞ்சிக் காயுமரைத்து, எலுமிச்சம் பழச்சாற்றில்கொடுக்கவும் .கல்செறுப்பு விடும். (சு.20)

(வேறு)

மாவிலக்கம் கொழுந்து அரைத்து, நெல்லிக் காயளவு பசுவின் பாலில் கொடுக்கவும். (சு.20)

(வேறு)

நீர்மீட்டான் கிழங்கு அரைத்துக் கரைத்து, அதன் நுரையை எடுத்துக் காலில் தடவக் கல்லெரிப்பு சாந்தமாம். (சு 3)

(வேறு)

பொரிமாவை நெய்வார்த்தரைத்து, ஆட்டுப் பாலும் கூட்டி, உள்ளங்காலில் தடவக் கல்லெரிப்பு நிற்கும். (சு.3)

(வேறு)

உள்ளங்காலில் வெண்ணெயைத் தடவ பயங்கரமான எரிப்புச் சாந்தமாம். (சு.3)

(வேறு)

இலாமிச்சம் வேரைத் தண்ணீரிலரைத்துத் தடவ, காடியும் நெய்யும் தடவக் காலெரிப்புச் சாந்தமாம். (சு 3)

## கல்செருப்புக்கு

கழஞ்சு பொரிகாரம் பொரித்து, காடித்தெளிவாகிலும், ஈரவெங்காயச் சாறாகிலும், இளநீராகிலு மிவையில் கொடுக்கவும். (சு.20)

## கல்லரிப்பனுக்கு

ஓரிதழ்த் தாமரை சமூலம் நிழலுலர்த்திப் பொடி செய்து இளவெந்நீரில் கொடுக்கவும். (சு.20)

## விடத்திற்கு நசியம்

வாரண மூன்றாம் வேக மறுத்து நான்சொல்லக் கேளாய்
சாரணையிலை யிந்துப் புத்தான் சாலக்கடுகு மிளகு சுக்கு
தாரணை யுடனே வெற்றிலையின் சாற்றி லரைத்து நசியமிட
நாரண னாணை விடமீளும் மரண மில்லைக் கண்டீரே. (சு.15)

(செய்முறை : சாரணையிலை, இந்துப்பு, கடுகு, மிளகு, சுக்கு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து, வெற்றிலைச் சாற்றிலரைத்து நசியம் பண்ண விடம் நீங்கும்.)

(வேறு)

குப்பைமேனி, வெள்ளைப்பூடு, காயம், உப்பு இந்நாலுந் தட்டியே பிழிய விடம் இறங்கும். (சு.15)

## சர்வவிடம், குட்ட குன்ம நோவிற்கு

இந்தச்சாறு துளசிச்சாறு குழிமீட்டான் சாறு
எருக்கின் சாறு மத்தஞ் சாறுஞ்
செந்தொட்டி யவுரிச்சாறு பேய்த்தும்பைச் சாறு
சிறியா நங்கைச்சாறு கொம்மட்டிச் சாறும்
பந்தச்சா றித்தனையும் அமுரி விட்டுப்
பார்த்திடிச்சுச்;சாறுபிழிந்துதீபதக்குச் சாறு
தேர்ந்தச்சா றித்தனையும் பாண்டத் திட்டு
சுருக்கிவற்றிக் குறுகையிலே மருந்து கேளே.

மருந்தென்ன மிளகுசுக்குக் காயங் காரங்
மஞ்சிட்டி மதுரம் பீர்க்கம் வித்து
இருந்தென்ன கருடப்பச்சை யிந்துப் போடு
இருகடுக்காய் தானிக்காய் மாயக் காயும்
பருந்தென்ன கூகைநீறு உரமுரு சேர்த்து
பார்த்திடிச்சுச் சாக்காய்தான் குறுகும் போது
திருந்தவே தூவிவிடு கிண்டிக் கிண்டித்
திரட்டிவிடு மெழுகுபோ லுருட்டிக் கொள்ளே.

கொள்ளவே விரியனென்ற வகையா றுந்தான்
குறுவழலை கொம்பேரி மூக்க னெங்கே
விள்ளவே யெரிவெங்கே காந்த லெங்கே
விடமெங்கே படமெங்கே வீக்க மெங்கே
அள்ளவே மையக்குறாப் புடைய னெங்கே
அறுபுள்ளி பெருஞ்சிலந்திப் பூச்சி யெங்கே
கிள்ளவே மண்டெலிக ளெலிக ளெங்கே
கருடனுட பார்வையல்லோ மருந்தி தாமே.

தாமேதான் வந்தவிட மெங்கே போச்சு
தான்காணாக் கடிவிடந்தா னெங்கே போச்சு
நாமேதான் தெழுவிடங்க ளெங்கே போச்சு
நட்டுவாக் காலியெங்கே பேயனா யெங்கே
பூமேவு மோநாயின் கடியெங் கேதான்
புழக்கடைநாய்க் கடியெங்கே திருக்கை முள்ளால்
சூமாறு நீத்துண்ட விடமுஞ் சொன்னத்
தூதனுட மையலமுந் தூளாய்ப் போமே.

தூளாகுங் கோடிது லேகியத்தைக் கண்டு
சொன்ன சொன்ன விடம்போச்சுச் சூதும் போச்சு
ஏழாநாள் வருவரைக்குஞ் சிற்றா ணுண்ணு
எட்டாநாள் பண்டிமுட்ட அன்னங் கொள்ளு
வாளாதே பெண்ணோடே மருவி டாதே
மயங்கிவிழி அசாத்தியமா யுறங்கி டாதே
வீழாதே படுகுழியில் வெகுமோ கத்தில்
விடமேறுங் கொல்லுமா மீண்டு பாரே.

(சு.I,பா.36-40)

(செய்முறை : துளசி, குழிமீட்டான், எருக்கு, ஊமத்தம், செந்தொட்டி, அவுரி, பேய்த்தும்பை, சிறியாநங்கை, கும்மட்டி இவற்றின் சாறுகளை எடுத்து அமுரிவிட்டு இடித்துச் சாறு பிழிந் தெடுத்துக் காய்ச்சவும். அத்துடன் மிளகு, சுக்கு, காயம், காரம், மஞ்சிட்டி, அதிமதுரம், பீர்க்கம் வித்து, கருடப்பச்சை, இந்துப்பு, கடுக்காய், தான்றிக்காய், மாயக்காய், கூகை நீறு இவற்றைப் பொடி செய்துப் போட்டுக் கிண்டி, மெழுகு போலுருட்டிக் கொள்ளும் பக்குவத்தில் இறக்கிக் கொள்ளவும்.

அளவு : தேவையான அளவு.

தீரும் நோய்கள் : விரியன், கொம்பேரி மூக்கன் இந்த பாம் புகளின் விடமும், எரிவு, காந்தல், வீக்கம், சிலந்திப் பூச்சிக்கடி, எலிவிடம், கடிவிடங்கள், நட்டுவாய்க்காலி விடம், பேய், ஓநாய் கடி, நாய்கடி ஆகிய அனைத்து விடங்களும் தீரும்.

பத்தியம் : ஏழு நாள்வரை சிற்றூண் உண்ணவும். உறங்கு தலும், பெண்ணோடு சேர்தலும் கூடாது.)

## எலிகடி தீர்க்க

எலிவர்க்க மறியவும்.

அரவெனு மெலி கடித்தால் : உடல் வீங்கும். உச்சி யெரிக்கும். வாயில் நீர் பாயும்.

இதற்கு மருந்து : பாவெட்டை வேரும் புறாவெச்சமு மரைத்துக் குடிக்கவும்.

செத்தலையன் எலி கடித்தால் : வெப்பெடுத்துச் சொறியும் இடந்தடிக்கும். பனிநீர் போல நாசியில் நீர் பாயும்.

இதற்கு மருந்து : வெள்வேலம் பட்டை மூன்று நாளூறப் போட்டுச் சாகமரைப்படி கொடுக்கவும். இதில் கால்படி நல்லெண் ணெய் கூட்டிக் கொடுக்கவும்.

பெருந்தலையன் எலிகடித்தால் : தலைநோம். வேர்க்கும். குளிரும்.

இதற்கு மருந்து : கருவேலம்பட்டையும், வெள்வேலம்பட்டையும் மூன்று நாளூறப்போட்டு, அரைப்படி சாகமும், கால்படி நல்லெண்ணெயுங் கூட்டிக் கொடுத்து, மேலுந் துவாலைப் போடவும்.

பன்னி மூக்கனெலி கடித்தால் : மூக்கெல்லாம் நீர்பாயும். முகம் வேர்க்கும். விரல் வீங்கும்.

இதற்கு மருந்து : ஆடாதோடை யரைத்துக் காடியில் கொடுத்து, மேலுந் துவாலைப் போடவும்,

எகிறனெனுமெலி கடித்தால் : சரீரந்தினவெடுத்துச் சொறியும். சினம் மிகுந்திருக்கும்.

இதற்கு மருந்து : காவாளை வேரரைத்து, நல்லெண்ணெயில் கொதிக்க வைத்து, உள்ளங்கை நிரம்ப விட்டு நக்கவும். மூன்று நாள் கொடுக்கவும்.

பவளனெனும் எலிகடித்தால் : கண்ணும் மூக்கும் சிவக்கும். மூக்கில் நீர்பாயும். வாய்நாறும்.

இதற்கு மருந்து : பெருமரப்பட்டையு மிலையுங் குடிநீர் காய்ச்சி, இளவெந்நீர் கால்படி நெய் கூட்டிக் குடித்துக் கொள்ளவும்.

கடைப் பல்ல னெலி கடித்தால் : பல்குடையும். விடாமல் கூசும். உதடு வீங்கும். நடக்க முடியாது. காலோய்ந்து வரும்.

இதற்கு மருந்து : தென்னம் பட்டையை வாட்டிச் சாகம் பிழிந்து, வெல்லங் கூட்டிக் கொடுக்கவும்.

அரணை வாலெலி கடித்தால் : பிரண்டைத் தண்டைப் போலே சரீரந் தினவெடுத்துச் சொறிந்து தடுக்கும். வாயில் நீர் பாயும்.

இதற்கு மருந்து : வட்ட பெரும்பட்டை, அரிசியிலிட்டுத் துவைத்து, அடையாய்ச்சுட்டுத் தின்னக் கொடுக்கவும் நல்லெண்ணெயில் துவைத்து, நல்ல வெல்லங் கூட்டிக் கொடுக்கவும்.

சேடனென்னும் எலிகடித்தால் : சரீரம் வீங்கும். நோகும். வயிறெரிக்கும். கண் சுழன்றுவரும். முழங்கால் நோகும்.

இதற்கு மருந்து : ஆதளை வேரும் துத்திவேருமரைத்து, வெள்ளாட்டுப் பாலில் கொடுத்து மேலுந்தடவவும்.

பாலலென்னு மெலி கடித்தால் : வாய் வெளுப்பேறும். முழங்கால், சரீரமெரிப் பெடுக்கும்.

இதற்கு மருந்து : இளவெந்நீரில் பெருங்காய முரைத்துக் கொடுக்கவும். ஆட்டுக் கோமிசத்தில் மிளகையரைத்துக் கொடுக்கவும்.

கருவாவென்னு மெலி கடித்தால் : உதடு உடம்பெல்லாம் கருகி இருக்கும். உகிர்க்கண் கறுத்திருக்கும்.

இதற்கு மருந்து : மரப்பட்டையை வெந்நீரிலூறப் போட்டுச் சாக மரைப்படி, எண்ணெய் கால்படி கூட்டிக் கொடுக்கவும்.

பெருவாயெலி கடித்தால் : பலகாலுங் கொட்டாவி கொள்ளும். கண்ணீர் பாயும், உடம்பெரிக்கும்.

இதற்கு மருந்து : எருமைச் சாணாகத்தைப் பிசைந்துத் தெளியவைத்து, மிளகு, வெள்ளை வெங்காயமும், பெருங்காயமுங் கூட்டிக் கொடுக்கவும்.

கங்கைவாயன் எலிகடித்தால் : பலகாலும் பல் கடிக்கும். நிலத்தில் புரளும். சரீரமெல்லாங்குத்திக் குடையும். வெந்நீர் பொறாது, வாயில் நீர் பாயும்.

இதற்கு மருந்து : மாவிலங்கவேர், சாரடைவேர் அரைத்து, வெந்நீரில் கொடுத்து, மேலுந் தடவவும்.

கரியாயென்னுமெலி கடித்தால் : உடம்பெங்குங் காஞ்சிரைப் பொடி தூவினாற் போலே துடிக்கும். நாவுலரும். நாசியடைக்கும்.

இதற்கு மருந்து : பாவட்டைவேரும், மாடப்புறா வெச்சமும் சுண்ணாம்புத் தண்ணீரிலரைத்து உண்டை செய்து, ஆமணக் கெண்ணெயில் தோய்த்து விழுங்கவும். மேலில் திமிரிடவும்.

சிங்கப் பல்லனெலி கடித்தால் : பல்கறுக்கும் மூக்குவேர்க்கும்.

இதற்கு மருந்து : புங்கின் மேல் புல்லுருவி நறுக்கிக் காய்ச்சிக் குடிநீருழக்கு, நல்லெண்ணெய் மூன்றிலொன்று கூட்டிக் கொடுக்கவும்.

அடல்வாயெலி கடித்தால் : மலங்கழியாது. பொசிப்புண்டாம்.

இதற்கு மருந்து : நாராயணச் சுள்ளியிலையும், மிளகு மிடித்துத் தின்னவும்.

எறும்பனென்னு மெலிகடித்தால் : ஊசி கொண்டு குத்தினாப் போலே உடம்பெல்லாங் குத்தும். சரீரம் சுட்டாப் போலே புண்ணாம்.

இதற்கு மருந்து : புண்ணாக்கிலையும், நெருஞ்சியு மரைத்துப் பாலில் குடிக்கவும் அந்த மருந்தை நல்லெண்ணெயில் வெதுப்பிப் புண்ணில் போடவும். கடித்தவாயில் நீலித்தளிரும், வெப்பாலையுமரைத்துக் கட்டவும். கரண்டி காய்ச்சி மருந்துமேல் வெதுப்பவும். இரைப் புழுவை மண்போக்கிப் பொட்டணமாய்க்கட்டி, குறுவை நெல்லரிசியில் போட்டுப் பொங்கிப் பொட்டணத்தை எடுத்துப் போட்டு, வெள்ளாட்டுக்கறி கூட்டியுண்ணவும். பால் வார்த்துண்ணவும். உப்பு புளி தவிர்க்கவும். (சு. 20)

(வேறு)

வெள்ளைக் காக்கணை வேர், சங்கம்வேர், பிராயம்வேர் பசுவின் பாலிலரைத்துக் கொடுக்கவும். ஏழுநாள் பத்தியம் பிடிக்கவும், எலிகடி தீரும். (சு. 6)

(வேறு)

வாகைப் பட்டையுங் கொழுந்தும், வசம்புமரைத்து எருமைத் தயிரில் கலக்கிக் குடிக்கவும். வேலிப் பருத்திவேரைப் பசுவின் பாலில் கலக்கிக்குடிக்க மாறும். (சு. 12)

(வேறு)

பசுவின் பாலுரியில், பாக்களவு சுண்ணாம்பு கலக்கித் தெளிய விட்டுக் கொடுக்கவும். பாக்குடனே தின்னவும். இந்தப்படி மூன்று நாள் கொடுக்கப் பொறுக்கும். (சு.20)

(வேறு)

கோழி முட்டை இரண்டு முட்டையை வெள்ளைக் கருவைச் சட்டியில் விட்டு, அதிலிரண்டுகாசளவு எருக்கலம் பாலை விட்டுக் கிண்டி வெந்தால் பொரியும். அதைத் தின்ன வயிறு நாலைந்து தரங் கழிந்தால் மோருஞ் சோறுங் கொடுக்கவும். எலிகடி விடந் தீரும். (சு. 20)

(வேறு)

பசுவின் பால் நாழியில், விட்டுணுகிரந்திச் சாகம் 4 படி விட்டு உறையூற்றிப் பாலுறைந்தால், மற்ற நாள் காலையில் துளசி எலுமிச்சங்காளவு அரைத்துக் கலக்கி, எலிகடிபட்ட ஆளைக்கழுத்தளவு தண்ணீரி லிறக்கி, மருந்தைக் குடிக்கக் கொடுக்க, உடனே

நூறுதரம் முங்கவும். எலிகடியுங் குறுக்கு வலியுமுடனே மாறும். இந்தப் படி மூன்று நாள் செய்து நாலா நாள் நல்லெண்ணெய்க் காய்ச்சி முழுகவும். விடமுந்தீரும். (சு. 20)

## பாம்பு விடத்திற்கு

கந்தகத்தோ டரிதாரம் மிரதம் ரெட்டி
    கீழுள்ளி வசம்புபெருங் காயம் வாழும்
அந்தமுள ஆடுதின்னா பாளைச் சாற்றால்
    ஆட்டிடுவாய் வில்லைதட்டி உலர்த்திக் கொண்டு
வந்ததொரு விடத்துக்கு வாயிலிடத் தீரும்
    வாராத விடத்துக்குக் கண்ணிலிட மீளும்
அந்தஅனுமன் கொண்டுவந்த மருந்திதற்கு மிச்சம்
    அடக்கம்பா ரிவ்வகையை யடக்கம் பாரே. (சு.14)

(செய்முறை : கந்தகம், அரிதாரம், இரதம், உள்ளி, வசம்பு, பெருங்காயம் இவற்றை ஆடுதின்னாப்பாளைச் சாற்றில் ஆட்டி, வில்லைதட்டிக் காய வைத்து உண்ணவும். பாம்பு விடம் தீரும்.)

## விரியன் கடித்தால்

கற்பூர வள்ளி வேருமிலையு மரைத்து, இளவெந்நீரில் குடிக்கவும். புங்கம் வேர் வெந்நீரில் குடிக்கவும். அழிஞ்சில் வேரு வெந்நீரில் குடிக்கவும். ஆடுதீண்டாப் பாளைவேர் வெந்நீரில் குடிக்கவும். (சு. 20)

(வேறு)

சிந்தியிலை நசியம், முருங்கைப்பட்டை நசியம், கிளிமூக்குக் கிழங்கும், அப்பைக் கிழங்கு முள்ளே கொடுக்கவும். துவாலை, கோவையிலை, நாய்ப்பாகல், முடக்கொத்தான், கையாந்தகரை, அறுகு, வெள்ளறுகு இதுவெல்லாம் கூட்டி இடித்துச் சாகமாக்கிச் சிறு நீருங் கூட்டித் துவாலையிடவும். விடந்தீருமென்றவாறு.

(சு. 20)

## தேள் கொட்டினால்

தேள் கொட்டினால் பிரண்டையை அரைத்துக்கொட்டு வாயிற் தடவி, கொள்ளிக் கம்பு கொண்டு சுருக்கக்காட்டவும் நிற்கும். (சு. 15)

(வேறு)

அகத்தியிலையும் கடுக்காயும் மிளகும் எண்ணெய் வார்த் தரைத்துப் பூசவும் பொறுக்கும். (சு. 20)

## வண்டு கடிக்கு

வாலுளுவாயரிசியும் கார்போகலரிசியும் சுண்ணாம்பும் கருப்புக்கட்டியும் கூட்டியரைத்துத்துப் பொடி செய்து, வெருகடிப் பிரமாணம் கொடுக்கவும். துவாலை யிட்டாவிரும்பு வேகாது. (சு. 20)

## வண்டுகடி, காணாங்கடி, மேலே படர்கிறதுக்கு மருந்து

வாகையிலையிலே மெத்தக் கொண்டு வந்து, ஒருசேர் எருமை மோரு விட்டு இடித்துப் பிழிந்து, அரைச்சேர் சாறும், அரைசேர் மோரும், மூன்று வாரகனெடை மிளகுத் தூளும் போட்டுக் குழப்பிச் சாப்பிடவும். இந்தப்படி மூன்று நாள் காலையில் மூன்று வேளை சாப்பிடவும். மேலே படர்ந்திருக்கிறதும் போய்விடும். உடம்பெரிவு கண்டால் தண்ணியிலே இருக்கச் சொல்லவும். (சு. 11)

## சூரை கடிக்கு

எருக்கிலைக் கொழுந்தை வெற்றிலையோடே சுண்ணாம்பு தடவித் தின்னவும். சூரைகடி மாறும். (சு.20)

## கடிவிடத்திற்கு

காஞ்சுரை வித்து, நிலவாகை, வெள்ளறுகு, செம்புளிச்சிவேர், வீழிவேர், உகாய்வேர், கொடுவேலிவேர், கருடக்கொடி இந்த மருந்தெல்லாம் அரைத்து, குறுணி வெந்நீரில் ஆட்டுக் கோமிசத் தைக் கலக்கிப் புதைத்து, வெள்ளாட்டெருப்புடமிட்டு, வற்றிக் குழம்பாக்கி எடுத்து, கடி விடத்தைச் சொறிந்து பூசவும். (சு.20)

(வேறு)

நாடன் பருத்தி இலை துவைத்து, காடியிற் பிசைந்து கொடுக்க நஞ்சு விழும். (குடித்த நஞ்சு விழும்). (மாட்டிற்கு இளங் கொடி விழாதிருந்தாலும் கொடுக்கலாம்). (சு. 12)

## கால்கை மேக ஊறல், வண்டு கடிக்குப் பச்சிலை

குண்டுமணி இலை இரண்டு குத்து இலை உருவி உரலிலே போட்டு, கொஞ்சம் வெந்நீர் தெளித்து நன்றாக இடித்து, கால்

படி சாறுவாங்கி, காலையில் சாப்பிடவும். இந்தப்படி மூன்றுநாள் காலையில் சாப்பிடவும். உப்பில்லா பத்தியம். கடும் பத்தியம். வாழைநிழல், புளியநிழல் கூட ஆகாது. காற்றாகாது. வீட்டுக் குள்ளே மறுபத்தியம். மூன்றுநாள், ஆறுநாள் வீட்டுக்குள்ளேதான் இருக்கவும். மருந்து சாப்பிடுகிற முதல்நாள் மிளகுசாறுஞ் சோறுஞ் சாப்பிட்டு, மறுநாள் காலையில் மருந்து சாப்பிடவும். ஒன்றும் ஆகாது. புதுப்பானையில் பத்தியங் காய்ச்சி குடிக்கவும். ஏழாம்நாள் கஞ்சி தேய்த்து வெந்நீரில்முழுகவும். எட்டாம் நாள், ஒன்பதாம் நாள் விளக்கெண்ணெய் தேய்த்து, சீயக்காய் தேய்த்து, வெந்நீரில் முழுகவும். மறுபடியும் ஐந்தாறு நாள் கழித்து, நல் லெண்ணெயில் முழுகவும். சகலமுந் தீரும். (சு.11)

## செய்யான் கடிக்கு

பாரா யெருக்கம் கொம்பொடித்துப்
பனைவெல் லத்தில் தூணிமூன்று
நேராய்க் குடிக்க விடந்த டிப்பும்
தீர்ந்தே யோடிப் புலர்ந்துவரும்
சீராய்க் கேளாய் துளி மூன்றும்
தின்னத் தேளுந் திரும்பிடுமே. (சு.20)

(செய்முறை : எருக்கம் கொம்பை ஒடித்து, பனைவெல்லத்தில் பக்குவமாய்ச் சேர்த்து, மூன்று தூணி நீரிட்டுக் காய்ச்சிக் கொள்ளவும்.

அளவு : மூன்று துளி உண்ணவும்.

தீரும்நோய்கள் : தேமல் போன்ற தடிப்பும், விடமும் தீரும்.)

## விடவீக்கக் குடிநீர்

முருங்கைப் பட்டை வட்டச் சாரணைவேர்
முன்னை நெருஞ்சி நீர்முள்ளி
சுருங்குஞ் சுரைத்தண்டு கருவேப்பிலைக்கு
சுக்கு மிளகு திப்பிலியும்
நருக்கு மீரவெங் காயம்
நாலொன் றாகக் காய்ச்ச
நிருங்கில் சனஞ்செயத்தின் மேலுண்பார்
நீர்வீட் டோடு முண்மையே. (சு.6)

(செய்முறை : முருங்கைப்பட்டை, வட்டச் சாரணைவேர், முன்னை, நெருஞ்சி, நீர்முள்ளி, சுரைத்தண்டு, கருவேப்பிலைக்கு,

சுக்கு, மிளகு, திப்பிலி, ஈரவெங்காயம் இவற்றைச் சேர்த்து, நாலொன்றாகக் காய்ச்சி அருந்தவும். விட வீக்கம் தீரும்).

## பேய்நாய் நரிகடிக்கு

பச்சைக் கொடிவேலி 5 கழஞ்சு, பசுவின்பால் அரைப்படி விட்டு அரைத்து, கால்துட்டெடை ஊமத்திலைச் சாறுவிட்டு, முன் அரைத்ததுவும் கலந்து கொடுக்கவும். அப்படிக் குடியாது போனால், அரைப்படி அரிசி பொங்கி வைத்துக் கொண்டு, ஒரு அகப்பைச் சோறுமிட்டு, மருந்தும் போட்டு மூடிக் கொடுக்கவும். மறுநாள் அவன் முழுகுகிற எண்ணெய் முழுகவும். கறி, சகலமானதும் போட்டு ஆக்கவும். (சு.6)

## தீரைப்பாம்புக்கு, பழமலங்கழிய மருந்து

இரண்டு மூன்று கடுக்காய் யீரஞ்சு வேப்பி ணுக்கிட்டுப்
பிரண்டை யின்சா கத்தரைத்துப் பிசைந்தா மணக்கெண்
ணெயில் கொடுக்க
திரண்ட திரண்ட மலங்கள் தீரை சிறுபுழு வெல்லாம்புரண்டு
புரண்டு விழாதி ருக்கில் பொன்பதி னாயிரம் தெண்டம்.
இதற்குப்பத்தியம் : மோருஞ்சோறுங் கொடுக்கவும். (சு.20)

(செய்முறை : மூன்று கடுக்காய், பத்து வேப்பிலை ஈர்க்கு, பிரண்டைச்சாறுவிட்டு அரைத்து, ஆமணக்கெண்ணெயில் கலந்து கொடுக்கவும்.

தீரும்நோய் : மலக்கட்டுதிரும். தீரை, சிறுபுழுக்கள் வெளி வரும்.

பத்தியம் : மோர்சோறு உண்ணவும்.)

## வயிற்றுக் கழிச்சல் நீக்க மருந்து

சாதிக்காய் கிராம்பு பத்திரி சர்வதாஞ் சீரகம் ஓமம்
பேதிக்காங் குரோசாணி பெரிய தாளிசங் கொத்த மல்லி
ஆதிக்குங் கிட்ட மூச்சி அவினுடன் விடயம் அக்கிரம்
மாதிக்கு மருந்து நல்ல மாங்கொட் டைப்ப ருப்புங்

கூட்டியே கழஞ்சி யொன்று குணமுடன் வெதுப்பித் தூளாய்
நாட்டினில் தயிர்தேன் நெய்யில் நலமுட னருந்து வோர்க்கு
பாட்டினிற் கழிந்த பேதி பதிவதாங் கிராணி வாய்வு
வீட்டிமை பண்ணு மிர்த்தப் பிதமுடன் சலமும் போமே.
(சு.15)

(செய்முறை : சாதிக்காய், கிராம்பு, பத்திரி, சீரகம், ஓமம், குரோசாணி, தாளிசபத்திரி, கொத்தமல்லி, அபின், அதிவிடயம், அக்கிராகாரம், மாங்கொட்டைப் பருப்பு இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1 கிராம்) வாங்கி, வெதுப்பித் தூளாய்ச் செய்து, தயிர், தேன், நெய் இவற்றில் உண்ணவும். பேதி, கிராணி, வாய்வுதீரும்.)

## வயிற்றுளைச்சலுக்கு மருந்து

விரும்புகின்ற சீரகமு மேவுகின்ற நெல்பொரியும்
பொரும்புகின்ற சுக்குப்பொடி சரியாய்-நிரம்பிடவே
சரக்கையுந் தேறுந்த ளாவிப்பொருந்தி யுண்ணச்
சொற்படியே கேட்குமிது சொல். (சு.15)

(செய்முறை : சீரகம், நெற்பொரி, சுக்குப்பொடி இவை ஓரளவாய் கூட்டியுண்ண வயிற்றுளைச்சல் தீரும்.)

## வயிற்றுக் கடுப்புக்கு

மாயக்காய், இலைக்கடுக்காய், சிற்றரகம், அதிமதுரம், கடுக்காய், சாதிக்காய், மாதுளம் பிஞ்சு, மாதுளந்தோடு அரைத்துக் கொடுக்கவும் தீரும். (சு.4)

(வேறு)

எலுமிச்சம் பழச்சாறும், கையாந்தகரைச் சாறும் ஒரு அளவாகக் கொடுக்க நிற்கும். (சு.4)

## வயிற்றில் வியாதிகண்டது இதுவெல்லாந் தீர்க்க

விரால்மீன் முற்றின மீனைத் தலையைப் போக்கி, மீனைக் கீறி அதில் எருக்கலம் பாலாழாக்கு, வளையலுப்பாழாக்கு இது ரெண்டும் மத்தித்து மீனில் தடவி, சூரிய புடமாயுலர்ந்தால் எடுத்து, முசுமுசுக்கைச் சாகமாழக்கு அதில் சேமிக்கச் சூரியபுடம் வைத்து, உலர்ந்தால் அதை எடுத்து, கொட்டைப் பாக்களவு உமிக்காந்தலில் சுட்டுக் கொடுக்கவும்.

பத்தியம் : வெந்நீரும் சுடுசோறுங் கொள்ளவும். பத்தியம் காக்கவும். (சு.20)

## வயிற்றில் இரத்தமுஞ்சலமும் விழுகிறதுக்கு

மாம்பட்டை, மாதளைக் கொழுந்து, பூவுமரும்பும், சித்திரப் பாலையும் இவை அரைத்து, ஒரொன்று எலுமிச்சங் காயளவும், சுக்கு 1 கழஞ்சு, பாதிபச்சை, பாதிசுட்டுச் சீவிப்போட்டு, நெந்தயம்

1 கழஞ்சு, புளியங்கொட்டைத் தோடு ½ கழஞ்சு இதுவெல்லா மரைத்து ஒருபடி எருமைத் தயிரில் வெந்து, நாளொன்றுக்குக் கொட்டைப்பாக்களவு கொடுக்கவும் பொறுக்கும். (சு.20)

## வயிற்றில் சர்வ வியாதிக்கும்

பசுவின் கோமியம், வெள்ளாட்டுக் கோமியம், பசுவின் மோர், முற்றின காடித் தெளிவு, இஞ்சிச்சாறு இதை ஒரொன்று சேர்த்து, பழைய இருப்புக்கிட்டம் பொடி செய்து 2 படி போட்டு, ஊறிக் காய்ந்தால், புங்கம் பட்டை, வேப்பம் பட்டை, கையாந்தகரை, குப்பைமேனி, உகாயிலை, இசங்கிலை, முருக்கிலை, உத்தம தாளி, பொடுதலை, நொச்சி, துளசி, பிரமி, கழச்சியிலை தைவேளை, ஆடாதோடை, சிறுதும்பை, வெள்ளருகு, பேய்க்கும் மட்டிக்காய், திருகுகள்ளிப் பாலாழாக்கு, பச்சிலைசாகம் வகைப் படி நாழி முன் இளரசத்தில் விட்டுக் காய்ச்சி வடித்து, இதில்கடை மருந்து, சுக்கு, மிளகு, திப்பிலி, காந்தம், அசமோதகம், கடுகு ரோகணி, சிவதை, வசம்பு கடுகு, வெள்வெங்காயம், பெருங்காயம் அதிவிடயம், அமுக்கிராவேர், சாரடை, கொடுவேலித்தோல், கடுக் காய் 50, தான்றிக்காய் 50, கொத்தமல்லி, செங்கழுநீர், கோட்டம், அதிமதுரம், கத்தூரிமஞ்சள், சவ்வீரம், சிறுமூலம், சாதிக்காய், சாதிபத்திரி, காராம்பூ, தேவதாரம், இந்துப்பு ஆக இவை ஒரொன்று 3 பலம் கொண்டு இடித்தரைத்துக் இளரசத்தில் கலக்கி அதன் கூட கருப்புக்கட்டி 40 கழஞ்சு, கற்கண்டு நாழிகூட்டி, குழம் பாகக் காய்ச்சி, காய்ந்தால் உள்பொடி உழக்கு, பசுவின் நெய் நாழி, சிற்றாமணக்கெண்ணெய் நாழி இதுவெல்லாம் விட்டுக்குழம்பாக்கி, பழம்பாத்திரத்தில் விட்டு வண்டுகட்டி, நெல்லில் புதைத்து வை, கவும். காலமே நெல்லிக் காயளவு கொள்ளவும். பல வியாதிகள், மகோதரம், விடபித்தம், பாண்டுரோகம், காமாலை, கவிசை, பீலிகை, நீராம்பல், பெருவயிறு, எருவீக்கம், உதரவாதம், செகுத்து, ஊதுகாமலை, வயிற்றுப் பொருமல் இதுவான வியாதிகளெல்லாம் தீரும் குருவே பராபரமாகச் செய்து கொள்ளவும். (சு.20)

## வயிற்றுக் கடுப்புக்கு

கட்டுக் கொடியரைத்து மாங்கயளவு பழந்தண்ணீரில் கலக்கிச் சூரிய புடம் வைத்து, பருத்திக் கொட்டைப்பருப்பு 2 கழஞ்சு, நற்சீரகம் 1 கழஞ்சு, கார்கோலரிசி 1கழஞ்சு இதுவெல்லாமரைத்து முன் மருந்தில் கலக்கிக் கொடுக்கவும். (சு.20)

(வேறு)

காஞ்சங் கொழுந்து, இளங்கொழுந்தைப் பறித்துக் கசக்கி, தேங்காய்ப்பாலில் மூன்று துளி விட்டுக் கொடுக்கவும். பொறுக்கும். (சு.20)

## வயிறுகடுப்பு, பேதி நிற்க

குரோசாணி ஓமம், அதிவிடயம், சாதிக்காய், சாதிபத்திரி, கசகசா, இலிங்கம், அபின் வகைக்கு ½ வராகன் இளவறுப்பாய் வறுத்துப் பொடி செய்து கொடுக்கவும். (சு.14)

(வேறு)

வயிறுபருத்தால் காரமுள்ள மஞ்சளரைத்து எலுமிச்சங் காயளவு முழுங்கவும். (சு 12)

## கடுப்புக்கு

சாதிக்காய் சாதிலிங்கந் தாரணியி லிந்துப்பு
ஆதிக் காராம்பூ அதிவிடயம் -வேதிந்த
குக்கிலவம் கஞ்சாச் சுழலூமத்தம் வெண்தயிரோ
டொக்கவின் கண்டுகடுப் போடும். (சு.20)

(செய்முறை : சாதிக்காய், சாதிலிங்கம், இந்துப்பு, காராம்பூ, அதிவிடயம், குக்கிலவம், கஞ்சா, ஊமத்தம் இவற்றை ஓரளவா யெடுத்துச் சேர்த்து தயிரிலுண்ணக் கடுப்பு நீங்கும் )

## சுரத்திலாகிலும், மறுபடியாகிலும் கழிச்சல், கடுப்பு, இரத்த மடைபட

நறுவிலிக் கொழுந்தொருபிடி, நெற்பொரி உரி, இது இரண்டு மிடித்து மாவாகத்தெள்ளி எடுத்துக்கொண்டு, மூன்று நாளிந்த மாவைத்தின்ன வெகு உச்சிதம். (சு.16)

## கழிச்சலுக்கு முழுகப் பச்சிலை

முசுமுசுக்கை, கொடுப்பை, கரிப்பான் மூன்றும் இடித்து, சுரை யிலைத் தேய்த்து முழுகவும். கழிச்சல் நிற்கும். அன்னதிவசம் தீரும். இது கை கண்டது. (சு.4)

## சலக்கழிச்சலுக்கு

சாதிக்காய் சாதிபத் திரிகா ராம்பூத்
தனியூமத்தம் விதையோ ரொன்றிரு கழஞ்சு
நீதியவி னரைக்கழஞ்சு நாவியரைக் கழஞ்சு
நீர்முள்ளியின் சாற்றி லூமத்தஞ் சாற்றி

லோதுகஞ்சாச் சாற்றிலொவ்வொரு சாம மரைத்து
உண்டைக்களவே பிரமாணம் தேனிலருந் திடுகில்
வாதமுறு சலக்கழிச்சல் தனைத்தீர்க்கு மிதன்பெயர்
மறிகடலைக் குடலைக்குடிக்கும் வடவா முகாக்கினியே.
(சு.20)

(செய்முறை : சாதிக்காய், சாதிபத்திரி, காராம்பூ, ஊமத்தம் விதை இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்), அவின் கழஞ்சு (5.1 கிராம்), நாவி ½ கழஞ்சு (2.55 கிராம்) இவற்றை வாங்கி, நீர் முள்ளிச்சாறு, ஊமத்தஞ்சாறு, கஞ்சாச்சாறு இவற்றில் ஒவ்வொரு சாமம் அரைத்து, உண்டை செய்து கொள்ளவும்.

அளவு : ஒரு உண்டை தேனில் உண்ணவும்.

தீரும் நோய் : சலக்கழிச்சல் தீரும்.)

இதற்கு எண்ணெய்

நெல்லிக்காய் மொசுமொசுக்கை கையாந் தகரை
நீர்க்கொடுப்பை கத்தாழை சீந்திற் தண்டு
பல்லவநெட் டிலைத்தாழை விரிசிலையி னோடே
பண்பாக வகைக்குழக்குச் சாகம் வாங்கி
மெல்லவேவொரு பாண்டத்தில் விட்ட போது
விளம்புவேன் கற்கத்தின் மருந்து கேளாய்.

மருந்தேல மிலவங்க மிலவங்கப் பத்திரி
மண்ணியதோர் தாளிச பத்திரி நன்னாரி
அருந்துகின்ற சாதிக்காய் முந்திரிகைப் பழமும்
ஆனசத குப்பைநல்ல சந்தனங் காரகிலும்
திருந்தவன ரிருவேரி ராமிச்ச வேருஞ்
சிறக்கவகைக் கோரொன்று கழஞ்சு அரைத்து
வரும்பருவம் பார்த்தெண்ணெய் வடித்தெடுத்துத் தேய்க்கில்
மறிகடல் குடிக்கும் வடவா முகாக்கினியே.
இந்த எண்ணெய் முழுக வெந்நீர் பரிமாறி, பத்தியங்காக்கவும்.
(சு.20)

(செய்முறை : நெல்லிக்காய், முசுமுசுக்கை, கையாந்தகரை, நீர்க்கொடுப்பை, கற்றாழை, சீந்தில், தாழை, விரிசிலை இவற்றின் சாறு வகைக்கு ஒரு உழக்கு (336மி லிட்), ஏலம், இலவங்கம், சாதி பத்திரி, தாளிசபத்திரி, நன்னாரி, சாதிக்காய், முந்திரிகைப் பழம்,

சதகுப்பை, சந்தனம், காரகில், இருவேர், இராமிச்சம்வேர் இவை வகைக்கு ஒரு கழஞ்சு (5.1கிராம்) வாங்கி, அரைத்து எண்ணெயுடன் சேர்த்து, பதம் பார்த்திறக்கித் தேய்க்கவும்.

தீரும் நோய் : சலக்கழிச்சல் தீரும்.

பத்தியம் : வெந்நீர் பயன் படுத்தவும்.)

### சுகபேதிக்கு எண்ணெய்

சித்தாமணக் கெண்ணெய் ½ படி, பசுவின்பால் 2 படி, அதிமதுரம், கடுக்காய், இந்துப்பு, கடுகுரோகணி, வாளம் வகைக்கு ¼ பலம் இந்த சரக்குக் கிடித்துக் கலக்கிக் காய்ச்சி வடித்து, பெரியவருக்கு ஒரு கரண்டி கொடுக்கவும். ஒரு நாழி சென்று வெந்நீர் கொடுக்கவும். பேதி நிறுத்தவேண்டில் உப்புக்கஞ்சி, மோர், மாலையில் சுக்கு, மிளகுக் கசாயம், இராத்திரி மிளகு நீர்க் கசாயம் சாப்பிடவும். (சு.22)

### பேதி மாத்திரை :

சுக்கு, திப்பிலி, மிளகு, பூரம், லிங்கம், வாளம் இந்த வகைகளில் வரணம் ½ மாத்திரை மசித்துச் சமமாய்க் கலந்து, 5 பலம் மத்தித்து இந்த ஆறுவகையும் ஒன்றாகக் கல்வத்திலிட்டு, அதில் பழரசம் விட்டரைக்கவும். மாத்திரைப் பிரமாணம் உருண்டை செய்து நிழலுலர்த்தவும். கருப்பட்டியில் கொடுக்கவும். (சு.22)

### இராத்திரி பேதிக்கு மாத்திரை

வாளம் 4 பலம், பூரம் 4 பலம், இரசபற்பம் 4 பலம், இந்த மூன்று சரக்கையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு, ஒரு பிடி சாதம் போட்டு அரைத்து, மிளகுப் பிரமாணம் உருட்டி வைத்துக் கொள்ளவும்' இராத்திரி சாப்பிடும் போது தேகத்திற்குத் தக்கபடி சாதத்தில் வைத்து விழுங்கவும். பேதியாகும். அலுப்பு இராது. (சு.22)

### மலசல கட்டுக்கு மாத்திரை

இரசகற்பூரம் 3பலம், பூநீக்கிய இலவங்கம் 3 பலம், ஓமம் 3 பலம், இந்த மூன்று வகையும் ஒன்றாகக் கூட்டி, கும்மட்டிக்காய் ரசத்தால் 12 சாமம் அரைத்துப் பூரணக் கடலைப் பிரமாணம் உருட்டி வைக்கவும். அனுபானம், சோம்பு 1பலம், திராட்சை 1பலம் இவை இரண்டும் கசாயம் செய்து, அதில்கலக்கி உரைத்துக் கொடுக்கவும். மலசலம் வெளியாகும். (சு.22)

## பேதிக்கு மாத்திரை

வீரம் 1 பலம், நெல்லிக்காய் கந்தகம் ¼ பலம், வெண்காரம் ¼ பலம், சுத்தி செய்த நேர்வாளம் ¼ பலம் இந்த நால்வகையும் இளநீர் விட்டரைத்து, குன்றிமணிப்பிரமாணம் மாத்திரை செய்து நிழலுலர்த்தி, கருப்பட்டியில் வைத்துக் கொள்ளவும்.

ஆறுமாதத்திய குழந்தைக்கு 1மாத்திரை கொடுக்கவும். 4 தரம் பேதியாகும். 1 வயது குழந்தைக்கு 2 அல்லது 2½ மாத்திரை கொடுக்கலாம். பெரியவர்களுக்கு 3 மாத்திரை கொடுக்கலாம். 4நாள் மிளகுரசம் சாப்பிடவும். சுரத்திற்கு இஞ்சிச் சாற்றில் ஒரு மாத்திரையும் பெரியவர்களுக்கு 2 மாத்திரையும் கொடுக்கலாம். அரைப்புளிரசம், முருங்கை, கத்தரிப்பிஞ்சு சேர்த்துக் கொள்ளவும். (சு.22)

## பித்தம்மலத்துடனே கழிய

கீழ்வாய் நெல்லி வேரும், சுக்கு மரைத்துப் பசுவின் பாலில் குடிக்கப் பித்தம் மலத்துடனே கழியும். (சு.20)

## இரத்தக் கழிச்சலுக்கு

1 பிடி பூலாவேர், துடரிவேர், அத்திவேர், பட்டை, புளியம் வேர் ஆக இதுவெல்லாம் நல்லெண்ணெயில், உள்ளி வசம்பிட்டு. சூரிய புடம் வைத்துக் கொடுக்கப் பொறுக்கும். (சு.20)

## இரத்த பிரமியத்திற்கு

எருக்காலம் பூ பத்து, மிளகு பத்து, கடுகு பத்து இவை மூன்றும் அரைத்துக் குருந்தக்காய் பிரமாணம் உண்டை செய்து, மூன்று நாளைக்குச் சாப்பிடவும். (சு.6)

## வாந்தி பண்ணுதற்கு மருந்து

இலை இஞ்சியை விள்ளையாய் நறுக்குச் சட்டியில் போட்டு, தேன் விட்டுச் சிவக்க வறுத்து, இட்டித் தண்ணீர் விட்டு உழக்கு தண்ணீராக வைத்து அந்தக் கசாயத்தில் தேன் விட்டுச் சாப்பிடவும். இந்தப்படி 3 நாள் சாப்பிடவும். 3 நாள், 6 பொழுது சாப்பிடவும். இது கை கண்டது. (சு.4)

## சத்தி விக்கல் தீர

கொத்தமல்லி கூவிளை குறுந்தட்டி நெல்பொரி
யொத்தசுக்கு முத்தக்காசு வாதுநீர் குடிப் பீரால்
பித்தகோப மனதுபெருத் தெழுந்த விக்கலும்
சத்திகோவ மானதுந் தரித்திடாரழ லோடுமே, (சு.20)

(செய் முறை : கொத்தமல்லி, கூவிளை, குறுந்தட்டி, நெல் பொரி, சுக்கு, முத்தக் காசு இவற்றை நீருடன் கலந்துக் காய்ச்சிக் குடிக்கவும். சத்தி விக்கல் தீரும்.)

(வேறு)

நீடு மாதளை நெல்பொரி சர்க்கரை
தேடு திப்பிலி தேனில் குழைத்திடில்
பீடை போல்வரு சத்தியும் விக்கலு
மோட வோட துரத்துவ துண்மையே. (சு.20)

(செய்முறை : மாதுளை, நெல்பொரி, சர்க்கரை, திப்பிலி இவற்றைப் பொடி செய்து, தேனுடன் சேர்த்துண்ணவும். சத்தி விக்கல் தீரும்.)

(வேறு)

திப்பிலி யேல மோடு சிறந்ததி மதுரஞ் சம்பா
நெற்பொரி கழஞ்சோ ரொன்று நீர்வெல்லம் பலங்கால் கூட்டி
உற்பனமாய் வில்வவேரில் ளிரசத்தை வெந்து வெந்து
கொண்டால்
விக்கலு மறைந்து போகும் விழுங்கிற இளஞ்சு டாமே, (சு.20)

(செய்முறை : திப்பிலி, ஏலம், அதிமதுரம், சம்பா நெற்பொரி வகைக்கு 1 சழஞ்சு (5.1கிராம்) வாங்கி, நீர்வெல்லம் $\frac{1}{4}$ பலம் கூட்டி (8.75கிராம்), வில்வவேரின் சாற்றையும் சேர்த்துக்காய்ச்சி, இளஞ்சூடாக உண்ணவும், விக்கல் தீரும்.

(வேறு)

முள்ளுப் பன்றி முள்ளும் சுக்கும் தேனில் குழைத்து நக்க விக்கல் மாறும். (சு.10)

(வேறு)

அதிமதுரம், திப்பிலி நேரொன்று ஆறு சழஞ்சு பொடித்துச் சர்க்கரையில் விழுங்க மாறும். (சு.10)

(வேறு)

ஆமணக்கம்வேர், ஊமத்தம் வேர், வசம்புந்தட்டிச் சீலையில் பொட்டணமாகக் கட்டி முகந்திருக்கத் தீரும். (சு.10)

**மாந்தத்துக்கு முயல் நெய்**

... ... ... ...

அயல்கானு முயலொன்று பிடித்து வந்து
அப்பனே குடல்தலையும் காலும் போக்கே.

கூடல் போக்கி நாலுபத்து பலந்தான் தூக்கி
குமிறவே யிடித்துவொரு பாண்டத் திட்டு
அடல்முட னறுகுறுணி சலமு மிட்டு
அப்பனே நாலொன்றாய்க் குறுக்கி நீயும்
விடல்முய ராடாதோடைச் சாறுகுறுணி விட்டு
வெள்ளாவின் பாலிரு நாழி விட்டு
நடலைநறு நெய்யிரு நாவுரியு மிட்டு
நாட்டிடவே மேல்மருந்தைச் சொல்லக் கேளே.

சொல்லுகிறேன் திப்பிலி யதனின் மூலம்
சுக்குடனே கற்கடக சிங்கிசித்திர மூலஞ்
சொல்லுமாஞ் சிறுதேக்குக் குரோசாணி ஓமம்
செவ்விய மிருசீரகமு கிராம்புத் தானும்
வெல்லுமே சடாமாஞ்சி கடுகு ரோகணி
மிளகுகோட்டம் யிந்துப்பு வாலுளுவை யரிசி
அல்லுறவே முந்திரிகை யேலமில வங்கம்
அதினிலையு மரைத்தை திப்பிலியுந் தூக்கே.

தூக்கடா கழஞ்சிரெண்டு பாலி லாட்டிச்
சொல்லுறேன் பேரிகை முளரி முன்னை
ஆக்கமுறும் பத்திரியுங் கண்டங் காரி
அப்பனே சித்தாமல்லி பேரா மல்லி
தேக்கடா கூவிளமும் நெருஞ்சி தானுஞ்
சிறுவழு தலையிவை சமூலங் கூடத்
தாக்கடா தூதுவளை அமுக்கி ராவேர்
சங்கன்வேர் திப்பிலியு மிளகும் பாரே.

பாரப்பா மஞ்சளொடு தேவ தாரம்
பருவரத்தை வகைக்கங்கே பலந்தான் மூன்று
சேரப்பா தூளாக்கி நீரில் தானும்
தீயிட்டு நாலொன்றாய்க் குறுக்கி வாங்கி
ஆரப்பா யிவையெல்லா மொன்றாய்ச் சேர்த்து
அடுப்பேற்றி பூசைசெய்து அனலை மூட்டி
பேரப்பா மூன்றுநாள் ஊற வைத்து
புகழான நாலாநாள் வடித்தி டாயே.

வடித்துவைத்த நெய்யிலே கழஞ்சி தூக்கி
மைந்தனே யரைக்கழஞ்சி தேனும் விட்டு
படித்தரமாய்த் திப்பிலிதான் மென்பொடியுந் தூவி
பாங்காக வுடம்பறிந்து இருநேர மூட்டு
நொடிக்குமுன்னே நோயகலும் வச்சிர தேகம்
நுணுநுணுக்கந் தொண்ணூத்தாறு சயமுந் தீரும்
கடித்தவாய் துடைத்தால் மால்பிணி விண்ணேகுங்
கதலிகந்த கிறுதங்கே ளகன்றி றேனே.

(சு.1.பா.238-243)

(செய்முறை : ஒரு முயலின் கால், தலை, குடல் நீக்கி, 40பலம் (1.400கி.கிராம்) இடித்து, ஆறு குறுணி நீரிலிட்டு நாலொன்றாகக் காய்ச்சி, ஆடாதோடைச் சாறு குறுணி (5.3லிட்), ஆவின்பால் இரு நாழி (2.6லிட்), நெய் இரு உரி சேர்க்கவும். திப்பிலி, திப்பிலிமூலம், சுக்கு, கற்கடக சிங்கி, சித்திரமூலம், சிறுதேக்கு, குரோசாணி ஓமம் இருசீரகம், கிராம்பு, சடாமாஞ்சில், கடுகுரோகணி, மிளகு, கோட்டம், இந்துப்பு, வாலுளுவை அரிசி, முந்திரிகை, ஏலம், இலவங்கம், அரத்தை, இவை வகைக்கு 2 கழஞ்சு (10.2 கிராம்) வாங்கிப் பாலிலாட்டி, யத்திரி, கண்டங்காரி, சித்தாமல்லி, பேரா மல்லி, கூவிளம், நெருஞ்சி, சிறுவழுதலை இவற்றின் சமூலம், தூதுவளை, அமுக்கிராவேர், சங்கன்வேர், திப்பிலி, மிளகு, தேவதாரம் இவை வகைக்கு மூன்று பலம் (105கிராம்) வாங்கித் தூளாக்கி நீரிலிட்டு, நாலொன்றாய்க் காய்ச்சி, அனைத்தும் ஒன்றாய்ச் சேர்த்துக் காய்ச்சி, மூன்று நாள் கழித்து நாலா நாள் வடித்துக் கொள்ளவும்.

அளவு : ஒருகழஞ்சு (5.1கிராம்)

துணைமருந்து : தேன்.

தீரும்நோய்கள் : 96 சயங்கள், மாந்தமெல்லாம் தீரும்.)

## மாந்தக்குளிகை

இலிங்கம் 2கழஞ்சு, நேர்வாளம் 6கழஞ்சு, சுக்கு 3 கழஞ்சு, கடுக்காய் 9 கழஞ்சு. ஒரு மாத்திரை இஞ்சிச்சாற்றில் கொடுககவும்.

(சு.13)

## மாந்தக் கணைக்கு

கீழ்வாய் நெல்லி சமூலம், வெள்ளைத் துத்தி வேர்ப் பட்டை, தகரைவேர், நாவ ற் பட்டை, விரிசம் பட்டை, ஈரவெங்காயம்

அதிமதுரம், மாதளைவேர்ப்பட்டை, தென்னங்குரும்பை, பழம் பாசி இதுவெல்லாங் காடியிலூறப் போட்டு, ஏழுநாள் சென்றால் சங்களவு துவப்பு கொடுக்கவும். (சு.20)

## பிள்ளைகளுக்கு மாந்தத்திற்கு

ஆமணக் கெண்ணெய் உழக்கில், கருஞ்சீரகம், வெள்ளைச் சூரை வேரும் அரைத்து, எலுமிச்சங்காயளவு வேலிப் பருத்திச் சாகம் சங்களவு கூட்டிக் காய்ச்சிக் கொடுக்கவும். மாந்தம் பொறுக்கும். (சு.20)

## மாந்தத்திற்கு நெய்வைக்க

வேலிப்பருத்தி, பொடுதலை, ஈரவெங்காயம், நற்சீரகம் சாரடைவேர், வசம்பு, மஞ்சள், கருஞ்சீரக மிவையெல்லாம், எருமை நெய்யில் வெந்து கொடுக்கவும், (சு.20)

(வேறு)

குழிமீட்டான், அவுரிச்சாறு, கொழிஞ்சிச்சாறு, கையாந்த கரைச்சாறு, மிளகு, மஞ்சள், வசம்பு இதுவெல்லாம் எருமை நெய்யில் வெந்து கொடுக்கவும். (சு.20)

(வேறு)

மூக்கரச்சாரணைவேர் ஒரு விரல் நீளத்தில் தறித்துக் கொண்டு, இரண்டு ஈரவெங்காயமும் அதுவுங் கூடத்தட்டி, ஆழாக்கு விளக்கெண்ணெயில் ஒரு கொதி வரக் காய்ச்சி, இறக்கி, நாளொன்றுக்கு அரைச்சங்கு கொடுக்கக் குணமாம். (சு.10)

## மாந்தம் தீரநெய்

பாரிலே பாழாகு மாந்தந் தீரப்
பரிந்துபார் யொன்று குப்பை மேனி
நீரிலே பொடுதலை யும்புட் காலும்
நேடி கிண்டு வரட்பு லாவுங்
கூரிலே விடத்தலை வேலிப் பருத்தி
கோடக சாலை ஆவகொழுந் தெல்லாந்தான்
சேறிலே சீர முள்ளி சுக்கு
திப்பிலியு மருந்தெல்லாஞ் சேர்த்தி டாயே.

சேர்த்துவிடு சமனாக வரைத்துக் கொண்டு
செப்புவேன் பசுவின்வெண்ணெய் சேர்த்துக் காய்ச்சி
வார்த்துவிடு சிறுகரண்டி நெய்தா னப்பா
மாந்தமது பதினெட்டு வகையுந் தீரும்
... ... ... ...

(சு.21. பா.345,346)

(செய்முறை : குப்பைமேனி, பொடுதலை, புள்ளடி, இண்டு, வரட்புலா, விடத்தலை, வேலிப் பருத்தி, கோடக சாலை, ஆவகொழுந்து, சீரகம், உள்ளி, சுக்கு, திப்பிலி இவை ஓரளவாய் எடுத்து, பசுவின் வெண்ணெய் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ளவும்.

அளவு : சிறுகரண்டி அளவு.

தீரும் நோய் : பதினெட்டு வகை மாந்தங்களும் தீரும்.)

## மூலவாய்வுக் கெண்ணெய்

ஒழியுமே உதரத்தில் போறாமல் தீரும்
ஒழியாத மூலவாய்வு ஓடிப் போகுங்
கழியுமே மூன்றுநா ளமுது கொள்ளு
கட்டாக யெண்ணெயொன்று காய்ச்சக் கேளு
தெளியுமே கடுக்காய் இருப தப்பா
செப்பாதே விரைபோக்கிப் பொடிதான் செய்து
வழியுமே ஒருதலைப் பூண்டிருப தாகும்
மைந்தனே மேற்றோலே வாங்கிப் போடே.

வாங்குவாய் பெருங்காயங் கழஞ்சி ரெண்டு
மைந்தனே முடக்கொத்தான் கொழுந்து ஒருபிடி
பாங்கிலா யேரண்டத் தெண்ணெய்படி யிற்பாதி
பாலகனே மும்மருந்து நறுக்கிப் போடு
தாங்குவாய்க் காய்ச்சிநீ மெழுகுபத மானால்
தானிறக்கி ஆறவிட்டு கடுகை வாங்கிச்
சாங்கமா யரைத்திடுவா யெண்ணெ யோடு
தான்கரைத்து ஒருகரண்டி தாக்கி டாயே.

தாக்கிடவே பச்சமொன்றில் மூல வாய்வு
தான்தீரும் மலக்கட்டு தகன்று போகும்
... ... ... ... ...

(சு.21.பா.30-32)

(செய்முறை : கடுக்காய் இருபது வாங்கி விதை போக்கிப் பொடிசெய்து கொள்ளவும். ஒரு தலைப் பூண்டு இருபது, வாங்கி மேல்தோல் நீக்கவும். பெருங்காயம் 2 கழஞ்சு (10.2கிராம்), முடக் கொத்தான் கொழுந்து ஒரு பிடி எடுத்து, ஏரண்டெண்ணெய் ½ படி (672மி.லிட்.)யில் இவை அனைத்தும் நறுக்கிப் போட்டு, மெழுகு பதமாக இறக்கி, அனைத்தும் அரைத்துக் கலக்கிக் கொள்ளவும்.

அளவு : ஒரு கரண்டி உண்ணவும்.

தீரும் நோய்கள் : மூலவாய்வு, மலக்கட்டு.)

## மூலத்திற்கு நாயுருவி நெய்

... ... ... ...

நிரைத்திட்ட நல்மூல மெல்லாந் தீர
நேரான நாயுருவி நெய்யைக் கேளு
தரைத்திட்ட சிவந்தநா யுருவி தானுஞ்
சமூலந் தான்பதி னாற தாமே.

ஆமப்பா நிறுத்திட்டுப் பாண்டத் திட்டு
அய்மூன்று பதின்ரெண்டு படிநீர் விட்டொன்று
யாமப்பா யொன்றரைதான் ஆவின் நெய்தான்
படியளந்து விட்டபின்பு பகருவேன் கற்கம்
நாமப்பா கொடுவேலி வேரின் பட்டை
நாசிவதை சேங்கொட்டை ஆயிலப் பட்டை
தாமப்பா திரிகடுகு முன்னை வேருந்
தான்றிப்பட்டை திரிபலையும் முசுட்டை வேரே.

வேரான வெட்டிவேர் புங்கம் பட்டை
விளங்கவே சுத்திசெய் வாளங் கூட்டி
காறான இந்துப்புப் பாறை யுப்பு
குருண்டுகாஞ் சோறிவேர் கத்தூரி மஞ்சள்
நேரான புளியருணைக் கிழங்கு மல்லால்
நேர் பிரண்டைக் கிழங்கும் மருட்கிழங்கு மாகும்
பேறான காட்டில்வரல் கறணை காசும்
பேசுவேன் வகையொன்று கழஞ்சி மூன்றே.

இளங்கொதியா நாளுநாள் அடுப்பி லேற்றி
என்மகனே முதிர்வட் டஞ்சுர நாளில்
விளைஞ்சதிரி பலையினுட கொட்டை நேராய்
விரைந்துசுட்டு நீராக்கிப் பொடி தான் செய்து

குடைமுஞ்சதில் வெருகடித்தூள் கையில் வாங்கி
கூட்டுரெண்டு காசெடைநெய் கொடுத்தி டாயே.

கொடுத்துவரப் பத்துநாள் உதயந் தன்னில்
குணமாகும் வியாதிதனைக் கூறக் கேளு
தடித்துவரும் மூலமுட னுறுப்பு மூலந்
தனைக்குமந்த மூலமுளை உள்மூ லங்கள்
வெடித்துவரும் பிறமூலம் வறட்சி மூலம்
வெந்துவிடும் தனல்மூலஞ் சீமூ லங்கள்
எடுத்தரத்த மூலமுடன் நவமூ லங்கள்
ஏகுமடா சொன்னே னிந்நூல் தானே.

(சு.21.பா.315-319)

(செய்முறை : சிவந்த நாயுருவியின் சமூலம் பதினாறு வாங்கிப் பாண்டத்தில் போட்டு, பனிரெண்டுபடி (15.6லிட்) நீரும் ஒன்றரைப்படி (2.லிட்) நெய்யும் விடவும். கொடுவேலி வேர்ப் பட்டை, சிவதை, சேங்கொட்டை, ஆயிலியப் பட்டை, திரிகடுகு, முன்னைவேர், தான்றிப் பட்டை, திரிபலை, முசுட்டைவேர், வெட்டிவேர், புங்கம் பட்டை, சுத்தி செய்த வாளம், இந்துப்பு, பாறையுப்பு, சிறுகாஞ் சோறிவேர், கத்தூரி மஞ்சள், புளி யருணைக் கிழங்கு, பிரண்டைக் கிழங்கு, மருட்கிழங்கு, கறணை காசு இவை வகைக்கு 3 கழஞ்சு (15.3கிராம்) வாங்கிச் சேர்த்துப் பக்குவமாக நான்கு நாட்கள் காய்ச்சி யெடுத்துக் கொள்ளவும்.

அளவு : காசெடை (165 மி.கி.)

துணைமருந்து : திரிபலையின் கொட்டையைச் சுட்டுப் பொடி யாக்கி வெருகடித் தூளுடன், நெய்யைச் சேர்த்து, பத்து நாட்கள் கொள்ளவும்.

தீரும் நோய்கள் : தடிப்பு மூலம், உறுப்பு மூலம், மந்த மூலம், உள்மூலம், பிறமூலம், வறட்சி மூலம், தனல் மூலம், சீமூலம் இரத்த மூலம், நவமூலங்களும்தீரும்.)

## இரத்த மூலத்திற்கு

தேக்கிடவே ரெத்த மூலத்துச் கப்பா
செப்புகிறேன் நெய்யென்றால் ஆவின் நெய்தான்
நோக்கிடவே படியொன்று ஈருள்ளிச் சாறு
நுவலுவே னாலுபடி கூடச் சேர்த்து

வாச்சிடவே பசுவின்பால் குறுணி வாச
மதுரமது பலமொன்று அரைத்துப் போடே.

அரைத்திட்டு மெழுகாகும் பதந்தன்னில் வாங்கி
அந்திசந்தி யிருபது நாள் கொண்டா யானால்
கரைத்திட்ட சீமூலம் ரெத்த மூலங்
கண்காணா தோடுமடா கண்டு பாரு
... ... ... ... ... (சு.21.பா.314-315)

(செய்முறை : ஆவின் நெய்ஒருபடி (1.3லிட்), ஈருள்ளிச் சாறு நாலுபடி (5.2லிட்), பசுவின் பால் ஒருகுறுணி (5.3லிட்),அதிமதுரம் ஒரு பலம் (35கிராம்) அரைத்துச் சேர்த்து, மெழுகாகும் பதத்தில் இறக்கவும்.

அளவு : வேண்டிய அளவு. அந்தி சந்தி இருபது நாட்கள் உண்ணவும்.

தீரும் நோய்கள் : சீமூலம், இரத்தமூலம்).

## மூலத்திற்கு

காட்டுச் சேனை பதினாறு கூடிய வேலி யதன்பாதி
நாட்டில் சுக்கு மவ்வளவு நல்ல கணக்கன் பாதி
ஆட்டிப் பறித்த சக்கரையி லசையக் குழப்பி விழுங்கிடுகில்
மூட்டா லெழுந்த மூலமெல்லா முறையிட் டோடுஞ்
சொன்னோமே.
(சு.20)

(செய்முறை : காட்டுச் சேனை பதினாறு பங்கு, வேலி, சுக்கு, கணக்கன் இவைவகைக்கு நான்கு பாங்கு, இவற்றை அரைத்துச் சர்க்கரையில் குழப்பி உண்ண மூலநோய் தீரும்.)

(வேறு)

சேனைக் கிழங்கு மால்கிழங்குஞ்
சதிரப் பிரண்டை தன்கிழங்கும்
ஆணிப் புளித்த புளிநடலை
அதன்பால் முளைத்த கொடுவேலி
பாணி கொண்டு பொடிசெய்து
பழமோ ருடனே பருகிடுகில்
ஆணி கொண்ட மூலமெல்லாம்
அப்ரோ சாந்த மாய்விடுமே. (சு.20)

(செய்முறை : சேனைக்கிழங்கு, மால்கிழங்கு, பிரண்டைக் கிழங்கு, புளிநடலை, கொடுவேலி இவற்றைப் பொடி செய்து பழைய மோருடன் சேர்த்துண்ண மூலநோய் நீங்கும்.)

(வேறு)

காரெள் சுக்கு சோடு திப்பிலி
நேரொக்கக் கூட்டி நித்தலுந் தின்பீரால்
ஊரொக்கக் கெடுத்துண் டவன்சுத் தம்போல்
வேரொக்கக் கேடு மூலவி யாதியே. (சு.20)

(செய்முறை : எள், சுக்கு, திப்பிலி இவை ஓரளவாய் எடுத்து உண்ணவும். மூலநோய் நீங்கும்.)

## உள்மூலம், பிறமூலத்திற்கு

நறுகுழி முத்தின் மரத்துப்பட்டை வெட்டிவந்து அரைப்படிச் சாறு பிழிந்து கொண்டு, நெருப்புக் கோழிமுட்டை ஐந்துமுட்டை வெள்ளைக்கரு, முக்கால் பலம் சீனிச்சர்க்கரையும், இந்த மூன்றும் கொடுத்து, வெள்ளாட்டுக் கறிக்கூட்டவும். புளி, புகையிலைத் தவிர்க்கவும். (சு.6)

(வேறு)

பசுவின் நெய்யில் ஒரு எலுமிச்சங்காயளவு கையாந்தகரைச் சமூலம் அரைத்துக் கலக்கி, வெந்து, மெழுகு பதத்திலிறக்கி, ஒரு கரண்டி நெய் உள்ளுங் கொடுத்து, மூலத்திலேயுந் தடவவும். கடுப்புந் தீரும். மூலமும் வாங்கும். இது கைகண்டது. (சு.19)

## மூலவாய்வுக்கு

வல்லாரைச்சாகம், மொசு மொசுக்கைச் சாகம், கொடுப்பைச் சாகம், நெல்லிக்காய் சாகம், இளநீர், பசுவின்பால், திப்பிலி 1 கழஞ்சு, நற்சீரகம் 1 கழஞ்சு, வெள்வெங்காயம் 1 கழஞ்சு, கருப்புக்கட்டி 1 கழஞ்சு இதுவெல்லாம் கையாந்தகரைச் சாற்றிலரைத்து, ஆமணக்கெண்ணெயில் வெந்து, மெழுகு பதத்தில் வடித்து, அசனஞ் செய்தாலதில் எலுமிச்சங் காயளவு கொள்ளவும். பத்தியங் காக்கவும். (சு.20)

(வேறு)

அவின் 1 கழஞ்சு, கருஞ்சீரகம் 1 கழஞ்சு, பேய்ப்புடலை 1 கழஞ்சு, முத்தக்காசு 3 கழஞ்சு, நெல்லிப் பருப்பு 1 கழஞ்சு இது வெல்லாங் கூட்டிக் கொள்ளவும். (சு.20)

(வேறு)

சுக்கு, மிளகு, வெள்வெங்காயம், கருஞ்சீரகம், உலுவாயரிசி, நற்சீரகம், ஓமம், ஊச்சிச்சதை யோரொன்று 3 கழஞ்சு,

பிரண்டைக் கிழங்கு 3 கழஞ்சு இதுவெல்லாம் பாலிலரைத்துக் காயம் கூட்டி, குழம்பாகக் காய்ச்சி, நித்தியம் பாக்களவு தின்ன' உள்மூலம், பிறமூலம் பொறுக்கும். (சு.20)

(வேறு)

மணிப்பிரண்டைக் கிழங்கும், அழிஞ்சில் வேரும், காட்டுக் கரணைக் கிழங்கும், கிளுவைத் தோலு மிவை நாலும் நிழலு லர்த்திப் பொடி செய்து, வெருகடிப் பிரமாணந்தேனில் கொள்ள வும். உள்மூலம், பிறமூலம் எல்லாம் பொறுக்கும். (சு.20)

(வேறு)

வெருகங் கிழங்கும், புழுங்கலரிசியுமரைத்து அடைசுட்டு, நல்லெண்ணெயில் துவைத்துத் தின்னவும். மூலம்போம். (சு.20)

(வேறு)

ஆவாரங் கொழுந்தைக் காடியில் அவித்து, மூலாதாரத்தில் வைத்துக் கோமணம் பாய்ச்சிக் கொள்ளவும். (சு.20)

(வேறு)

நல்லெண்ணெயில் முப்புரமெரித்தான்வேர் எலுமிச்சங் காயளவு அரைத்துக் கலக்கி, முருங்கைப்பூவும் கூட்டிக்காய்ச்சி, இறக்கி, கடுகை மீள அரைத்து, மறுபடி கலக்கி, பிள்ளைச் சங்களவு கொடுக்கவும். (சு.20)

## மூலக்கடுப்பெடுத்தால் புகை

முசிறுமுட்டையும் கூடும், கள்ளிச்சிராயும் தவிடும், குளக்கரு வாட்டுத் தலையும், சன்னி நாயகன், நூலான் பாடை இது வெல்லாங் கூட்டிப் புகை, மூலத்தில் காட்டவும். (சு.20)

## பவுத்திரங்க ளொழிய

ஓழியாத பவுத்திரங்க ளொழிய வென்றால்
உரைக்கிறேன் மேனியப்பா சமூலம் வாங்கி
நெளியாமல் நிழலுலர்த்தா யுலர்த்தி யாட்டி
நேர்த்தியாய் வடிகட்டி வெருகடிதான் வாங்கி
களியாத வெண்ணையிலே குழப்பித் தின்ன
கரங்களற்றுப் புண்துவருங் கடின மானால்
அளியாமல் மண்டலந்தா னுண்ணச் சொல்லு
அப்பனே நீர்பாச்ச லாறுந் தானே.

ஆறும்ப்பா யிம்மருந்தால் நிசமாய்ச் சொன்னேன்
ஆருக்குஞ் சொல்லாதே ஆத்தாள் சொன்னாள்
மீறாமல் கொஞ்சநாள் வியாதி யென்றால்
விடவுடனே யிருபதுநாள் கொள்ளச் சொல்லு
வேறுபடும் வியாதியென்றால் மண்டலந்தா னூட்டு
விளம்பினதோர் மருந்தெல்லா முண்மை யுண்மை
வேறுமேதும் பதார்த்தங்க ளருந்த வேண்டாம்
வீறுடைய நெய்பாலாம் விரைந்து பாரே.

(சு.1.பா.465, 466)

(செய்முறை : குப்பைமேனியின் சமூலம் வாங்கி நிழலுலர்த்தி, ஆட்டி வடிகட்டி, வெருகடியளவு வெண்ணெயில் குழப்பி ஒரு மண்டலம் உண்ணவும்.

தீரும்நோய் : பவுத்திரம்.

பத்தியம் : நெய், பால் ஆகும்.)

(வேறு)

மஞ்சணாத்தியிலையைப் பச்சோலையில் பொதிந்து,தீயனலில் வெதுப்பிக் கட்டத்தீரும். உப்பு, புளி ஆகாது. (சு.16)

(வேறு)

கும்பிடுசிப்பி சுட்டு நுணுக்கி, வெண்ணெயில் குழப்பிப் போடவும். இது கைகண்டது. (சு.4)

(வேறு)

அமுக்கிராக் கிழங்கு, காட்டுக் கருணைக் கிழங்கு, நல்ல கருணைக் கிழங்கு, புளிய நடலைக் கிழங்கு, மால்கிழங்கு, கொடு வேலிவேர், சிவனார் வேம்பு, சங்கங்குப்பிவேர், பிரண்டைவேர் இந்த நாலுவகை வேரும் தட்டிப்பட்டையையெடுத்துக் கொண்டு, கிழங்கினுடனே கூடக்கூட்டி, வகைக்கு ஒரு தேத்தங் காயளவு அரைத்து, அதிலே குறுவை நெல்லரிசி உழக்கு அரிசி கூடப்போட்டி டித்துக் களிகிண்டி, பசுவின் நெய்யில் சிறுகச் சிறுகப் பொதிந்து விழுங்கவும். கொடிப் பவுத்திரம், பக்க பவுத்திரம் தீரும். கடின வியாதியானால் இருபது நாள் கொள்ளவும். இல்லாதிருந்தால் பத்துநாள் கொள்ளவும். வெங்கடேசுர சுவாமி தரிசனத்தில் வந்து திருவுளம் பற்றியது. கைகண்டது. பிரயோகம், பத்தியம் நெத் தெலிக் கருவாடு, முருங்கைப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு, பீர்க்கம் பிஞ்சு, பசுவின் நெய்யாம். உப்பு, புளி ஆகாது. (சு.10)

(வேறு)

பெருங்காயத்தை நீர்முள்ளிச்சாறு விட்டரைத்து உடையு முன்னே பூசவும். நீர்முள்ளி இலையை இடித்து, வறுத்துக் கட்டக் கரைந்துபோம். (சு.10)

## பிரமியத்திற்கு

வெள்ளாட்டுப்பால் மூவாழாக்கில் காவிக்கட்டி, எலுமிச்சம் பொடிசெய்து, பாலில் கலக்கிக் கொடுக்கவும். இந்தப்படி மூன்று நாள் ஏழுநாள் கொடுக்கப் பிரமியம் பொறுக்கும். (சு.20)

## பல்வலிக்கு

மாசிக்காய் சொத்தை சொள்ளை இல்லாமல் கெட்டிக்காய் 1 பலம், கடுக்காய் இரண்டு. இந்த இரண்டு வகையும் கொட்டைக் காடுக்காய் மேல்தோலை வேறே காயவைத்துத் தூள் பண்ணி, மாசிக்காய் நொறுக்கிக் காயவைத்து, வேரைத் தூள் பண்ணி, துருசு 1 பலம், காசுக்கட்டி 1 பலம் தூள் பண்ணி வெவ்வேறாகத் தூள்பண்ணி, துருசுக்கட்டியா சாணிக்குழம்பிலே தொட்டுப் பிசைந்து தண்ணீர்விட்டு அலம்பிப் போட்டு, இருப்புச் சட்டியிலே பெரிய ஆலக்கறண்டியிலே ஆகிலும், வீசம்படித் தண்ணீர்விட்டு, அதிலேதுருசைக் கட்டியாகப் போட்டு மெள்ள எரிக்கவும். பொங் காமல் சுண்டி அமர்ந்து, நசையிருக்குதோ இல்லையோ என்கிற பக்குவத்திலே முன்மூன்று தூளையும் அதிலே போட்டு, கல்வத்துக் குழவியாலே கடையவும். கட்டிப்பட்டால் நசுக்கி நசுக்கித் தள்ளிக் கொண்டு இரண்டு நாழி கடைந்து, தூளாய் எடுத்து டப்பாவில் வைத்துக் கொள்ளவும். பல்லிற்குத் தேய்க்கவும் பல்லிறுகும். (சு.11)

(வேறு)

மருக்காரை சுக்கு மருதந்தேல வெள்வே
லெருக்கா லரசுபனை யெட்டும் -நறுக்கியே
யேலொன்றாய் காஞ்சநீர் நாலுநாள் கொப்பிளிக்கில்
பாலன்பல் லாங்கிழவன் பல். (சு.20)

(செய்முறை : மருக்காரை, சுக்கு, மருதம், வெள்வேல், ஆல் அரசு, பனை, எருக்கம் இவற்றை நறுக்கி நீரிலிட்டுப் பதமாகக் காய்ச்சி வாய் கொப்பளிக்கப் பல்வலிநீங்கும். பல் உறுதியாகும்.)

## பசியெடுக்க

சாரணைக்கிழங்கு, சுக்கு, இலவணம் சமனாகப் பொடி செய்து, வெருகடி வெந்நீரில் குடிக்கவும், பசி எடுக்கும். (சு. 20)

## தீரைவிழ

ஆடுதீண்டாப் பாளை இலையைக் காடியிலவித்து, இராத்திரி உறங்கும்போது கொப்பூழில் வைத்துக் கட்டவும். தீரைவிழும். (சு.20)

(வேறு)

பெருந்தும்பைச் சாகம் பிழிந்து, பழமோரில் குடிக்கத் தீரை விழும். (சு.20)

(வேறு)

முசுட்டைத் தண்டைப் போட்டு வெந்நீர் உழக்கு, அரை யாழாக்காய்க் காய்ச்சி, அதில் கிருமி சத்துருவை நெல்லிக்காயள வரைத்துக் கலக்கிக் கொடுக்கவும். மூன்று நாள் கொடுக்கத்தீரை கூட்டோடே விழும். நல்லது. (சு 20)

(வேறு)

சீலைக்கரியைக் கருப்புக் கட்டியில் சேர்த்துக் கூட்டவும். தீரை சமூலத்தோடே விழும். (சு.20)

## இரத்தம்சலம் தீர்க்க

நுணாவிலைச்சாறும், சுக்கு, மிளகு, வசம்பு, ஈரவெங்காயம் இதுவெல்லாம் நறுநெய்யில் வெந்து கொடுக்கவும். (சு.20)

## உள்ளுரோகத்திற்கு

ஆமணக்கெண்ணெய் உழக்கில் திப்பிலி 1 கழஞ்சு, கோட்டம் 1 கழஞ்சு, கிராம்பு 1 கழஞ்சு, சர்க்கரை 1 கழஞ்சு, விட்டுணுக் கிரந்தி அரைத்து, எலுமிச்சங்காயளவாக வெந்து கொடுக்கவும். பொறுக்கும். (சு.20)

## கணைக்கு

துடரிவேர்க் கொழுந்து, குட்டி வேலம்பட்டை, விடத்தலை வேர்க்கொழுந்து, வேக்காலி வேர்க் கொழுந்து, அவுரிவேர்க் கொழுந்து, கொன்றைப்பட்டைக் கொழுந்து, நரிமிரட்டி வேர்க் கொழுந்து, தூதளைவேர்க் கொழுந்து, சிறுபுள்ளடி, நாயுருவி, சழற்சிக் கொழுந்து, சிறுவேர், முசிறுமுட்டை இதுவெல்லாம் பசுவினெய்யில் வெந்து கொடுக்கவும் பொறுக்கும். (சு.20)

(வேறு)

கணத்திற்கும் உட்டிணத்திற்கும் உழக்கு விளக்கெண்ணெய்க் குத் துளசியிலையரைத்து, ஒரு எலுமிச்சங்காயளவு உடனே கூடக்

கலக்கி, சற்றே ஈரவெங்காயங் கூடக் கலந்து, கடுக்காயஞ்சு பொடி பண்ணி கூடப்போட்டு, வெய்யிலில் வைத்து எடுத்துக் காய்ச்சி, மெழுகு பதத்திலிறக்கி, உடனே வேறு ஒரு கலசத்தில் போட்டு, அதிலே ஒரு சங்கு கொடுக்க நன்றாய் வயிறு கழியும். வெந்நீர் கொடுக்கவும். பிறகு கஞ்சி கொடுக்கவும். (சு.10)

## அந்திர தாகத்திற்கு

சீர்தப்பி வருமந்திர தாகத் துக்குச்
செப்புறேன் புலத்தியனே திறமாய்க் கேளு
நேர்சுத்த மணலிலே கடுகுபோ லெடுத்து
நினவுடனே ஐங்காலும் பாண்டத்தி லிட்டுப்
பேர்பெறவே அனல்மூட்டி மண்ணுதிருங் காலப்
பேரரசுக் கொழுந்து ஒருபிடியை வாங்கிப்
பாரதிலே ஓரிலையைப் போட்ட போது
பஞ்சிலே தீப்பிடித்தாற் போற்பற்றப் பதமே.

பதங்கண்டு கொழுந்திலையை மணலிலே தூவி
பருந்துடுப் பாற்கிண்டிடவே சாம்பலாய்ப் போகும்
பதங்கண்டு பாண்டத்தே வெளிப்படுத்தி வைத்து
பட்சமாய் முக்கழஞ்சு ஓமத்தைத் தூவி
பதங்கண்டு ஓர்குடத்து நல்லசலந் தன்னைப்
பதமறாமல் விட்டதன்பின் னடுப்பி லேற்ற
பதங்கண்டு தீமூட்டிக் கொதியிட்ட பிறகு
பருவமாய்க் கடைஅடுப்பில் வண்டுகட்டி வையே.

வைத்தமணல் குடிநீக்குக் கீழடுப்புத் தீயு
மாறாம லுமிபோட்டு வைப்பா யாகில்
மெய்ப்பாக வெதுப்பமா யிருக்கு மந்நீர்
வேடுகட்டி தாகத்துக்கு அருந்துமட்டுங் கொடுக்க
ஏய்ப்பான தாகமெல்லா முடனே நிற்கு
மெறிகின்ற வறட்சிக் கியல்பாய்ப் பின்னும்
நயப்பாக அந்நீரே எடுத்தருந்தக் கொடுத்தால்
நாடாது தாகமெல்லா மோடுந் தானே.

(சு.1.பா.39-41)

(செய்முறை : சுத்த மணலைப் பாண்டத்தில் போட்டு, பேரரசு கொழுந்தை ஒரு பிடி போட்டுச் கிண்டச் சாம்பலாகும்,

பின் மூன்று கழஞ்சு (15.3கிராம்) ஓமம் போட்டு நீர் விட்டு அடுப்பேற்றிக் கொதிக்க வைத்து, வடிகட்டி வைத்துக் கொண்டு அருந்தவும்.

தீரும் நோய்கள் : அந்திரதாகம், வறட்சி.)

## உழலைத் தாகம் அடங்க

சொல்விறே னுடப்புழற்றி தாக மானாற்
சூட்டுவாய்க் கற்றாழை மணியும் நாழி
செல்லவே சண்பகப்பூ யிலவங்கப் பட்டை
திறமான நல்லவெல்லஞ் சேர்த்து வுண்ணில்
அல்லலுறு முழற்றல்போந் தாகந் தீரும்
அப்பனே வெகுதாக மடக்கக் கேளு
வெல்லுமே நெரிஞ்சிக்காய் பச்சை யோலை
வில்லைப்பழச் சதையும்நெல் பொரியும் வாங்கே.

நெல்பொரியுஞ் சீரகமு மேலந் தானும்
நேராக வகைக்கங்கே வராகன் தூக்கி
வில்பெரிய கிழிக்கட்டிப் பாண்டத் திட்டு
மாந்தளிருங் கூடயிட்டுச் சலமும் விட்டு
சொல்பெறவே யருந்திவிடில் தாகந் தீருஞ்
சொல்லுறேன் கரப்பனோடு சிலந்திக் கெல்லாம்
நல்பெரிய நன்னாரி சிறுகு றிஞ்சா
நல்மூலம் நிலவேம்பு நாட்டக் கேளே.

(சு.1.பா.468-469)

(செய்முறை : கற்றாழைச்சாறு, சண்பகப்பூ, இலங்கப் பட்டை, நல்ல வெல்லம் சேர்த்து உண்ண தாகம் தீரும்.

நெருஞ்சிக்காய், பச்சையோலை, வில்லைப்பழச்சதை, நெல் பொரி, சீரகம், ஏலம் இவைவகைக்கு 1 வராகன் (4.2கிராம்) வாங்கி, கிழிக்கட்டிப் பாண்டத்தில் போட்டு, மாந்தளிரும் கூடப் போட்டு, நீர் விட்டுக் காய்ச்சி அருந்தவும். தாகந் தீரும்.)

## செவி நோய்க்கு

காதில் வியாதி தீருதற்குக் காயம் வசம்பு வலம்புரிக்காய்
பேதம் நண்டு சுக்குள்ளி பெருத்த முருங்கைவேர் முள்ளிவேர்
நீத முருக்கிலை எருக்கிலைச் சாறுடனே நிலவேப்
பெண்ணெய்தனில்
மாதே காதில் வைத்திடுவாய் வந்தசெவி நோய்ப்ப றந்திடுமே
(சு.13)

(செய்முறை : காயம், வசம்பு, வலம்புரிக்காய், சுக்கு, உள்ளி, முருங்கைவேர், முள்ளிவேர், முருக்கிலை, எருக்கிலைச் சாறு இவற்றை நிலவேப்பெண்ணெயில் சேர்த்துக் காதிலிடவும் செவிநோய் தீரும்.)

### காதில் சலந் தீர்க்க

*இஞ்சிச் சாறுழக்கு கள்ளிச் சாறு ஆழாக்கு*
*இனியதே னாழாக்குக் குருவிந்த மஞ்சள்*
*கஞ்சிங்கள் கொடப்பருப்பு கொடுப்பை வேரும்*
*கருஞ்சீரகமும் நண்டு நிணமும் கூட்டி*
*மிஞ்சப் போகா துழக்கெண்ணெய் காய்ச்சி*
*மிகவே யிடித்துக் காதிலெண்ணெய் தனையடைத்துப்*
*பஞ்சிட்டே யடைக்கச் செவிசல மாறும்*
*பலவிதமாஞ் செவிநோய்கள் பறந்து போமே.* (சு.20)

(செய்முறை : இஞ்சிச் சாறு உழக்கு (336 மி.லிட்), கள்ளிச் சாறு, தேன் ஓர் ஆழாக்கு (168 மி.லிட்), குருவிந்த மஞ்சள், கொடுப்பைவேர், கருஞ்சீரகம், நண்டு இறைச்சி இவற்றைச் சேர்த்து, உழக் கெண்ணெய் காய்ச்சி, இடித் தெடுத்து காதில் விடவும். செவிநோய்களும், காதில் நீர் வருதலும் தீரும்.)

(வேறு)

நல்லெண்ணெய் உழக்கு, ஆவிரையிலை அரைத்து நெல்லிக் காயளவு பஞ்சவப் பருக்கையும் இஞ்சிச் சாகமுங் கூட்டிக் காய்ச்சி, காதில் விட்டடைக்கவும் பொறுக்கும். (சு.20)

(வேறு)

முட்டையிலெண்ணெய் விட்டு, வசம்பு தட்டிப் போட்டு, பருத்திக் கொட்டையளவு சுண்ணாம்பை எண்ணெயில் மத்திக்க வெண்ணெய் போலேயாம். அதை விளக்கில் வெதுப்ப நுரையாய்ப் பொங்கும். அந்த நுரையை யெடுத்துப் போட்டு, மறுபடி நின்ற எண்ணெயைக் காதில் வார்க்கவும். (சு.20)

### செவிப்புத்துக்கு

விடமூங்கில் சாகம், விட்டுணுக் கிரந்தி சாகம், பனைவடலி சாகம், வேப்பெண்ணெய், பஞ்சவனப் பருகை இதுவெல்லாங் காய்ச்சி, முட்டைத் தயிலமுங் கூட்டிக் காதிலடைக்கவும். (சு.20)

### நரைமாற

சிற்றாமணக்கு வேரும், நெல்லிக்காய் கெந்தகமும், முள்ளிக் காயில் பதினாறு புடமிட்டு, தினசரி தின்னநரைமாறும். (சு.10)

## சூட்டுக்கு

செஞ்சந்தனம் 1 கழஞ்சு, நற்சீரகம் 1 கழஞ்சு. சாதிக்காய், மாசிக்காய், ஓரிலைத் தாமரை-5 இவையெல்லாம் பொடி செய்து, வடிகட்டி வைத்துக் கொண்டு, வெருகடிப் பிரமாணம் பசுவின் நெய்யில் குழைத்துச் சாப்பிடக் கர்ப்பசூடு, உள் காய்ச்சல் தீரும். (சு.6)

## சகல வியாதிக்கு, சூட்டுக்கு

சித்தாமணக்கு எண்ணெய் 2 படி, பறங்கிப் பட்டை 5 பலம், பிரப்பங் கிழங்கு 2 பலம், வெந்தயம் 2 பலம் இந்த மூன்றும் அரைத்து, எண்ணெயில் கலந்து வேக வைத்துச் சாப்பிட சகல ரோகங்களுந் தீரும். (சு.6)

## வலுவிற்கு மருந்து

கோழிமுட்டை வெள்ளைக் கருவும், வேப்பம் பிசினும், அபினும், மஞ்சள், வெள்ளை வெங்காயச் சாறு வார்த்து அரைத்து வெள்ளைக்கரு குழப்பி, கோழிமுட்டை நிறைய வார்த்து சாப்பிட்டுச் சேரவும். (சு.6)

(வேறு)

நிலப் பனைக் கிழங்கு 1 வராகன், நீர்முள்ளி விதை 1 வராகன் வெள்ளைச் சாறணைவேர் 1 வராகன், காயப் போட்டுத்தூளாக்கி, சுவின் பால் இளஞ்சூடாக கொதிக்கிற பதத்தில் போட்டுக் குடிக்கவும். அந்தப்படி 7 நாள் குடிக்கவும். 8நாள் பத்தியம். (சு.6)

(வேறு)

கோழிக்காரம், சிவனார் வேம்பு 10 கழஞ்சு தரித்து, பாதாள தயிலமிறக்கி, எரு, சீலை மண் செய்து, நிரம்ப மண் சொரிந்து, பதினைந்து நாழிகை எரியிடவும். தன்னாலாறினவாறே யெடுத்துப் பார்த்தால் கிண்ணியிலே நீல வண்ணமாய்ப்பத்தியிருக் கும். அதைக் கத்தியால் சுரண்டி யெடுத்துப் பணவெடை தேனில் கொடுக்க, வாதமென்பதும் குட்டம் பதினெட்டும் சூலைப் புண்ணும் கடிகளும் வயிற்றி லுண்டான வியாதியுந் தீரும். இரண்டு நேரமும், பத்துநாள் கொடுக்கவும். பால், நெய் கூட்டவும். கசப்பு புளிப்பு தவிர்க்கவும். (சு.12)

(வேறு)

காரீயம் 1 கழஞ்சு, இரதம் 1 கழஞ்சு, ஒரு சட்டியிலேயிட்டு, நாயுருவியைக் கண்டங் கண்டமாக நறுக்கிச் சிறுகப் போட்டு

வறுக்க, மூன்று நாள் வறுக்கச் சிவக்கும். இந்தச் செந்தூரத்தூள் அனுபானம், இதில்அரைப் பணவெடையும், மிளகுப் பொடியொரு வராகனெடையும், தேனில் இரண்டு நேரமும், இருபது நாள் கொள்ள கண்டமாலை, கண்டவிப்புருதி, கண்டரோகமும், கன்னொசியும், கண்டக் கழலையும், கழுத்தில் புண்ணும், கழுத்திலாரமும் காது, காது மடல் வீக்கமும், புண்ணுந்தீரும். இதில் அரைப்பணவெடையும், வெண்காரம் ¼பலம், திப்பிலி பொடி 1 பலம், தேனில் குழைத்து, இரண்டு நேரமு மிருபது நாள் கொள்ள சதையடைப்பன், கல்லடைப்பன், நீரடைப்பன், கிரிச்சனம், பதினெட்டு பவுந்திரமும், நீர்ப்பாடும், பீனிசமும், சதாகாலமும் விடாமல் தலைவலிக்கிறது, சரீரம் ஒரு நேரத்துக் கொரு வண்ண மாகிறதுந் தீரும். (சு.12)

(வேறு)

ஆடா தோடைச்சாறு, கண்டங்கத்தரிச்சாறு, குறிஞ்சாச் சாறு மூன்றும் அரைப்படி, அதில் சுக்கு, மிளகு, திப்பிலி ஒவ்வொன்று இரண்டு வராகனெடை வறுத்துப் பொடித்து, அதில் கரைத்துக் காய்ச்சும் போது, கறுத்துவரும் போது அரைப்பலக் கருப்புக் கட்டி நகட்டிப் போட்டுக் கிண்டி, பதத்திலிறக்கித் தினந் தின்று வரவும், வயிறு இளகும். வீக்கம், வலியுளைச்சல், வாய்வுத் திரட்சி குன்மம், சகலமுந் தீரும். (சு.12)

(வேறு)

சுண்டு வலிக்கு மிளகு மெண்ணெயுங் கொடுக்கு முன்னே தேங்காய்ப் பாலுங் கருப்புக் கட்டியும் பிசைந்து கொடுக்கத் தீரும். (சு.12)

(வேறு)

பூசணிக்காய் கண்டமாக நறுக்கி உலர்த்தி, நெய்யில் பொரித்து இடித்துப் பொடியாக்கி, இருநாழி பொடி, இருநாழி கண்டு சர்க்கரைப் போட்டு, நாழிப் பால்விட்டு, தீயாமல் துழாவிக் காய்ச்சிக் குழம்பானால், ஒரு மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம், இலவங்கம், பச்சிலை 1 கழஞ்சு பொடி செய்து குழம்பிலிட்டுத் துழாவி இறக்கிக் காலமே வெருகடிப் பிரமாணந் தின்ன, பலவிதத்திலுள்ள காசம், கற்றையும், தும்புபோலே யுணர்ந்து போகிறதும், வாயால் இரத்த மெடுக்கிறதும், சிறையிருந்து மெலிந்ததும், ஆண் பெண் மோகத்தால் மெலிந்ததும், நோயில் மெலிந்ததும், ரத்தபித்தமுந் தீரும். கை கண்டது. (சு.12)

## உட்டிணம், நீர்ச்செறிவு மேகம் தீர

கற்றாழை மடல் நாலு சோற்றை எடுத்து, நன்றாய்க் கழுவிப் போட்டு, பன்னிருதரங் கழுவிப் போட்டு, புளிக் கரைத்து, புளிக் கோது எடுத்துப் போட்டு, குழம்பில் போட்டு, நல்ல வெல்லம் ஒரு அச்சுச் சீவிப் போட்டு, பசுவின் நெய் கால்படி கூட்டி விட்டுப்பிசரி, கடை மருந்து கிராம்பு 1 வராகன், ஏலம் 3 வராகன், நற்சீரகம் 3 வராகன், கருஞ் சீரகம் 3 வராகன் இவையெல்லாம் பொடித்து ஒன்றாய், கற்றாழை மடல், புளி, நெய் இது வெல்லாங் கூட்டிக் கையால் பிசைந்து வைத்துக் கொள்ளவும். ஒரு புன்னைக் காயளவு கொள்ளவும். சைப்பு, புளி தவிர்க்கவும்.

பத்தியம் : தயிருஞ் சோறு உண்ணவும். உட்டிண மேகம், நீர்ச்செறிவு, துன்மாங்கிசம், பிரமிய மிது தீரும். (சு.3)

## விதை வீங்கினால்

நொச்சியைத் துவைத்து, சிறுநீரிலவித்துப் பொட்டணமாய்க் கட்டி வேப்பெண்ணெயிலொத்தலிடவும். (சு.20)

## தாதுபுட்டிக்கு மருந்து

வில்வவேர் நறுக்கி, அரைவாசி காயவைத்து, குழித்தயில மிறக்கி, குழிச்ச பீங்கானில் முட்டையை வைத்து, முட்டை முக்கால்வாசி மறைய தயிலம் விட்டு வைக்கவும். கீழிது மேலிதாப் பிரட்டிப் பிரட்டி நிழலிலே வைத்து, நாலாநாள் ரவியிலே வைத்து அஞ்சாநாள் பார்க்க அண்ட மெழுகாகும். அந்த முட்டையிலே ஒட்டி இருக்கிற தயிலத்தோடே தானே கல்வத்தில் வைத்து அரைத்து, மெழுகாக உருட்டி வைத்துக் கொண்டு, ஒரு புளியங் கொட்டை அளவு சீனியில் வைத்துச் சாப்பிடவும். இந்தப்படி அந்தி சந்தி அரைமண்டலம், ஒரு மண்டலம் சாப்பிடவும். தாது புட்டியாகும். (சு.11)

(வேறு)

இரண்டு பணம் கசகசா வாங்கி, ராத்திரிக்குச் சட்டியில் தண்ணீரிலே ஊறப்போட்டு, காலையில் தண்ணீரை இறுத்துப் போட்டு, அம்மியில் வைத்து அரைத்து, துணியில் வைத்து இரண்டு சேர் பால் பிழிந்தெடுத்துக் கொண்டு, பருத்திக் கொட்டையும் இரண்டு படி கொட்டை ராத்திரிக்குத் தண்ணீரில் ஊறவைத்து, எடுத்தரைத்து, இரண்டு சேர் பால் பிழிந்து எடுத்துக் கொண்டு, பசுவின் பால் இரண்டு சேர்பால், தேங்காய்ப்பால் இரண்டுசேர்

இந்த நாலுவகைப்பாலும் சட்டியில் விட்டு எரிக்கவும். மேல்சரக்கு வல்லாரையிலை காயவைத்து இடித்து வடிகட்டி, அதன் தூள் அரைச்சேர், கோதும்பைமா அரைத்த மாவு அரைச்சேர், சீனிச்சர்க்கரை அரைச்சேர், உளுந்துமாவு அரைச்சேர், சாதிக்காய் அரைப்பலம், கிராம்பு அரைப்பலம், ஏலம் அரைப்பலம் இதுமூன்றுசரக்கையும் அரைத்துத்தூள் பண்ணி, இந்த நாலுமாவும் முன்பால் கொதிக்கும் போது கூடப்போட்டு, நன்றாகக் கிண்டிக் கிண்டி லேகியமாகக் கிண்டிப் பீங்கானில் வைத்துக் கொண்டு, ஒரு வேளைக்கு எலுமிச்சங்காயத்தனை லேகியம் சாப்பிடவும். இந்தப் படி அந்திசந்தி அரைமண்டலஞ் சாப்பிடவும். ஸ்திரீ போகம் ஆகாது. மறுமுறை அரைமண்டலம் இந்தப்படி செய்து சாப்பிடவும். ஒரு மண்டலஞ் சரியாகச் சாப்பிடவும் பாய் மிதிக்கக்கூடாது. அரை மண்டலம் சாப்பிடும் போது புட்டியாகும். (சு.11)

(வேறு)

நெய்யுழக்கு, சட்டியில் விட்டுக் காயும் போது, பூநாகம் எலுமிச்சங்காயளவு கொண்டு வந்து நெய்யில் குறையக் குறையப் போட்டுப் பொரிந்தால் அதை யெடுத்து வைத்து, பின்பு, சடைக் கஞ்சாயிலை ஒரு பிடி கொண்டு வந்து, அதுவுஞ் சிறுகச் சிறுக நெய்யில் போட்டுப் பொரித்தெடுத்துக் கொண்டு, இரண்டு வகை மருந்தையுமரைத்துச் சட்டியிலிருக்கிற நெய்யில் கலக்கிப் பணவெடை கொண்டால் தாது விருத்தியாகும். (சு.20)

## மகா போகத்துக் குளிகை

தங்க ரேக்கு 1 வராகன், கத்தூரி 1 வராகன், கோரோசனை 7 வராகன், பச்சைக் கற்பூரம் 5 வராகன், மயில் குராசனம் 1 வராகன், படிகாரம் ½ வாரகன் இவைகளை ஈசுவர மூலிகைச் சாற்றில், நொச்சிச் சாற்றில் அரைத்துக் குன்றிப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலுலர்த்தி ரவியில் வைத்து, புளி நீக்கி போசனம் செய்த பிறகு, ஒரு மாத்திரை சாப்பிட்டு, 5 பலம் பால் சாப்பிடவும். போகத்து முயலுங்கால் அதிவுல்லாசமான களிப்பும் உண்டாம். சகல சீதளமும் சன்னிகளும் தீரும். (சு.22)

## சகலத்திற்கும் தைலம்

கால்படி சீரகம், பதக்குத் தண்ணீரில் போட்டெரித்து, ஒரு சேர் கசாயமாகசுண்டி எரித்திறக்கி, ஒரு சேர் குடியிலெண்ணெயும், ஒரு சேர் கசாயமும் கூடவிட்டு, ஒரு பலம் கார் போகலரிசி வாங்கி,

இந்தக் கசாயம் விட்டு நன்றாக அரைத்து, எண்ணெயில் குழப்பி விட்டு எரித்து, பதமாக வடித்து இறக்கி வைத்துக் கொண்டு, எட்டு நாளைக்கு இரண்டு முழுக்கு முழுகவும். சீயக்காய் தேய்த்து முழுகவும். ஒரு மண்டலம் இந்தத் தயிலம் செய்து முழுகவும். இந்தத் தயிலம் பித்தசூடு, வாய்வு, சகலத்திற்கும் முழுகி வரவும். சரீரத்திற்கு ஆரோக்கியமாக சவுக்கியமாக இருக்கும். நெடுகிலும் முழுகி வரவும். (சு.11)

## திமிர்தடிப்பு, குட்டரணம், பட்டை, சட்டைமேகம், பாடாணம் இவைகளுக்கு எண்ணெய்

பூவரசம் பட்டை ரசம், அத்திப் பட்டைச் சாறு, வெள் ளருகுரசம், கோவைரசம், ரசங்கள் வகைக்கு ¼ படி, கொட்ட முத்து எண்ணெய் 4 படி, அமுக்கிரா 2 படி, பறங்கிப் பட்டை 3 பலம், இலவங்கபட்டை, கார்போகலரிசி, கடுகு ரோகணி, வாய் விளங்கம், திப்பிலி வகைக்கு 1 பலம், மிளகு ½ பலம், பூரம் ¼ பலம் இவைகளைத் தூள் செய்து, எண்ணெயில் கலந்து அடுப்பேற்றி, கொதிக்கும் பக்குவத்தில் தூள் செய்த பொடியெல்லாம் போட்டுக் கலக்கி வடித்துக் கொண்டு, சாப்பிடுகிற வீதம் வேளைக்கு ¼ பலம், ஏழுநாள் சாப்பிடவும்.

பத்தியம் : முருங்கம் பிஞ்சு, உப்பு, அரைக்கீரை, புளி நீக்க வேண்டியது. மேல் கூறிய வியாதிகள் தீரும். (சு.22)

## இரசமேகம், குட்டரணங்களுக்கு ரசஎண்ணெய்

வெள்ளைக் கலியாண முருங்கப் பட்டை, பூவரசம் பட்டை, இலவங்கப் பட்டை, தானிக்காய், இளநீர் விட்டிடித்துப் பிழிந்து, வகைக்கு ¼ பலம், பிரமதண்டிரசம் ¼ படி, துத்திஇலை ரசம் ¼ படி, சிறு இளநீர்ரசம் ¼ படி, கற்றாழை சாதம் தேங்காய்ப் பிரமாணம், வெந்தயம் 2 பலம், வெந்தயத்தை தூள் செய்து, சித்தாமணக்கு எண்ணெய் 50 பலம் அடுப்பில் ஏற்றி, வெந்தயத் தூள் போட்டுப் பிழிந்து, வைத்திருக்கும் ரசங்களை ஊற்றிக் காய்ச்சி, பதத்தில் வடித்துக் கொண்டு, பூரம் அரைப்பலம், மேற்படி எண்ணெயில் விட்டரைத்து, அதில் கலந்து வைத்துக் கொண்டு, காலை ஒரு ரூபாய் எடை எண்ணெயைப் புசித்து, 5 அல்லது 7 நாள் சாப்பிட்டு வெந்நீர் சாப்பிடவும். மறுபத்தியம் அரைப்புளி. மேற்கண்ட வியாதிகள் தீரும். கடும் பத்தியம். (சு.22)

## மேகவெட்டைக்குக் குளிஎண்ணெய்

மணித்தக்காளி, துளசி, துத்தி, பிரமி, இலவம், வல்லாரை, கைப்பான், பொடுதலை, நுணா, புங்கு, சங்கு இவைகளின் ரசம் வகைக்கு 4 படி, கொட்டை முத்து எண்ணெய் 1 படி, இவைகள் ஒன்றாய்க் கலந்து, திப்பிலி, அரத்தை, ஓமம், கத்தூரி மஞ்சள் வகைக்கு ½ பலம், சாதிக்காய் 4 பலம், தூளாய் இடித்து வாங்கி வஸ்தறாளிதம் செய்து, மேற்படி எண்ணெயில் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து, குழந்தைகளுக்கு காசெடை வீதம், பெரியவர்களுக்கு கால் பலம் வீதம் கொடுக்கவும். இச்சாபத்தியம். (சு.22)

## கணசூட்டிற்கு எண்ணெய்

சித்தாமணக் கெண்ணெய் 1 படி, வல்லாரை ரசம் ½ படி, வெந்தயம் பலம் இரண்டு, ஆவின் பாவிலரைத்து, எண்ணெயில் போட்டுக் கலந்து, கசக்கிப் பிடித்து, கொஞ்சம் சர்க்கரையிட்டு கொடுத்து வரவும். தேகம் தணிந்து குளிர்ச்சியுண்டாம். (சு.22)

(வேறு)

சாதிக்காய் 1 பலம், இலவங்கம் பூ 2பலம், வால் மிளகு2 பலம், கருஞ்சீரகம் 5 பலம், சோம்பு 5 பலம், வாய் விளங்கம் 4 பலம், தாளிசம் 4 பலம், பரங்கிப் பட்டை 5 பலம், கடுக்காய் 2 பலம், இலவங்கம் 2 பலம், சிறுலவங்கப் பட்டை 2 பலம், சாதிப்பத்திரி 3 பலம், கடுகுரோகணி 2 பலம், கசகசா 1 பலம், குரோசாணி ஓமம் 1 பலம், வெட்பாலையரிசி 1 பலம், உரித்த பூண்டு 8 பலம் இந்த தினுசுகள் இடித்து வஸ்தறாளிதம் செய்து, விளக்கெண்ணெய் 1 வராகன் ஊற்றி, வாயகன்ட சட்டியில் அடுப்பேற்றி எரிக்கும் போது, அதில் போடவேண்டிய பூவரசம்பட்டை ஒரு பிடி பஞ்சு போல தட்டிப் போடவும். சங்கம்வேர், கரிசாலை ஒரு பிடி பஞ்சு போல் இடித்துப் போடவும். மேல்கண்ட தினுசுகளில் பூண்டு மட்டும் உரித்து, பல்லுப் பல்லாய்ப் போடவும். சிறுகயெரித்து சலமாக்கிக் கொதிக்க வருகையில் முன் வஸ்தறாளிதம் செய்த பொடி மருந்தைக் கொட்டிக் கலக்கி இறக்கும் பொழுது 2 பலம் சுத்தி செய்த வாளத்தைப் பொடி பண்ணிப் போட்டுக் கலக்கி இறக்கவும். கல்கண்டு 5 பலம், திராட்சை 5 பலம் இதுகள் போட்டுக் கலக்கி வைத்துக் கொண்டு, காலையில் சிறுகரண்டி வீதம் 7 நாள் சாப்பிடவும். மறுபத்தியம். இப்படி ஏழு நாளிருக் கவும். புண், கிரந்தி, மேகம், வெள்ளை, சில் வாய்வு இதுகள் தீரும். (சு.22)

(வேறு)

வில்வவேர், சந்தனம், வெட்டிவேர், விலாமிச்சம், கோரைக் கிழங்கு இவைகளைப் பசுவின் பால் விட்டரைத்து, வகை ஒன்று 1/8 படி, நல்லெண்ணெய் 1/2 படி, மூன்று நாள் சூரியபுடம் வைத்து, பிறகு மிளகு 1 பலம், சீரகம் 1 பலம், பால் அளந்து விழுதை எண்ணெயில் போட்டு 3 நாள் சூரியபுடம். தயிலம் தரமாய்க் காய்ச்சி ஸ்நானம் செய்யவும். வாய்வு பதார்த்தம், மாமிசம் தள்ளுபடி. பகல் தூங்கக் கூடாது. அத்திசூடு, மேக சூடு, மண்டைப் பீனிசநீர்கள், சொறி, சிரங்கு, கரப்பான் இவை தீரும். (சு.22)

(வேறு)

இரசம் அரைப்பலம் வாங்கிக் கல்வத்தில் விட்டு, தேள் கொடிக்குச் சாறு கசக்கி விட்டு, இரண்டு சாமம் அரைத்து, உருண்டையாக உருட்டி, உடனே ஓட்டில், அகலில் வைத்து, மேலோடுமூடி, மூன்று சீலை செய்து, ஐந்து விரட்டியில் புடமிட்டெடுக்க எடை குறையாமல் கருப்பாயிருக்கும். எடுத்து ஒவ்வொரு பணவெடை அந்தி சந்தி வெல்லத்தில்வைத்து மூன்று நாளைக்குக் கொடுக்கவும். உப்பு, பசுவின் மோர், பருப்பு கூட்டிக் கொள்ளவும். புளிகூட கூட்டவும். வெட்டை, கிரந்தி, அரையாப்பு, வயிற்றுவலி இதுவெல்லாந் தீரும். மேகவெடிகள், புண்கள் கூடத் தீரும். (சு.11)

(வேறு)

ஒரு முட்டைக் கருவை ஊற்றிப் போட்டு, மஞ்சக்கரு இரண்டு வராகனெடை அந்தக் கூட்டிலே நிறுத்து, இரண்டு வராகனெடை வெள்ளெருக்கம் பாலும் மஞ்சக் கருவோடே கூடவிட்டு, ஒரு வராகனெடை சூதமுங் கூடவிட்டு, மேலும் ஒரு கூடு நன்றாக மூடி, மெல்லிசான சீலை யேழு சீலைமண் செய்து, அரைவாசி காயவைத்து, ஆறு விரட்டியில் புடமிட யெடை குறையாமல் பற்பமாகும். ஒரு பல வெள்வங்கம் கரண்டியில் உருக்கி, ஒரு வராகனெடை பற்பம் போட, வங்கநீர் வாங்கும். வெள்ளியாகும். இந்த பற்பம் சிகப்பு, ஆறு வயது காணும். சகல வியாதியுந் தீரும். (சு.11)

(வேறு)

தேற்றா விளங்காய் நறுக்கி யுலரி பொடி செய்து, சிறு நீரில் நசியம் பண்ண எல்லா பாம்புகடி விடமுந் தீரும். பேய் தீரும்.

தலைநோய், ஒருதலை நோய், சலக்கட்டுத் தீரும். நெய்யில் கொள்ளப் பெருவயிறு, நீர்க்கட்டு, குன்மம், பாண்டு, சூலை, குடல் வாதம் முதலான வியாதியெல்லாந் தீரும். நீரில் கொடுக்கப் பித்தந்தீரும். வெள்ளாட்டுக் கோமியத்தில் கொடுக்க இளைப்புத் தீரும். எருமை மோரில் கொடுக்க எலிகடி தீரும். பாலில் கொடுக்க வயிற்று நோய், பாண்டு ரோகம், தலைநோய் தீரும். நெய்யில் நசியம் பண்ண முயல் வலி தீரும். (சு.12)

(வேறு)

தேற்றாம் பிஞ்சு நாழிக்கு ஒரு இளந்தேங்காய் கீறிப் போட்டு புதுசட்டியிலிட்டுணத்தி, பிறகு இடித்துப் பொடி பண்ணி, சீலை வடி கொண்டு, குடுக்கையிலடைத்துக் கொண்டு, இந்தப் பொடி வெருகடிப் பிரமாணம் நெய்யில் கொள்ளப் பெரு வயிறு, கவுசி, நீராமை எல்லாந் தீரும். வெந்நீரிலிட விரோசனமாம் வாதந் தீரும். நீரில் கொடுக்கப் பித்தந் தீரும். மோரில் கொடுக்க எல்லா விடமுந் தீரும். பா்லில் கொடுக்க வயிற்று நோய், பாண்டுந் தீரும் இந்தப் பொடியுடன் கடுகு, தேவதாரம், இந்துப்பு சரிபொடி செய்து, வெருகடி கொள்ள எல்லா வியாதியுந்தீரும். கோமியத்தில் கொள்ள ஈளை, இருமல் தீரும். நல்லெண்ணெயில் கொள்ள தலை நோய், கிராணி, மூலவாய்வுந் தீரும். மோருடன் கொள்ள நஞ்சு தின்றது, பெருவயிறு தீரும். நெய்யில் கண்ணிலிடப் பூப்பறியும். நல்லெண்ணெயில் நசியம் பண்ண பேய், முயலகன் தீரும். வெள்ளாட்டுக் கோமியத்தில் கொள்ள பதினெட்டுக் குட்டமுந் தீரும். (சு.12)

(வேறு)

நெல்லிக்காய் கெந்தகம் வேண்டியது கட்டிக் கொண்டு வந்து வெள்ளைச் சாரணைச் சாகம் ஒருபடி கொதிக்க வைத்து இறக்கி கெந்தகத்தைப் போடவுமாற விட்டெடுக்கவும். இப்படி 16 தரம் போட்டு எடுக்கச் சுத்தியாம். இது ஒரு பணவெடை பாலில், நெய்யில் கொள்ளவும். வச்சிரகாயமாம், உப்பு, புளி தவிர்க்கவும். அவப் பத்தியம் காக்கவும். (சு.12)

(வேறு)

அமுக்கிரா சமூலங் கொண்டு வந்து, நிழலில் உலர்த்திப் பொடி செய்து, புதுக் கலசத்தில் வைத்துக் கொள்ளவும். நெய்யில் குழைத்து முழுங்க உடம்பு பருக்கும். தேனில் கொள்ள உடம்பு வடியும். சிலேற்று மத்துக்கு தேனுந் திப்பிலியுங் கூட்டிக் கொடுக்

கவும். பிற பாண்டுவுக்கு எருமைமோரில் கொடுக்கவும். இந்தப் பொடி ஒரு பங்கும், நெய் இரண்டு பங்கும், தேன் ஒருபங்கும், சர்க்கரை இருகூறும் புதுக் கலசத்திலிட்டு வைத்துக் கொண்டு தினம் வெருகடி தின்னவும். எட்டு நாள் தின்ன தாது விருத்தியாம். பதினைந்து நாள் தின்ன சரீரம் கெட்டியாம், முப்பது நாள் தின்ன அழகு பிறக்கும். ஆறுமாதந் தின்னத் தெய்வ சரீரமாம். மூன்று வருடந் தின்ன ஆதித்த பிரகாசமாம். முன் பொடிக் காடியில் கொள்ள உடம்பெரிப்புத் தீரும். பேயன் வாழைப் பழத்தில் தின்ன பிரமியம் தீரும். வேப்பெண்ணெயில் தின்ன சர்வ வியாதியுந் தீரும். புளியிலைச் சாறும் நெய்யுங் கூட்டித் தின்ன ஆண்டு கட்டு தீரும். இந்தப் பொடிக்கு கிரந்தியுந் தீரும். (சு.12)

(வேறு)

இலைக்கள்ளி வடக்கே போற வேர் வெட்டி வந்து நிழலுலர்த்திப் பொடி செய்து, பசுவின் பாலில் குடிக்கப் பித்தம் தீரும். வெள்ளாட்டுக் கோமியத்தில் குழைத்துச் சாப்பிட அருவை தீரும். பெருவயிறு தீரும். இந்தப் பொடியும் கடுக்காய்ப், பொடி, மஞ்சள் பொடியுஞ் சிறு நீரில் குழைத்து விழுங்கப் பதினெட்டுக் குட்டமுந் தீரும். வாதமுந் தீரும். இந்தப் பொடி முலைப் பாலில்குடிக்கக் காமாலை தீரும். இந்தப் பொடி வெள்ளாட்டுக்கோமியத்தில் குழைத்து விழுங்க ஈளை, இருமல் தீரும். (சு.6)

(வேறு)

பூவரசம் பட்டை அரைத்து எலுமிச்சங்காயளவு குளிர்ந்த தண்ணீரில் ஆறுநாள் கொடுக்கச் சூலை தீரும். உப்பு புளி தவிரவும் பால் கூட்டவும். (சு.6)

(வேறு)

சாதிக்காய் பாலில் வேக வைத்துப் பிறகு நெய்யில் வேகவைத்துத் தேனில் ஊறப் போட்டுத் தின்ன மெத்த பலனுண் டாம். (சு.6)

(வேறு)

நிலவாகை சமூலம் பிடுங்கி, நிழல் உலர்த்தலாக உலர்த்தி இடித்துப் பொடி செய்து, பேய்ச்சுரை குடுக்கையில் வைத்துக் கொண்டு, அந்தப் பொடியைச் சிறு செருப்படிச் சாற்றில் கொடுக்கப் பெருச்சாளி விடந்தீரும். அந்தப் பொடியை முருங்கை யிலைச் சாற்றில், கடிசாரணை சாற்றில் கொடுக்க மூஞ்சுறு கடி

விடந் தீரும். வேலிப் பருத்திச் சாற்றில் கொடுக்கச் சிறு பாம்பு கடி விடந் தீரும். வேலி இலைச் சாற்றில் கொடுக்க நல்ல பாம்பு கடி விடந் தீரும். குறிஞ்சாயிலைச் சாற்றில் கொடுக்க விரியன் பாம்பு விடந் தீரும். எலுமிச்சபழச் சாற்றில் கொடுக்க எல்லா பாம்புகடி விடமுந் தீரும். பாகலிலைச் சாற்றில் கொடுக்க தேளும், நட்டுவாக்காலி, செய்யான் விடமுந் தீரும். வெருகு இலைச் சாற்றில் கொடுக்க அரணை கடி, அட்டைகடி, ஊது தவளை, பேநாய் கடி விடமுந் தீரும். கையாந்தகரைச் சாற்றில் கொடுக்க இருமல், இழுப்பு தீரும். நொச்சி இலைச் சாற்றில் கொடுக்கக் குளிரும், மறுகாய்ச்சலுந் தீரும். விளக்கெண்ணெயில் கொடுக்க வெதுப்பு தீரும். நல்லெண்ணெயில் கொடுக்க வீக்கம், வெள்ளோக்காளமுந் தீரும். தேனில் கொடுக்க இளைப்பு தீரும். வெள்ளாட்டுக் கோமியத்தில் கொடுக்கச்சோகை, காமாலை தீரும். பசுவின் கோமியத்தில் கொடுக்கப் பெருவயிறு, குடல்வாதம், மகோதரம், கெண்டை, பெருநீர், சோகை, வயிற்று விப்புருதி இது வெல்லாந் தீரும். பிரண்டைச்சாறும், நல்லெண்ணெயும் பொடியோடே கூட்டிக் கொடுக்க மூல வியாதி தீரும். முருங்கை யிலைச் சாற்றில் கொடுக்க மருந்தீடு தீரும். மோரில் கொடுக்க நீர்ப்பாடு தீரும். எருமைத் தயிரில் கொடுக்க வயிற்றுக் கழிச்சல் தீரும். மிளகுப் பொடியுங் கலந்து தின்னப்பித்தம் தீரும். சுக்குப் பொடியில் கலந்து தின்ன வாதந் தீரும். குளிர்ந்த தண்ணீரில் கொடுக்கக் கரப்பன் தீரும். (சு, 7)

## பின்னிணைப்பு :1

**சுவடிகளில் காணப்பெறும் மருந்து அளவைகளும் தற்கால அளவைகளும்.**[1]

| | | |
|---|---|---|
| 1 குன்றி | — | 130 மி.கி. |
| 1 பணவெடை | — | 488 மி.கி. |
| 1 காசெடை | — | 165 மி.கி. |
| 1 துட்டெடை | — | 165 மி.கி. |
| 1 வராகனெடை | — | 4.2 கிராம் |
| 1 கழஞ்சு | — | 5.1 கிராம் |
| 1 பலம் | — | 35 கிராம் |
| 1 சேர் | — | 280 கிராம் |
| 1 வீசை | — | 1.4 கி.கிராம் |
| 1 தூக்கு | — | 1.7கி.கிராம் |
| 1 துலாம் | — | 3.5 கி.கிராம் |
| 1 ஆழாக்கு | — | 168 மி.லிட் |
| 1 உழக்கு | — | 336 மி.லிட் |
| 1 உரி | — | 672 மி.லிட் |
| 1 படி | — | 1.3 லிட் |
| 1 நாழி | — | 1.3 லிட் |
| 1 குறுணி | — | 5.3 லிட் |
| 1 பதக்கு | — | 10.7 லிட் |
| 1 தூணி | — | 21.5 லிட் |
| 1 கலம் | — | 64.5 லிட் |
| 1 மரக்கால் | — | 1 குறுணி (5.3 லிட்) |
| 1 சாமம் | — | 3 மணி நேரம். |

---

1. இரா. தியாகராசன். குணபாடம், தமிழக அரசு வெளியீடு, 1970. பக். 31, 32.

## பின்னிணைப்பு : 2

### இந்நூலில் கூறப்பெறும் நோய்களும் அவற்றிற்கான மருந்துகளும் (எண் : பக்க எண்)

# அருஞ்சொற்கள்

# துணை நூற்பட்டியல்


1. அநுபவ வைத்திய முறை. vol. III; G.O.M.L.வெளியீடு.1951.
2. கண் மருத்துவம் - (பதிப்) வே. இரா. மாதவன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, 1982.
3. குணபாடம் - டாக்டர் இரா. தியாகராசன், தமிழக அரசு வெளியீடு, 1970.
4. சரபேந்திரர் சித்த மருத்துவச் சுடர் - (பதிப்) டாக்டர். மு சௌரிராசன், தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, எண்.142, 1973.
5. சரபேந்திர வைத்திய ரத்னாவளி - தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு, எண். 74, 1974.
6. சித்தமருத்துவாங்கச்சுருக்கம் - டாக்டர், க. சு. உத்தமராயன், தமிழ் நாடு அரசு வெளியீடு, 1983,
7. சித்தமருந்துசெய் பெருமுறைகள் - வி. பலராமய்யா, அருட்பெருஞ்சோதி பதிப்பகம், சென்னை.
8. சித்தர்கை கண்டமருந்து - வி. பலராமய்யா, அருட்பெருஞ் சோதி பதிப்பகம், சென்னை.
9. சித்த வைத்தியத் திரட்டு - டாக்டர். க.நா. குப்புசாமி முதலியார், டாக்டர். க.சு. உத்தமராயன், பாரிநிலையம், 184, பிராட்வே, சென்னை - 1, 1979.
10. சித்தவைத்திய பதார்த்தகுண விளக்கம் - பி. இத்தின நாயகர் ஸன்ஸ், சென்னை, 1949.
11. தமிழ் - ஆங்கில மருத்துவ அகராதி - டி. வி. சாம்பசிவம் பிள்ளை. vol. 1-5.
12. தமிழ்ச் சுவடிகள் அட்டவணை - (பதிப்) - இரா. நிர்மலா தேவி, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை- 113, 1983.
13. தமிழ்ச் சுவடிப் பெயர்கள் - (பதிப்) டாக்டர். டி. பாஸ்கரன், கீழ்த்திசை ஆய்வு நிறுவனம் மற்றும் சுவடி நூலகம், கேரளப் பல்கலைக் கழகம், காரிய வட்டம், திருவனந்தபுரம், 1984.
14. திருக்குறள் - பரிமேலழகர் உரை, கழகவெளியீடு, 1966.
15. திருமூலர் திருமந்திரம் - குமரகுருபரன்சங்கம், ஸ்ரீ வைகுண்டம், 1968.
16. தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - நச்சினார்க்கினியர் கழகவெளியீடு, 1974.
17. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர், கழகவெளியீடு, 1973.
18. பதார்த்தகுணசிந்தாமணி - பி. இரத்தின நாயகர் சன்ஸ், சென்னை,
19. வாதவைத்தியத்துக்காதி (முதற்பாகம்) - வி. பலராமய்யா சுவாமி தீனதாஸ் சித்த மருந்து செய்சாலை, திருவொற்றியூர், சென்னை - 19, 1967.
20. Introduction to the Siddha System of Medicine —Dr V. Narayanaswamy-1975.
21. Siddha Medical Manuscripts in Tamil- (Edi) V. R. Madhavan, International Institute of Tamil Studies, Madras-113, 1984.
22. Tamil Lexicon, Vol. IV, V, Part-1.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 12 | (175கிராம்) | (1.750 கி. கிராம்) |
| 5 | 6 | (175கிராம்) | (17.5 கிராம்) |
| 5 | 11 | (3லிட்) | (336மி.லிட்) |
| 8 | 7 | (0.9கி.கி.) | (875கிராம்) |
| 9 | 19 | (0.6.லிட்) | (672 மி.லிட்) |
| 16 | 14 | (3.5.கி.கிராம்) | (875கிராம்) |
| 17 | 1 | (0.9கி.கி) | (875 கிராம்) |
| 17 | 30 | (0.3 லிட்) | (336 மி.லிட்) |
| 19 | 12 | (1 லிட்) | (1.3 லிட்) |
| 25 | 10 | (0.875 கிராம்) | (875 கிராம்) |
| 33 | 10 | (0.9 கி.கி.) | (875கிராம்) |
| 41 | 15 | (102 கிராம்) | (10.2 கிராம்) |
| 61 | 28 | (187மி.லிட்) | (168 மி.லிட்) |
| 75 | 27 | (163.4 கிராம்) | (1.632 கி.கி.) |
| 109 | 30 | (35 கிராம்) | (70 கிராம்) |
| 110 | 18 | (32.8 கிராம்) | (33.6 கிராம்) |
| 111 | 6 | (8.2 கிராம்) | (8.4 கிராம்) |
| 111 | 6 | (4.1 கிராம்) | (4.2 கிராம்) |
| 145 | 31 | 4 மரக்கால் (5.3லிட்) | (21.2 லிட்) |
| 182 | 21 | (650 மி.லிட்) | (672மி.லிட்) |
| 242 | 19 | (சு. 51) | (சு.15) |
| 261 | 16 | கார்லோகரிசி | கார்கோலரிசி |
| 288 | 10 | பெருங்கரத்தை | பெருங்கரந்தை |
| 316 | 34 | குற்றிமுத்து | குன்றிமுத்து |
| 322 | 30 | போசமல் | பேசாமல் |
| 337 | 24 | பிகை பிடிக்கத் | புகைபிடிக்கத் |
| 349 | 3 | வெடிப்பு | வெடியுப்பு |
| 352 | 30 | நாலநோள் | நாலாநாள் |

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழில் விடுகதைகள் | ரூ. 12-00 |
| 2. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ரூ. 6-00 |
| 3. | தமிழர் தோற்கருவிகள் | ரூ. 10-00 |
| 4. | தமிழும் தமிழரும் | ரூ. 5-00 |
| 5. | தமிழர் இசை | ரூ. 70-00 |
| 6. | ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள் - ஓர் மதிப்பீடு | ரூ. 20-00 |
| 7. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ரூ. 12-00 |
| 8. | திராவிட மொழி இலக்கியங்கள் | ரூ. 35-00 |
| 9. | தமிழ் இலக்கியக் கொள்கை - 8 | ரூ. 20-00 |
| 10. | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | ரூ. 20-00 |
| 11. | தொல்காப்பியம் - புணரியல் | ரூ. 10-00 |
| 12. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ரூ. 12-00 |
| 13. | தொல்காப்பியம் - விளிமரபு | ரூ. 6-00 |
| 14. | தொல்காப்பியம் - பெயரியல் | ரூ. 12-00 |
| 15. | தொல்காப்பியம் - வினையியல் | ரூ. 20-00 |
| 16. | பிரபந்த தீபிகை | ரூ. 12-00 |
| 17. | கண் மருத்துவம் | ரூ. 50-00 |
| 18. | வர்ம சூத்திரம் | ரூ. 10-00 |
| 19. | தன்வந்திரி குழந்தை வாகடம் | ரூ. 14-00 |
| 20. | வெள்ளைக்காரன் கதை | ரூ. 7-00 |
| 21. | மெய்க்கீர்த்திகள் | ரூ. 20-00 |
| 22. | சிந்து இலக்கியம் | ரூ. 8-00 |
| 23. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ரூ. 6-00 |
| 24. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ரூ. 12-00 |
| 25. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 1 | ரூ. 12-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 2 | ரூ. 22-00 |
| 27. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ரூ. 15-00 |
| 28. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ரூ. 10-00 |
| 29. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | ரூ. 10-00 |
| 30. | தமிழரின் தாயகம் | ரூ. 10-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | ரூ. 12-00 |
| 32. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | ரூ. 10-00 |
| 33. | விவிலியம் - திருக்குறள் - சைவ சித்தாந்தம் | ரூ. 20-00 |
| 34. | செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் | ரூ. 25-00 |
| 35. | மொழி பெயர்ப்பியல் | ரூ. 10-00 |
| 36. | த்மிழர் திருமணம் | ரூ. 25-00 |
| 37. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | ரூ. 35-00 |
| 38. | தமிழ் நாவல்கள் (அகர வரிசை) | ரூ. 40-00 |
| 39. | எண்பத்திரண்டில் தமிழ் | ரூ. 90-00 |
| 40. | அகலமும் ஆழமும் | ரூ. 12-00 |
| 41. | Siddha Medicine (Heritage of the Tamils) | Rs. 45-00 |
| 42. | Cultural Heritage of the Tamils | Rs. 20-00 |
| 43. | Literary Heritage of the Tamils | Rs. 50-00 |
| 44 | Papers on Tamil Studies | Rs. 15-00 |
| 45. | Tamil Drama | Rs. 20-00 |
| 46. | Dr. Mu. Va. | Rs. 20-00 |
| 47. | Thiru Murugan | Rs. 5-00 |
| 48. | A Study of the Perunkatai | Rs 12-00 |
| 49. | Tamil Writers Directory | Rs. 10-00 |
| 50. | Dissertations on Tamilology | Rs. 10-00 |
| 51. | Tamil-Text (An-Auto Instructional Course) | Rs. 25-00 |
| 52. | Siddha Medical Manuscripts in Tamil | Rs. 8-00 |
| 53. | Karaikkal Ammaiyar | Rs. 6-00 |
| 54. | Heritage of the Tamils-Temple Arts | Rs. 50-00 |
| 55. | Tolkāppiyam | Rs. 25-00 |

Japonica – Dial 441913